சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்
தமிழ்த் தாய் 67 - வெளியீடு

கொ. பள்ளிக்கொண்டான் பிள்ளை அவர்கள் இயற்றிய

# பிரபந்தத் திரட்டு





"அறிவுச் செல்வங்கள் அனைத்தையும்
தமிழுக்குக் கொண்டுவர வேண்டும்.
இனிவரும் நூற்றாண்டுகளுக்கும்
அருந்தமிழை ஆற்றல் படுத்த வேண்டும்"

- மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
புரட்சித் தலைவி
அம்மா அவர்கள்

கொ. பள்ளிக்கொண்டான் பிள்ளை அவர்கள்

இயற்றிய

# பிரபந்தத் திரட்டு

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்
தமிழ்த் தாய் 67 - வெளியீடு
பதிப்பாசிரியர்

முனைவர் கோ.விசயராகவன்
எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி.
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

# நூல் விவரக் குறிப்பு


| | |
|---|---|
| நூல் தலைப்பு | : பிரபந்தத் திரட்டு |
| நூல் ஆசிரியர் | : கொ. பள்ளிக்கொண்டான் பிள்ளை அவர்கள் |
| வெளியீட்டாளரும் பதிப்புரிமையும் | : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை - 600 113. |
| தொலைபேசி எண் | : 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : 855 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : 2015 : முதற்பதிப்பு : |
| பயன்படுத்திய தாள் | : 16 கிகி டி.என்.பி.எல்.வெள்ளை |
| நூலின் அளவு | : 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : 11 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : 400 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : 1200 |
| விலை | : ரூ.250 (ரூபாய் இருநூற்று ஐம்பது மட்டும்) |
| ISBN | : 978-93-85165-10-8 |
| அச்சகம் | : ராஜ் எண்டர்பிரைசஸ்<br>திருவல்லிக்கேணி<br>சென்னை - 600 005. |

முனைவர் **கோ.விசயராகவன்** எம்.ஏ., எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி.
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை 600 113**

# அணிந்துரை

*பழங்கால அரியநூல்களையும் சுவடிகளையும் பாதுகாக்கும் வகையில் 2014ஆம் ஆண்டு நிறுவனத்தில் 34* ***இலட்சம் மதிப்பீட்டில் சுவடிகள் பாதுகாப்பு மய்யம் மாண்புமிகு மக்கள் முதல்வர் புரட்சித்தலைவி அம்மா அவர்களால் தொடங்கப்பட்டது.*** *அவ்வகையில் நாடெங்கினும் உள்ள அரிய நூல்களை, சுவடிகளைத் திரட்டும் பணி தொடங்கப்பட்டு, கண்டறியப்பட்டுள்ள நூல்களைத் தமிழ்த்தாய் 67 - பெருவிழா, பிப்ரவரி 2015இல் வெளியிடும் திட்டத்தின் கீழ், 1899 ஆம் ஆண்டு வெளிவந்துள்ள இந்நூல் இப்பொழுது மீட்டுருவாக்கம் செய்யப்பெற்று வெளியிடப்படுகிறது.*

*தமிழ்மொழியின் வளத்தை மிகுவிக்கும் வண்ணம் சங்க காலத்தை அடுத்துத் தோன்றியவை சிற்றிலங்கியங்கள். பிள்ளைத்தமிழ், உலா, கோவை, பாவை, பரணி, பள்ளு, குறவஞ்சி, மாலை, அந்தாதி, பதிகம் எனப் பல்வேறு வகையில் பல்கிப் பெருகியுள்ளன. அவை 96 என ஒரு வரையறை இருந்தாலும் அவை நூற்றுக் கணக்கில் பெருகியுள்ளன என்பர். அவற்றுள் பழைமையானவையும், அரிதாகவும் காணப்பட்ட 22 சிற்றிலக்கியங்களைத் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளதே* ***பிரபந்தத் திரட்டு*** *என்னும் இந்நூல். 22 ஆவதாகிய தொண்டைநாட்டுத் திருப்பதிப் பஞ்சரத்தினங்கள் என்ற பிரபந்தத்தில் 22 திருத்தலங்கள் பற்றிய வரலாற்றுச் சிறப்புகள் இடம் பெற்றுள்ளன. சிற்றிலக்கியம் என்பதன் மறுபெயரே பிரபந்தம், இந்தப் பிரபந்தத் திரட்டு அரியநூல் வரிசையில் ஒளியச்சாக்கம் பெற்றுள்ளது.*

இந்தப் பிரபந்தத் திரட்டு என்னும் நூலில் அமைந்துள்ள சிற்றிலக்கியங்களைப் பிரபந்த வித்வான் என்றழைக்கப்பட்ட கொ.பள்ளிகொண்டான் பிள்ளை அவர்கள் இயற்றியுள்ளார். மூலம் மட்டுமே இடம் பெற்றுள்ள இப்பிரபந்தங்கள் ஒவ்வொன்றும் உரையுடன் வெளிவந்தால் மக்களால் பெரிதும் வரவேற்கப்படும். சிற்றிலக்கிய வரிசையில் இவ்வரிய பிரபந்தத் திரட்டும் இடம் பெற்றுத் தமிழன்னைக்குப் புகழ் சேர்த்துள்ளது எனலாம்.

உ

தமிழறிஞர்களின் தமிழ்த் தொண்டினை எப்போதும் பாராட்டுவதில் முதன்மையானவர் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்கள் ஆவார். மாண்புமிகு அம்மா அவர்கள் தமிழ் மீதும் தமிழர் மீதும் தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி** அவர்களுக்கு நன்றி.

தமிழ் வளர்ச்சிப் பணிகளில் ஆர்வத்தோடு நாட்டம் செலுத்தித் தமிழ்த் தொண்டாற்றிவரும் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம்** இ.ஆ.ப. அவர்களுக்கும் இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்பான முறையில் மறு அச்சுப் பெற முனைந்து உழைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அனைத்துப் பணியாளர்களுக்கும் அச்சகத்தார்க்கும் என் நன்றி.

**இயக்குநர்**

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீமதுபயவேதாந்த ப்ரவர்த்தகராகிய

ஸ்ரீமாந் - கச்சிக்கடாம்பி - இராமாநுஜாசார்யஸ்வாமிகள்

திருவடி சம்பந்தியும்,

எதிராஜதாஸரென்னும் தாஸ்யநாமியுமாகிய

ப்ரபந்த வித்வான்

கொ - பள்ளிகொண்டான் பிள்ளையவர்கள்

இயற்றிய

# பிரபந்தத்திரட்டு.

இஃது

ம-ா-ா-ஸ்ரீ அ-இரத்தினவேலு பிள்ளையவர்கள்

முயற்சியால்

ப்ரபந்த வித்வான் - காஞ்சீபுரம்,

ஸ்ரீமாந் - ராமஸ்வாமி நாயுடவர்களாற்

பார்வையிடப்பட்டு

திருமணம் - செல்வகேசவராய முதலியார் M.A.

அவர்களால்

சென்னபட்டணம்,

செங்கல்வராயநாயகர் ஆர்பனேஜ் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1899ஞு ஆகஸ்ட்மீ

இப்புத்தகம் வேண்டியவர்கள் புரசைப்பாக்கத்தில் வினைதீர்த்தான் முதலியார் வீதியில் கீழண்டைவாடை 12-வது கதவிலக்கமுள்ள வீட்டிலும், சூளையில் சாமிபிள்ளைவீதியில் மேலண்டைவாடை 25-வது கதவிலக்கமுள்ள வீட்டில் சே. முத்துகிருஷ்ண நாயுடவர்களிடத்திலும், முத்தியாலுபேட்டையில் பவளக்காரத் தெருவில் மேலண்டைவாடை 42-வது கதவிலக்கமுள்ள வீட்டில் அ- இரத்தினவேலு பிள்ளையவர்களிடத்திலும் வாங்கிக்கொள்ளலாம்.

புத்தகம் ஒன்றுக்கு விலை அணா 12.

# பிரபந்தத்திரட்டின் விவரண அட்டவணை.

---

## பிரபந்தத்திரட்டின் விவரண அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# சாத்துகவிகள்.

ப்ரபந்த வித்வான் - காஞ்சீபுரம்,

## ஸ்ரீமாந்-ராமஸ்வாமி நாயுடவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தங்கள்.

பொன்பூத்த நறுங்கமலப் பொகுட்டுறையு நான்முகத்துப் புத்தே ளீன்ற, மன்பூத்த மன்பதைக ளீடெடுப்பில் லாவிறைவன் மலர்த்தாட் கன்பாய்த், தென்பூத்த வீறிலின் பச் சிந்துவிலாழ்ந் திடுமுரிமை தேரு தென்றுங், கொன் பூத்த பவப்புணரி வீழ்ந்தயருங் கொடுமையினைக் குறித்து நோக்கி, (க)

பரிவொடுமன் னவைமோக்க பாரமதை யடைந்திடற்கோர் பஃறி யாக, அரியபெருங் கருணையினம் முலகுருவருளியநா லனைத்தி னுஞ்சீர், பெரியர்திருப் பவளம்வந்து பிறங்கிடுநா லாயிரத்தும் பேசு சீர்த்திக், குரியகுரு பரம்பரையென் றுரவோர்கள் கொண்டாடு மொருநா லுள்ளும்,

பகாருஞ்சீர்ப் பாகவதம் பளகில்விண்டு புராணமெனும்பனுவ லுள்ளும், நிகரறுபா ரதராமா யணவிதிகா சங்களினு நெறிமை யார்ந்து, தகைமையுறு மானவநா லினுமேனை நூல்களினுஞ் சாற்றும் பற்பல்,வகைப்மைநற் பொருள்கடம்மின் வாய்ப்புடையவாங்காங்கே வரித்தெடுத்தே,

தொடுகடல்சூழ் நிலப்புலவர் தொக்கிருந்துண் டுளமகிழ்வான் றூய்மை யார்ந்த, படுமதுமா மலர்மகள்சீர் நிலமகணீ ளைகடமகுப் பரிவார் கொண்கன், நெடுமைநிறை குணக்கடலிற் றிளைத்தாடு மாரியர்க்கு நிலமேல் வந்த, வடுவறுசீ ராழ்வார்க டமக்குமெழின் மாறனக்கும் வனப்பு வாய்ந்த, (ச)

துதிநலம்வாய்ந் திடுமாலை யொன்றுமகந் தன்கூற்றிற் றுலங்க வந்த, மதிநலமார் மணவாள மாமுனிக்கும் வைகுந்த மன்ன மககட், கதிநலமந் திரராஜ மளித்தருளெம் மெதிபதிக்கு மமல சேனு, பதிகலையிற் றென்குருகைப் பதிவந்த பராங்குசனும் பண்ண வற்கும்,

நலனமைநான் மணிமாலை யொவ்வொன்று மெவ்வெவருநயகருஞ் சீர்சால், குலனமைவெஃசாவினிநற் பொய்கைதனிற் பொன்னிறமார் குசேசயத்தும், பொலனமைசீர்க் கடன்மல்லைப் புனிதமா தவிபூத்த புதுவீ யுள்ளும், புலனமைமா மயிலையிலோர் கிணற்றெழிலார் சேதாம்பற் பூவி னுள்ளும், (௬)

வந்தருளெம் மாதியோ கிகளாய மூவருக்கும் வனப்புவாய்ந்த,பந்தமறு மும்மணிக்கோ வையும்புத்தூர்த் திருத்துழாய்ப் படப்பை வந்து, நந்தமருங் கரத்தாற்கு நற்பாப்பூ மாலைதரு நங்க டாயாம், நந்தமர்முன் காக்கோதை நாயகிக்கும் பற்பலநன் னயங்கள் வாய்ந்த, (௭)

அல்லியங்கே ணியிற்கிள்ளை யமர்பூவை யமிழ்தயிர்கண் டாகி நேருஞ், சொல்லியெழி லார்வேத வல்லியாய்தனக்குமெமைத் துரிச றுத்தாள்,நல்லியலா ருருப்பிணியா நாயகிக்கு நீர்மலையி னண்ணி வாழும், வல்லியுறழ் தருமணிமா மலர்மங்கை யாய்க்கு நின்றை வாய்ந்திலங்கும்,(௮)

எனைப்பெற்ற தாய்தனக்கு மெவ்வுளில்வாழ் கனகவல்லி யெனுமன் னைக்குந், தனைப்பொருவு மத்திகிரிப் பெருந்தேவித்தாய்தனக்குஞ் சசிமேற் றுவும், நனைப்பொழில்சூழ் சுகனூரி னண்ணுமலர் மேன்மங்கை நாயகிக்குங், கனைப்புனற்பொன் னிக்கிடைவா ழரங்கநக ரன்னைக்குங் காதல்கூர்ந்தே, (௯)

அந்தமுறும் பதப்பொருள்க ளமைந்திலங்கு சதச்செய்யு ளலங்கல் வேய்ந்து, சந்தமுறீஇத் திகழல்லிப் பல்வலஞ்சார்ந் துறைபார்த்த சாரதிக்கும், பந்தமறச் சாலியவி முனிக்கருளி யெவ்வுள்வாழ் பரம னுக்கும்,நந்தமையா ளரங்கநக ரப்பனுக்கு மொவ்வொர் கண்ணி நயந்து நல்கி,

வாரணமா மலையுறையும் வரதனுக்கு நாகமலை வாழெந்தைக்குஞ், சீரணவு மந்தாதி மாலையொவ்வொன் றளித்தென்றுந் திகழுந் தொண்டை, ஏரணவு திருப்பதிக ளிருபானே டிரண்டினுள்ளு மிலங்கிநிற்குங், காரணவெம் மடிகளுக்குத் தனித்தனியம் மணிமாலை கவினச் சூட்டி, ()

பிறவிநரலையைக்கடந்து பேரின்ப முத்தியெனும் பெரியதீரத், துறவினைந்து முத்தாப வுருப்பமொழிந் துய்ந்திட்டா னுயர்சூர் மாளத், தெறுகுமரன் றென்பொதியிற் குறுமுனிவற் கிசைத்ததமிழ்ச் சீர்சால் பாடை, யுறுகடலை யொருங்குண்டு தேக்கெறிந்த வுரவோனல் லொளிகு லாவும், (கஉ)

புலவர்பெரு மானென்ன வவதரித்துப் பூவுலகிற் பொருந்துமுப்பால், நலமுலவ வளித்தபெரு நாவலர்வாய்மையைமறுத்த நாப்பூச் செல்வன், அலகறுநற் குணங்களாமணிமணிப்பூ ணொன்றுமணிந்த சீலன், இலகுபொழிற் புரசைவரு மெழிற்சபா பதிக்குரவ னிறும்பூ தெய்த,

அட்டாவ தானமியற் றரும்புலவர் திலகனன்னோ னலர்த்தாட் பத்தி, தட்டாது செய்துநனி யிலக்கியங்க ளிலக்கணங்க டவாது கற்றோன், மட்டாரும் பொழிற்கச்சிக் கடாம்பியிரா மாநுசன்மா மலர்த்தாள்பூண்டு, கட்டாரும் பிரபத்தி மார்க்கத்தைக் கடைப்பிடித்துக் களித்து வாழ்வோன், (கச)

அருணிதியாந் திருமாறன் னடித்தொண்டே யியற்றியென்று மஃகாச் சீர்த்திக், கருணிகர்நற் குலவிளக்கா யொளிர்நார யணக்குரிசில் கவினச் செய்த, தெருளுறுநற் றவப்பயனே யுருத்தெனெ வுலகர்புகழ் செம்ம றேசார், பருணிதரோ றெழிற்புரசைப் பள்ளிகொண்டா னெனுமியற்பேர்ப் பாவ லோனே. (கரு)

---

திரிசிரபுரம் - மஹாவித்வஜ்ஜநசேகரர்

ஸ்ரீமாந் கோவிந்தப்பிள்ளையவர்கள் குமாரரும்

பெங்களூர் சென்ட்றல் காலீஜ் தமிழ்த்தலைமைப் பண்டிதருமாகிய

## ஸ்ரீமாந்-தி-கோ-நாராயணசாமி பிள்ளையவர்கள்

இயற்றியவை.

சீரார் சங்கந் தவவமரும் திருவார் தொண்டை நன்னாடாம், பாரா ரிரத்தி னாகரத்திற் பண்பொற் பணிநீர் கவினுக்கம், நேரார் பொகுட்டுச் சததளந்தண் ணிலைத்தாதிசைமுத் தமிழ்கிதந், தாரார் சென்னை நகராகுஞ் சரோசஞ் சார்ந்த புரசைவயின், (க)

குலவு செல்வக் கருணீகர் குலத்தி னாரா யணக்குரி சில், நிலவு தவத்தில் வந்துதித்து நிகழும் கச்சிக் கடாம்பி நலம், உலவி ராமா நுஜாரியன்று ளூற்றுப்பற்றி யிதம் பெற்றாழ்ந், தலகி லாத தரிசனநூ லாய்ந்துப்ரபந்த ருட் கலந்தோன். (உ)

வேறு

வள்ளிகொண்ட வரனைநிகர் சபாபதியா மஷ்டாவ தானி மன்பால், நள்ளிகொண்ட விலக்கியத்தோ டிலக்க ணங்க ணன்குகற்ற நல்லோன் வல்லோர், புள்ளிகொண்ட பத்திவயி ராக்கியநல் ஞானநலம் புகுந்த நெஞ்சன், பள்ளி கொண்டா னெனும்பெயராற் பரவுகொண்ட பெருந்தகை ய பாக்ய யோக்யன். (௩)

புன்னெறிய சமயங்கள் புறங்கண்டு விண்டுவிண்டு புக ன்ற சீர்சால், நன்னெறிய சமயமிது சமயமிது கொண்மி னென நவின்று கொண்டோன், கன்னெறிய கடுங்கானங் கடந்துவரி யணைகட்டிக் கண்டம் பத்தும், வன்னெறியு முடையானை வதைத்தவனைத் தன்மனத்தில் வைத்துவாழ் வோன். (௪)

வேறு

பரனிலை யுயிர்க டங்கிலை நெறியாய்ப் பகர்நிலை தடை செபூழ் வாழ்வின், றிரனிலை கூறுஞ் செவ்வியோர் மொழி கள் சிக்கறத் தெரிந்துபக் குவர்க்கு, வரனிலை யாகத் தெரிப் பவன் றூய்மை வாய்மையே யாதியாங் குணங்கள், உரனி லை யாக வுறைதரு மிடனு யுற்றவன் வித்தகத் தோன்றல்.

வேறு

ஆறனைத்தும் புகழ்கங்கை யடியானை யடியாரை யக லா துள்ள, ஆறனைத்து முடையானை யன்றியய லறியாத வுறிவை யார்ந்தோன், மாறனைப்பா டினரந்த மதுரகவி யெ னப்பட்டார் மற்றின் னேனம், மாறனைப்பா டியவதனுன் மதுரகவி யென்கோயான் வழுத்து மாறே. (௫)

வேறு

ஆரிய ராழ்வா ரச்சுதன் றுதியே யாதியா யிருபதோ டொன்றுந், தேரிய வணிகொ டொண்டைநன் னாட்டுத் திருப்பதி யிருபதோ டிரண்டிற், சேரியல் பஞ்ச ரத்தின மெனும்பா விலப்பக மியம்பினன் சிறப்புக், கூரிய லாக வெம்மனோர் கூறுங் கொள்கைய தன்றெவன் குறிப்பாம்.

---

# ஸ்ரீமாந் - தி - செல்வகேசவராய முதலியார் M.A.

இயற்றிய

நிலைமண்டில வாசிரியப்பா

வடவேங்கடம்புகழ் வாய்ந்ததென்குமரி
குடபாற்குடகங் குணபாற்குணகடல
என்றநான்கெல்லைத் திருந்தமிழ்நாடு
நின்றவந்நாட்டிடை துன்றித்தோன்றிய
புத்தமுஞ்சமணமும் புகலுமற்றும்பல
புத்தம்புதியவாப் புகன்றிடுமதங்களும்
பிறையெனவுவாவெனப் பெருகியுங்குறைந்தும்
நிறைவிலவாகி நீங்கிக்கரந்தன
வழிவரும்வைணவம் வயங்குசைவம்மென
மொழிபடுமதங்களிம் மூதுலகந்தனில்
இன்றுகாறு நின்றுநிலைத்தன
மன்னிவழங்குறூஉ மன்னவைதம்முள்
ஆரியாவர்த்தத் தரியராமுனிவரர்
சீரியபுலவர்கள் செழுநிலத்தரசர்கள்
என்றிவர்ததழீஇ யேழையோர்த்தணந்து
தென்றிசையண்மி நன்றிசைசெழுமிய
விசிட்டாத்துவிதமாம் விண்டுவினமதந்தனை
விசிட்டநல்லொழுக்குறா வேதவித்துக்களாம்
ஆழ்வார்களுந்தொ ளமைந்தவாரியாகளும்
வீழ்நாள்படாது விழைந்துவளர்த்தனர்
காரணப்பொருளா நாரணப்பரமனைத்
தாழ்வொன்றிலரா மாழ்வார்பதின்மரும்
ஒருமிடருக வுவந்துபழிச்சிய
பெருமைசான்மறைப்பொருள் பிறங்கிடுந்தமிழ்மறை
உரையொடும்வியாக்கியை தருபொருளுணர்ந்தும்
ஐம்பொருடம்மையுஞ் செம்மையிற்றெரித்திடுஞ்
சீரியவாரியன் றிருவடிகளையடைந
தோரியல்ஞானத் தாருயிருயத்தரும்
ஐந்துகிரியையு மடைவுடனடைந்து
மும்மறையின்பொருள் செம்மையினுணர்ந்து
முத்தத்துவநூன் மொழிந்திடுமரும்பொருள்
சித்தந்தன்னிற் றெளிவுறத்தேர்ந்து

புல்லொழுக்கெல்லாம் பொட்டெனப்போக்கி
நல்லொழுக்கந்தனை நல்லணியெனக்கொண்
டிரவுநன்பகலு மிடைவிடாதென்றும்
படியெலாந்தாயநம் பரம்பரன்றன்னையும்
அடியர்கடம்மையு மகமலர்தனினிறீஇப்
புலனுறுமன்புடன் பூசனைபுரிந்திடும்
நலமுடையவர்வை ணவசிகாமணிகளாம்
இன்னனோர்தந்தொகை யெஞ்சுமிந்நாடனில்
தன்னனோர்தந்தொகை தழைப்பானினைந்து
அரிசரணடைந்தவ ரவித்தையாதிகளை
அரிசமயக்கலை யதன்பொருள்கட்குத்
தருப்பணமாகவுந் தரிசனந்தனைநல்
விருப்புடனுணர்வார் விழைபழம்பாடம்
ஆகவுமென்னனோ ரவாவினைமேற்கொண்
டோகையினடியர்தம் மொள்ளடியேத்தெடுத்
தந்தமிலாதொளி ரந்தாமத்திரு
மாமணிமண்டபம் வழிமுறையடைந்து
மாமணிமார்பினன் மாணடிதொழுதுய
ஆரியராழ்வா ரசசுதன்றுதிகளும்
வாரிநேருண்மண வாளமாமுனிக்குந்
தெருணிதியெதிபதிச் செல்வன்றனக்கும்
அருணிதியாகுநம் மாழ்வார்தமக்கும்
உதித்தபேரன்புடன் றுதித்திடவொவ்வோர்
வான்மணிபோலொளிர் நான்மணிமாலையும்
நீதியினுறையுளா மாதியோகிகள்
மூவர்கடமக்குமோர் மும்மணிக்கோவையுந்
தேவர்களுயகன் றிருவருளாலுறாஉம்
மேதையோர்புகழ்திருக் கோதைநாயகிக்கும்
இமிழ்திரைக்கடல்வரு மமிழ்தினுமினியதாரு
சொல்லியாம்வேத வல்லியாய்தனக்குந்
திருப்பணிதிகழுரத் தருப்பிணித்தாய்க்கும்
மன்னணிமாமலர் மங்கையாய்தனக்கும்
பின்னமிலாதெனைப் பெற்றதாய்தனக்கும்
மெல்லியற்கனக வல்லியன்னைக்கும்
ஒவியவியற்பெருந் தேவியன்னைக்கும்
பொங்கொளியலர்மேன் மங்கையம்மனைக்கும்
நிகரில்சீரங்க நகரன்னைக்கும்

எவ்வெவருந்தொழ வெவ்வொர்பாமாலையும்
பார்த்தசாரதியெனப் பகர்ந்திடும்பரஞ்சுடர்
மூர்த்திக்கினியவா மூன்றுசொன்மாலையும்
உலகினில்வாழ்தரு மலகிலாவுயிர்கள்பால்
வாரமாருளத்தெம் வீரராகவப்
பெருமான்றனக்கு மிருமாநிலத்திற்
றிகழ்புகழரங்க நகரப்பனுக்குந்
தேற்றமாயொவ்வொரு மாற்றமாலையும்
அத்திகிரிமிசை யமைசேடகிரிக்
கொத்தவந்தாதியென் றுரையிசைமாலையுந்
தொண்டைநன்னாட்டினிற் சுரக்குநல்வளங்கெழூஉம்
பண்டையவர்திருப் பதிகளோரிருபான்
இரண்டினுக்குந்தவத் திரண்டபேரன்புடன்
மனத்தினிற்றெழுதெழத் தனித்தனியொவ்வோர்
பஞ்சரத்தினப் பனுவனன்மாலையும்
இயற்றியுடனே யியற்றியாங்கிலியத்
தேசந்திகழ்ந்திடச் செங்கோல்செலுத்திடும்
அறனையுந்திறனையு மறிஞர்கணுதொறும்
பேசுபெரும்புகழ் பெறும்பேரரசியாம்
அன்னைவிக்டோரியா வென்னுநற்பெயரினள்
இந்துதேசத்துவா விந்துவினொளிர்தருஞ்
சக்கரவர்த்தினி புக்கரசியற்றிடுங்
காலையிற்கருவியாங் கருமுகிறவழ்பல
சோலைசூழ்புரசைத் தொல்பதியதன்கண்
வியனுறுமயோத்தியா ளயனெனும்பெருமகன்
றருமகன்றசரத சக்கரவர்த்திதன்
றிருமகன்சார்ங்கவிற் சேவகனமரர்கள்
தந்நிதியடியர்க டயாநிதிவாழ்தருஞ்
சந்நிதிமுன்னெணத் தகுங்கலியுகச்சமை
ஒன்றுமையாயிரத் தொன்றினில்விகாரி
வருடங்கடக மதியமுன்பக்கம்
செப்புமேழாந்திதி முப்பதாந்தெய்தியில்
ஆதிவாரம்வருஞ் சோதிநாடன்னிற்
கவியரங்கேற்றினன் கவிவல்லுநர்களும்
புவியரும்புகழ்தமிழ்ப் புலமைசான்றோன்
எழுங்கதிரவரொளி மழுங்கவெஞ்ஞான்று
ந்தாதொளிர்திரு நாடுபெற்றுய்வான்

ஐந்தர்முபாயமே யரணெனக்கொண்டோன்
தப்பொழுங்கினைாநற் றவவொழுக்கினராச்
செப்பமாச்செய்திடுஞ் சித்தகுளிகையிற்
நிலம்புகழ்சீர்கரு ணீகர்குலப்பதி
நலம்பெறுநாரா யணநன்னுவலன்
தவப்பயனெனவரு தநயனல்விநயன்
திவப்பூற்வோங்கி நீடுறுவளம்பெறும்
புசஞ்சியம்பதியினிற் புலவர்தந்திலகனாய்
முட்டொன்றின்றியே யட்டாவதானம்
இயற்றியிசைகெழூஉ மியற்றமிழ்ச்சபாபதிக்
குரவன்றனையடுத் தூரநல்குவதாங்
கனவிலக்கியவிலக் கணநூல்கற்றோன்
மாடகூடங்களார் கூடலூர்வாழ்தரும்
முதலியாண்டானென நுதல்பெருந்தகையுழித்
தரிசனக்கலைப்பொருள் கரிசறக்கற்றோன்
விரிபயோததியிடை வரியராவணைமிசைப்
பள்ளிகொண்டருளெம் பரம்பரன்பதந்தொழும்
பள்ளிகொண்டானெனும் பாவலோனே.

---

புவனகிரி ப்ரபந்நவித்வான் ஸ்ரீமாந்

## அழகியமணவாள தாசரவர்க ளியற்றிய

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மதிமேவு மாரியர்க ளாழ்வார்கண் மாதவன்
 மலரடி முனந்துதித்து
மறைமுதற் றனிமுதல்வ னுமெந்தை மலர்மங்கை
 மதுபமுரல் கோதையாண்டாள்
கதிமேவு பிரபத்தி நெறிகாட்டு மெதிராசர்
 கருணைபொழி வரவரமுனி
கன்னித் தமிழ்ச்சுருதி யோகிமுத லாழ்வார்கள்
 கண்ணுமிவர் கழலிணைகண்மேற்
றுதிமேவு பாவணிகள் சொன்னயம் பொருணயந்
 தோன்றத் தொகுத்தணிந்தான்
தூயமா றரிசனத் தொல்கலைப் பொருளோர்ந்த
 சுகுணன்வள மேவுபுரசைப்

பதிமேவு செம்மன்மெய் யுணர்வுற்ற பாகஞ்
பண்பே பழிச்சுமுரவோன்
பாமகன் விலாசனம் பள்ளிகொண் டான்
பகர்பெயர்கொள் பருணிதனரோ

---

கோயம்புத்தூரைச்சார்ந்த பூளமேட்டிலிருக்கும்
வித்வான் ஸ்ரீமாந்
## வேணுகோபாலசாமி நாயுடவர்கள் இயற்றிய
அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தங்கள்.

உலகமெலா மோதத்தி னுறுவலுரு துகந்துண்டஃதொ ழியுங் காலே, இலகவுமிழ்ந் தளிக்குமெம்மா னிறைவர் தமக் கிறைவனென விழிபொன் றில்லா, அலகறுசீ ராரண த்தி னந்தமறை தலையறிந்த வறிஞர் தம்மிற், றிலகமெனத் திகழ்பெரியர் சேவடியே தஞ்சமெனத் தெளிந்த சீலன்.()

மாதவன்போ னீண்டபெரு மாப்புகழோ னவன்கழ னீர் மானுந் தூயோன், ஆதவன்போல் வாய்மை யுள்ளோ னரிந்தமன்ற னடிக்கன்பி லம்ப ரீடன, நீதவன்போ டருண் முதலா நிகழ்த்திடுநற் குணங்களுக்கோர் நிலய மானோன், தீதவன்போழ் செல்வத்திற் கயிங்கரியச் செல்வமே சிறந்த தென்போன். (உ)

உத்தமதத் துவமூன்றி னுட்பொருளி னுண்மைநிலை யுணர்ந்தேதன் வேத, வித்தமர் சொல் விசிட்டாத்து விதசித் தாந் தத்தையெங்கும் விளங்கச் செய்வோன், மத்தமதா வளத்தினிரு மருப்பொசித்தோன் மலரடியை மறவா தெ ன்றுஞ், சித்தமத னிடையிருத்தித் திறம்பாமற் றினந்தோ றுஞ் சிந்தைசெய்வோன். (ஙு)

ஆழ்வார்க ளாரியர்க ளருளிச்செய் யருங்கலையி னமைந்த மோக்க, வாழ்வார்மக் தணப்பொருடேர் வைணவர்தாட் டுளியாம் வாழ்வு கப்போன், ஊழ்வாட்டு முலககுரு வுரைத்தவொண்ணூற் பொருளெலா மொளிரு ளத்தோன், கேழ்வானோர் குருவேபோற் கேள்வியுள்ளோ னனுட்டானக் கிரமம் வாய்ந்தோன். (ச)

சீரகத்தின் மும்மைமறை நூலகடமிற் செறிந்தபொருட் டேர்சசி யிககோன், பேரகத்தி யந்தொல்காப் பியமுமவைக இலக்கியமாம் பெருநூல் யாவும், ஓரகத்தினுறககற்ற வொளிளியோ ருழிக்கற்ற வுரவோன் வேலைப், பாரகத்திற் பண்டையா ரியாகணடை யாராட்டும் பண்பின் மிக்கோன். (ரு)

இத்தகையார் பள்ளிகொண்டா னெனும்பெயரொம் மேந்தலிரு மறையு மோர்ந்த, சித்தன்வர யோகியெதி பதிகுருகைச செம்மலிவர் சிறந்த சீர்த்திக், கொத்தநான் மணிமாலை முதலாழ்வார் மூவர்கட்கு முரவோ றொன்றும், நத்துமும் மணிகோவை நற்புதுவை வருகோதை நாயகிக்கும், (சு)

அல்லியங்கே ணிப்பதிவாழ் வேதவல்லி யுருப்பிணியா மன்னை மார்க்கும், நல்லியனீர் மலைநின்றை யெவ்வுள் கச்சி நகர்சுகனூர் நல்ல ரங்கம், புல்லிவா ழுன்னையர்க்குந் தனித்தனியே தமிழ்ச்சொன்மணம் பொங்கு மாலை,சொல்லியற்கை ரவக்கேணிப் பார்த்தன்றன் சாரதியாந் தொல்லோனுக்கும், (எ)

எவ்வுளரங் கப்பதிவா ழிறைவர்கட்குந் தனித்தனியோ ரின்சொன் மாலை, அவ்வுளரும் பொருளத்தி யாவமலை யார்களுககந் தாதி மாலை, இவ்வுலகிற் றெண்டைநன்னாட் டிருக்குமிரு பாணிரண்டென் றிசைக்குஞ்சீர்சால், செவ்விபெறும் பதித்திருமால் களுக்கொவ்வோர் பஞ்சரத்நச் செய்யுண்மாலை, (அ)

குழுவல்வினை மற்றவற்றின் காரணகா ரியங்கணனிகுலைந்து நீங்கி, வழுவலில்சீ ரந்தாம வாணர்குழுக் கூடியென்றும் வாழும் வண்ணம்,உழுவலன்பி னியற்றியவ ரவருபயத் திருவடியி லுகந்த ணிந்தான், நழுவலிலா நவச்சுவையா ரம்மாலை களினனுகு நயங்க ளுடின், (கூ)

புவிப்புலவர் தொழும்பதின்மர் தமிழ்மறையின் சாரமெலாம் பொதிந்த வென்கோ, கவிப்புலவர் புகழ்கம்பன் கவிகளினன் னயங்களெலாங் கலந்த வென்கோ, செவிப்புலனுக் கினியவிதி காசவற நெறிகளெலாஞ் செறிந்த வென்கோ, அவிப்புலவ ரமிழ்தென்கோ வின்னவென வறையகிலே னவனி யீரே. (க0)

### வித்வான் பென்னலூர் - நாராயணசாமிநாயுடு புத்திரரும்
### இந்நூலாசிரியர் மாணாக்கரு ளொருவருமாகிய
## நாதமுநிநாயுடவர்கள் இயற்றிய
### நிலைமண்டிலவாசிரியப்பா.

உலககுருவரு ளுதவியபதினெண்
கலைகடம்மினுங் காட்சியாங்கண்பெறு
மேலோராய்ந்திடு நாலாயிரத்தினுங்
கருவரைந்தொழிக்குங் குருபாரம்பரையினும்
மோகவதஞ்செயும் பாகவதத்தினும்
புராணமாம்விண்டு புராணந்தன்னினும்
இதிகாசங்களென் றிசைக்குமிரண்டினும்
மதிசாசொன்றிலா மானவநூலினுங்
குற்றமற்றனவா மற்றநூல்களினும்
பாற்படப்பகுத்துரை பற்பலபொருள்களில்
ஏற்பனசிற்சில வெடுத்தெடுத்தாங்காங்
கணிபெறவமைத்திம் மணிபடுகடல்சூழ்
நாட்டோரநாடொறுங் கூட்டுண்டுசபபான்
பார்மகள்விரைச்செம் பதுமாதனையெனுஞ்
சீர்மகணீளைச் செல்விநறைகொண்கன்வண்
புகழெழும்புணரியிற் புக்கென்றுங்குடைந்
தகமகிழாரிய ராழ்வார்களுக்கும்
ஆரியமறைச்சிரத் தச்சுதன்றனக்குஞ்
சீரியதுதிகளாஞ் செய்யுண்மாலையும்
அரவரசாகிய வநந்தன்கலைவரும்
வரகுணனுமண வாளமாமுனிகளுங்
கவித்தவவித்தையிற் காலதத்துவமெலாந்
தவித்தலமருமித் தராதலத்தோர்தமைத்
திருத்திசசீதரன் றிருவடிக்காட்படும்
விருத்தியினமைக்கவிவ் விபுலைவந்தவனென
உள்ளியோருள்ளத் தெள்ளியோருரைத்திடுந்
துதிபதிபாதத் தெதிபதிதனக்குந்
தெருட்சேநேசன் செழுங்கலைதனில்வரும்
அருட்சடகோபனென் றறைமுனிவரற்கும்
வலம்பெறும்வானவர் வைகுமந்தாம
நலம்பெறவொவ்வோர் நான்மணிமாலையும்
அஃகாவளத்திரு வெஃகாப்பதியுழி

அமலத்தடப்பொற் கமலக்கருவினும்
எல்லையிலிசைக்கடன் மல்லைமாநகர்வயின்
மாதவிபூத்ததோர் தாதவிழ்மலரினும்
வளங்கெழுமயிலையில் விளங்குமோர்கிணற்றறல்
பூத்தசெவ்வல்லியின் மாத்தகைக்கருவினும்
ஆவினுதித்தரு ளாதியோகிகளாம்
மூவர்கடமக்குமோர் மும்மணிக்கோவையும்
நத்தூர்வளவயற் புத்தூர்வந்தருள்
போதநாயகியெனுங் கோதைநாயகிக்கும்
நல்லியலார்திரு வல்லியங்கேணிநற்
சொல்லியாம்வேத வல்லியாய்தனக்குங்
கருப்பிணிகளைந்திடு முருப்பிணியனைக்குந்
துங்கமாநீர்மலை தங்கணிமாமலர்
மங்கையம்மனைக்குநீர் மாவளநின்றையில்
உற்றுறையென்னைப் பெற்றதாய்தனக்கும்
எல்லிசேர்பொழிற்றிரு வெவ்வுள்வாழ்கனக
வல்லியன்னைக்குநல் வாரணமாமலை
மன்னிவாழ்பவளாய் மன்னுயிர்தமக்கெலாம்
ஆவியாகியபெருந் தேவியாய்தனக்கும்
அரிச்சிகன்றவழ்பொழிற் றிருச்சுகனூருறை
பொங்குசீரலர்மேன் மங்கையம்மனைக்கும்
நிகரறுமரங்க நகரன்னைக்குந்
தனித்தனிப்படிப்போர்க் கினித்திடவொவ்வோர்
பதமுறுபொருணயச் சதமணிமாலையும்
நல்லிககாதிய நாடொறும்விளைவயல்
அல்லிக்கேணியென் றறைந்திடும்பதியுறை
தீர்த்தர்கடூர்த்தராந் தெளிவிசும்போர்தொழூம்
பார்த்தசாரதிப் பரம்பரன்றனக்கும்
படர்ந்தசீரெவ்வுட் கிடந்தமாறனக்கும்
நிகரில்சீரரங்க நகரப்பனுக்கும்
எவ்வெவர்தமககு மினித்திடவொவ்வொரு
நூறுமாமணியெனக் கூறுமாமாலையுங்
கைந்நாகசசிலைக் கரிவரதனுக்கும்
பைந்நாகச்சிலைப் பரந்தாமனுக்கும்
நந்தாதிப்புவி நயந்திடச்சதத்தொகை
அந்தாதிப்பே ரணிமணிமாலையுந்
தொண்டைநாட்டின்கண் மண்டிவிளங்குறூஉம்

ஐந்நான்கிரண்டெனு வறைதிருப்பதிகளில்
எஞ்ஞான்றும்முறை யெம்பெருமான்களுக்
கிம்மணிக்கடலுல கிசைத்திடவொவ்வோர்
ஐம்மணிமாலையு மணிபெறவியற்றிப்
பணிந்தவரவர்திருப் பாததாமரைகளிற்
றிணிந்தபேரன்புடன் பணிந்தனனணிந்தனன்
கரைசெயற்கரியதோர் கல்வியங்கடலாய்ப்
புரசையம்பதிவாழ் புலவர்தந்திலகனுய்
அட்டாவதானந் தட்டாதியற்றிடுஞ்
சுபாகரனெனச்சொலுஞ் சபாபதிமாலுழி
இலக்கியவிலக்கண விருநூற்பொருளெலாம்
அடுத்துச்செவியான் மடுத்துக்கற்றேன்
திருமாறரிசனச் செழுங்கலைப்பொருள்களுங்
கருமாலறுத்துநற் காட்சிதந்தருள்வதாஞ்
செந்தமிழாரணந் தந்தருள்பொருள்களுந்
தக்கோரறிவான் மிக்கோர்தாள்களுக்
கற்றேனுகி யருந்தொண்டியற்றிப்
பெற்றேன்பெரியரைப் பேணிடும்பெற்றியன்
ஈசக்கூடென்றுந் தவழ்தண்டலைசூழ்
கொசப்பூரெனும்பெயர் கொண்டநற்பதியினன்
அன்னக்கொடியின ரம்புயமாலையர்
என்னப்புவியோ ரிசைத்திடுமிசைகெழூஉஞ்
சீர்கருணீகரொன் பேர்கெழுகுலத்தினன்
திவ்யாங்கமாமுனிச் செழும்பெயர்க்கோத்திரன்
செவ்வியதாய்த்திகழ் திரியாங்கசூத்திரன்
உய்வழிக்குரியவா மெய்வழிநூல்களே
பாராயணஞ்செயும் பண்பினனாகிய
நாராயணமா னல்கியநந்தனன்
நாற்பொருட்பயத்தவா நூற்பொருளடியனேன்
கருத்தினிலமைந்திட வருத்தியிற்பன்முறை
யோதகாரியெனும் போதகாசிரியன்
பாலலைதன்னினு மாலிலைதன்னினும்
பள்ளிகொண்டருளெம் பரம்பரன்பதம்பணி
பள்ளிகொண்டானெனப் பகரியற்பெயரும்
நேசமாயெவருமிகழ்த்தெதிராச
தாசனெனச்சொலுந் தாசியநாமமும்
பெற்றேனென்னுழிப் பெருகன்பென்றும்
பெற்றேனெனச்செயும் பெருந்தகையோனே.

---

## இந்நூலாசிரியர் மாணாக்கரும்
### ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாதரேணுவுமாகிய
### திருவல்லிக்கேணி
## சே - முத்துகிருஷ்ண நாயுடு இயற்றியவை.

சீரோங்குசெங்கமலை கேள்வனருளுற்பவச் செவ்வியிற்
பெறுசிறப்பாற் - றிகழ்சாத்துவிகனாய்த் திடஞான
முடையனாய்த் தெளிவிசும்பெய்தவெண்ணுஞ்
சிந்தனையையுடையனா யாரியர்களாழ்வார்கள் சீதரன்று
திகண்முன்னாச் - சீர்த்திபெறுமணவாள மாமுனிக்கு
ந்தெருட் செல்வனா மெதிபதிக்குந்
தென்குருகைமாறனுக் குந்தனித்தனியே சிறந்தான் மணி
மாலையுந் - தீர்த்தர்முதலாழ்வார்கண் மூவர்கடமக்
குமோர் திகழ்மும்மணிக்கோவையுஞ்
சீவில்லிபுத்தூரி னற்றுளவினடிவந்த சீர்க்கோதைநாயகி
க்குந் - திருவலிக்கேணிமறை வல்லியாய்க்குங்கருணை
சேருருப்பிணியனைக்கும்

நீரோங்குமலைவாழு மணிகொண்மாமலர்மங்கை நித்தியை
க்குஞ்சோலைசூழ் - நின்றையென்னைப்பெற்ற தாய்க்
கும்வளனோங்கெவ்வு ணிலவுபொற்கொடியனைக்கும்
நீர்மைபெறுகச்சிப் பெருந்தேவியாய்க்குநில நீர்வளச்சுக
னூரிலவாழ் - நிமலையலர்மேன்மங்கை யன்னைக்குநி
கரில்புகழ் நீடரங்கத்தனைக்கும்
நிகமவொலிநீங்காது நிகழ்கைரவக்கேணிநிலையகங்கொண்
டபார்த்தன் - நெடுந்தேருகைத்தபெரு மானுக்குமு
னையெவ்வு ணிகழ்வீரராகவற்கும்
நிறைசீரரங்கநக ரப்பனுக்கும்பெருமை நேர்ந்தபொருண்
மணமாப்பயன் - நிலவுசொன்மலராத் தனித்தனிய
மைத்தநன் னிலைமைசேர்மாலைவகையும்

காரோங்குசேடகிரி மாலுக்குமத்திகிரி கரிவரதமாயனுக்
குங் - கவினோங்குமந்தாதி யுந்தொண்டைநாட்டிற்
கலந்தவிருபானிரண்டாக்
கனைதிருப்பதிகடொறும் வாழுமெம்பெருமான்களுக்கொ
வ்வொர்பஞ்சரத்நக் - கண்ணியுமியற்றியவ ரவர்திரு
க்கழல்களிற் கரையிலன்பாற்புனைந்தான்

கருணீகர்குலதிலக னென்னுநாராயணக் கலைவலோன்கா
தன்மைந்தன் - கடிப்புரசையட்டாவ தானச்சபாபதி
க் கவிஞர்பெருமானுழியிலக்
கணவிலக்கியநூல்கள் கற்றுணர்ந்தோன்கணக் காவளக்கூ
டலூர்வாழ்-கருணைநிதிமுதலியாண் டான்பாங்கர்மா
ன்மதக் கலைகளின்பொருளுணர்ந்தோன்

பாரோங்குசச்சிக் கடாம்பிராமாநுசப் பகவனடிபற்றியுய்ந்
தோன் - பரவுமகிழ்மாலைப் பராங்குசன்முதற்பதின்
மர் பவளவாயவதரித்த
பழையதமிழாரணப் பொருள்வைணவக்கலைப் பண்டிதர்க
ள்பாற்றெளிந்தோன் - பளகில்சீர்ப்பெரியவாச் சான்
பிள்ளையுலககுரு பன்னுமவரிளவலென்னும்
பரஞானிமணவாள யோகிவரயோகியாம் பண்டையாரியர்
கலைகளிற் - பதிந்தபொருள்யாவும் பதிந்தவுளனென்
னுழிப் பரிவினன்னையினுமிக்கோன்
பகர்முதலியாண்டா னெனும்பரமபாவனன் பாலென்னையு
ய்த்தவள்ளல் - பள்ளிகொண்டானெனும் பேர்கொ
ளெம்மாரியன் பைந்தமிழ்ப்பாவலனரோ.

வேறு.

தண்டிமிழாய்மோலியருள் பெறும்விசிட்டாத்துவித சமயத்
தினன்சமமுடன் - றமமாகியாத்தும குணத்தினனால்
வழித் தழைஞானமுடனொழுக்கங்
கொண்டிலகுதூயவன் பிரபத்திநெறியினன் குருநிட்டை
யான்மும்மறை - கூறுமூன்றுகார மேவிநவவிதமாக்
குறிக்குமுறவுந்தெளிந்தோன்
பண்டைமறைசொல்லுமுத் தத்துவத்தன்மையைப் பள
கறத்தேர்ந்தருத்த - பஞ்சகமதன்பகுப் பைந்தினையு
மோர்ந்தவன் பாரதந்திரியவிரதன்
புண்டரிகவாவிசூழ் பூதபுரிவாழுமெதி புங்கவன்றுள்புக
லெனப் - புகருவாழ்பள்ளிகொண் டானடித்துணைசி
ரம் புந்திவைததேத்துவெனரோ.

வெண்பா.

தேனூறி யாயுலகிற் செப்புசுவைப் பல்பொருளும்
வானூ ரமுது மதியேனே—ஆனுச்சீர்ப்
பள்ளிகொண்டா னென்னும்பேர்ப் பாவலர்கோன் பாமாலைத்
தெள்ளமுதத் தேக்கையுளந் தேர்ந்து.

அவையடக்கம்

விண்டுதரி சனநூலால் வேதவீரை
வேலைகண்ட வேதியரும் வேலைவண்ணன்
தொண்டிரதந் துய்க்குமே னையகுலத்துத்
தொண்டர்களுந் தத்தந்தாட் டேளியென்னுந்
தொண்டனிழை நூற்றுகளைச் சுரபிவற்சத்
துரிசையின்பிற் கொண்டதனைத் தூயதாக்கிக்
கொண்டிடல்போற் கொண்டெனையுந் தூயோனுக்கிக்
கொள்ளுவர்தம் பெருந்தகைமைக் குணத்தினுனே.

மூலவிலக் கணவிலக் கியமுன்னீரை
முற்றுமுண்ட மூதறிவான் முளைத்ததான
சீலமுறுஞ் சிரியர்காள் சிறியேன்செய்யிச்
சின்னூல்க ளனைத்தினுள்ளுஞ் செறிந்திருக்குங்
கூலமிரைக் குற்றங்கள் கண்டுநுங்கள்
குழவிமிழற் றுங்குதலைக் குயில்கள்சே ..ப்ச
சாலவுளங் களித்தலெனக் களித்தனுங்கள்
சான்றுண்மைச் சாயலுக்குத் தக்கதாமே.

உலகினினூ லனைத்துமுணர்ந் தோருமில்லை
யொன்றுமுண ராதோரு மிலையுடற்கண்
உலவுகுணங் கண்மூன்றுங் கவியுரைப்போர்க்
குறுமேத நான்குமொழித் தோருமில்லை
நிலவுமிந்த நியாயவகை நெஞ்சத்தோர்ந்த
நெடுந்தகைமைப் பெரியரிந்நூ னிகிலத்துள்ளுங்
குலவுகுற்றங் குறியார்க ளெனுங்குறிகோள்
கொண்டவரைக் களைகணுக் கொள்கின்றேனே.

அரங்கேற்றிய காலமும் இடமும்

அணிமேவுகலியாண்டு மாறனவதாரவாண் டையாயிரத்,
தொன்றினில் - அறைதரும்விகாரியாண் டாடிமூப்
பான்றெய்தி யதனில்வருசுக்லபக்கம்
நணிமேவுசத்தமித் திதியிரவிநாள்சேர்தி நாடனில்வளங்
கொள்புரசை - நற்பதியிலிசைகெழுஉ மஞ்சனையின்
மைந்தனிரு நயனங்களிக்கவந்த
மணிமேவுமுடியுடைத் தயரதன்புதல்வனெம் வைதேகி
மகிழ்மணாளன் - வானவர்கடனிமுதல்வன் மேவிவா
ழ்சந்நிதியில் வண்டமிழ்ப்பள்ளிகொண்டான்
திணிமேவுமன்பினொடு மாரியர்களாழ்வார்கள் செங்கமலை
மாவிவர்கண்மேற் - செப்புபாமாலைக ளரங்கேற்றினு
ன்புலவர் செவிமனங்களிகொள்ளவே.

இஃது பூர்வம் ஸ்கூல் இன்ஸ்பெக்டராயிருந்த
வ. லக்ஷ்மணநாயுடவர்கள் இயற்றியது.

ஸ்ரீ

# ஸ்ரீமதேராமாநுஜாயநம:

---

அடியில் வருவன, அவற்றுடன் சேர்த்திருக்கும் நூல்களை இயற்றிய கொ-பள்ளிகொண்டான்பிள்ளை என்பவர் அந் நூல்கள் இனிது முடிதற்பொருட்டுத் தன் தந்தையும் பிரதம குருவுமாகிய கொ-நாராயணபிள்ளை, இலக்கிய இலக்கணநூல்களைப் பயிற்றின புரசை-அஷ்டாவதானம்-சபாபதி முதலியார், இரகசிய கிரந்தங்களை ஓதுவித்த கூடலூர்-மூதலியாண்டான் தாஸர், பஞ்சசமஸ்கார பூர்வகமாக மந்திரமந்திரார்த்தங்களையுபதேசித்தருளிய ஸ்ரீமத்-உ-வே-கச்சிக்கடாம்பி-இராமாநுஜாசாரியார் முதலிய ஆசாரியர்கள், ஆழ்வார்கள், அநந்தகருடவிஷ்வக்ஸேநர், பெரியபிராட்டியார், பரத்துவாதி பஞ்சகங்களாகிய பரவாசுதேவன் என்னும் இவர்கள் விடயமாகச் செய்த

## துதிகவிகள்.

---

கொ-நாராயணபிள்ளை.

அரியோமென்றுதியிலக்கரமாதியடைவுடன்சொல்
பெரியோனையான்வினைப்போகத்திற்கிம்மையிற் பெற்றவுடற்
குரியோனைநாராயணனையுருளொற்றையூர்திகொளேழ்
பரியோனெனவுட்டிகழ்வானைப்பேணிப்பழிச்சுவனே. (க)

புரசை-அஷ்டாவதானம்-சபாபதிமுதலியார்.

புரசைப்பதிவளரட்டாவதானப்புலவர்கணத்
தரசைத்தமிழ்க்கல்விவேட்டோர்திளைக்குமளக்கரினீள்
சரசைச்சபாபதிமாலையெப்போதினுந்தாழ்ந்துதொழுஞ்
சிரசைக்கரத்தைப்படைத்தேனிதுவுமென்செய்தவமே. ()

புரசைச்சபாபதிக்கோமான்பொருவில்புலவர்கணத்
தரசினமக்கன்புடையாரிலையென்றதிர்மணிநா
முரசறைந்தன்னோன்முகிற்கடப்பாட்டைமொழிந்திடமெய்ப்
பரசெடுப்பான்வம்பினென்னுடன்கல்விபயின்றவரோ. (௫)

கூடலூர்-முதலியாண்டான் தாஸர்.

தீண்டானைத்தீச்செயனற்செயலாகுந்திகழ்மணிப்பூண்
பூண்டானைமான்மதநூற்பொருளுள்ளம்புகுத்தியென்னை
யாண்டானையாத்தனையங்கூடலூரண்ணலாமுதலி
யாண்டானைநெஞ்சேயணிவிளக்காநின்னகத்திருத்தே. ()

கச்சிக்கடாம்பி-இராமானுஜாசாரியார்.

ஏராராத்ரேயமரபமுதாழியெழுமதியைச்
சீரார்பரமாரியன்சீநிவாசன்றன்சேய்மணியைத்
தாரார்புயனையிராமானுசனெனுஞ்சற்குருவை
நாராநின்பால்வைத்துப்போற்றுதியென்றுமென்னன்னெஞ்சமே.

மெச்சிச்சகம்புகழ்மேம்பாடுடையனைமெய்ம்மைமறை
உச்சிப்பொருளெற்குரியனசெய்துரைத்தானைவளக்
கச்சிக்கடாம்பியிராமானுசாரியக்கற்பகத்தை
இச்சித்தவெற்கென்குறைநல்விபூதியிரண்டினுமே. (௬)

அஷ்டதிக்கஜங்கள்.

எட்டுக்ககுபத்திபங்களினுங்காங்கிருந்திரும்பைத்
தொட்டுப்பொன்செய்திடும்வேதியிற்சேதநர்தோந்துடைத்துக்
கட்டுப்படுத்திநங்கண்ணனுக்காட்செயக்கண்டிடுவான்
இட்டுப்பிறந்தநம்மாரியரொண்மனையேத்துநெஞ்சே. (௭)

ஸ்ரீமணவாளமாமுனிகள்.

பணவாளரவணைப்பள்ளிகொண்மாயன்பரத்துவத்தைக்
குணவாளர்நெஞ்சிற்குறித்திடவந்தகுருமணியைத்
தணவாதுசீசயிலேசத்தனியனைச்சாற்றிநெஞ்சே
மணவாளயோகிமலரடிவாழ்த்துதிமாண்புறவே. (௮)

திருவாய்மொழிப்பிள்ளை.

மருவார்மலர்க்குழன்மாறரகட்டின்மறவினையாற்
கருவாய்ப்பிறவிகழிப்பானிருக்கின்கடையுரைசெய்
பெருவாய்மையோர்ந்தபெரியோர்கள்பேசும்பெரும்புகழார்
திருவாய்மொழிப்பிள்ளைசேவடிசிந்தனைசெய்குவனே. ()

பிள்ளைலோகாசார்யர்.

இலகாரியந்தமிழ்நூல்களினின்றுலகோர்களுய்யப்
பலகாரியகாரணங்கடொகுத்துப்பன்னூலியற்றத்
திலகாரியர்கள்செறிந்திடுங்கோயில்செனித்தபிள்ளை
யுலகாரியனடியென்னுளத்தென்றுமொளிர்தருமே. (௧0)

வேதாந்ததேசிகர்.

வேதாந்தசூத்திரத்துக்கெம்மெதிபதிமெய்விளங்கப்
பாதாந்தமாகப்பணித்தநற்பாடியமாம்பயிர்க்கு
வாதாந்தகாரப்பகடழியாதுவன்காப்பினின்ற
வேதாந்ததேசிகன்றுணம்முளத்திருள்வீட்டொளியே ()

வடக்குத்திருவீதிப்பிள்ளை.

கருவீதிநீக்குந்திருவாய்மொழியின்கருத்துணர்த்தும்
பெருவீதியாமுப்பத்தாறுயிரப்படிப்பேருரையைத்
தருவீதராகர்தலைவனங்கோயிலைச்சார்வடக்குத்
திருவீதிப்பிள்ளைதிருத்தாள்கருத்துடன்சேவிப்பனே. ()

பெரியவாச்சான்பிள்ளை.

ஒளியுருவாகுந்திருவாய்மொழிப்பொருளோர்ந்திடுவான்
தெளியுருவாகுமிருபானுன்காயிரச்செவ்வுரைசெய்
அளியுருவாநம்பெரியவாச்சான்பிள்ளையங்கழலைக்
களியுருவாகுநெஞ்சேநின்கண்வைத்திநற் காப்பென்னவே.

நம்பிள்ளை.

உலகாரியப்பெயரோனடுத்தோர்கட்குரன்கொளுத்தி
நலகாரியஞ்செய்யுநம்பூர்நம்பிள்ளைநளினமென
இலகாரியவடியேயென்னிதயத்திலேய்ந்திருக்கும்
அலகாரஞ்ஞானமிரிக்குமெய்ஞ்ஞானவலரியன்றே. (௧௪)

நஞ்சீயர்.

விழுமியஞானநிதியாம்வேதாந்தியிம்மேதினிமேற்
கெழுமியகீர்த்திநஞ்சீயரொங்நாளுங்கிளர்மதியோர்
தொழுமியற்சேவடிநெஞ்சேநினைநமைத்தொன்றுதொட்டுக்
கழுமியபாவக்கடல்கடத்துங்கடமைக்கலமே. (௧௫)

ஸ்ரீபராசரபட்டர்.

கஞ்சத்துணையெனவென்றுமென்கட்டுணைகாண்டுணையென்
நெஞ்சத்துணைநங்நிமலனருட்டுணைநீடுபொழி
வஞ்சத்துணைவளைவாட்டுந்துணைமுத்திவான்வழிக்கோர்
தஞ்சத்துணைநம்பராசரபட்டர்தந்தாட்டுணையே. (௧௬)

எம்பார்.
அம்பார்கண்ணங்கனையாராசைநீத்தவறிஞர்கள்கோன்
எம்பாரொனுநம்மடிகளிவறவிலாரிறைஞ்சும்
வம்பார்மலரடிவைகுந்தமீந்திடவல்லதென்று
நம்பாரைநம்பாதிருத்தனலமென்றனன்னெஞ்சமே. (கஎ)

எம்பெருமானர்.
எதிபதியெண்ணுமிரண்டுவிபூதியினடத்தும்
அதிபதியாரணத்தந்தப்பொருட்கோரகலுரைசெய்
மதிபதிமாசுணமன்னவதாரிமறையவர்தந்
துதிபதிபாதநெஞ்சேநமக்கென்றுந்துணைநிற்குமே. (கஅ)

பெரியநம்பிகள்.
நம்பிவழிபடுவோர்க்கெளியோன்பிறர்நண்ணரிய
அம்பியடியச்சுதற்குநமையென்றுமாட்படுப்பான்
தும்பிமுரல்பொழில்சூழ்கோயில்வந்ததொல்சீர்ப்பெரிய
நம்பியடிகளடிகணமக்கென்றுநற்றுணையே. (கசு)

ஸ்ரீஆளவந்தார்.
சூளவஞ்செய்திலேயென்றபயன்பன்னிசொல்லித்தன்னை
ஆளவந்தாரென்றழைத்தசிறப்பாக்கியர்பிறவிக்
கோளவந்தீர்க்கும்யமுனைத்துறைவர்குரைகழலை
நாளவம்போகாதிறைஞ்சிவழுத்துதிநன்னெஞ்சமே. (உ0)

மணக்கால்நம்பி.
குணக்காதிதிக்கினர்கொண்டாடுங்கீர்த்திக்குவாலுடைய
மணக்கானம்பிப்பெயர்மாதவன்பாதத்தைமத்தகத்தின்
வணக்காலுரையால்வளர்வீண்கருமம்வரைந்தமனத்
திணக்காற்றொழுதுவழுத்திநினைப்பணிடாறவே. (உக)

உய்யக்கொண்டார்.
மண்டரிக்கஞ்சக்கண்ணுய்யக்கொண்டார்தம்மலரடியைக்
கண்டரிச்சந்தனக்கண்ணிகொண்டேத்திக்களிக்குமனத்
தொண்டரிச்சன்மத்தொடர்பறுத்துப்பரஞ்சோதிமய
விண்டரிப்பற்றவிழுப்பதங்காண்குவர்மெய்ம்மையிதே. ()

ஸ்ரீமந்நாதமுனிகள்.
அமிழ்தினுமாற்றவினிதாந்தமிழ்மறையாவுமுன்போல்
இமிழ்திரைஞாலத்திலங்கச்செய்நாதமுனிகளென்னும்
சிமிழ்திமிராரிநஞ்சிந்தையல்சீத்தொளிச்சின்மயமாய்
இமிழ்திவத்தேற்றுங்கண்ணேணியெனவறி யென்மனனே.

பொய்கையாழ்வார்.

செய்கைதிருந்திமுச்செம்பொருண்ஞானஞ்செறிந்துலகோர்
உய்கையடையவுயரிசைக்கச்சிவெஃகாவுதித்த
பொய்கைமுனிவனைப்போற்றுநெஞ்சேயவன்பொங்கருள்வாள்
கொய்கைசெயுநம்பவஞ்செய்வினையின்குழுவினையே. ()

பூதத்தாழ்வார்.

கடன்மல்லைவந்தநம்பூதத்தடிகள்கழறெழினஃ
தடன்மல்லைமாய்த்தோனடிக்காட்படுத்தியைம்பூதமய
உடன்மல்லைநீக்கிப்பஞ்சோபநிடண்மயமாயொளிரும்
உடன்மல்லைத்தந்துநமைமோக்கவீட்டின்பத்துய்த்திடுமே.

பேயாழ்வார்.

அயிலைப்பழிவிழியார்போகவாஞ்சையிலாழ்த்தவித்தைத்
துயிலைத்துடைத்துச்சுகம்பெறவெண்ணினென்றூயநெஞ்சே
மயிலைப்பதிமகதாக்கியமாமுனிமாமலர்த்தாள்
எயிலைத்துணைகொணமக்குப்பிறவியிடரில்லையே. (உசு)

திருமழிசையாழ்வார்.

பாரனைத்துள்ளினும்பண்புடைத்தென்னப்பகர்மழிசை
யூரனைத்தன்புகழோராதுதன்னெடுடன்றவரை
மாரனைவென்றுநம்மாயனையேத்திமகிழும்பத்தி
சாரனைச்சார்தியென்னெஞ்சேநஞ்சன்மத்தவறறுமே. ()

குலசேகராழ்வார்.

வில்லவர்கோன்மணியாரம்வவ்வாரெங்கள்விண்டுசித்தர்
நல்லவரென்றுநன்னகக்குடத்ததநம்பியிட
வல்லவனுமெங்குலசேகரப்பெருமாள்புகழைச்
சொல்லவல்லார்மனனேமோக்கமார்க்கத்துணைவர்களே.(

பெரியாழ்வார்.

சிட்டர்துதிசெகத்காரணன்றன்னைச்செழுமறையால்
எட்டர்புகழ்பஞ்சவனவைதன்னிலெடுத்துரைத்த
பட்டர்பிரான்றன்பதபங்கயத்தைப்பணிந்துதொழார்
இட்டர்களாயினுமன்னோர்களைவிட்டிருத்தனன்றே. (உகூ

ஸ்ரீஆண்டாள்.

கருக்கோதைநீத்திடக்காசினியீர்நீர்கருதுதிரேல்
இருக்கோதையோவாப்புதுவையில்வந்தவிறைவியென்றாய்
திருக்கோதைநாயகிசெந்தாமரைமலர்ச்சேவடியின்
மருக்கோதைசூடிவணங்கிவழுத்துதிர்வைகலுமே. (௩0)

தொண்டரடிப்பொடியாழ்வார்.

அண்டங்குடிகொளகட்டோற்கு நம்மையிங்காட்படுப்பான்
மண்டங்குடிவந்தமாதவன்மாணடிவாழ்த்துநெஞ்சே
துண்டங்குடிகளங்காதுகண்ணுதியதொக்கிடுமிப்
பிண்டங்குடிபோம்பெயர்த்தும்வருமெனும்பீரில்லையே. ()

திருப்பாணாழ்வார்.

பாகனவேதப்பசுந்தமிழாலிப்படருலக
மோகனரங்கன்றன்பாதாதிகேசமுறைதுதித்த
மாகனயோகிநம்பாண்பெருமாண்மறையோர்ந்தமுனி
வாகனயோகர்மலரடியெற்கென்றும்வான்றுணையே. (௩௨)

திருமங்கையாழ்வார்.

திருமங்கைகேள்வற்குமாறன்செய்செந்தமிழ்ச்செய்யமறைக்
கருமங்கமாறுமறையவவனிக்கவதரித்த
திருமங்கைமன்னன்றிருவடிசிந்தனைசெய்யின்முத்தித்
தருமங்கைகூடும்பிறப்பாதித்துன்புந்தவிர்ந்திடுமே. (௩௩)

மதுரகவியாழ்வார்.

செந்தாமரைக்கண்ணற்போற்றுதுதன்னைத்திருக்குருகை
வந்தாண்டமாறனையேதெய்வமென்றுவழுத்தியநம்
ஐந்தாமுபாயத்தமைந்தோன்மதுரகவியடிகள்
அந்தாரடிகள்மனனேபவநோய்க்கருமருந்தே. (௩௪)

நம்மாழ்வார்.

ஆயிரஞ்சாகைகொளார்ணத்தந்தமடுத்துரைக்கும்
ஆயிரநாமனுக்காயிரமோலியரிந்தமனுக்
காயிரஞ்செய்யுளளித்தகுருகையமலனடி
ஆயிரமாகவிரிபவநோய்தீரதகநெஞ்சே. (௩௫)

சேனைமுதலியார்.

ஐங்கோலனந்தகனாரணனணைகளற்றொழியும்
ஐங்கோலத்தெந்தையைச்சேவிக்கவீண்டுமமரர்களுக்
கங்கோலத்தாட்சடகோபஞ்சித்திக்கவண்ணிக்கரங்கொள்
செங்கோலர்சேனைத்தலைவரடியிணைசேர்பவர்க்கே. (௩௬)

பெரியதிருவடிநாயனார்.

போதத்துருவற்குப்பொன்றுப்பதந்தந்தபூமகள்கோன்
நீதத்துலவமென்பண்பூண்டுவகைநிறைந்துநிற்கும்
வேதத்துருவன்வியாளாபரணன்விநதைமைந்தன்
பாதத்துணைதுணைநெஞ்சேநாஞ்செல்லும்பரகதிக்கே. (௩௭)

திருவநந்தாழ்வார்.

குருவனந்தாழ்பஃறலைமணித்தீபகுலமமைத்து
மருவனந்தாமமணிந்தென்றுந்தொண்டின்மகிழ்ந்துநிற்கும்
திருவனந்தாமத்தமரர்கள்கோட்டித்திலகனெனுந்
திருவனந்தாழ்வான்றிருவடிசிந்தனைசெய்திநெஞ்சே. (௩௮)

பெரியபிராட்டியார்.

பங்கயத்தாள்மலராதனம்வாழ்ந்தருள்பார்க்கவிசெம்
பங்கயத்தாளைப்பரிவுடன்போற்றிப்பணிதிநெஞ்சே
பங்கயத்தாரலர்த்துங்கதிர்ச்சூனுபாமனுந்திப்
பங்கயத்தான்செய்யழிப்புப்படைப்புப்பயமிலையே. (௩௯)

பரத்துவாதிபஞ்சகங்கள்.

ஐவகையாயிரஞ்சென்னிப்பணியேந்தவனியரை
ஐவகையானவினையிற்றிருத்தியடிமைகொள்வான்
ஐவகையானவடிவத்தமைந்தநம்மாதிதனை
ஐவகையானபொறியவித்தேத்தெனவலநெஞ்சே. (௪௦)

அர்ச்சை.

அடியாருகந்தவுருக்கொண்டருச்சகனண்டுமுள்ளப்
படியேயொழுகியிப்பார்த்தளிவீட்டிற்பரிவுடனே
குடியேறியன்பர்குறித்தனநல்கிக்குலவுமர்ச்சை
வடிவாகுநம்பெருமானடிவாழ்த்திவணங்குநெஞ்சே. (௪௧)

அந்தரியாமி.

நிலையாமுயிர்க்குட்சொரூபத்தினண்ணிநிறைந்துநின்றும்
நிலையாந்தன்விக்கிரகத்துடனுள்ளத்தினேர்ந்துநின்றும்
நிலையாநியமிக்குமந்தரியாமிநிமலன்பொற்றாள்
நிலையாநினைதிநெஞ்சேநித்யமுத்திநிலைபெறவே. (௪௨)

விபவம்.

அலகிலதாய்க்கௌணமுக்கியமாகியவந்தரத்தால்
அலகில்முமுக்குக்களாதரஞ்செய்வனவல்லனவாய்
அலகிலிசைகொள்விபவாவதாரவடிகளடி
அலகில்விடயத்துழன்மனனேநின்னகத்திருத்தே. (௪௩)

விபவபேதம்.

தாபாதிநீங்கியித்தாரணியோர்கடைழைக்கும்வண்ணந்
தீபாதிதோன்றிடுந்தீபத்தினேருங்கித்திகழ்பதும
நாபாதிகாலொன்பதுபேதமாம்விபவங்களைநம்
பாபாதிநீங்கிப்பரகதிநண்ணப்பணிதிநெஞ்சே. (௪௪)

### வியூகவாசுதேவர்.

கார்கொணித்யோதிதர்கட்டோன்றிநற்சங்கருடணனென்
பேர்கொள்வியூகத்தின்காரணமாகிப்பிறங்கிநிற்குஞ்
சீர்கொள்வியூகவசுதேவனாகியசெல்வனைநம்
ஏர்கொள்சாந்தோதிதப்பேரானையேத்தியிறைஞ்சுநெஞ்சே.

### சங்கர்ஷணாதி வியூகமூர்த்திகள்.

மும்மைத்தொழில்களுமற்றுங்கருமமுமுற்றுவிக்கும்
அம்மைபெறுசங்கருடணப்பேர்கொளமலன்முதற்
செம்மைவியூகநன்மூர்த்திகள்மூவர்திருவடியை
எம்மையுமேத்துதிநெஞ்சேபிறவியிடாறவே. (சகூ)

### கனவுநனவாதி வியூகபேதம்.

புல்லுமுபாசகராதியர்க்காப்பான்புகனனவு
வல்லகனவுசுழுத்திதுரியவடிவமைந்து
சொல்லும்வியூகங்களுன்கினும்வேறெனத்தோன்றியென்றும்
நல்லருணண்ணும்வியூகத்தின்பேதத்தைநாடுநெஞ்சே. ()

### கேசவாதி வியூகபேதம்.

ஒண்பாலமர்தியுழிநின்றுடற்புரந்துன்னுமவர்
நண்டாபமாதியநீக்கிடநான்குவியூகநின்றும்
எண்ணார்மும்மூன்றென்றிசைமூர்த்திகளாயிலங்கிவந்த
வண்கேசவாதிவியூகாந்தரத்தைவணங்குநெஞ்சே. (சஅ)

### பரவாசுதேவர்.

அரவாதனமிசையந்தாமந்தன்னிலமார்தொழ
விரவாரியைகணம்மன்னையர்தம்முடன்வீற்றிருக்கும்
பரவாசுதேவனெனுநித்தியோதிதப்பாவனனைக்
கரவாதென்னெஞ்சேகருதிவழுத்திநின்கண்ணிருத்தே. ()

### திருமாமணிமண்டபம்.

மணிமண்டொளித்திருநாட்டெட்டிதழ்ப்பதுமப்பொகுட்டார்
மணிமண்டரவணைமீதெம்பெருமான்மகிடியொடும்
மணிமண்டரிநித்தியர்முத்தர்சூழ்ந்திடவாழ்திருமா
மணிமண்டபமென்மனமண்டபத்தென்றும்வாழியவே. ()

ஸ்ரீ
ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீமணவாளமாமுனிகள் நான்மணிமாலை.

## காப்பு.

மணிமாலைவாழ்த்தும்மணவாளமாமுனிவற்கொருநான்
மணிமாலைபாடிவனேயமகிழ்ந்துநல்வாக்களிப்பன்,
மணிமாலைமாய்த்திம்மகியோரைவாழ்விக்கவந்தமகிழ்
மணிமாலைமாறன்மறைத்தமிழ்செய்தநம்மாதவனே.

விதிகட்கிடமாம்வரவரயோகிதன்மெல்லடிக்கோர்
துதிகட்கிடத்ததொர்நான்மணிமாலையைச்சூட்டவெற்கு
நதிகட்கிறைசூற்றிஞ்ஞாலத்தைக்காக்கநயந்துவந்த
எதிகட்கிறைவனிராமாநுசன்செய்வனின்னருளே.

## நூல்.

வெண்பா.

திங்கடவழ்தண்டலைசூழ்தென்குருகைவந்துதித்த
எங்கண்மணவாளமுனியேந்தலே—பொங்குபுகழ்ச்
சாகரனேமும்மையாந்தத்துவத்தினுண்மைநிலைக்
காகரனேமுத்தியருள். (க)

கட்டளைக்கலித்துறை.

அருளேயுருக்கொண்டதென்னுங்குருகையடிகள்சொற்ற
தெருளேய்மறையின்சிரப்பொருளாந்திருவாய்மொழியின்
பொருளேபுவியோர்ப்புரக்கும்பொருளெனும்புண்ணியவென்
மருளேமடித்தருள்வாய்வரயோகியென்மாதவனே. (உ)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தவத்தோர்கள்வணங்குபெருந்தவத்தினனே
    தண்டாதவவித்தையெனுஞ்சலதியாழ்ந்த
அவத்தோரையந்தாமக்கரைசேர்ப்பிக்க
    வணைந்தவருளம்பியேயனையநீராய்
திவத்தோர்கடிலகனேசீர்த்தஞான
    தேசிகனேமணவாளயோகியேயென்

பவத்தோங்கொள்பவப்பிணியைப்பாற்றவல்ல
பண்டிதனென்றுன்பதத்தைப்பற்றினேனே. (௫)

நேரிசையாசிரியப்பா.

பற்றியபிறவிப் பற்றற்றவரும்
முற்றியஞான மூதுவர்குழுவும்
எல்லையிலன்பொடு மென்றுமேத்தெடுக்குந்
தொல்லைமாமறைத் துழனித்தெனவும்
மாயிருஞால மகிழ்தரத்தோன்றிடும்
ஆயிரமருக்கரினவிரொளித்தெனவுந்
துன்னியவண்டத் தொகுதிகளழியினுந்
தன்னியல்பழியாத் தகைமைத்தெனவும்
ஈறுறுபதங்களி னின்பமாறுதல்போல்
மாறுதலிலாச்சுக மயத்ததென்னவும்
மித்தையொன்றிலதாய் மிளிர்பரியங்க
வித்தைவிளம்பிய வீதம்விளங்குறாஉம்
மாட்சிமைத்தெனவு மயர்வற்றடைந்தோர்
மீட்சியைத்தடுக்கு மிடுக்குடைத்தெனவும்
பன்னும்பரம பதத்திலெஞ்ஞான்று
மன்னுமலர்மகள் மகிணன்முத்தொழிற்கும்
மூன்றுருவாகிய முதல்வனெவ்வுயிர்க்குஞ்
சான்றுருவாகிய தலைமகன்மெய்யுரை
நூற்பயனாக நுவலறம்பொருண்முதல்
நாற்பயன்களையு நயந்தோர்க்களிப்போன்
ஓல்கிளர்மறைக ளுரைக்குமார்த்தாதி
நால்வருநயக்கு நளினமென்றுளோன்
ஆரணத்தாரணத் தந்தத்தொளிர்தருங்
காரணவாக்கியக் கருப்பொருளானோன்
அலகிலாவண்டமு மவற்றுள்ளுறைதரும்
உலைவிலாவுயிர்களு முடமைக்கொண்டோன்
வேதவேதாந்த விழுப்பொருளான
நாதனாரணனென நன்கறிபுலவன்
ஊனமின்ஞான்மு முறுபத்திமையும்
ஞானவிராகமு நவலுமெய்ந்நூல்களும்

உலகினர்க்குதவுவா னுள்ளுவந்தொருப்பட்
டிலகுமோர்வடிவ மெடுத்தெனத்தகைய
திருமலையாழ்வார் திருவடிப்புணையோய்
கருமலைஞானமுங் கைதூவாமையுங்
குண்டுநீர்க்குரவைக் குவலயத்தோர்கைக்
கொண்டுவாழ்தரச்செயுங் குரவர்தம்பெரும
புண்ணியபுரியொடு புந்தியினிணைப்போர்க்
கண்ணியவாத்த வளக்கரினளவலா
அருள்குடிகொண்ட வகத்தவேதாந்தத்
தெருள்குடிகொண்டநற் சிந்தையசிற்பர
வரவரமுனிவ வயதுநாண்முதிர்ந்து
வரவரஞான வரம்பினைநணியிகந்
துவர்க்கத்தக்கவா முண்பொருளுவந்து
பவர்க்கத்தடையுமிப் பாவியேனுநின்
ஆட்சிக்கிழமைக் கமைந்தமெய்யடியவர்
மாட்சிப்பேரபி மானத்தொதுங்கி
நல்வழிநடந்து நாளுமைம்பொறிகளை
வெல்வழிநின்றுநின் மேதகுசீர்த்தியைப்
பாடிக்கண்கள் பனித்துடல்புளகித்
தாடிக்களிப்பி னவசனுகி
உய்யும்விரகொன் றுரல்லை
செய்யுங்கடமைநின் றிருவருட்குரித்தே. (ச)

வெண்பா.

உரித்தாவர்நின்னடியரொள்ளகியைப்பொன்னுத்
திரித்தாக்கும்வேதியினென்றீங்கை—யிரித்து
மணவாளயோகியெனைமாத்தூயோனுக்கித்
தணவாதடிமைகொள்ளத்தான். (ரு)

கட்டளைக்கலித்துறை.

தானவர்தன்மையைத்தாங்கியுயிர்கடமைச்சவட்டி
மானவவேடத்தின்வைகுறுமென்னையும்வாழ்விக்கும்பூ
வானவர்நான்மறைவண்பொருள்வாய்ந்தமனமுடையோர்
ஆனவர்போற்றுமணவாளயோகியடிநிலையே. (சு)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடிநிலையையளவிலாத்தவத்தளான
வந்தணத்தியாய்ச்சியெனுமபிதானத்தி
முடிநிலையிலிறைப்பொழுதுமுடித்தெஞ்ஞான்று
மூவாதபெருஞானமுற்றிநின்றாள்
படிநிலையார்புகழ்கொண்மணவாளயோகிப்
பண்ணவவ்பாதுகையின்பாழிச்சீர்மை
கடிநிலைகொள்கமலவணைக்கடவுளுக்குங்
கட்டுரைக்குந்தரத்ததன்றுகணிக்குங்காலே. (எ)

நேரிசையாசிரியப்பா.

காலவானை கடக்கநிலாவிஞ்
ஞாலவாணர்களுற்கதிப்பிறப்பிற்
பிறந்துபிறந்து பேரஞர்தலைப்பெய்
திறந்துபடுந்துய ரிரித்துக்காப்பான்
காரணகாரிய காரணனான
நாரணன்சைய நகத்தினின்றிழிதரு
பொன்னியாற்றிடைக்குறைப் புகறிருமந்திர
மன்னெழுத்தெட்டு மதிலோரேழுஞ்
சமானமுமதிகமுந் தலத்தெங்கணுமிலா
விமானமொன்றுமாய் மிளிர்திருவரங்கம்
பெரியகோயிலிற் பிரமனாதியர்க்கும்
அரியனாயரவணை யறிதுயிலமர்தரும்
பூதநாயகன் புவிமகணாயகன்
வேதநாயகன் விழைவுறுமருச்சனை
நித்தமுநிரப்புக ணோர்ந்திடவியற்றிய
உத்தமநம்பியென் றுரைபெயரோனையும்
பூவிரிபொழில்களின் பொற்புடைத்தாய
காவிரியுந்தியிற் காலையினுளநீர்
ஆடப்படர்கா லன்புடனின்னுடன்
கூடப்படர்ந்துநீ குளிர்புனல்குடைந்திடும்
நீர்நிலைக்கண்ணே நீராட்டயர்தரு
நார்நிலைகொண்ட நற்சீலவணவன்

ஓப்பாரொருவரை யுறுபவனல்லா
அப்பாவெனும்பெய ரந்தணன்றன்னையுந்
திடத்தவன்பொடு செழுங்காய்கிழங்குகள்
மடத்துக்குதவி வந்தநன்மறையோன்
சித்தசனாணையைச் செல்லாதடக்கிய
சித்தசுத்தனுஞ் சிங்கரையனையுங்
கண்ணன்கழலிணை கருதுகந்தாடை
அண்ணன்முதல்வந் தடுத்தோர்தம்மையும்
வருத்தமின்றிநல் வழிபடர்ந்துய்வான்
திருத்தியாட்கொண்டரு டேசிகர்தேசிக
வரவரமுனிவநூல் வரம்பினிற்போர்க்குத்
திரவரமருள்செயுஞ் சிந்தாமணியே
தீயவழியிற் றிரிதந்துழலுமிந்
நாயனையேனையு நல்வழிப்படுத்தி
நின்னடிக்கன்பர்க ணீரசங்கர்த்தநற்
பொன்னடிக்கன்பரைப் பொருவுவோரெங்கணும்
இலரென்றவருழி யென்றும்
அலர்தருமன்பினை யருண்மதியெனக்கே. (அ)

வெண்பா.

எனக்குமணவாளமுனியேந்தலையென்று
மனக்கினியதந்தைதாய்மற்றுங்—கனத்தகுரு
தெய்வமவன்சேவடியைச்சிந்தித்திருத்தலெனக்
குய்யும்வழியென்பனோர்ந்து. (கூ)

கட்டளைக்கலித்துறை.

ஓர்திவரவரயோகியொண்பாதமுபாயமென்று
தேர்திநெஞ்சேயது திண்ணநற்பேறென்றுசிக்கெனவே
சார்தியவனடியாரைநிதநற்றகைப்பணவ
ஊர்திவருநமையந்தாமவீட்டின்பத்துய்த்திடவே. (க0)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உய்த்துணர்ந்தின்றென்றுரைப்பனோர்திநெஞ்சே
யுந்திபூத்தவனையுற்றோர்க்கொளிர்வீட்டின்பந்
துய்த்தறொலையினுந்தொலையுமன்னோன்றொண்டர்த்
தொழுமவர்கட்கொருகாலுந்தொலையாதென்ப

மொய்த்தமுரண்வினையுணிற்குநீமுப்போதும்
முதமுடனம்மணவாளமுனிவன்பாதம்
எய்த்தலிலாதேத்துதியேலிணையின்மாயை
யிகல்வெல்வோமெழுபிறவியிடர்வெல்வோமே.(கக)

நேரிசையாசிரியப்பா.

வென்றைம்பொறியெனும் வேடரையாள்பவர்
நின்றவாநில்லா நெஞ்சகந்தன்னையும்
ஒருங்கிடச்செய்யு முபாயம்வல்லுநர்
ஒருங்கிருசெருக்கையு மொழித்தநல்லுரவோர்
அவச்செல்வத்தி னவாவினையறுத்தோர்
தவச்செல்வத்தின் சால்பினைப்பொறுத்தோர்
பத்திநெறியிற் படர்குநர்பழிப்பிலா
முத்திநெறியின் முயல்குநர்சூழ்ந்திடக்
கும்பமுனிவரன் குடிகொண்டிருக்கும்
வம்பவிழ்சோலைகள் வான்றொட்டோங்கும்
பொதியநின்றிழிதரு பொருநைப்பெயர்த்தாம்
நதியமர்கரைக்க ணல்லோர்பலருறை
குருகூருதித்த குணநிதிபராங்குசன்
முருகூர்மகிழ்த்தொடை மொய்ம்பினன்மாறன்
ஈனமின்மறைகளை யிருந்தமிழ்செய்த
ஞானதேசிக ஞண்மடமச்சம்
பயிர்ப்பெனுங்குணங்கள் படைத்தோள்கற்பெனும்
அயிர்ப்பொன்றில்லா வரும்பெறற்பேற்றாள்
உடையநங்கைப்பெய ருத்தமிமுன்னர்
நடைபெறுநூலுரை நல்வழிநின்று
தொல்லைமாயவன் சுடரடிதமைநினைந்
தெல்லையில்கால மியற்றியதவத்துடன்
காவினுமுருளினுங் கறங்கூசலினுஞ்
சாலவுமலமரு தன்மைத்தாகிய
பவப்பிணியொழியவிப் பரவைசூழ்பாருளோர்
தவப்பலநாள்செய் தவத்தொகைகூடியோர்

திருக்கிளருருவாய்த் திரண்டெனத்தகைய
தருக்கிலாஞானச் சடகோபன்றாள்
நிறைதருமன்புட னிச்சலும்வழிபட்
டுறைதருகாலையி லோர்நள்ளிரவில்
இழுக்காறிலாநின் னிரும்பெருமையைக்கண்
டழுக்காற்றெழுகிடு மசுரயோனிகளாய்
மருளற்றிம்மகி மாந்தர்களுய்வான்
அருளிச்செயல்களி னரும்பொருள்விளங்கநீ
காலக்கேபக் கடன்கழித்தநுதினம்
ஓலக்கத்துட னுவந்தினிதிருக்குந்
திருமடந்தன்னிற் றீயைவைத்துத்தம்
பெருமடங்காட்டிய பிசுனராய்ப்பேர்க்கொணுப்
பரக்கழிபூண்டவப் பதகர்களுய்பாக்
கிரக்கமிக்குடையநல் லிதயத்தவர்க்குங்
கச்சிமாநகரிற் கலைத்தொகைகற்றோர்
மெச்சுசீபாடிய மேதகவுரைத்த
*ஆரியன்றனக்கு மரங்கமாநகர்க்கட்
சீரியஞானச் செல்வியாகுமோர்
§அம்மையார்தமக்கு மநந்தனுகுநின்
செம்மையாங்கோலச் சேவைகாட்டிய
திருவருட்குறையுளாந் தெள்ளியசிந்தைய
வரவரமுனிவநின் வண்கழற்றுணைக்கன்
புடையேன்போனடித் தொழுகாநிற்குங்
கடையேன்றனக்குமக் காட்சிதந்தெனது
பண்டைவல்வினை பாற்றித்
தொண்டுகொண்டருளத் துணிதனின்கடனே. (கஉ)

வெண்பா.

நின்னைவழுத்திநெடிதுவழிபடுமென்
முன்னைவினையின்முதறடிந்—தென்னை
மணவாளமாமுனிவமாண்புடனிற்போற்றுங்
குணவாளர்தங்குழுவிற்கூட்டு. (கங)

*கடாம்பிகாயனூர். §சடகோபக்கொற்றியார்.

கட்டளைக்கலித்துறை.

கூட்டந்தளர்ந்துளமோநங்கொடுவினைகூசியுட்கி
ஓட்டந்தொளிக்கவுழிநேடுநம்மதுடற்பிறவி
வாட்டந்தவிர்க்கவரும்வரயோகியைவாழ்த்துந்தொண்டர்
ஈட்டந்தனைக்கண்டுநாட்டங்களின்பெய்துமெல்லையினே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எல்லையெலாமிளையவர்சிற்றின்பமிச்சித்
திகந்தனனிப்பேர்தியமனேவணிற்போர்
வல்விரைந்துவந்தென்னைவதைக்குங்கால
வரையறையுமணித்தாயிற்றைவர்தம்மை
வெல்விரகமணவாளமுனிவநின்கேழ்
விரைமலர்த்தாள்வேட்டடைந்தேன்வெறுக்காதென்னை
நல்வைகுந்தநகர்கொடுபோய்நாளுமம்மா
னற்பணிசெய்திருக்கவருணல்கிடாயே. (கரு)

நேரிசையாசிரியப்பா.

ஆய்ந்தநூலறிவின ரதற்கியைநடையினர்
தோய்ந்தநான்மார்பினர் தொகையிறந்தோர்கள்
வழுவாத்தரிசனம் வளர்ப்போரான
எழுபானொன்கெனு மெறுழரியாதனர்
துன்னிருசெருக்கையுந் துடைத்தவரான
பன்னீராயிரம் பரமைகாந்திகள்
சித்தசனைங்கணைச் செருக்கினையடக்கிய
உத்தமாச்சிரமிக ளோரெழுநூற்றுவர்
புணைநம்பிறவிப் புணரிக்கெனவந்
திணையடியடைந்தவ ரெண்ணிறந்தோர்கள்
தற்புடைசூழ்தரத் தரணியோர்ப்புரக்கும்
அற்பினோலக்கத் தமர்ந்துவீற்றிருந்த
படிவர்சிகாமணி பற்றறுஞான
வடிவர்சிகாமணி வைணவசிகாமணி
நேடியமுறைப்படி நிகமாந்தசூத்திர
பாடியம்பகர்ந்தருள் பண்டிதசிகாமணி
தெரியாவுயிர்ப்பொரு டெரிக்குங்கண்மணி
இரியாவவித்தை யிருடெறும்விண்மணி
ஆரியர்நனந்தலை யமரரதநமணி
பூரியர்கைப்படாப் போதசிந்தாமணி

அன்புடையோர்கட் கருளம்புயநிதி
துன்புடையோர்துயர் துடைவலம்புரிநிதி
துதிகட்கிடந்தருஞ் சுகுணவாரிதியாம்
எதிகட்கிறைவ னிறைக்கரத்தேந்துமுத்
தண்டமெனும்பெயர் கொண்டபெருந்தகை
எண்டிசையும்புக ழிலங்குறுமாண்டகை
நுதலியஞானமு நுண்ணொழுக்கமுமுள
முதலியாண்டான்றன் முதுமரபினராம்
அண்ணன்முதலோ ரனைவருங்குடும்பமும்
அண்ணலெறும்பியி லமரப்பாவும்
ஒப்பில்லவரா யுலகெடுத்துரைக்கும்
அப்பிள்ளான்முத லறிஞர்கள்யாவரும்
முற்றியவன்பினின் மூழ்கினராகிப்
பற்றியபெரும்புகழ்ப் பாதபங்கேருக
வரவரமுனிவவல் வஞ்சகன்பொய்யன்
கரவடனாகிய கயவனேனையும்
நின்னருளென்ன நிகழ்த்தும்வேதகப்
பொன்னினாற்றொட்டுறப் புனிதனாக்கியென்
விடியாவல்லிருள் விடிந்திடச்செய்து
வடியாப்பவக்கடல் வற்றுவித்தடியவர்
நார்த்துதிசேர்திரு நாட்டிற்
சேர்த்தனின்கடனெனத் திண்ணநம்பினனே. (கசு)

வெண்பா.

நம்பினோர்க்குண்டுதிருநாடென்றனன்னெஞ்சே
நம்பவிலார்க்கென்றுமந்தநாடில்லை—நம்பின்
மணியுருவத்தெந்தைமணவாளயோகிப்
பணியுருவத்தோங்கும்பதம். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

பதமாம்பதத்தொடுபொறயிருட்டிப்பருக்கச்செய்புற்
புதமாம்புரத்துயிர்ப்புந்திசெய்நெஞ்சேபுதவரர்கட்
கிதமாம்பொருள்சொன்மணவாளயோகியையெண்ணுதியேற்
சதமாம்பதந்தருந்தத்துவஞானந்தலைப்படுமே. (கஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தலைப்பட்டபெருமாயைதானேயுட்கித்தணக்குந்தருணிமார்கண்
வலைப்பட்டநீயுமுயர்வாழ் வடைந்துவாழ்தியினிவருமோரன்னை

மூலைப்பட்டபாலருந்தமுயல்பிறவிவாராதுமுத்தியுண்டாம்
நிலைப்பட்டநீர்மைகொணம்வரயோகிபதநிதமுநினைநெஞ்சே.

நிலைமண்டிலவாசிரியப்பா.

நெஞ்சகநிறையிரு ணீக்கிடுஞ்சவிதா
வஞ்சகர்வாதமாம் வைப்போர்க்கனற்பொறி
துறவுச்சுடரினைத் துலக்குந்தூண்டுகோல்
பிறவிப்பிணிதனைப் பேர்த்திடுநல்லுறை
சுருதிசாரஞ்சுகத் தூவொழுக்காதிசொல்
மிருதிசாரந்தமின் மிக்கதொன்றில்லதாம்
புராணமறைப்பொருள் பொதிதரும்பதினெண்
புராணசாரம்புகழ்ப் பூடணத்தனவெனக்
கற்றவர்புகழிதி காசசாரம்மெனற்
குற்றனவாக வுலகாரியனெனும்
எந்தையெம்மடிக ளிலங்குமெவ்வுயிர்க்குந்
தந்தைபோற்பரிவுறூஉந் தண்ணளிக்கடலனுன்
அந்தணர்முதலியோ ரறிந்துயவியற்றிய
மந்தணப்பதினெண் மாக்கலைதம்மின்
முத்தத்துவநூல் மூவிரகசியநூல்
புத்தமுதாஞ்சொற் பூடணப்பெருநூல்
வாயழகிய மணவாளப்பெருமா
ளுயனாருளிய நல்லாசாரிய
இதயமென்ன வியம்புநூல்ஞான
உதயமிலார்க்கஃது திப்பிப்பவரென்
றம்புவிபோற்றரு ளாளப்பெருமா
ளெம்பெருமானு ரிருங்கலையாவையும்
பன்முறையாய்ந்து பயன்படுபொருளெலாந்
தொன்முறையெடுத்துத் தொகுத்துத்திரட்டியிந்
நானிலமுயச்செய் ஞானசாரநூல்
மேனிலைதருபிர மேயசாரநூல்
என்னுமிவற்றுக் கினியவியாக்கியை
பன்னியிப்பரவைசூழ் பாரோர்க்குதவிய
வள்ளற்றன்மைகொள் வரவரமுனிவவெற்
கள்ளற்றுன்பினை யடைவிப்பவராம்
நவ்விநோக்கியர்சுக நரலையிற்படிந்தென்
செவ்வியெலாம்வீண் செய்தனனந்தோ
செய்வதொன்றறியேன் றீவினைதனினின்

றுய்வதொன்றறியே னுத்தமநின்னடி
அடைக்கலமாக வடைந்தனனமன்றமர்
படைக்கலங்காட்டிப் பற்களைக்கறித்துத்
திட்டித்தெழித்தெனைத் திரப்பாசத்தாற்
கட்டிப்பிடிக்கக் கனன்றெழுஉவருங்கால்
எந்தாய்நின்றம ரீட்டத்துடன்வந்
தந்தாமத்தெனை யடைவுடன்கொடுபோய்
அடியார்பணியி னமைத்தனல்லருளால்
நெடியாய்சாலவு நினக்கறமாமே. (௨0)

வெண்பா.

அறத்தாற்றிற்செல்லவழுங்குவேனின்று
மறத்தாற்றிற்செல்லமகிழ்வேன்—றிறத்தில்
அருத்தியெதிராசமுனிக்கன்பவெவன்செய்ய
இருத்திபோவின்றெற்கிசை. (௨௧)

கட்டளைக்கலித்துறை.

இசையோங்குமுத்தர்தமேற்றமும்பத்தரிழிதகவும்
மிசையோங்கிடும்புருடோத்தமன்மேன்மைமிகுநிலையும்
நசையோங்குநெஞ்சேநமக்குப்புலப்படுநன்னரெட்டுத்
திசையோங்கியபுகழ்நம்வரயோகியைச்சிந்திக்கினே. (௨௨)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிந்தித்துத்தொழுஞ்சேடச்சிலம்பிறைக்குச்
செற்றார்தம்பயங்கரனுமண்ணன்மேனாள்
வந்தித்துமஞ்சனநீர்வழங்குநாளின்
மணவத்துவிரவாதுவறிதிருக்கச்
சந்தித்தோனின்பெருமைசாற்றக்கேட்டுத்
தானிருக்கமணவாளவள்ளாலந்நீர்
கந்தித்ததெற்றையினுங்கழிமிக்கென்று
கட்டுரைக்குந்திறனெவனோகாண்கிலேனே. (௨௩)

நிலைமண்டிலவாசிரியப்பா.

காணற்கவணமே பேணற்குரியராம்
உயர்ந்தோர்தம்மை யயர்ந்திகழாமை
புகழ்பெறவேண்டி யிகழ்விலறத்தினை
நயந்துசெய்யாமை பயந்தருதினமும்
மனமொழிமெய்களாற் கனவினும்பிறர்கட்

குயவுசெய்யாமை யயலவர்நம்மை
வருத்தினுமனத்தில் வருத்தமுறாமை
ஆத்துமஞானம் பூத்தொளிர்தரவருள்
ஆரியன்றனைநிதஞ் சீரியவன்புடன்
வழிபடல்வாழ்த்துதல் விழிபடகில்லா
உயிருணர்வுக்குமச் செயிரிலாவுணர்வைப்
பெறுவதற்குரித்தா யுறுநெறிதனக்கும்
வேண்டியதாகநூல் மாண்டகவுரைத்த
பெற்றியின்மனமொழிக் குற்றதாகிய
செப்பமுடைமையவ் வொப்பிலாநூலுரை
நுட்பமாம்பொருள்களிற் றிட்பநன்குடைமை
உயிர்ப்பொருளொழிந்த செயிர்ப்பொருளனைத்தினும்
உலாவுமனத்தைச் செலாதுநிறுத்துகை
அழியுமாலையவா மிழிதகவுடைய
பொருள்களினொன்றும் பெருகுவர்ப்புடைமை
தேகமேயுயிரெனு மோகமின்மை
தனதலாப்பொருளைத் தனதுதனதெனுஞ்
செருக்கடையாமை யிருக்குநாளளவும்
மூவகைத்துன்பமு மோவிடாவென்னும்
நினைப்புமாகியகுண மனைத்துநினைத்தொழும்
எனக்குண்டாக நினக்கருள்வருமேல்
வரவரமுனிவ சுரவரர்தொழுதெழும்
ஒளிமயமாகிய தெளிவிசும்பெனது
கையதாமெனுமிது பொய்யலமெய்யே. (௨௪)

வெண்பா.

மெய்யாகவைம்பொருளின்மேதைப்பைங்கூழ்விளையுஞ்
செய்யாகவென்மனத்தைச்செய்தனால்—பொய்யாது
மண்ணவர்கள்போற்றுமணவாளமாமுனியாம்
பண்ணவன்றன்னுள்ளம்பரிந்து. (௨௫)

கட்டளைக்கலித்துறை.

பரிந்ததிருவுளத்தோனென்றுபாதலம்பார்விண்ணெங்கும்
விரிந்தபுகழ்மணவாளமுனிவன்விரைமலர்த்தாள்
புரிந்தபின்னற்றிரைமோதுமுந்நீர்வைப்பின்மொக்குட்டன்மை
தெரிந்தநெஞ்சேநம்புதிசேமவைப்பிற்சிறந்ததென்றே. ()

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிறந்தஞானமுமொழுக்குஞ்சிறிதுமில்லேன்
செய்துதிகள்கணிகைகுலத்தெரிவைமார்கட்
கறந்தெரிக்குமாறவலமாகுமென்றே
யழுங்குகின்றவெனக்கிரங்கியருளல்வேண்டுங்
கறந்தநறும்பாலிழுதுகண்டுமும்மைக்
கனிபோலண்ணித்தெனுளக்கமலம்வாழுந்
துறந்தநிலைமணவாளமுனிவநின்றன்
றுணையடியல்லால்வேறுதுணையிலேனே. (உஎ)

இணைக்குறளாசிரியப்பா.

துணைக்கட்டழகார் கணைக்கட்காந்தையர்
மால்வலையறுத்து மேல்வழிகாட்டும்
முருகூர்மகிழ்த்தொடைக் குருகூர்ப்பராங்குசன்
அருளியவருமைத் திருவாய்மொழிக்கோர்
நூற்றந்தாதியும்
சீர்த்திசேர்தரு மார்த்திப்பிரபந்தமுஞ்
சுபதேசுதவிடு முபதேசரத்தின
மாலையும்படிப்பவர் மாலையொழித்திடுங்
காட்டிற்பொலிதரு சேட்டீட்டிற்குஞ்
செம்மையாந்தத்துவ மும்மைமாநூற்கும்
அளவைத்திரட்டும்
மாயத்திரிபினை மாய்க்கும்பிரபன்ன
காயத்திரியெனக் கட்டுரைக்கின்ற
ஏற்றந்தாலத் திலங்கிராமாநுச
நூற்றந்தாதிக் கேற்றதோருரையும்
இயற்றியுடனே யியற்றியுதவிய
அருணிதமுடைய பருணிதர்தலைவ
எதிபதிபாதத் துதிபதியுளத்த
வரவரமுனிவ சுரர்நரர்துதித்திடும்
அரவரசானவ குரவர்தங்குரவ
கொடியேனாயினு மடியேனினது
திருக்கிளர்கமலத் துருக்கிளரடிகளில்
அடைக்கலமாக வடைந்தனன்முடைக்கலம்
சாயுங்காலைத் தாயுந்தந்தையும்
அத்தனுங்கத்தனு நித்தனுமாகிய

எம்பெருமானு மெம்பெருமாட்டியுஞ்
சுவணத்தூவி யுவணப்புள்ளின்
பண்ணுறுதோண்மேல் விண்ணுறவரக்குழீஇ
நீயுநிறைபுகழ் மேயநின்னடியரும்
அன்னவர்தம்மொடு துன்னிப்போந்துநுங்
காட்சியை யெற்குக்காட்டி
மீட்சியில் பெரும்பதத்தாட்சிதந்தருளே. (உ அ)

வெண்பா.

தந்தருள்வனெஞ்சேநீசார்ந்தென்றுந்தோத்திரிக்கின்
எந்தைவரயோகியிருவினையால்—வந்த
அறப்பெரியநந்தாபமாற்றவல்லதான
நிறப்பெரியதன்றுணிழல். (உகூ)

கட்டளைக்கலித்துறை.

நிழற்குரித்தாகியநீசப்பிறவிகணோர்ந்தெடுத்து
விழற்கிறைத்தாரின்வெறுவியனுமெனையென்கருணை
நிழற்குரித்தாக்குமணவாளயோகிநிமலநின்றன்
கழற்குரித்தாக்குங்கருணையும்வேண்டினன்காத்தருளே. ()

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காக்கின்றசெல்வநல்குரவுகடுவமுதங்கனத்தநேயம்விரோ
தங்-கரிசறுசுவர்க்கநரகந்துன்பமின்பங் கலக்கமொடு
தேற்றமிங்ஙன்,
வீக்கமாவென்றும் விருத்தமா மியல்புடைவிபூதியில்விடா
விரண்டு-வினையினேன்மேன்மேலும் வெருவுபவம்வரு
மென்னின்வெட்கியுட்கித்திடுக்கிட்,
டேக்கமுறுகின்ற தென்னெஞ்சமென்செய்குவேனினியநி
ன்னிணைகொள் சரணத்-தில்லடை புகுந்தனனிழுக்
கினைத்தருகின்றவிருசெருக்கினையுநீக்கி,
மோக்கநெறிநிற்பவர்க்கருள்செய்யுமணவாளமுனிவவென்
பிறவிமூலம்-முழுது மற்றென்னிலை விளங்கநல்லுப
தேசமொழியொன்றுரைத்திடாயே. (௩க)

இணைக்குறளாசிரியப்பா.

ஆயுங்காலைக் காயம்வாக்கு
மனமிவற்றாற்செய் கனவினைக்கெல்லாம்
பூதக்குழாத்தா மேதக்குரம்பையுங்
கத்தனெனச்சொலு நித்தனுமுயிரும்

இந்தியக்கூட்டமு மைந்துவாயுவும்
கரந்தசில்லிடந்தொறும் பரந்துளவொருவனுங்
காரணம்
ஆமெனமொழியுமிக் கோமொழிக்கருத்தினைத்
திருத்தமாய்த்தமியே னருத்திசேருளத்தில்
ஓர்தரச்செய்தது பேர்தராவணநீ
திண்ணப்படுத்திச்
சழக்கறுவிழுப்ப வொழுக்கமுந்தந்தது
சாம்பிப்போகா தோம்பிவளர்த்திடும்
அறிவையுமளித்துநன் னெறிபடர்வித்தெனைத்
திருமலையாழ்வார் திருவருட்குரியோய்
நின்னடிக்கடியவர் பொன்னடிக்கன்பனாய்
உய்யும்படிக்கரு ளெய்தினிற்செய்தியேல்
இலகெவ்வுலகினு மிலதாம்
அலகினின்பெரும்புகழ்க் காவதோரீடே. (௩உ)

வெண்பா.

ஈடுமுப்பத்தாறுயிரப்பெருக்கநின்னடியேன்
வீடுபெறநீவிரும்பினால்—நாடுமெனைப்
போர்த்தவினைபொன்றவருள்பொங்குங்கடைவிழியாற்
பார்த்தருளனின்றன்பரம். (௩௩)

கட்டளைக்கலித்துறை.

பரம்புளகித்துன்பதஞ்சேர்ந்தகூடற்பதிக்*கிறைவன்
வரம்பெறுமாமணிக்குஞ்சிகைதாங்கிவரவவனுக்
குரம்பெறுநல்லருள்செய்வரயோகியுனையுன்னுவோர்
திரம்பெறுமுத்திப்பெருஞ்செல்வமெய்துவர்திண்ணமிதே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திண்ணியஞானச்செல்வஞ்சிறந்தவாழ்வார்
திருநகரிசேவிக்கச்செல்லுமெல்லை
தண்ணிழறந்துபகரித்தவெகினத்தாருத்
தனுவிருந்தவவ்வுயிர்க்கந்தாமர்தந்த
புண்ணியவெம்மணவாளமுனிவநின்னம்
போருகத்தாளடைந்துய்ந்தபுலவர்கோட்டிக்
கண்ணியனாயநவரதமவர்கடாட்டொண்
டன்புடன்செய்துய்யவருளளித்திடாயே. (௩௫)

---

*மஹாபலிவாணநாதராயன்.

## நேரிசையாசிரியப்பா.

அளியுருவாகிய வமரவைந்தருவே
களியுருவாகிய காமதேநுவே
பயக்கடல்படாத நயச்சுவையமுதே
வியப்புலனட்டு விளையாக்கரும்பே
ஆக்கறவாத தேக்குறுபாலே
தோய்தயிரெழாத சுரநறுநெய்யே
ஆய்கழைச்சாற்று லடாதகற்கண்டே
பரமஞானத்தருப் பழுத்தபைங்கனியே
பிரமஞானிகளுணும் பீடுண்டத்தேனே
தலத்தினுஞ்சலத்தினுந் தலைப்படாமுத்தே
அலைக்கடற்படாத வரும்பெறற்றுகிரே
இருநீர்ப்படாத பெருநீர்மணியே
பூரணஞானிகள் பூணுறும்பொன்னே
ஆரணஞானிக ளணிந்திடுமணியே
நரரொடுபிறவுய நானிலம்வந்தருள்
வரவரமுனியெனும் வண்மைப்பெயரோய்
வச்சையர்தலைமகன் மிச்சையர்பெருந்தகை
காமுகர்க்கதிபதி தீமுகர்க்கேந்தல்
கையர்கள்சிகாமணி பொய்யர்கள்பூபதி
ஆனவித்தகைத் தீனனேனிதுவரை
எடுத்தபிறவிக ளிருநிலமுடுத்த
நுணித்தசீகரக்கட னுதிக்கரைமணலினைக்
கணிக்கினுஞ்சிறிதுங் கணிக்கப்படாவாம்
அருந்தியதாய்முலை யமுதமோவென்னில்
பொருந்துமேழ்புணரியின் புனலினும்பெரிதால்
இப்பொழுதிருந்திடு மெண்கணன்கற்பமுந்
தப்பாதினிவருஞ் சதுமுகர்கற்பமுங்
கழியினுமென்வினை கழியாதாதலின்
சுழிபடுபிறவியுந் தொலையாதென்செய்கேன்
பவப்பிணியொழித்திடும் பண்டிதனீயெனத்
தவத்துயரறிஞர்கள் சாற்றலாலடைந்துன
கமலமாமலர்புரை விமலமாம்பதங்களின்
முடைக்கலம்விழுமுன் னடைக்கலம்புகுந்தனன்
சரணவரணத் தருமந்தனக்கோர்
அரணமாகநின் றளிப்போயென்பிழை

அனைத்தையும்பொறுத்தெனை யமலனுக்கீ
தினைத்துணையளவளித் திருட்டியினேக்குறின்
அற்றனனென் வினையாவும்
பெற்றனன்யாவரும் பெறும்பெரும்பேறே. (௩௬)

வெண்பா.

பேறுபெறவேண்டினென்றும்பீழையுறும்பேதைநெஞ்சே
வேறுகதியிவ்விபூதிதனிற்—றேறுங்கால்
இல்லைவரயோகியிணையடியல்லாலீது
தொல்லைமறையோர்துணிபு. (௩௭)

கட்டளைக்கலித்துறை.

துணித்திடத்தக்கதுதொல்லைவினையின்றொடர்புநிதம்
பணித்திடத்தக்கதுபட்டாரகன்பெயர்பாறுநெஞ்சம்
பிணித்திடத்தக்கதுபோர்த்திடத்தக்கதுபெட்குமவா
குணித்திடத்தக்கதுநம்வரயோகியுட்கொள்குறிப்பே. ()

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குறிக்கொண்டுநின்றனையேனெஞ்சமே
நித்தர்குழுக்கூடலாகும்
உறிக்கொண்டவெண்ணெயுணவுவந்தவம்மா
னுரைகீதையுறுபின்பாக
நெறிக்கொண்டவாழ்வார்களாரியர்க
ணிகழ்த்திவந்நியமம்வாய்ந்த
திறிக்கொண்டவரயோகிபதநிதமுந்
தொழனமக்குக்கிழமையென்றே. (௩௯)

நிலைமண்டிலவாசிரியப்பா.

என்றுநின்பொன்னடி யிறைஞ்சிடுந்தொண்டரை
என்றுவாயிலா யியக்கிக்கொடுபோய்க்
கண்ணுறற்கரியதா நுண்ணுடறன்னையும்
அடுத்தநீர்விரசையில் விடுத்திடச்செய்ததன்
கரைவாழமாநவர் கரப்பரிசத்தாற்
சுப்பிரமாகிய திப்பியதேகமும்
பெறுவித்தென்று முறுவித்தகமயம்
ஒளிமயமாயொளிர் தெளிவிசும்பதனிற்
றாமணித்தூணஞ் சுமந்திடுந்தகைத்திரு
மாமணிமண்டப மன்னிவாழ்குநராம்

நித்தியமுத்தர்கள் பத்தியின்வைத்திடும்
அரவரசாகிய வரவரமுனிவவெற்
கவித்துக்கவற்றிய வவித்தைத்தமந்தபும்
இருவினைக்கள்வர்கள் வெருவியோட்டெடுப்பார்கள்
பாவப்பிறவிமுத் தாவமுந்தணிந்திடுஞ்
செயிரறுபத்திமைப் பயிர்தழைத்தோங்கும்
உருகுறுமனக்கடல் பெருகிக்கலித்தெழும்
புந்திக்குமுதமுங் கந்தித்தலர்தரும்
வாக்கெனுஞ்சகோரமுந் தூக்கதிருணவெழும்
ஒண்கழற்கமலமென் றிண்மனங்கவர்தர
வெண்கழைத்தொடைகளென் கண்களிற்றோன்றிட
இடைசுற்றியசெவ் வுடையுடனிலங்க
முப்புரிநூனிறஞ் செப்பமாய்த்திகழ்ந்திட
முக்கோலேந்துமங் கைக்கோலந்தர
வளனுறுவலம்புரிக் களனழகொளிர்தரச்
சவிதருகுண்டலச் செவிகடயங்கிட
விதுப்புறுமாடிக் கதுப்புகடிலங்கிட
ஊர்த்துவபுண்டரஞ் சேர்த்தியபாலமும்
பூத்தளிபொழிதரு நேத்திரக்கமலமும்
முத்தமுளைத்தென முறுவனிரம்பிய
முத்தவாய்பூத்தபுன் முறுவலுமவிர்தரத்
தேய்தலும்வளர்தலு மேய்தலிலாதின்
மங்கலத்திருமுகத் திங்கடோன்றிடினே. (௪0)

---

சூன்மணிச்சங்கநிறச்சேடன்றோற்றமெனப்படுவோன்
வான்மணிபோலொளிர்வண்சீர்வரவரமாமுனிக்கோர்
நான்மணிமாலைநவிற்றினனன்னூனறும்பொருளாம்
மேன்மணிசேருளன்பள்ளிகொண்டானெனும்விற்பனனே.

## ஸ்ரீமணவாளமாமுனிகள் நான்மணிமாலை

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# எதிராசமாமுனிகள் நான்மணிமாலை.

## காப்பு.

வான்மணிவாரணம்வாய்வயற்பூதூர்வளம்பதிக்கண்
வான்மணிபோல்வந்தநம்மெதிராசவரோதயற்கோர்
நான்மணிமாலைநவிலநல்லோருறைநற்குருகைக்
கோன்மணிக்கோகநகத்திருத்தாளுளங்கொள்ளுவனே.

எதிராயவாதியிபங்கட்கரிமாவெனவிசைக்கும்
எதிராயமாமுனிநம்மிதயத்திருளீர்க்குமதிக்
கதிராயவற்கொருநான்மணிமாலைகழறவவன்
சதிராயதாமரைத்தாளேநமக்குநற்றஞ்சநெஞ்சே.

## நூல்.

### வெண்பா.

பூமலியும்பூம்பொழில்சூழ்பூதபுரிபோந்தவள்ளல்
பாமலியுஞ்சீர்த்திப்பரவையான்—நேமலியும்
எந்தையெதிராசமுனியென்வினையைத்தீர்க்கவென்றன்
சிந்தைகுடிகொண்டிருப்பன்சேர்ந்து. (௧)

### கட்டளைக்கலித்துறை.

சேர்ந்தாரைவாழ்விக்கும்பூதூரெதிபதிச்செம்மலருள்
ஆர்ந்தாரைபோற்சூழவித்தைக்கனவியருவினைக்குக்
கூர்ந்தாரைவாளவ்வினைவாதனைக்கநுகூலஞ்செய்யாச்
சேர்ந்தாரைக்கொல்லியெனநன்குநம்புதிதிண்ணநெஞ்சே.

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திண்ணநெஞ்சேதிருமால்சேநேசன்சேடன்
றிகழுமைம்படைக்கலைகடிரண்டொன்றாகி
மண்ணவரைவாழ்விப்பாணிளையாழ்வாராய்
வந்தபெருமந்தணத்தைமறந்திழுக்கா
வண்ணநீநிற்றியெனின்வடியார்ச்சன்ம
வாரிதியில்வருந்துதலைவரைந்தெந்நாளுங்
கண்ணனடித்தொண்டுசெயும்பேரானந்தக்
கடலெனுமந்தாமத்தைக்கலக்கலாமே. (௨)

நேரிசையாசிரியப்பா.

கலக்கமுந்தேற்றமுங் களிப்புங்கவர்வும்
விலக்கொணுப்பகைமையும் வேட்குறுங்கேண்மையும்
ஆக்கமும்வறுமையு மறத்தொடுமறமுஞ்
சுவர்க்கமுமழுங்குறும் பவர்க்கமுமாகிய
முரணியல்பருத ‌‌‌‌‌ ‌ தரணியிற்பிறந்துழல்
மன்பதையுறும்பவத் துன்பதைத்துடைப்பான்
செம்பியனாட்டினில் வம்பியன்மலர்களைக்
காலையுங்கமழ்தருஞ் சோலையின்மாலைய
இருகரையிடித்துறப் பெருகலைக்காவிரி
உந்தியினனந்தலை யுந்திவந்தவணெடும்
இரவணையிமகர னெழினிறத்தைந்தலை
யரவணையறிதுயி லமர்ந்தருளமலனுந்
தேங்கடாத்திரிநிகர் சிந்துரங்காத்தருள்
வேங்கடாத்திரிமிசை விளங்குறும்விமலனும்
நான்முகமாகமுன் னான்முகனியற்றிய
அரிமகத்தவிசொரி யெரிமுகக்குண்டத்
தண்டர்களருந்தவர் தொண்டர்கள்வணங்குபு
துதித்திடுஞ்செவ்வியி னுதித்தவனாகிய
பேரருளாளனுங் கூரிருளிரித்தெழும்
விரிச்சிகன்றண்கதி ரரிச்சிகன்றவழ்தருஞ்
சீதமார்கொடுமுடி யாதவாத்திரியுறை
திருநாராயணப் பெருமானும்மதி
காலையுமுச்சியு மாலையுமாதவர்
நாலையோதித்தொழுஞ் சோலையோதிமத்துறைஇ
வரமெச்சிடவருள் பரமச்சுவாமியுந்
தெறுங்கொடுவினைகளைத் தீர்த்தருள்புரிதிருக்
குறுங்குடிநம்பியுங் குருகைநம்மாறனும்
வேதவாதியா நாதமுனிகளுஞ்
சென்னியாமன்னவன் பன்னிமுன்பகர்ந்தருள்
சூளவம்போக்கா வாளவந்தாரும்
அரியபுகழ்கெழூஉம் பெரியநம்பியுங்

கோட்டமிலிசைத்திருக் கோட்டியூர்நம்பியுங்
கருமலையுந்தெருட் டிருமலைநம்பியும்
மாலைவென்றருடிரு மாலையாண்டானுங்
கருவரங்காதெமைக் காத்தருளாழ்வார்
திருவரங்கப் பெருமாளரையரும்
மன்றுபடுத்திய துன்றுசீர்ப்பெருமையை
உடையவர்நம்மையா ளுடையவராகிய
எதிபதியிலங்குறு மிருவிபூதிக்கும்
அதிபதியடிகளே யடைக்கலமென்றுணர்ந்
தொண்மையினெஞ்சமே திண்மையினெண்ணிநீ
இருத்தியெண்ணினி யிருத்திசேர்மதிநலம்
பூத்திடுநமைநனி யாத்திடும்வினைகளும்
மாய்ந்தறுமாயையு மோய்ந்தறுமதனல்
உறவுகொண்டென்று மோவாப்
பிறவியும்பெயர்ந்தறும் பெற்றித்தாமே. (ச)

வெண்பா.

ஆமுதல்வனீங்கிவனென்றுளவந்தாரென்னுமுனிக்
கோமுதல்வன்கூறுங்குணக்கடனம்—பாமுதல்வன்
ஈனநெறிநீக்குமெதிபதிநெஞ்சேவித்த
ஞானநெறிநமக்குநன்று. (ரு)

கட்டளைக்கலித்துறை.

நன்றென்பதோராநவையோர்சிலர்நாரணன்முதல்வன்
அன்றென்பதையறுத்தாமென்றறையவடைந்தகுணக்
குன்றென்னுநங்களெதிபதிதாளுளங்கொண்டவர்கட்
கின்றென்பதின்றவ்வெழிற்பரந்தாமத்திருஞ்சுகமே. (சு)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருஞ்சுகந்தேரிருவகையிந்தியமேயென்ற
ணிதயமேநும்மையானீறில்வீட்டுப்
பெருஞ்சுகத்துக்கேகுங்கால்விரசைவிட்டுப்
பேர்வனென்றுபிணங்காதெற்பெற்றோர்மாது
தருஞ்சுவர்க்கமுண்ணுதெற்றடுத்தாட்கொள்ளத்
தரணிவந்தவெதிபதிதாள்சாருங்காறும்
அருஞ்சுகிர்தவதரிவியானமைந்திருக்க
வருளினுமக்கழியாதவறமுண்டாமே. (எ)

நேரிசையாசிரியப்பா.

அறநெறியிற்றெனுந் திறனறிபவராம்
வடுவொன்றில்லா வடுகநம்பியும்
நெறியார்கணியனூர்ச் சிறியாச்சானும்
அம்புவிபோற்றரு ளாளப்பெருமா
ளெம்பெருமானு ரென்னுஞ்சீயரும்
வள்ளற்றன்மைப் பிள்ளைப்பிள்ளை
யாழ்வானும்மிளகாழ்வான்றானும்
நம்பார்க்கும்மளி நல்குமெம்பாரும்
சிட்டர்கடொழுமதித் தெட்புடைப்பட்டரும்
நெஞ்சினுயிர்க்கரு ணிறைந்தநஞ்சீயரும்
கும்பியினதரினைக் குறுக்குநம்பிள்ளையும்
பெருகிடுஞ்சீர்த்திருக் குருகைப்பிரானுந்
துப்பார்கோமடத் துப்பிள்ளானுந்
துங்கமாஞானத் தெங்களாழ்வானுஞ்
சாரந்தேர்நடா தூரம்மாளும்
நடுவுநிலைமைகொ ணடுவிலாழ்வானுங்
கியாதிசேர்வேத வியாதபட்டரும்
விற்பனராநடு விற்றிருவீதிப்
பிள்ளையுமாகிய வள்ளலாரியர்கள்
பெருமிடல்வாய்மையி னொருமிடருகச்
சித்தமுகப்புறத் தத்தந்திருவடித்
துணைதமைத்தமக்குநற் றுணையெனப்பற்றிய
ஆணவமில்லா மாணவகர்களை
நோக்கியுலகினை நோக்கவந்தருளிய
எம்பெருமானர் தந்திருவடிகளே
சரணமென்றிருமி னரணதுநமக்கென்
றோதியவிதினை நீதிகளுரைமறை
விதியினுஞ்சிறந்த விதியெனக்கடைப்பிடித்
தொழுகுதியேலென் னுள்ளமேயவ்வணம்
ஒழுகியசான்றோ ரொப்புயர்வில்லா
எப்பெரும்பேற்றினைத் துப்பினெய்தினரோ

அப்பெரும்பேற்றினை யறவுஞ்சிறிதுந்
தடையொன்றின்றிச் சார்ந்தின்
றடைவதற்கொன்று மையுறவிலையே. (அ)

வெண்பா.

ஐயமறவேதத்தரும்பொருளெலாம்விளங்கச்
செய்தவெதிராசவள்ளல்சீர்நிலையின்—மெய்யெவர்க்குந்
தோற்றப்பிரமமண்ணைதொல்யாதவற்குரைத்த
ஏற்றந்தனைநெஞ்சேயெண். (௯)

கட்டளைக்கலித்துறை.

எண்ணில்பவமெடுத்தெய்த்தனநெஞ்சேயிலங்குமதிக்
கண்ணில்லவருரைகட்டுரைகேட்டகரிசறுப்பான்
மண்ணில்வணங்கிமறைபுகுவோமறையோரிதய
விண்ணில்விளங்குறும்விண்மணியாமெதிவேந்தனையே. ()

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வேந்தர்கள்வாழ்வியன்கச்சிப்பதியின்மேவும்
விண்டுவின்றன்றொண்டர்குலம்விளங்கவந்த
சாந்தனெனுங்குணிப்பிள்ளைசின்னாளங்குத்
தான்காணுதிருந்துபின்னத்தலத்தோர்காணப்
போந்தெவர்க்கும்பூதபுரிப்புண்ணியன்சீர்
புகன்றதனையுணர்ந்தநெஞ்சேபுவியிலின்னும்
மாந்தர்தமிற்பதடியாய்மாயாதச்சீர்
மறவாமைநமக்கமுதம்வழங்கற்பாற்றே. (கக)

நேரிசையாசிரியப்பா.

பாற்கடலுறைதரும் பலமயிலையுமதன்
பாற்படுபாணிறப் பசுங்கதிர்த்தேவையுந்
தத்தமரபினிற்சார்ந்ததொன்றாத்தஞ்
சித்தத்துணர்ந்திடுஞ் திறனெனப்படியின்முற்
பவப்பிறப்புடையயா தவப்பிரகாசனும்
மறைமுடிப்பொருளெலா நிறைபுளத்தறிஞர்கண்
மொழிமனமாதிதம் வழிபடவழிபடும்
விழுமியமான்மியங் கெழுமியவெவர்தமைத்
தனைப்போற்றன்னுளந் தனினினைந்தனனே

கயக்குறவெவரையு மயக்குறுமாயையின்
காரவசப்பட்டுப் பரவசனாகி
அழுக்காறென்னு மிழுக்காறுடையனாய்
வசிட்டாதியர்துதி விசிட்டாத்துவைத
நன்மதமொறுத்துத் தன்மதநாட்டுவான்
எவரைத்தவர்க ளியங்குறுங்கங்கையின்
றெருணணியுடைமணிக் கருணிகைக்கட்டத்
தெருக்குவானெண்ணிப் பொருக்கெனத்தன்னுடன்
கொடுசெலுங்காலெவர் கூரனுமவன்
கொடுவினைப்புணர்ப்பினைக் கொய்திடுமெம்மான்
அருளுருவாம்புணர்ப் பரணினையுடையராய்
ஒற்றையாழித்தே ரூர்சுடர்க்கற்றையோன்
அத்தமனமெனு மத்திரியடைந்திட
மாலைமயங்குறும் வேலையினண்டிகந்
கொடுவரிகுடாவடி யடுதொழிற்கோளரி
குஞ்சரமாதிய சஞ்சரித்திருப்பதாய்
வெம்பியமேவலர் வேனுதியெனநனி
வெம்பரலுறுத்திடும் வெவ்வதருடையதாய்
வெருவந்தருந் விந்தியவிபினத்
தொருவந்தத்திடை யுபாதியாமியக்கம்
இரண்டினொன்றினையோ ரிடத்தினில்விடுத்துத்
தொடுநீர்தேடித் துயக்குறுமெல்லையிற்
கங்குலெங்கணுங் கலத்தலான்மங்கலும்
மண்டலமுங்காண் கண்டலம்புதைதர
வழிதிகைத்தயர்ந்தில் வுழிநமக்குத்துணை
ஆவாரெவரென வழுங்குறுமவ்வயிற்
றேவாதிபனை மூவாமுதல்வனும்
முருகவிழ்சததளத் திருமலர்ச்செல்வியும்
வேடனும்வேடு விச்சியுமாகிய
வேடம்பூண்டருள் விளங்குறவெவர்க்குமுன்
றோன்றியெவருளத் தூன்றியவுட்கினை
மடித்தொருதிருமர வடித்தலத்திருந்துநள்

ளிரவினைக்கழித்தெழுந் திரவிவந்தெழுமுனம்
அண்ணிதாகிய புண்ணியகோடியாம்
விமானம்விளங்குறு மமானப்பெருமைசால்
மச்சணிமாடமா மாளிகையோளிசூழ்
கச்சிமாநகர்வயிற் கலந்துவிடுத்தவண்
மறைந்திடவெவரம் மாயமானுடர்தமை
நிறைந்தபேரன்புட னேடிக்காணு
தலமந்திருக்கையி லவ்வழிவருநராஞ்
சிலவரையன்பொடு சிறப்புறநோக்கியீ
தெவ்வூரெத்தல மெனக்கடாவிடவவர்
இவ்வூர்காஞ்சியென் றிறுத்திடவச்சொல்
உவப்புறுநியாசத் தவத்தராமெவர்க்குந்
திசைமுகம்பழித்திடுந் தசமுகன்வதத்தினைச்
செவியுறுபிராட்டியின் சவிபெறுமுவகையும்
விண்டநஞ்சீதையைக் கண்டனனென்றசொற்
கேட்டவெம்பெருமான் மாட்டுறுமுவகையும்
முதுவனுஞ்சதமகன் மதுவனம்புகுந்துழிப்
பெருவடிவெடுத்தநந் திருவடியுவகையும்
போன்றதோருவகையா மான்றமாவளக்கரை
அடைவித்தேயதிற் குண்டவித்திடவெவர்
விரவியகானினள் ளிரவினிலிருந்துணை
நேயமாய்வந்திவண் மாயமானவர்தமை
எம்பெருமானெம் பிராட்டியாமெனத்
திண்ணமெண்ணிநங் கண்ணன்குணங்களின்
முருகூர்மகிழ்த்தொடைக் குருகூர்ப்புங்கவன்
ஈடுபட்டுப்பெரும் பீடுபெற்றறுமதி
மோகித்திருந்தவம் முறைமையின்மோகித்
திருந்தனரோவெவர் திருந்திடாவுலகோர்
திருந்திடநல்லருள் செய்யவந்தவரோ
அவராகியநம் மண்ணலெதிபதித்
துவரார்தாமரைத் துணையடிகளைநிதம்
வஞ்சகமிலாமலென் னெஞ்சகமேநனி

எண்ணிப்பூசனை பண்ணியேத்தெடுக்கும்
நன்னிலைநிற்றியே ஞனிழந்திருந்ததாம்
என்னிலையெனக்குறு மீதிலாநாளெலாஞ்
சேர்த்ததோர்சினத்தினெற் போர்த்தமாமாயையுங்
கழிந்திடும்பிறவியு மொழிந்திடுமித்தகைக்
கடப்பாடியற்றிய திடப்பாடுறுநினக்
கேற்றதோர்கைம்மா றியற்றவல்லேனலேன்
ஆதலினுலிப் பூதலந்தன்னிற்
றிடம்பெறயானிவ் வுடம்பினிலுறைதருங்
காலமெலாநினைக் கோவி
அஞ்சலிபுரிகுவன் றஞ்சமாநினக்கே. (௧௨)

வெண்பா.

நினக்கேதமியேனெடுந்தொண்டுபூண்டென்
மனக்கேதமாற்றமகிழ்வாய்—வனக்கோதை
நாயகன்பார்க்கவிசெய்நல்லறங்கள்செய்யுமெதி
நாயகனேயென்நாளுநன்று. (௧௩)

கட்டளைக்கலித்துறை.

நன்றுதரஞ்செய்தநாதமுனிகட்கென்னன்னெஞ்சமே
குன்றுதசெல்வக்குருகையர்கோனருள்கூர்ந்தளித்த
பொன்றுதசீரெதிர்வாரியவிக்ரகப்புண்ணியனும்
பின்றுதசீர்த்தியெதிராசனைநிதம்பேணுதியே. (௧௪)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பேணுறயாதவனுதிநன்னூற்குரைபெட்டுரைவெட்டியவன்
நாணுறமெய்ப்பொருணல்கியநம்மெதிநாயகனல்லருளே
வேணுறுமிவ்விளையாட்டுவிபூதியின்வெருளையொழித்தழியா
தேணுறுநித்யவிபூதியினின்பிணையீந்திடுமென்னுளமே. ()

நேரிசையாசிரியப்பா.

என்னுளமேநினக் கின்னறீர்த்திடுஞ்சீர்
ஏற்றமார்மாற்றமொன் றிசைக்குவல்கேட்டியிம்
மண்ணகந்தன்னினம் மண்ணலெதியதி
குருகுலக்குரவையிற் குளிர்மதியெனவந்
துதித்தலைக்காணூஉத் துதித்திடத்தக்கவாம்

வேதவேதாந்தமாம் வேலைகள்யாவுமா
மோதந்தன்னுன் முதிர்ந்தொலித்தோங்கின
விதியார்மிருதிக ளிதிகாசங்களாங்
காவியுமல்லியும் பூவிற்பொலிந்தன
புராணமாஞ்சகோரப் புட்களுட்கொரீஇப்
பிராணனையடைந்திடம் பெயர்ந்துதிரிந்தன
நங்குகதேவர் டங்கர்திரமிடர்
ஆதியகுரவர்க ணீதிசேர்வசனமாஞ்
செயிரிலாதநற் பயிர்தழைத்தோங்கின
வாதியர்களுத ராதியர்தம்மதக்
கருவரிசாலவுஞ் சருவரியடைந்தது
சாங்கரீயமா யோங்குபங்கயங்க
டேம்பிச்சாம்பிச் சூம்பிக்கூம்பின
பாற்கரமதத்தராம் படிறர்தம்வாதந்
தோற்றுநீளிடை தொலைந்துமறைந்தனர்
யாதவன்மாதவ யஞ்ஞமூர்த்திகள்விழி
இந்துகாந்தச்சிலை நைந்தறல்கான்றன
உபநிடதங்களுக் குள்ளீடாகிய
சுபகரத்திருமா றுநல்லைப்பரத்துவம்
மங்குதலொரீஇ யெங்கணுமொளிர்ந்தது
கூரநாதனங் குருகாதிநாதன்
வேரமின்மனக்கோ விந்தநற்பாதன்
முதலியாண்டான் முதலியமோக்க
இச்சையுடையவர் மிச்சையால்விளைந்ததம்
பிறவிமுத்தாபத் துறவியுமிழ்ந்திடுந்
திண்மையுருப்பினை யெண்மையிற்றீர்ந்தனர்
ஆதலினீயுமவ் வருந்தவனடித்துணை
காதலின்வணங்கினின் கண்ணன்கிருத்தியெய்
போதுந்துதித்தியேற் பூதியுந்துறக்கமும்
போதலும்வருதலுஞ் சாதலும்பிறத்தலும்
ஒருவுமந்தாமத் தோங்குந்
திருவும்பெறலாந் திண்ணமீதாமே. (௧௬)

வெண்பா.

திண்ணநெஞ்சேநம்புதிறற்சீர்கொள்யமுனைத்துறைவர்
வண்ணவடிகள்வணங்கியுய்ந்த—அண்ணன்மனக்
கோட்டமிலாவெதிகள்கோமானடித்தமர்கள்
ஈட்டத்துணையென்றுமென்று. (௧௭)

கட்டளைக்கலித்துறை.

என்றாழினெங்குமிலங்கிடுஞ்சீர்த்தியெதிபதிதாள்
நன்றாழினண்ணியெந்நாளுநண்பாகநயத்தியெனிற்
றுன்றாழித்தீயிற்சுடுநம்வினையின்றொடர்புமறுஞ்
சென்றாழினெய்தலுமாந்திருநாட்டுச்சிறப்பினையே. (௧௮)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிறப்போங்கும்வாதராயணர்நம்மாழ்வார்
சித்தாந்தநிலைநிறுத்துந்திறலோனுய்ந்தோர்
பிறப்போங்குநற்போதாயநர்கோட்பாட்டைப்
பீடுபெறத்திகழ்விப்போன்பெட்பைவென்ற
விறப்போங்குநாதமுனியாளவந்தார்
வியந்தொழுகுநல்லொழுக்கவிரதந்தன்னின்
மறப்போங்குமனனிலானென்னுநங்கள்
வள்ளலெதிபதிதாளைவழுத்தென்னெஞ்சே. (௧௯)

நிலைமண்டிலவாசிரியப்பா.

வழுத்துறுங்காரண வத்துவானவனெவன்
பிழைப்பில்சீர்த்தரிசனம் பேதமோவபேதமோ
யாடியைந்திடுபிர பன்னநிட்டர்களடை
வீடிப்பிறப்பினோ வேறோர்பிறப்பினோ
வீடடைவித்திடும் விழுப்பமாநெறியெது
நாடிப்பற்றிடு நல்லாரியனெவன்
கடும்போர்புரிநோய்க் கணத்தாலுயிருடல்
விடும்போழ்தத்துநம் விண்டுவைநினைத்திடல்
வேண்டற்பாற்றோ வேண்டாப்பாற்றோ
என்னுமிக்கடாக்களை யிதயத்துட்கொளீஇக்
கைக்கோலம்பெறக் காழகச்சிறுமுறி
முக்கோலேந்திய முனிவரர்பெருமநீ

பன்னிடுமுக்கப் பணித்திருக்கச்சி
நம்பிதன்வம்பவி ழம்புயமலர்புரை
யடிகளைவணங்கி யடிகாளடியனேன்
சிந்தையினிந்தையில் சில்பொருளுள்ளன
அவற்றையவனியோர் தவற்றைத்தணப்பான்
ஆழமாமலைகட லறிதுயிறனையொரீஇ
வேழமாமலையுறை விபுதர்தம்வேந்தனை
வினவிநன்றெற்கு விளைந்தறிவுறுத்தனின்
கனவியகருணையின் கடனெனக்கழறிட
நம்பியும்பிற்றைநா ணயந்துநண்ணுபு
தும்பிமாமலையவற் றெழுதுதன்பணியெலாம்
முற்றியபிற்றிரு முன்னர்நின்றிடப்
பற்றியவடியவர் பவப்பிணிபாற்றிடும்
எம்பெருமானுநன் கிதயக்களிப்பொடு
நம்பிநீயிற்றைநா ணம்மைச்சில்பொருள்
கேட்பான்வேட்டுநிற் கின்றனைபோலுமால்.
என்னநம்பியு மினிதிளையாழ்வார்
சொன்னசொல்லெலாஞ் சொல்லித்தொழுதிட
வளையாழிக்கை வரதராசனும்
இளையாழ்வார்கொரு மெண்ணநாமறிகுதும்
அன்னவர்யாவு மறிந்தவராயினும்
மன்னறம்யாவையு மரபினூட்டுவான்
பெருமைசால்சாந்தீ பினிக்குரவன்பால்
அருமைசானூல்க ளனைத்தையும்யாமுனந்
தீதுதபும்வண மோதியமுறைமையின்
மிடைந்தநற்கலையெலா மேதாவியருழி
அடைந்தாய்கின்றன ரஃதன்றியுந்தான்
எண்பெறவிதயத் தெண்ணியபொருள்களை
மாண்பினம்முகமா மன்றுபடுத்திடின்
யாவருந்தேறுவர் யாணர்யாண்டும்மென
மேவருநந்தமை விடுத்துவினவினர்

ஆதலானவற்றையாங் காதலிற்கூறுதும்
உலககாரணனை யிலகுவோன்யானே
கரிசிலாதநந் தரிசனம்பேதமே
பிரபன்னப்பெயர் வரநன்னடையினர்
மோக்கமுறுவதிவ் யாக்கையின்முடிவினே
முத்தித்துறைபிர பத்தித்துறையே
அரியநற்குரவனும் பெரியநம்பியே
கடைமுறைநினைத்தலும் விடுமுறைமைத்தே
என்றிபமலைமுடி யிலங்கருளாளனும்
மன்றவுணர்த்திய வார்த்தையோராறும்
அச்சுதன்முகமா நிச்சயமாதலின்
நித்தியநிலைபெறுஞ் சத்தியமென்பதும்
அருச்சையுருவினில் வருச்சியாநாரணன்
காரணஞானமும் பூரணமென்பதும்
இத்தகைஞானக் கேற்றநம்பன்புடை
வித்தகர்க்கேயது விளங்குமென்பதுங்
களங்கமில்லாததை விளங்கக்கண்டவர்
பம்புசீர்க்கச்சி நம்பியென்பதும்
அவரருளாளனோ டமர்வேறிடத்திருந்
தார்த்திதீர்தரநிதம் வார்த்தைநன்காடுவர்
என்பதுமவர்க ளிருவருக்கும்பேர்
அன்புடைநீவி ராத்தரென்பதும்
ஒளிப்பறவெவர்க்கும் வெளிப்படுதலினற்
சந்திரதிலகச் சுந்தரப்பொழில்சூழ்
பூதபுரியுறை போதமாரெதிபதிப்
புண்ணியவன்பர்கட் கண்ணியநின்னடி
நண்ணியவிரும்பெனு நாயடியேனைநின்
சுத்தமாக்கருணையாஞ் சித்தமாக்குளிகையாற்
றொட்டுச்சுட்டநற் சுவணநேர்பவனென
ஆக்கிப்பணிகொளீஇ மோக்கமாகுநல்
வீட்டினிலமைத்தனின் பீட்டினுக்குரித்தே. (உ௰)

வெண்பா.

பீடுபெறுநித்தியரும்பீழையறுமுத்தரும்வாழ்
வீடுபெறநீவிரும்பினல்—ஓடுநெஞ்சே
நின்றென்றுநீத்தோர்நிருபனற்குதொழுதல்
நன்றென்பர்நன்கதையேநாடு. (உ௧)

கட்டளைக்கலித்துறை.

நாடுதிநம்மெதிராசனைநண்ணன்னடவைதனைக்
கூடுதிமற்றவன்கோதிலடியர்குழாமதனைப்
பாடுதிநெஞ்சேயவர்புகழ்பன்னுநற்பாக்கடமை
ஆடுதியாநந்தத்தாண்டவமன்றோரடிநினைந்தே. (உஉ)

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடிநினைத்திடுமடியரகமறுத்தடிமைகொள வரவவெற்பு
றையுமமலன் - அமர்திருப்பதியிலுறை பொழுதிற்
கோதனத் தாநிரைபுரக்குமாயர்
குடிநினைக்குந்தும்பையூர்க்கொண்டியென்பவள் கொழிப்
பிலாநற்குணத்தாள்- கொடுத்ததயிரமுதிற்குரித்தாம்
விலைப்பணங் கொள்ளாதிருக்குமெல்லை
படிநினைக்குந்தனதுபாததீர்த்தந்தரப் பருகிநன்ஞானமெ
ய்திப் - பணயம்வேண்டாதுபர கதிவேண்டவப்பரம
பதவாழ்வையன்னளடையும்
படிநினைத்தொருபனைச்சிறுமுறிவரைந்ததைப் பாந்தண்ம
லையாற்களித்த- பரமகல்யாணகுணவெதிபதியைவிதி
யுடைப் பாவநர்பழிச்சுவரரோ. (உ௩)

நிலைமண்டிலவாசிரியப்பா.

பழிச்சற்குரியராம் பண்புடைப்பெரியோர்
பழிச்சுறும்பதயுகப் படிவர்தம்பெரும
புவனியோர்க்காப்பான் பூதமாபுரிதனில்
அவதரித்தருளிய வருட்கொடையண்ணல்
அடிநாட்டொடங்கி யடியனைப்பகுதியாம்
ஆமயமடைந்துவெங் தீமயமாயெழீஇ
வருத்துகின்றது மற்றதன்குணங்கடாம்
விருத்தமாரியல்பினெவ் வேளையும்விடமித்

தநவரதமுமரு வரந்தையாம்பிரளயக்
கனவிரதத்தாற் கவற்றுகின்றன
இதனுனா விதமாயெய்துமோர்
தனையிலாத்துன்பந் தனைநுகர்கின்றனன்
அப்பிணிப்பண்பையு மதன்வரலாற்றையுந்
தப்பிலாநூல்வழிச் செப்பமாச்சிந்தையில்
அறிந்தவாரியர்களா மாயுள்வேதியர்களிற்
சிறந்தவனெனும்பெருந் தேசுடைமருத்துவன்
நின்னையன்றியிந் நெடுங்கடல்வளாகத்
தென்னையிடைவிடா தெருக்குமிந்நோய்தனை
நறுமொறுப்புடனே மறுவலும்வராது
போமாறியற்றிடு மாமாத்தியரிலை
அடியேனகதி யகிஞ்சநனருளால்
நெடியோயென்னையா னினக்குச்செயவலேன்
நின்னறக்குணத்திற னின்னளியெனச்சொலுங்
குடிநீர்கொணர்ந்து குடிப்பித்துடங்குநின்
ஸ்ரீபாததீர்த்தமாஞ் சித்தசூதத்துறை
மாபாவநமுற மடுத்திடச்செய்வித்
தென்றுநினக்கே நன்றுநிவேதநம்
புரிந்திடுமடிசிலை யருந்திடலாகிய
பத்தியமுறைமையி னித்தியமெனைநீ இ
உயத்தகுவிரசையின் பயத்திலுரோக்கிய
நானநானமா நன்குசெய்வித்தியான்
அந்நாட்டொடங்கியிந்நாட்டுணையும்
பெற்றுணற்கரிதாம் பெற்றியினிருந்ததாம்
பரமமாகிய பிரமமாமடிசிலை
மற்றதன்குணங்களா யுற்றநல்லறுவகைப்
பெறுஞ்சுவைக்கறியொடு நறுஞ்சுவைக்கனியொடுங்
கூலமொன்றிலாக் காலதத்துவமெலாம்
நித்தியவிபூதியி னித்தியவுருவுடன்
உண்டதருதென மண்டுமுட்கின்றியே

கட்புலன்றன்னாற் கண்டநுபவித்தும்
உட்புலன்றன்னா லுண்டநுபவித்தும்
துன்பமறும்பே ரின்பமயத்தனைச்
செய்வித்தடியனை யுய்வித்திடுஞ்செயல்
களிர்கடலுலகெலா நனிநிறைந்தொளிர்தரும்
அரும்பெறலாகுநின் பெரும்புகழ்க்கழகே. (உச)

வெண்பா.

புகழார்புயங்கப்பொருப்பப்பன்மேனாள்
இகழாதுகைத்தலத்திலேந்தத்—திகழாழி
சங்கமளித்தானைச்சார்பிலார்பற்றுமெதி
புங்கவனையென்றுநெஞ்சேபோற்று. (உரு)

கட்டளைக்கலித்துறை.

போற்றுதிநம்மைப்புரந்திடக்கங்கணம்பூண்டவனைச்
சாற்றுதிநெஞ்சேயெதிகள்சிகாமணிதன்பெயரை
ஊற்றுதியன்னோன்புகழ்க்கூழையுண்போருளங்களிக்க
ஆற்றுதியன்னோனடிப்பணிமோக்கத்தறம்பெறவே. (உசு)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறமமருந்திருப்பதிகளொருநூற்றெட்டு
மரிந்தமனுக்கிடமென்பரவனவற்றே
டுறவியங்கியெதிபதிதன்னுளத்தானென்ப
துண்மையாதலினாலவ்வுறுவர்கோனை
உறவண்ணங்கிவலமொருகாலுஞ்றினெஞ்சே
யுரைத்ததிருப்பதிகளையுமுழுவண்வாழ்கின்ற
திறமிகுநம்பெருமானம்பிராட்டிமாரைத்
திருவலஞ்செய்பயன்பெறுதறிண்ணமாமே. (உஎ)

நேரிசையாசிரியப்பா.

திண்ணமிவ்வுலகரைத் திருத்தியுய்வித்திடும்
வண்ணம்வண்பூதூர் வருமெதிப்பெரும
போதமெவ்வுலகினும் பொருந்திடுநிகில
வேதவேதாந்த விழுப்பொருளுணர்ந்தோய்
கந்தளவைப்பரதந்திரனருநீ
ஆரியன்கூறிய சீரியவரீணயுங்

கடந்ததனால்வரு மிடும்பையுங்கைக்கொள
ஒருப்பட்டென்று மொழியாக்குடும்ப
அருப்பச்சேற்றில் விருப்புற்றழுந்து
அறமறக்கடையெனும் திறவினையிரண்டினான்
மீண்டுமீண்டும் யாண்டுமீண்டிடு
நால்வகையோனியின் பால்வரும்யாக்கையை
யெடுத்தலும்விடுத்தலு மிருணரகடைதலும்
ஆகியவவத்தையில் வேகமாருசலின்
ஒழுகைக்காலி னுழன்றுமேல்கீழ்
எழுகையும்வீழுகையு மியல்பின்மேற்கொண்ட
சேதநராகிய பூதலத்தவர்பால்
அருளுருவாகுநின் றிருவுளமிரங்கி
அதிகாரிகளவ ரல்லராயினும்
விதிவாய்த்திருத்தலின் விழைந்தவர்தமக்கெலாம்
மந்திரமெவற்றினு மாட்சிமைத்தாகிய
மந்திரமுரைத்துநன் மாக்கதியளித்தலின்
வெருட்சியைநீக்குறு மருட்கடலெனும்பெயர்
நினக்கேதக்கது நினக்கேதக்கது
தோமுடைமையினாற் பாமரராகி
அவிக்கப்படாத வவித்தையினாற்றலாற்
கட்டுண்டவரையக் கட்டினின்றும்
நீக்கிக்காத்திட வீக்கியகங்கணன்
என்னநம்மான்றோர் பன்னிடுந்திருப்பெயர்
மனத்தாயுங்கா ணினக்கேதக்கது
முறைமைகள்யாவு மொழியும்
மறைமொழிக்குரிய நிறைமொழியோயே. (உஅ)

வெண்பா.

நிறைமொழியாளர்க்காக்கநீணிலத்தில்வந்தெம்
இறைமொழிக்குப்பாடியஞ்செய்தீந்த—மறைமொழிவாய்
எம்மானிராகவன்பினீடணைகடெதிகள்
பெம்மான்புகழைநெஞ்சேபேசு. (உகூ)

கட்டளைக்கலித்துறை.

புகழ்ந்திடத்தக்கதுபூதபுரிப்புண்ணியன்புகழே
திகழ்ந்திடத்தக்கதுசிந்தையிலன்னோன்றிருவுருவே
நிகழ்ந்திடத்தக்கதுநெஞ்சத்தவனுரைநீதியென்றும்
அகழ்ந்திடத்தக்கதவித்தையன்னோன்றன்னருள்பெறவே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அருளூறுமைந்தாம்வேதம்பருவமூவா
 று மதன்சாரக்கீதையவ்வெண்பெற்ற
தெருளூறுமத்தியாயமாமதிற்றெட்புற்ற
 சீர்ச்சரமசுலோகச்செம்பொருளைமேனாள்
பொருளுறுநங்கோட்டியூர்நம்பிபானம்
 பூதபுரிவரும்வேதப்புலவர்கோமான்
இருளறக்கேட்டதும்பதினெண்முறைபோந்தென்ப
 விச்செயலினருமையெண்ணினிறும்பூதாமே. (௩௧)

நிலைமண்டிலவாசிரியப்பா.

ஆமோதத்துள வணிந்திடுமரிந்தமன்
மாமோதத்துடன் மகிழ்ந்துதன்னினுந்
தன்னடியார்களாஞ் சநகாதியரையுங்
கொன்னுறுமன்புடைக் குகப்பெருமானையும்
அத்தனருட்கிலக் காஞ்சபரியையும்
வித்தகனுச்சொலும் விதுராழ்வானையும்
ஞானவானெனநவில்குசேலனையுஞ்
சூனுவையிழந்துளஞ் சோர்வைதிகனையும்
உற்றவராகிய மற்றுஞ்சிலரையும்
வியந்தேயென்று முயர்ந்தோரெனக்கொளீஇ
அகமுகமலர்ச்சியின் முகமன்மொழிசொலித்
தன்கிளைவிடுத்து நன்குறமதித்தவர்ப்
பெருத்தவன்போடுபசரித்தநன்முறைமையின்
பவக்கட்டறுத்திடும் பண்டிதசிகாமணி
தவக்கட்டழகார் தபோதனசிகாமணி
தெட்புறுஞான தேசிகசிகாமணி
நட்பினன்பர்க்கரு ணல்குசிந்தாமணி

பேறுவகத்திருள் போக்கும்விண்மணி
காணுப்பொருளினைக் காட்டுங்கண்மணி
என்னுநீயுநின் னன்பரிலவாவெனும்
அள்ளையையொழித்தநற் பிள்ளையுறங்கா
வில்லிதாசன்கரம் மெல்லிதாகுநின்
மாணுறுபாணியாற் பேணிப்பிடித்தவன்
பாவனபாவன ளுவதைபெவர்க்கும்
மன்றுபடுத்தினை துன்றுசீர்பெறுமவன்
புன்னியின்மனநிலைப் பண்பறிவிப்பான்
மன்னியவைணவ மாந்தரைவிடுத்தவள்
ஊனமில்லாதநல் லுள்ளத்தொளிர்தரும்
ஞானபூர்த்தியையு நன்னர்விளக்கினை
*தாசரதியெனப் பேசிடும்பெருந்தகை
நிலமிசையாவருந் தலைமிசைக்கொளத்தகும்
நிலையினனென்னவும் நீடுநல்லிசைகெழூஉந்
†திருமறுமார்பனுஞ் செம்மலான்முத்தியும்
மருவியகைத்தலம் வாய்ந்ததென்னவுங்
களிப்புடனெவர்க்கும் வெளிப்படவுரைத்தனை
ஆதலாலடியனேன் போதமாரன்னவர்
நத்திடுமபிமா நத்தினிலொதுங்கிநின்
றெப்பொழுதும்மவர் துப்புறழ்சேவடிப்
பணிசெய்தவரிசை பழிச்சியென்பிறவிப்
பிணியொரீஇவீட்டை பெருந்திருவினனாய்
அமையும்வண்ணநின் கமையார்திருவுளத்
தெண்ணியெண்ணியாங் கென்னைநின்சீரருள்
தேக்கிடுங்கடைக்கணு னோக்கினின்னிறைபுகழ்
நாட்டியவில்வினை யாட்டுவிபூதியின்
வருந்துவினுழைந்து புகுந்துநிறைந்திவண்
இடம்பெறுதெழீஇத் தடம்பெறுமண்ட
பித்தியைப்பொதுத்ததைப் பத்தியிற்சூழேழ்
ஆவரணப்பெயர் மாவரணத்தையும்

---

*முதலியாண்டான். †கூரத்தாழ்வான்.

இடந்துகடந்து படர்ந்ததன்மேலுறை
நித்தியர்வாழ்தரு நித்தியவிபூதியிற்
குலவியெப்பொழுதினு நிலவியுலவுமே. (௩௨)

வெண்பா.

உலப்பறுமாமாயைக்குரியகுணத்தின்
கலப்பறுத்துய்யக்கருதி—நலத்தடைந்தேன்
எம்பெருமான்றன்புகழேயேத்துங்குணத்தெதிகள்
தம்பெருமான்றன்சீர்ச்சரண். (௩௩)

கட்டளைக்கலித்துறை.

சரணமடைந்தோர்தமக்குநற்சால்பினைச்சாருமந்தக்
கரணமடைவித்துக்காப்போன்கரிகிரிக்கண்ணன்மலர்ச்
சரணமடைந்தவன்சார்பானல்லாரியர்தண்ணருளா
பரணமடைந்தநம்பூதூரெதிபதிப்பண்ணவனே. (௩௪)

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பண்ணவர்தமைக்காக்குமெண்ணின்வடமதுரையாம் பதி
வருமிராமாநுசன்-பகரகிலவேதவேதாந்தநற்சாரமா
ப் பல்கலைப்புலமைசான்றோர்
எண்ணவருநிதைநூலினையுரைத்தொருநரனை யின்பமுறு
முத்திநிலையில் - இருத்தவல்லவ னல்லனுயினுனது
நிற்க வெண்ணில்பல்காலமெல்லாம்
மண்ணவர்செய்மாதவப்பெருமையிற்பூதபுரிவருமிராமாநு
சாநீ- வரையுமெண்ணுக்கடங்காநரரைமெய்ஞ்ஞான
ம் வாய்க்கத்திருத்தியவரை
நண்ணவருமைத்தென்றுநான்மறைபுமுரைசெய்திரு நாட்
டில்வைத்தனையாதலால் - நலந்திகழுமத்தகையபின்
ஞானவாற்றனிலை நவிலவெவாதரமாகுமே. (௩௫)

நிலைமண்டிலவாசிரியப்பா.

தரம்பெறுநெஞ்சே திரம்பெறுமன்புடன்
விதிநலத்துடன்கெழு மதிநலமுடையோர்
துதிபதிபாதத் தெதிபதிதனைநீ
அகரப்பொருளை யறைவோய்போற்றி
அகதிகள்களைக ணுவாய்போற்றி
அகிஞ்சனர்க்கைந்தரு வனையாய்போற்றி
அகிலவேதாந்தத் தரும்பொருணிலரும்

அறிதரவறுதியிட் டருள்வோய்போற்றி
அச்சுதற்கணையா யமைந்தோய்போற்றி
அடியாரரில்களை யரிப்போய்போற்றி
அடைந்தோரிடுக்க ணறுப்போய்போற்றி
அபவர்க்கத்தத ரறைவோய்போற்றி
அப்பனுக்காழிசங் களித்தோய்போற்றி
அமிதமாமகிமை யமைந்தோய்போற்றி
அமுதனார்கவித்தொடை யணிந்தோய்போற்றி
அரங்கனுடற்கொடி யானோய்போற்றி
அரிக்குபதானமா யமைந்தோய்போற்றி
அரிந்தமனடிநிலை யானோய்போற்றி
அனந்தாவதார னானோய்போற்றி
ஆதிமாற்காதப மானோய்போற்றி
ஆதிரைநாளவ தரித்தோய்போற்றி
ஆய்ச்சிக்கமுத மளித்தோய்போற்றி
ஆரியரிலக்கண மமைந்தோய்போற்றி
ஆளவந்தாரரு ளடைந்தோய்போற்றி
இராகவபிரானுக் கினியோய்போற்றி
இராமானுசமுனி யேந்தால்போற்றி
இலக்குமணாரிய னென்போய்போற்றி
இளையாழ்வாரெனு மிலாஞ்சனிபோற்றி
ஈடணைமூன்று மிலாதாய்போற்றி
உபயவிபூதியு முடையாய்போற்றி
உபயவேதாந்தமு முணர்ந்தோய்போற்றி
உலகோர்வந்தனைக் குரியோய்போற்றி
ஊமைக்கருள வுகந்தோய்போற்றி
ஊர்த்துவபுண்டர மொளிர்வோய்போற்றி
எண்ணினற்குணங்க ளியைந்தோய்போற்றி
எம்பார்க்கருள்செயு மியல்போய்போற்றி
எம்பெருமானா ரென்போய்போற்றி
எழுபானான்கெனு மெறுழரியாதனர்
என்றும்வழுத்துறு மிறைவபோற்றி
ஐம்படையவதா ரத்தனேபோற்றி
ஐம்பொறிவாயி லவித்தோய்போற்றி
ஒழுக்கநெறிநிலை வழுக்கிலோய்போற்றி
ஓத்தின்பொருளொருங் குணர்ந்தோய்போற்றி
ஔவியமில்லா வகத்தோய்போற்றி

கச்சிநம்பிபாற் காதலோய்போற்றி
கட்டுறுமுயிர்களின் கட்டினைக்கடிந்திடக்
கட்டியகங்கணக் கரனேபோற்றி
கத்தியமூன்றுங் கழறினோய்போற்றி
கரையிலாக்கருணைக் கடலேபோற்றி
கலியன்றமிழ்மறை கற்றோய்போற்றி
கலிவிடதரந்தடி கலுழபோற்றி
காந்திமதிமகிழ் கான்முளைபோற்றி
கிழியறுத்தோன்பாற் கேண்மையோய்போற்றி
கீதையினுட்பொருள் கிளத்தினோய்போற்றி
குருகுலக்குரவைக் குளிர்மதிபோற்றி
குலசேகரனருள் குறிப்போய்போற்றி
குறுங்குடிநம்பிதன் குரவபோற்றி
கூரநாதன்றொழுங் குருபரபோற்றி
கைதவமொன்றிலாச் செய்தவபோற்றி
கோட்டியூர்நம்பிசீர் கூறுவோய்போற்றி
கோதைநாயகியருள் கொண்டோய்போற்றி
கௌவையில்புகழணி கலத்தோய்போற்றி
சாந்தகுணப்பெருந் தகையேபோற்றி
சிகையுபவீதச் செம்மால்போற்றி
சித்தகுளிகையின் செயலோய்போற்றி
சின்முத்திரைக்கைத் தேசிகபோற்றி
சீவகாருணியஞ் சிறந்தோய்போற்றி
சீவேச்வரர்திறந் தெரிப்போய்போற்றி
செந்தமிழ்மறைப்பொருட் சிந்தையோய்போற்றி
சேடாவதாரத் தீர்த்தபோற்றி
சேனையர்கோன்கலை செறிந்தோய்போற்றி
ஞானிகளுள்ள நயந்தோய்போற்றி
தத்துவஞானிக டலைவபோற்றி
திருமலைநம்பிதாள் சேர்ந்தோய்போற்றி
துவர்க்கலையுடுத்தரு டேயபோற்றி
துன்மதகிவாரணத் தோளரூல்போற்றி
தேசிகர்தேசிக சிகாமணிபோற்றி
தொண்டர்தாட்பொடிதனைத் தொழுவோய்போற்றி
நல்லோரவைக்கள நாயகபோற்றி
நாதமுனிபுகழ் நவில்வோய்போற்றி
நித்தியர்முதல்வனை நெடுந்தகாய்போற்றி

நீதிநெறிநிலை நிறுவினோய்போற்றி
பட்டர்பாலென்றும் பரிவோய்போற்றி
பணவப்பொருட்னைப் பகர்வோய்போற்றி
பராங்குசன்பாதுகைப் படிவபோற்றி
பரிசவேதிப் பார்வையோய்போற்றி
பவப்பிணியொழித்திடும் பண்டிதபோற்றி
பாண்பெருமாளடி பரவுவோய்போற்றி
பாமகண்முகமன் படைத்தோய்போற்றி
பிரபத்தியோகப் பெரியோய்போற்றி
பிரமசூத்திரப்பொருள் பேசினோய்போற்றி
பிரமஞானிகடம் பெருமபோற்றி
பூதத்தாழ்வார்ப் புகழ்வோய்போற்றி
பூதபுரிமகிழ் புண்ணியபோற்றி
பேயாழ்வாரடிப் பெட்பினோய்போற்றி
பேரருளாளனைப் பேணுவோய்போற்றி
பொய்கைப்பிரானடி போற்றுவோய்போற்றி
பொறைக்குணக்குன்றமாம் புங்கவபோற்றி
மதுரகவிகளை வழுத்துவோய்போற்றி
மந்திரமணிப்பொருள் வழங்குவோய்போற்றி
மழிசைப்பிரானடி வணங்குவோய்போற்றி
மாறனுரைசெய் மகிமையோய்போற்றி
மாறன்றமிழ்மறை வளர்த்தோய்போற்றி
முக்கோலேந்துகை முனீந்திரபோற்றி
முதலியாண்டான்றொழு மூதுவபோற்றி
முமூக்குவுக்கருள்புரி முதல்வபோற்றி
யதீந்திரனெனும்பெய ரியைந்தோய்போற்றி
யதுகிரியான்பிதா வென்போய்போற்றி
வாக்குக்கெட்டா வைபவபோற்றி
வாமனசீலனும் வள்ளால்போற்றி
விசிட்டாத்துவைத விளக்கேபோற்றி
விண்டுதரிசன வித்தேபோற்றி
விண்டுவின்பணிசெயும் விநோதபோற்றி
வியாதனுண்மகிழ்ச்சியை விளைத்தோய்போற்றி
என்றெடுத்தொருநூற் றெட்டுமுறைநிதம்
நன்றுரைத்தேத்தி நயந்துவழிபடின்
எப்பயன்பெறவிவ் யாக்கையெய்தினமோ
அப்பயனடைத லணித்தயிர்ப்பின்றே. (௰௯)

வெண்பா.

அயிர்ப்பிலாவன்பர்பாலாறிரண்டா*மாசும்
பயிர்ப்பினியற்றுதிருத்தல்பண்பென்—றுயிர்க்குழுவுக்
கெம்பெருமானாரிசைத்தவிதியைநெஞ்சே
நம்பிநடத்தனலம். (கூஎ)

கட்டளைக்கலித்துறை.

நலனென்றுநல்வளப்பூதூருறையெதிநாதன்முன்னாள்
பலனென்றப்பன்னுநியமங்களென்பன‡பன்னிரண்டும்
புலனென்றப்புந்திபுரிந்தாசரிக்கின்முன்போற்றுபுகர்க்
குலனென்றுநம்முழிக்கூடாதிதனைக்குறிக்கொணெஞ்சே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நெஞ்சமேயாத்துமயாத்திரைசங்காழி
நேமியோனதீநமொன்றுநெகிழவேண்டா
புஞ்சமாநெகிழினுயிர்ச்சமர்ப்பணந்தான்
பொய்யாகுந்தேகயாத்திரையோவென்னில்
வஞ்சமாவிருவினையின்வபத்ததாகும்
வருந்திறைத்திகளுமெனநமக்குத்
தஞ்சமாவெதிபதிசொல்விதியைநன்னர்த்
தழுவியொழுகிடின்முத்திசாரலாமே. (கூகூ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

முத்தியடையவிம் மூதுலகோர்க்குப்
புத்தியளித்துப் புரக்கவிப்புவிமிசைச்
சிந்தைமகிழ்ந்து வந்தவெந்தையாம்
எதிபதிப்பேருடை மதிநலவாரியே
ஞானநூலொன்று நானமாவறிந்திலன்

---

*க. ஜந்மநிரூபணம், உ. சரீரநிரூபணம், ௩. பாகநிரூபணம், ௪. ஆசிரமநிரூபணம், ௫. அவயவநிரூபணம், ௬. ஆலஸ்யநிரூபணம், எ. வாஸநிரூபணம், அ. பந்துநிரூபணம், ௯. ப்ரகாசநிரூபணம், க0. ப்ரகாரநிரூபணம், கக. வர்த்தநநிரூபணம், கஉ. தோஷநிரூபணம்.

‡க. ஆஹாரநியமம், உ. அநாஹாரநியமம், ௩. அந்நநியமம், ௪. போஜநநியமம், ௫. ஸ்நாநநியமம், ௬. ஸ்வரூபநியமம், எ. உபாயநியமம், அ. உபேயநியமம். ௯. வாஸநியமம், க0. போகநியமம், கக. ஆசாரநியமம், கஉ. ஸம்ஸர்க்கநியமம்.

ஆத்துமகுணங்களை நீத்தவனக்குணம்
அல்லாக்குணங்களைப் புல்லாப்பூண்டவன்
நன்றெனப்படுவ தொன்றுமறிந்திலேன்
சந்தமாரிலக்கண மைந்திறென்றேனுங்
கற்றவர்பாற்போய்க் கற்றறிந்திலேன்
ஆதலானின்மீ தோதுமிக்கவிகளில்
வருக்கப்பிழைக ளிருக்கினுமவைகளைப்
பாராட்டாதுநீ சீராட்டுடனின்
மனமகிழ்ந்தெனதுசொன் மாலையாங்கவிகளைத்
தந்தைதாய்தமது மைந்தர்தம்மழலைச்
சொற்களைத்திவவுறு நற்கிளையாழிசை
குழலிசையிவற்றினுங் கூரவினிதெனக்
கேட்டுகனியுளக் கிளர்ச்சியடைதல்போல்
ஆகிஞ்சனகதி யாகியவெனக்குத்
தந்தையுந்தாயுஞ் சற்குருதெய்வமும்
யாவுமாகியே மேவியிருக்குநீ
கேட்டெடுத்தென்றும் வாட்டமில்சூட்டென
அங்கிகரித்துநின் செங்கேழடிகளிற்
றிணிந்தவுவகையி னணிந்திடவேண்டுமென்
றடியனேன்முடிமிசை யணிகுவனத்திருத்
தாளெனுந்தெய்வத் தாமரைப்பூவே. (௪0)

---

பல்வளமுங்கெழுமியசீர்ப்பெரும்பூதூரென்
பதியில்வாழெதிபதிதன்பதாம்புயத்திற்
சொல்வளநான்மணிமாலையொன்றியற்றிச்
சூட்டினனேம்பொறியென்னுந்துட்டர்தம்மை
வெல்வளஞ்சேர்விரகராம்விண்டுசித்தர்
விமலவபிமானமெனும்வீவில்செல்வ
நல்வளங்கொண்டோன்பள்ளிகொண்டானென்னு
நாமங்கொண்டோன்கல்விநலங்கொண்டோனே.

## எதிராசமாமுனிகள் நான்மணிமாலை.

முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# முதலாழ்வார்கள்
# மும்மணிக்கோவை.

## காப்பு.

பூவர்க்கருள்செயப்போந்தநம்பொய்கைப்புனிதன்முதன்
மூவர்க்குமும்மணிக்கோவைமொழியவென்முச்சிவைப்பன்
நாவர்க்குளோங்கியநாவீறனனிலநண்ணகில
சீவர்க்குநல்லருள்செய்மாறனம்பொற்றிருவடியே.
ஆதியாகியவருமறைச்சிரத்தினிலமர்ந்த
ஆதிமால்பரனெனவறிந்தகலிடத்தவர்தம்
ஆதியாதிநோய்தவிர்ந்துயவருமறைதமிழ்செய்
ஆதியோகிகளடியிணைமுடியிசையணிவாம்.

## நூல்.

நிலைமண்டிலவாசிரியப்பா.

திருமலர்ச்சேக்கைத் திசைமுகன்படைத்தவிவ்
வுருகெழுமும்மை யுலகினிலொன்றும்
பூவலயத்துவர்ப் பொருதிரைப்புணரிசூழ்
நாவலந்தீவினி னவவருடத்தோர்
வருடமாம்பாரத வருடவளாகத்
தூழுறவொளிர்ந்திடு மேழுமாபுரிகளுள்
ஒன்றாயென்றும் பொன்றாப்புகழ்பெறூஉம்
நாஞ்சியாரைசூழ் காஞ்சிமாபுரிவயின்
பழமறைமுறையிடப் பைந்தமிழ்ப்பின்படர்
கிழமையோன்றிருமலர்க் கிழத்தியோடுறைதரும்
அஃகாவளத்திரு வெஃகாப்பதியுழிக்
கள்ளுணமூசுறூஉம் புள்ளுறைவள்ளவாய்
முள்ளரையாடக முளரிக்கருவிடை
ஏழாவரணமுஞ் சூழாவொளிர்தரும்
அண்டமுமவற்றுறை யண்டராதியரும்

வினைவினுதித்திட வனைதலாதிக்குக்
காரணனாகிய நாரணனருள்வழிப்
பூத்திடகொப்பூழ் பூத்தோனெடுத்துச்
சீர்பெறுமணிமறு மார்புறத்தழீஇ
மெச்சிமுச்சியி னுச்சியைமோந்து
நானக்கருங்குழ னளினக்கிழத்திதன்
ஞானப்பாறரு நகிலுமுண்பித்து
நோக்காரருள்விழி நோக்கிநங்கேயத்
தாழ்வீரவித்தையைப் போழ்வீர்நமைச்சொலும்
அந்தமின்மறைப்பொருள் யாவையுமமைத்துச்
செந்தமிழ்முதற்பாச் செய்தவற்றானும்
இருளறவேயா மருளியவியாச
வித்தையினானுமிவ் வத்திசூழுலகரைத்
திருத்திநந்தாள்களிற் பொருத்தியவர்நன்
குயத்தகுநெறியினை நயத்தொடுகாட்டுவான்
விருப்பொடுநாமுறை திருப்பதிதொறுமே
விஞ்சியவன்பொடு சஞ்சரித்தென்றுநீர்
இருத்திரென்றுரைத்த விருத்திபெற்றுளமகிழ்
பொய்கைமாமுனிவர பொய்கைபூம்பொழில்சூழ்
திருக்கடன்மல்லைத் திருப்பதிவயினிசைப்
பாட்டுளரளியளி கூட்டுறுநறுவிரைத்
தாதவிழ்ந்தலர்ந்ததோர் மாதவிச்சுமநசக்
கருவுழியுதித்திடப் பெருவிறலுவணமாக்
கேதநன்கமலமாப் போதில்வாழ்பவளுடன்
வந்துதன்சேவையைத் தந்தருட்பெருக்குறாஉங்
கடைவிழியாற்பரிந் தடைவுடனோக்குபு
தகர்ச்சியிலாநந் நுகர்ச்சியிலாழ்வீர்
ஆதிநூற்சார மனைத்தையுந்திரட்டிநன்
னீதிசேர்செந்தமிழ் நிறையிலக்கணமுதற்
பாக்களாலோர்நூல் பணித்ததுபயன்பட
ஊக்கமாயெவர்க்கு முரைப்பதினானும்

விதியுடனுறும் மதியுறவருளிய
பதிபன்னிக்குள பந்தத்துணர்வையுஞ்
சுத்தையார்பிர பத்திவித்தையையுஞ்
செப்பமாவுபதே சிப்பதினாலுமிவ்
வுலகினர்தமைமதி நலமுறத்திருத்திநுந்
தாட்கமலங்களுக் காட்படும்வணநாம்
உகந்துறைநிலங்களி னகந்தொறுமகந்தொறும்
இயங்கியிருமெனும் வயங்கெழுநியமநம்
பூண்டபூதப்பெய ராண்டகாய்புகழ்செழூஉம்
மயிலைமாநகர்வயி னயிலைநேர்பெருவிழி
நொசிநுண்மருங்குற் சசிதன்கொண்கனும்
வாசவன்முதலியோர் வணங்குபுவழிபடுங்
கேசவப்பெருமான் கேண்மையிற்கிளர்ந்துறை
கோட்டத்தமர்ந்தபூந் தோட்டக்கிணற்றறல்
அலர்ந்தசெவ்வல்லியி னலந்திகழ்கருவயின்
விதித்தவனருள்வழி யுதித்திடமற்றவன்
மாண்டகுதிருநகரந் தீண்டியேந்துபு
மன்னுயிர்க்கெலாமோ ரன்னையாகிய
எம்பெருமாட்டியின் வம்பவிழ்காந்தணேர்
அத்தத்தளித்திடச் சித்தமுவந்தவள்
பீனக்கொங்கைசேர் ஞானப்பாலளித்
திருநிலகமிழத்திபா லிருமெனவிடுத்திட
முந்தைமாமறைதொழூஉ மெந்தையெம்பெருமான்
நளிரருள்விழியாற் குளிர்தரநோக்கியெம்
ஆழ்வீர்நீவிர்நம் வாழ்வார்திப்பிய
தேசந்தோறும் வாசஞ்செய்தவண்
பொருந்தியசேதநர் திருந்துறவருமறைக்
குருத்தினற்பொருள்களைப் பொருத்திநன்கமைத்துப்
பைந்தமிழ்ப்பாக்கள் பணித்தவற்றானுநுந்
நெஞ்சுறநுமக்கியாந் தஞ்சமாவருளிய
விஞ்சுசீர்ப்பிரம விஞ்சையினாலும்
நானமுத்தத்துவ ஞானத்தானும்

இமைக்குமுயிர்க்கு நமக்குமென்றும்முள
சரீரசரீரிக் குரீஇயகட்டையுங்
கிளக்குஞானத்தைக் கிளத்தலினனும்
வையகமாந்தர்தம் மையுடவிர்ந்துயச்
செயக்கடவீரெனு நயத்தருமாணையை
மேற்கொண்டொழுகுபு மேதினிமாக்கடம்
காற்சுதிப்பிறப்பினை நசித்திடச்செய்துவிச்
சிராந்தியடைந்திடும் பிராந்தித்தபோதன
பாவனப்பொருள்களுட் பாவனமானவும்
முடிக்கருந்தவத்தவர் முடிக்கணியானவும்
ஆர்த்தர்கடங்கட் கடைக்கலமானவுந்
தீர்த்தர்கடமக்குநற் சேமவைப்பானவும்
என்னையொத்தவர்கட் கன்னையொத்தனவும்
ஆகியபெரும்புகழ்க் காகரமாகுநந்
திருவடிகளையென் னெருமனச்சினகரம்
விதிப்படிநன்னர்ப் பதிட்டைசெய்வித்துத்
துளக்கமின்மெய்ம்மதி விளக்கநன்கமைத்
தன்பெனுமஞ்சன மின்புறவாட்டுபு
பத்திமைத்தேமலர்க் கத்திகைசூட்டுபு
தவாதுமேன்மேல்வள ரவாவின்மையெனும்
அறுசுவையடிசினன் னெறிமுறைநிவேதித்
திழுக்குறுதநல் லொழுக்கத்தூபமுந்
தூய்மையினீங்கா வாய்மைத்தீபமும்
வழங்குவல்வணங்குவல் வாழ்த்துவல்மாயா
அவித்தைத்தமமுனங் குவித்தவினைப்பிழம்
பதனலடிநாண் முதலாவெனக்குநேர்ந்
தீர்தருபவபபிணி தீர்தரற்பொருட்டே. (க)

வெண்பா.

பொருள்கொண்மறையின்பொருண்முடிவுதோன்றும்
இருள்கொளிருவினையுமீண்டா—அருள்கொண்முத
லாழ்வார்கடாளிலடைக்கலமென்றேயடைந்து
தாழ்வார்களுள்ளந்தமக்கு. (உ)

கட்டளைக்கலித்துறை.

உள்ளத்துறையுமொருமுதறந்தவுணர்வுநல
வெள்ளத்துறைதருநம்மாதியோகிகள்வீழ்கழல்கள்
கள்ளத்துறைவிட்டுநெஞ்சேகருதுதியேற்றிமிரப்
பள்ளத்துறையிற்படாதுநமைக்கொளும்பான்மையவே. ()

இணைக்குறளாசிரியப்பா.

பான்மொழிமான்விழிப் பாவையாகட்டினிற்
பத்துத்திங்களு முற்றிப்பிறந்துழல்
அலகிலராகிய வுலகினர்போலா
தலர்தருமுருகவிழ் மலர்வயினுதித்திடும்
அருமையிலருமையாம் பெருமையிற்சிறந்தீர்
ஞானமும்பத்தியு நயப்பின்மையுமாம்
ஊனமின்மணிப்பூ ணுள்ளத்தணிந்தீர்
ஏட்டையுமிந்தியச் சேட்டையுமொழித்தீர்
ஆகியநீவிர்
துறவியராதலிற் றொல்லுலகோர்தம்
உறவினைக்காண்டொறு முள்ளத்தாற்று
தொருவரையுணரா தொருவரெங்கனும்
ஓரிரவேனு மோருழித்தங்கா
தெம்பெருமான்றன் வம்பவிழ்மலரடிக்
குரியபேரன்புடன் றிரிதருங்காலுமை
உயிர்நிலையாக்கொளெம் முயிர்க்குயிராயவன்
நும்மைக்கொண்டிச் சும்மைநீருலகினைத்
திருத்துவானருத்தியைக் கருத்துட்கொளீஇத்
தீமனங்கெடுத்தருள் வாமனக்கேத்திரத்
தோவவிலாச்சீர்க் கோவலூருறைதருந்
தன்னைக்கண்டு தரிசித்திடுவான்
புத்தியளித்திடப் பத்தியினீவிரும்
அப்பதியடைகால் வெப்பமார்கரக்கதிர்
குடகடல்குளித்திடப் படாிருண்மிடைதலிற்
பூசுரனோர் மாசிலாவைணவன்
நடைபெறுமாளிகை யிடைகழிதனில்வந்

திருக்கையிலிறைவனும் பொருக்கெனநம்முழி
வருந்துவினன்றியே புகுந்துமீதூர்ந்திடக்
கழியாநமக்கிடங் கழிமைசெய்பவன்
யாவனென்றுணர்வா னீவிர்மூவிரும்
இடிஞ்சினெய்திரியினான் முடிந்திடாத்தீவினை
மண்ணுறவேற்றிக் கண்ணுறுங்காணுமை
நெருக்கியோன்றிருக்கிளர் மருக்கமழ்நறுந்துழாய்க்
கண்ணியனண்ணியன் புண்ணியனுண்ணியன்
நாரணன்பூரண னவிற்றுமேழுலக
பாரணன்காரணன் பகர்மறைச்சிரத்தினிற்
றுணிபொருள்யாவையு மணிபொருளறிஞர்கள்
பணிபொருளெவற்றினும் பரந்துறையும்பொருள்
முப்பரம்பொருட்கு முதற்பொருளாமம்
மெய்ப்பொருடனைநுங் கைப்பொருளெனக்கண்
டுள்ளத்தடங்கா வெள்ளக்களிப்பாழ்ந்
தவசராயெழுந்துட லரும்பியபுளகக்
கவசராய்ப்பழிச்சுறுங் கருத்துடையவராய்ச்
சேமமாரிருக்கெசுர் சாமவேதத்துறாஉம்
ஈரமாம்பொருள்களுட் சாரமாம்பொருளமைத்
தமிழ்தினுமினியசெந் தமிழ்முதற்பாக்களால்
எவரும்புகழ்தரு நீவிர்மூவிரும்
முதலிரண்டுடனே நுதலியமூன்றாந்
திருவந்தாதிகள் கருவந்துழலுமெம்
போலியருய்வான் வாலியகருணையின்
அருளிச்செய்தீ ரரியவாமுப்பொருட்
டெருளிற்சிறந்தநற் றெய்வப்புலவீர்
எழுத்துஞ்சொல்லும்
பொருள்யாப்பணியுந் தெருளுறக்கிளக்குறு
நூலினுமேனைய வாலியநூலினும்
எட்பகவன்னதோ ரொட்பமுமில்லாக்
கழுதிரதத்தைநீர்க்காயமெனுமிழுதையேன்
உறுதியாநாணுஞ் சிறிதுமின்றியே

அறவுஞ்சிறிதா முறவியொன்றெழுந்து
குசத்தீவைத்தன் வசத்தாய்ச்சூழ்தரும்
இழுதம்போதியை முழுதுமுண்டுபு
புக்கெனவிணையினும் புகழ்க்கவிபாடுவான்
புக்கனனென்பிழை பொறுத்தெளியேனைநுந்
திருத்தாட்டொண்டு செய்யத்
திருத்தியாட்கோடனுங் கருத்தருட்குறித்தே. (௪)

வெண்பா.

அருட்கடல்களாகுமுதலாழ்வீர்காளென்னெஞ்
சிருட்கடலைவற்றுவித்தென்றுந்—தெருட்கடலென்
புந்திக்குட்டேக்கிநுந்தம்புண்டரிகப்பொன்னடிகள்
வந்திக்கச்செய்வீர்மகிழ்ந்து. (௫)

கட்டளைக்கலித்துறை.

மகிமைச்சுசிசெய்துவாழ்விக்கவந்தருண்மாமுனிகாள்
அகியைப்படுக்கையமலற்கிடமாமகத்திரனை
பகியைப்பொன்னாக்கலெனத்துயனாக்கியயனவனார்ச
சிகியைத்தணித்தனுஞ்சீரருண்மாரிச்செயலென்பவே. ( )

நேரிசையாசிரியப்பா.

என்னகந்தன்னை யிறுக்கித்துதைந்து
மன்னகந்தன்னை மடித்தோட்டிடுவான்
மண்டியதிற்குடி கொண்டுமகிழ்தருஉம்
ஆகியோகியீர் நீதியினீவிர்கள்
ஆழிசூழுலகத் தாழியான்புதல்வனைத்
திருவயோத்தியினிற் றிருவடிதொழுதெழுந
தருளியிருக்கையி லிருடருமிலம்பா
டுற்றொருபொருளு மற்றவனாகிய
மறையவனொருவ னிறையன்புடனுமை
வழிபடவவற்குப் பழிபடாவிம்மைச்
செல்வமுமோக்கச செல்வமுமளித்தபின்
மங்கலிலாப்புகழ்க் கங்கையின்கரைமேல்
வதிதருகின்ற வதரியாச்சிரமத்
துறைதருநாரா ராயணவுருவரைக

கண்டுகளிப்புட் கொண்டபின்னீவிர்
பென்னம்பெருத்த பிறங்கற்குகைக்குட்
டன்னந்தனியே தானிருந்தியோகு
புரியுங்காலையில் வரியளிமுரன்றெழும்
ஒண்மலர்ச்சேக்கைவாழ் மண்பொதுத்தந்தை
வாராவரநர நாராயணரெனும்
இருடிகளானும் பொருடிகழ்பெருமையைக்
கேட்டதைத்தெளிவான் வேட்டரம்பைக்கவான்
அரம்பைமேநகை யாதியோர்க்கொண்டும்
முரம்புறுகானத் துரம்பெறத்திரிதரு
முடங்குளைச்சீயங் கடங்கலுழ்கைம்மா
அடுதொழுலுகிர்க்கரக் கொடுவரிகொண்டும்
உம்பலிற்சிறந்ததாஞ் சிம்புளைக்கொண்டுங்
கடைநாளெழுகடு நடையார்மருத்துடன்
சென்மழைமின்மழை செறிந்திடைவிடாதுபெய்
கன்மழைமுதலிடர்க் காரணங்கொண்டும்
நுங்கள்யோகினைப் பங்கப்படுத்துவான்
வற்புறுமுயற்சிகள் பற்பலவியற்றியும்
நிட்டையினீவிரோர் முட்டுமின்றியே
சலியாதிருத்தலிற் றன்னுள்வினையெலாம்
பலியாப்பான்மையைப் பார்த்தப்பங்கயன்
விண்டுவைப்போலவன் றெண்டருமொருவரால்
வேறற்கரியவர் தேறற்கரியவர்
என்றுதன்னுளந்தனின் மன்றமாத்தெளிபு
பன்முறைபணிந்துமை மும்முறைவலம்வந்
தென்பிழையாவையு மன்பினிற்பொறுத்துக்
காத்தனுங்கடனெனத் தோத்திரித்தபூந்
தாமமார்ந்தசெந் தாமரைத்தாளீர்
விரிஞ்சிக்கரியநும் பெருஞ்சீர்வண்மையைக்
காமரத்தடிபதங் கலிங்கந்தமக்குழல்
பாமரனெங்ஙனம் பகுத்தறிந்துய்குவல்
ஓவலிலருளினு னீவிரேயதைத்தெரித்

தல்கவில்பத்திமைச் செல்வப்பெருக்குடன்
மல்குநன்ஞானமு மாவைராக்யமும்
நாத்திகவென்னுளம் பூத்திடச்செய்துபுன்
பிறப்பிறப்பாதிய விறப்பென்றுந்தரும்
மாயையின்விறலுமம் மாயையையொழித்திடும்
புண்ணியனும்புரு டோத்தமனெண்மையும்
என்னுடையியற்கையு மென்னுளந்தெளிதர
உணர்த்துவீரென் றும்மை
மணத்தபேரன்புடன் மறைபுகுந்தனனே. (எ)

வெண்பா.

மறைபுகுந்தோர்தம்மையோர்மங்கைக்கருப்பச்
சிறைபுகுதாவண்ணஞ்செயுமால்—நிறைபுகழ்சேர்
எம்மடிகளெந்தையர்களென்னுமுதலாழ்வார்கள்
தம்மடிகளீதுசரதம். (அ)

கட்டளைக்கலித்துறை.

சரதத்தைநிற்குரைத்தேன்றேர்ந்துகோடிதருணியர்கள்
சுரதத்தழுந்துநெஞ்சேநந்துயரந்துடைக்கவந்த
வரதத்துயர்முதலாழ்வார்கள்வண்புகழ்வாழ்த்தெடுக்கும்
விரதத்தினிற்றியெனிற்பெறலாமின்பவீட்டினையே. (கூ)

இணைக்குறளாசிரியப்பா.

இன்பமென்பதோ ரெட்டுணையிலதாத்
துன்பமென்பதே தொகுதியினுளதாக்
குடும்பினிப்பெயர்த்த கொடும்புலியானுஞ்
சந்ததியெனச்சொலு மந்தமாவானும்
ஆளுறு முவித்தைக் கோளரியானும்
அண்டிபதிவினை யண்டிகத்தானும்
பிடுருமனமெனுங் கோடரத்தானும்
பொறிகளெனும்பெயர்ப் பொறையிலரானும்
நயந்தருமவாவெனும் வியந்தரத்தானும்
மண்டியகுடும்பக் கண்டகந்தன்னிற்
புகுந்துபீறுமோர் வகுந்துவையுணரா
தலமந்தென்று முலமந்துழறரும்

உயிர்கடத்தஞ் செயிர்கடிந்துய்வான்
ஐப்பசியோண மவிட்டஞ்சதயத்
திப்புவிவந்த வியற்றமிழ்ப்புலவீர்
நீவிர்
கருமலைமருந்திக் காசினியோர்க்கெனுந்
திருமலைதனில்வாழ் திருமறுமார்பனை
ஆவிக்கொருதுணை யாகியமெலனைச்
சேவித்திடுவான் றிருவுளங்கொளீஇச்
சென்றகாலையிலக் குன்றரசனந்தன்
பெருமைசான்ற திருவுருவாதலின்
அடிதொட்டன்னதன் முடிமட்டுந்தம
தடியிட்டேறுத லரிலெனவெணியதன்
காழ்வரையோங்கிய தாழ்வரைக்கண்ணிருந்
துள்ளமுருகுற வுள்ளிவாழ்த்தெடுப்பவப்
பூவைப்பூநிறப் புண்ணியனடைந்துதன்
சேவைத்திருவினைச் செவ்விதினளித்திடக்
கண்டுகளிப்புட் கொண்டவணிருக்குங்
காலையிற்காலையு மாலையுமுச்சியும
விண்டுவினடிககே தொண்டுபூண்டொழுகுவோன்
பெரிதாசற்றோளிர் பீடுடையொழுக்கினன்
அரிதாசப்பெய ரந்தணனொருவன்
நுந்தம்
அடிக்கமலங்கடன் முடிக்கணிகலமா
வணிந்துநாடொறுந் தணிந்தபேரன்புடன்
மொழிமனமுடலெனு முக்கரணத்தினும்
வழிபடவவற்குக் கழிபேருளுடன்
உந்திபூத்தவற்கு முயிர்க்குமுள்ளதாஞ்
சந்தமார்சரீர சரீரிசம்பந்த
வுணர்வினையுளத்துற வுணர்த்திவிண்டுவின்
பூசனைசிறந்தது புகலதனினுமவன்
நேசர்தம்பூசனை நெடிதுசிறந்ததாம்
ஆதலினவற்றையும் வீதலாராலயம்

புதுக்குதல்பொய்கைகள் புதுக்குதன்முதலிய
கருப்பிணிகளைந்திடுந் திருப்பணிதம்மையும்
பேர்செழுமரங்கப் பெரும்பதிமுதலிய
சீர்செழுகிப்பிய தேசத்தலந்தொறும்
அருளுருவெடுத்துநின் றன்னதோர்தன்மையின்
றிருமலைதனிலுறை செல்வனைச்சிந்தைசெய்
தன்னவனருள்வழி மன்னுமோரக்கய
பாத்திரமும்மதைப் படிறர்வவ்வாது
காத்திடத்தக்கதோர் கனலுமிழாழியுங்
கண்டளித்திவ்வக் கயபாத்திரமிதந்
தொண்டநினக்குச் சுரந்திடும்பொருள்கொடு
பரிந்தமனத்துடன் புரிந்துநீவருதியென்
றருளியவருட்கட றெருட்கடலன்னீர்
தவத்தாலுயரரி தாசற்போலா
தவத்தாளமுந்திய வாதனேனாயினும்
என்னாரியர்கா ளிண்டைநேர்நுமது
பொன்னாரடிகளிற் புகல்புகுந்தனனென்
பண்டைவல்வினை பாற்றித்
தொண்டுகொண்டருளனுந் தொல்லருட்குரித்தே. ()

வெண்பா.

அருளுருவங்கொண்டனையவாதியோகிப்பெரியீர்
மருளுருவமாமென்மனத்தைத்—தெருளுருவம்
பூணச்செய்வீரொளில்ப்போதன்மறலிதமை
நாணசசெய்வீராநனி. (கக)

கட்டளைக்கலித்துறை

செய்வீர்பிறந்தெனமால்சொற்றதைசசெய்திராதிர்சினத்
தைவீரரைப்புறங்கண்டவராமுதலாழ்வீரென்பால்
மெய்வீரங்காட்டிமெலிவிக்குமாயையின்மேவுஞசன்ம
மொய்வீரைமுற்றும்வறண்டிடநீவிர்முயன்றிடினே. (கஉ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

முயன்றமர்புரிவா னியன்றெழுமொன்னலர்
இதயம்போழ்தர விம்மென்றதிர்தருஞ்
சங்குநற்றண்டொளி தங்கும்வாட்கலைகளில்

அவனியோர்க்கருள்வா னவதரித்தருளிய
ஆதியோகியீர் வேதியர்தொழுதிருக்
கச்சியிற்கரிகிரி யுச்சியிற்றிகழ்தருங்
காரணவத்துவைப் பூரணப்பொருளினைத்
தேவர்கடொழுதெழு . மூவர்கண்முதல்வனை
ஓரிருமறைதுதி பேரருளாளனை
விண்ணவர்விழும்மும் விரிதிரைவேலைசூழ்
மண்ணவர்மம்மரு மாற்றிடற்குரியவாம்
வரதாபயகரச் சரதாசிரியனைத்
திருவடிதொழுதவண் மருவியகாலையில்
விண்டுவர்த்தனனெனும் வேந்தர்கோனுந்தாட்
டொண்டுபூண்டநுதினந் தொழுதுவழிபா
டியற்றியிருந்திடு மெல்லையிற்பற்பல
இயற்றியுடன்படை யெடுத்துவந்தயற்
றேயத்தரசர்கள் மாயப்போர்வினைத்
தன்னவன்றனையவர் வெங்கிடச்செயவம்
மன்னவன்வந்துநும் மரைபுரையடிகளின்
மறைபுகநீவிரவ் வாருசற்கிரங்கிநான்
மறைமுடிப்பொருளெனும் வாரணமாமலை
எம்பெருமானடி யிறைஞ்சியேதிக
டம்பெருமானெனச் சாற்றிடுந்தகைத்திரு
வாழியாழ்வான்றனை யடைந்ததையவற்களித்
தாழிசூழகலிடத் தரசருக்கரசனும்
விண்டுவர்த்தனவிதைக் கொண்டுநின்பகைவரை
வென்றுநின்னகரியிற் சென்றுநின்றமருடன்
அரசவையடைந்தரி யாதனமீதிருந்
தொருகுடைநீழலி னுலகெலாம்பல்பகல்
ஆண்டுவாழ்ந்ததற்பின் மாண்டகுமோக்கமும்
அடைதியென்றுசிக ளடைவுடனருளிய
தத்துவவுணர்ச்சித் தாபதத்தலைவீர்
வித்துருமொக்குள்வான் வில்லெனநிலையிலிக்

காயத்தெற்குள காதலைக்கழித்துநுங்
கேயப்பெருக்கையென் னெஞ்சத்திருத்தியந்
நெஞ்சத்துறைதரும் புஞ்சத்தமத்தினைச்
சீர்த்தவானகந்தனைப் போர்த்தபுன்புலனைப்
பருதிவானவன் பாற்றல்போற்பகர்மெய்ச்
சுருதிநூற்சாரமாத் தூயவர்சொற்றிடும்
அஞ்சுபொருளையு மறிந்திடுமறிவையுஞ்
செஞ்செவேயளித்தெனைத் திருத்தியாட்கொளீஇ
நித்தியவிபூதியி னித்தியர்தம்மொடு
நித்தியச்சுகத்தினை நித்தியந்துய்த்திடற்
குரியனல்லேனையு முரியனாச்செய்வீர்
ஆயினச்செயற் குயினுமினியனும்
மாமகணாயகன் பூமகணாயகன்
அகமலர்ச்சியையு முகமலர்ச்சியையுஞ்
சுருங்கலின்றியே யொருங்குசெயவற்
றுமெனமொழிப சேமநூலோரே. (௧௩)

வெண்பா.

சேமமாம்வைப்பிற்சிறந்ததென்றேதெளிதி
காமநோய்கொண்டவென்கன்னெஞ்சே—நேமமார்
ஆதிகவிகணமதாதியாம்யோகிகடங்
நீதிசேர்பாதநிழல். (௧௪)

கட்டளைக்கலித்துறை.

நிழலினருமையைவெப்பினின்றோர்கணினைப்பர்கண்ணன்
குழலினருமைசூழாத்துயிரோருங்கொடும்பவமூன்
றழலினருமையறியாதியோகியடிகளுஞ்சீர்க்
கழலினருமையைக்காண்போர்முத்திக்கரைகாண்பவரே.()

நேரிசையாசிரியப்பா.

கரைகாண்பரிதாய்த் தரைகாண்பரிதாய்ச்
செடிகுடிகொண்ட மிடியுடையுளத்தோர்க்
கடியிதுவென்று முடிவிதுவென்றுங்
கூர்ந்தமதிகொடு மோர்ந்தறிவரிதாய்
நெருங்கியபிறவிப் பெருங்கடலழுந்துபு

மோக்கக்கரையினை நோக்கவுமூக்கம்
இறையுமிலவா யுறைதருமுயிர்களை
நீதிகணிகழ்த்துறு மாதிநூல்வேதந்
துளக்கமின்றியே விளக்கமாக்கிளக்குறும்
பன்னெறிகளினு நன்னெறிநடாத்தி
வீக்கிய தீவினை நீக்கிக்காப்பான்
சென்னிநாட்டிற் பொன்னியாற்றிடைக்குறைத்
திருவரங்கம் பெரியகோயிலில்
வன்ந்தாமனைத்திரு வனந்தாழ்வான்மிசை
அறிதுயிலமர்ந்திடும் பொறிமறுமார்பனை
அரணியலிலார்க்குச் சரணியன்றனை
அடர்ந்தபொருடோறும் படர்ந்துறைபவனை
பயிர்க்குநீர்நிலைபோற் பயின்றேயவ்வவ்
வுயிர்க்குயிராகி யோங்கொளியுருவனை
அண்டகோடிகளைக் கண்டகாரணனை
அவற்றுள்ளுறைதரு மெவர்க்குமெவைக்கும்
முதல்வன்றனைமுத லாழ்வீர்முதமுடன்
நீவிர்மூவிரு மேவியவிருவகைப்
பார்வைபடைத்த பயன்பெறும்வண்ணஞ்
சேவைசெய்துநுஞ் சிந்தைநைந்துருகிடக்
களிப்பெனுங்கடலுட் குளிப்பினையெய்தி
அவ்விடத்தெழுந் தருளியிருக்கையிற்
றெவ்விடமெனச்சொலுந் தீவினைவயத்தாற்
புழுநோய்விளைத்திடுந் தொழுநோய்த்தொடர்பினால்
அடியிடந்தொடங்கி முடியிடங்காறும்
புண்ணுராக்கையிற் புண்ணுமெங்குஞ்
சீயொடுசிலைநீர் வாய்தொறுமசும்பலில்
நீளிடைவீசுறூஉங் கோளுடைமுடைத்தீ
நாற்றங்கெழுமிய நரபதியொருவனுஞ்
சீரார்மான்மியச் சிறப்பினைச்செவியுற்
றாராவன்பி னவசனாகிப்

பார்த்திவர்தன்னைப் பாவனஞ்செயவரு
மூர்த்திகளாகுநும் முண்டகமலரடி
தோய்ந்தபொடிகளிற் றோய்ந்திடவப்பொடி
குட்டநோய்தந்தவக் குற்றவகையெலாம்
பொட்டெனப்போக்கியப் புரவலன்புரத்தினை
மாரவேள்புரத்தினுஞ் சீரிதாச்செய்திட
நறும்பூந்தொடைப்புய நரேந்திரனதைக்கண்
டிறும்பூதெய்திநும் மிணையடிப்பெருமையை
வாழ்த்திவாழ்த்தியவ் வண்கழல்களிற்றலை
தாழ்த்தித்தாழ்த்திநுந் தாசனெனும்பெயர்
பெற்றுநுந்தாட்கே யுற்றவனாகிநற்
றொண்டுபூண்டொழுகுமம் மண்டலீகனை
ஆட்கொண்டருளிய வருட்சிறப்புடையீர்
வாட்கண்மடந்தையர் மால்வலையழுந்திக்
கருப்பநரகினு முருப்பமாரேனைய
விருணிலந்தொறுநனி மருண்டுநீஇயுழறரும்
அடியனேனுநும் மடியிணைக்காட்பட்
டுய்யும்விரகொன் றுஞற்றுதிராயின்
மெய்யரணத்தான் மிளிர்ந்திடுநும்புகழ்
எவ்வுலகத்தினு மேறி
இவ்வுலகத்தினு மியங்கிமல்கிடுமே. (கசு)

வெண்பா.

இயங்குதிணையோடியங்காத்திணையின்
மயங்கியதுபோதுமிம்மட்டும்—வியங்குமுத
லாழ்வீரடியனமுதமுறவென்மருளைப்
போழ்வீரருட்கண்புரிந்து. (கஎ)

கட்டளைக்கலித்துறை.

அருட்கண்ணைநீவிரடியேனுழிச்சற்றமைக்கினென்றன்
மருட்கண்மடிந்திடுமாயாதமாயையுமாயுநல்ல
தெருட்கண்டிறக்குமுத்தத்துவஞானஞ்சிறக்குமுதற்
பொருட்கண்புரிவுபுகுமாதியோகிப்புனிதர்களே. (கஅ)

நேரிசையாசிரியப்பா.

கள்ளவிழ்நறுவிரை முள்ளரைமுண்டகச
சேக்கையிற்சேக்குமெண் ணேக்குடைப்போதனும்
ஆதிமனுவென வறைசுவாயம்புவுஞ்
சோதிமயனெனச் சொற்றிடுஞ்சூரனும்
மெச்சுசீர்கெழுவை வச்சுதமனுவுங்
காண்டாவனனொடு மாண்டாபதர்களுந்
திக்கெலாநிறைபுகழிக்குவாகுவும்
இரவிதன்மரபினில் வருநரபதிகளும்
வீடணனெனும்புகழ்ப் பூடணவள்ளலுங்
கழிபேரன்புடன் வழிபாடியற்றிய
தரங்கக்காவிரித் தரங்கிணிநனந்தலை
அரங்கத்தரவணை யறிதுயிலமர்ந்தருள்.
அப்பனையன்பெனு மலரணியாடையின்
ஒப்பனைசெய்துள வொண்மலராதனத்
திருத்தியெப்பொழுதினு மருத்தியினனிதுகர்ந்
தீதியொன்றிலா வாதியோகியர்
ஓவிலன்புட னீவிர்மூவிரும்
இருக்குங்காலையிற் றிருக்கிளர்கிள்ளிநுஞ்
சவிபெறுமான்மியஞ் செவியுறீஇத்தனது
மனைவியொடுஞ்சத தநயைகடம்மொடும்
விரிவார்நால்வகைப் பரிவாரத்தொடும்
மிடைந்தபேரன்புட னடைந்துநுஞ்சேவடி
பற்றிடவவனிரு பற்றுமற்றிட
நோக்காரருள்விழி நோக்கிமாநியாச
வித்தையையுபதே சித்திடவவற்குப்
பொய்ஞ்ஞானக்கண் பொருக்கெனப்புதைஇ
மெய்ஞ்ஞானக்கண் மிளிர்ந்துவிளங்கிட
யாக்கையுமிளமையு நோக்குறுமரசர்தம்
ஆக்கமுமழிந்தறும் போக்கினையுடையன
என்றுமனந்தனின் மன்றமாத்தெளிந்துவர்த்
தேறெழில்பெறுந்தன நூறுநந்தனைகளுங்

கண்டவுடன்மயல் கொண்டுவேட்டிடவவாம்
வாகுவான்மதனையும் வாகைகொண்டவனெனும்
யோகிதாசப்பெயர் யூகிமன்னவன்றனக்
குதகபூர்வகமா வதுவைசெய்திந்துதன்
அரசையுமரசினுக் குரியனயாவையும்
அவ்வரனுக்கே யளித்துநுந்திருவடி
நவ்வினைக்கொளீஇத்தன் னடலைப்பவக்கடல்
கடப்பானறிவின் றிடப்பாடருளிய
அருணிதிகாளிவ் விருடிணியிதயத்
திழுதையேன்பவக்கட றெழுநாமண்டிய
வழுதுவான்போறென மாய்ந்திடச்செய்தருக்
கருவடிகளைய்நுந் திருவடிகட்கே
ஆறுவன்பொடு தேறுர்மலர்தூய்
வணங்கிவாழ்த்தெடுத் திணங்கியெண்ணியிவ்
வழும்புறுசட்டகம் விழும்பொழுதளவுநுந்
தொழும்புபூண்டியவருள் சுரத்தல்
அறமெனவறைகுவ ரமிந்திசிறேரே. (கக)

வெண்பா.

ஓர்ந்துளமேகோடிநீயுய்வமுதலாழ்வார்கள்
வார்ந்தபெருவாரிதிசூழ்வையகத்துப்—போந்தசெயல்
நம்மைப்போனுறுநலிவுபடுவோரையெலாந்
தம்மைப்போலாக்கவென்றுதான். (உ0)

கட்டளைக்கலித்துறை.

என்றும்பிறவியிடும்பைகொணெஞ்சேயிளம்புனிற்றுக்
கன்றுன்னுமாவிற்கனிந்திந்தக்காசினிக்கண்ணுதித்த
துன்றுங்கருணையுளத்தாதியோகிகடொல்கலைச்சீர்
ஒன்றும்பொருணமையோர்திநல்வீட்டின்பத்துய்க்குமென்றே.

நேரிசையாசிரியப்பா.

என்றுமென்றாழு மிலங்கிமகரனுந்
துன்றுறுகோள்களுந் துலங்குடுக்கணங்களும்
மேகமுமுயங்கிடு மாகமார்க்கத்தால்
அயிர்ப்பிலியோகப் பயிற்சியினுற்றலாற்

படர்ந்துபல்வளங்களு மடர்ந்திடுஞ்சுவேதத்
தீவினையடைந்தவண் மேவிவாழுநர்நிதம்
பூசனைபுரிந்திடு மீசனைமலர்மகள்
நேசனைநீவிர்நுங் நெஞ்சகந்தனினினைந்
தாடிப்பரிவுடன் பாடிப்பணிந்தவண்
விட்டுப்பெயர்ந்தலை வீசுறும்பாற்கடற்
கிட்டித்துதித்ததிற் கெழுமியநனந்தலை
மணிமயமாத்திகழ்ந் தணிபெறுகோயிலிற்
றிகழ்தருமிரசதச் சிலோச்சயமிசையோர்
மகிழ்தருநீலமா மணிச்சிலோச்சயந்
திருவடிமுதலாத் திருமுடியளவுள
அவயவத்தொகுதிக ணவநவமாக்கொளீஇக
கிடந்தெனக்கிடக்குநங் கேசவன்றன்னைப்
படர்ந்துறுநறுந்துழாய்ப் படலையன்றனை
மாவாழ்மார்பனை மூவாமுதல்வனை
மண்டியவுலகெலா முண்டசெவ்வாயனை
யிருவிபூதிக்கு மொருபெருந்தலைவனை
நாரணனாகிய காரணபூதனைப்
புண்டரீகாக்கனைப் புருடோத்தமன்றனை
வண்டருமும்மத வாரணேந்திரன்
ஆதிமூலமென் றழைத்திடவக்கணஞ்
சோதிமயத்ததாஞ் சுதரிசனத்தைவிட்
டிடங்கரையெருக்கியவ் விபத்தினின்றுங்
கடங்கலுமகற்றிய வருளுடையமலனை
ஓவிலன்புட னுளத்துளிவாழ்த்தெடுத்
தாவயினின்றெழீஇ யாயிரஞ்சோதிதன்
மண்டலம்படர்ந்ததின் மன்னிருகமலநேர்
கண்டலமுடையனாய்க் காஞ்சனநிறத்தனாய்ச்
சுடர்விடுமங்கதத் தோணான்குடையனாய்
அடல்பெறுமாழிசங் கணிதிருக்காத்தனாய்
மணிமுடியுடையனாய் மகரகுண்டலத்தனாய்
அணிபெறுமாடகாம் பரனாயந்தணர்

பாசுறும்விண்டுவைத் தரிசித்தேத்திய
ஆதியோகியீர் நீதிநெறியிலா
தடிநாட்டொடங்கிவ் வண்டவகுப்புகண்
முடிநாட்காறுமோர் முடிவிலாப்பல்வகைப்
பிறப்பாமளக்கரிற் பேதுற்றலமருஞ்
சிறப்பேயுடையவித் தீவினையேனையும்
ஆட்கொண்டருள்வா னணிநுங்
தாட்கமலங்களிற் சரண்புகுந்தனனே. (உஉ)

வெண்பா.

சரண்புகுந்தோர்தம்மையித்தாலத்தின்மாயை
முரண்புகாவண்ணமுதிரன்—பரண்புகுவித்
தாதிமாலபாதமடைவிப்பர்நெஞ்சேநம்
ஆதியோகிப்பெரியோராம். (உங)

கட்டளைக்கலித்துறை.

பெரியோர்கள்பேணுறுநம்மாதியோகிகள்பீடுசொலற்
குரியோருலகத்தொருவருண்டேமனத்தொட்பமிலார்க்
கரியோரடியர்க்கெளியோரவர்பேரறையினளற்
றெரியோருமேறுவரிந்திரைகோன்றன்னிருப்பிடத்தே. ()

நேரிசையாசிரியப்பா.

இடங்கொண்மாலுந்தியா மிண்டைவந்தவனைத்
தடங்கொளெண்கண்ணுடைச் சதுராநனைச்
மேவியவைவகைத் தாவரசிட்டியுந்
துலங்குநாலேழ்வகை விலங்கின்சிட்டியும்
விண்ணகத்தியங்குறும் விபுதர்தம்படைப்பும்
மண்ணகத்துழிதரு மாநுடர்படைப்பும்
அவித்தையுமசத்தியுங் கவித்தசந்துட்டியுஞ்
சித்தியுமாகிய திரவரசிட்டியுஞ்
சமானமில்லவராங் குமாரர்தம்விதிப்பும்
மற்றும்பல்வகைப் பெற்றியர்விதிப்பும்
ஆற்றுறுஞானமு மாற்றலுமுடையனும்
ஓதிமவூர்தியின் சேதிமமோங்கிய
மெத்தியவொளிகெழூஉஞ் சத்தியவுலகினை

நண்ணியநான்முக னலங்கெழுமன்பினால்
எண்ணியிறைஞ்சியேத் தெடுத்துப்பூசனை
புரிந்திடும்பூமகள் பொருந்தியமார்பனை
விரிந்திடுபெரும்புகழ் விண்டுவைமாயனை
அச்சுதானந்தனை யநந்தசயநனைப்
பேராயிரமுடை நாராயணன்றனைப்
பின்னைகேள்வனைப் பீதாம்பரன்றனை
அன்னையொத்தெவர்க்கு மருள்செயுமமலனைக்
கேசவனைப்பர வாசுதேவனைச்
சகுந்தக்கோனையூர் முகுந்தக்கோனைநம்
மநார்த்தியைமாய்க்குறுஞ் சநார்த்தநமூர்த்தியைப்
பஞ்சாயுதன்றனைப் பற்றற்றோர்கடந்
நெஞ்சால்வணங்குநீ ணிறநெடியோன்றனைப்
பரவிச்சுரர்தொழுந் திரிவிக்கிரமனைத்
தாமரைக்கண்ணனைச் சம்புவைச்சௌரியைச்
சாமளவண்ணனைத் தத்துவத்தலைவனை
மாலைமாதவன்றனை மணத்துழாய்மோலியை
கண்கள்களித்திடக் கண்டுளமகிழ்ச்சியாற்
பண்கடலைக்கொளப் பாடிநட்டமிட்
டாநந்தக்கட லழுந்தியவகத்தீர்
மோநந்தலைக்கொளூஉ முனிவரர்தலைவீர்
ஆதியோகியீ ரருந்தமிழ்ப்புலவீர்
நீதியோகத்தினி னிலைநிற்பவர்தம்
மனமொழிக்கெட்டா மாட்சிமையுடையீர்
சினமொழியாமனத் தீயனேன்பேயனேன்
நீசனேன்வஞ்சக நெஞ்சனேன்மகளிர்பால்
நேசனேனிசாரண நிசாசரரியல்புடைத்
துட்டனேன்றுட்டரைத் தூயவராக்குநும்
மட்டவிழ்மறைமலர் மாணடிசேர்ந்தனன்
ஆதலாலடியனே னரில்கெளலாம்பொறுத்
தீதிசேரென்னுளத் திருடனைப்பிரித்துமெய்ஞ்
ஞானமும்பத்தியு நாரணன்பரனெனும்

ஞானமாமதியையு நொடிப்பொழுதினிலளித்
தச்சுதனடியிணை யிச்சையினணியெனி
நெக்குநெக்குருகிடு நெஞ்சப்
பக்குவியாக்கனும் பரம்பரம்பரமே. (உரு)

வெண்பா.

பரமேட்டிபாசகரன்பஞ்சபாணன்றம்
உரமேட்டிமைநம்பாலோவும்—வரமூட்டும்
ஆதியோகிக்கவிகளங்கழலைச்சிந்திக்கு
நீதியோகத்தினெஞ்சேநில் (உசு)

கட்டளைக்கலித்துறை.

நிற்றிநெஞ்சேமுதலாழ்வார்கட்போற்றுநிலையிலென்றுஞ்
சொற்றியவர்திருநாமமெப்போதுந்தொடர்ந்துநமைப்
பற்றியபாவப்பரப்பாற்படரும்பவப்பரவை
வற்றிவடிந்திடும்வைகுந்தகங்கைவயப்படுமே. (உஎ)

நேரிசையாசிரியப்பா.

வயப்படாப்பொறிகளும் வப்பபடாமனமும்
வயப்படாமாயையும் வயப்பட்டெவர்கட்
குரைப்படிநிற்குமோ வுரைத்திடுமெவர்கள்
ஆமோதந்தனை யளிக்குமாமோதமும்
சம்மோதந்தனைத் தருஞ்சம்மோதமும்
பிரமோதந்தரும் பெற்றிப்பிரமோதமும்
ஆகியவுலகுகட் கன்புடன்முறைமுறை
யோகினுற்றலா லுற்றவணுறைந்தருள்
சிங்கலினல்லிசை பொங்குசங்கருடணன்
பிறங்கியபெரும்புகழ் பெறும்பிரத்யும்நன்
அறங்கெழுமநிருத் தன்னெனும்வியூக
மூர்த்திகளாகிய மூவர்கடம்மையும்
ஆர்த்தியிற்கண்டுளத் தாநந்தங்கொண்
டாடியாடி யயர்த்தவர்சீர்த்தியைப்
பாடிப்பாடிப் பணிந்தவர்தம்முழி
விடைகொண்டவரருட் கொடைகொண்டிவ்வுழி
மீட்டுமெய்திய நீட்டொணாவைபவச்
சிறப்புடையவரோ தெய்யவவர்களாம்

ஆதியோகிக ளருளாமரண்பெற
நீதியினெஞ்சமே நிச்சலுமவர்திருப்
பாததாமரைகளைப் பழிச்சி
நீதமாய்வழிபட னின்கடனாமே. (உஅ)

வெண்பா.

நின்புரிவாங்கடனைநெஞ்சமேநீசெய்யின்
முன்புகத்தில்வந்தமுனிவரா—மன்புகழ்சேர்
ஆதியோகிப்பெரியோராரருளாந்தங்கடனை
நீதியாச்செய்வர்நினைத்து. (உகூ)

கட்டளைக்கலித்துறை.

நினைத்துணைகொண்டனனெஞ்சேநீராழிநெடுநிலத்தோர்
வினைத்துணைக்காரணமாயைநீயவீழ்த்திடவேட்டுவந்தோர்
அனைத்துணையன்புடைநம்மாதியோகிகளென்றறிந்து
தினைத்துணையேனுஞ்செய்யன்பவர்பாதத்திருமலர்க்கே. ()

பொய்கைபூதன்பேயாரென்னுமுதலாழ்வார்கள்
பொருவிருளில்
உய்கைபெறவுன்னிமும்மணிக்கோவையென்னுநூ
லுரைத்தணிந்தான்
செய்கையாற்றிகழ்கச்சியிராமாநுசாரியன்றருள்
சேருளத்தோன்
மெய்கையாவிரதத்தோன்பள்ளிகொண்டானெனுமியற்பேர்
மேதக்கோனே.

---

உண்மைபெறுபார்க்கவமென்னுபபுராணத்
துத்தரகண்டந்தன்னிலோதிரண்டாம்
வண்மைபெறுமத்தியாயந்தொடங்கி
வகுத்திடுமெட்டாமத்தியாயங்காறும்
ஒண்மைபெறுநித்தியசூரிகளாமாதி
யோகிகடம்மொப்பில்சீர்வைபவத்தைத்
திண்மைபெறச்செப்புமுண்மைதேறவேண்டுஞ்
சிந்தையரந்நூல்படித்துத்தெளியலாமே.

---

முதலாழ்வார்கள் மும்மணிக்கோவை
முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருக்குருகூர்

# நம்மாழ்வார் நான்மணிமாலை.

## காப்பு.

திருக்கிளர்தென்குருகூர்வாழ்வகுளச்செழுந்தொடையன்
மருக்கிளர்மாறற்கோர்நான்மணிமாலைவகுத்தணியக்
குருக்கிளர்வேத்திரமேந்துகைச்சேனையர்கோன்கமலத்
துருக்கிளரொள்ளடியுன்னிப்புனைவனென்னுச்சியினே.

குருகூர்வருநங்குணநிதிமாறன்குலவுந்தெய்வ
முருகூர்மகிழ்த்தொடைமொய்ம்பினன்மொய்சிறைமோட்டெகினக்
குருகூர்தியஞ்சனெஞ்சேநங்கவிகளைக்கொள்வனென்றும்
பெருகூருணியெனப்பேசிடும்பேரருட்பேறளித்தே.

## நூல்.

வெண்பா.

திருக்கிளருமெய்ஞ்ஞானதேசிகனம்மாறன்
உருக்கிளர்நற்சீருரைக்கவொண்மைப்—பெருக்குடையோர்
தம்மாலுமாகாதோர்சற்றுமவ்வொண்மையிலா
நம்மாலென்றுநெஞ்சேநாடு. (க)

கட்டளைக்கலித்துறை.

நாடுறுமுத்தத்துவமுணர்ஞானிகணாயகனற்
சேடுறுதென்குருகைப்பெருமான்றேன்செறிவகுளத்
தோடுறுதொங்கற்றுணைத்தோட்பராங்குசன்றொல்லியற்சீர்
பீடுறப்பேசநினைத்தனெஞ்சேபெரும்பேதைமைத்தே. (உ)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பேதைநெஞ்சேபெருநிலத்தோர்பிறவிபேர்ந்து
பெரும்பதத்தைப்பெற்றுய்யும்பெற்றித்தான
மேதைநெஞ்சில்விண்மணியின்விளக்கவேண்டி
மெய்ப்பொருளின்மெய்யுரையாம்வேதந்தன்னைப்
போதையுறுசெந்தமிழாற்புனைந்ததெய்வப்
புலமைசால்சடகோபன்பூவாரிக்கோர்

பாதையாம்பராங்குசன்சீர்பயமொன்றின்றிப்
பரவவொருப்பட்டதவாப்பரப்பின்பாற்றே. (௯)

நேரிசையாசிரியப்பா.

பரப்புற்றென்று முரப்புற்றோங்கி
நசிக்காவுயிர்களை விசிக்காவருத்துறாஉம்
அசித்தெனப்பெயரிய முசித்திடாப்பொருடான்
நகுமறிவிலதாய்ப் புகும்விகாரக்கே
இருப்பிடமாகி யொருப்பட்டென்றும்
இருக்குமதனிலைப் பெருக்கினைவிரிக்கின்
கலப்பறுசத்துவங் கலப்புறுசத்துவந்
தத்துறுகாலமாஞ் சத்துவசூனியம்
என்னவெடுத்துப் பன்னிடுமூன்று
விதமெனப்புகல்ப நுதலியவவற்றின்
எழுவாய்நடைகளி னியம்பியனவொரீஇக்
கழியாதிடையுறுங் கலப்புறுசத்துவம்
முக்குணமுடைத்தாய் மூரணுறக்கட்டுறீஇ
மட்குறுமுயிர்களின் மதிநலமறைப்பதாய்
ஒன்றும்வீற்றுணர்வினை யுண்டாக்குவதாய்
என்றுமுள்ளதா யிருடிகேசற்கு
மருவியகிரீடைக் கருவியினிருப்பதாய்ச்
சத்துவமிராசதந் தாமதமெனச்சொலுங்
குணவேற்றுமைகளின் கூட்டுறுவிடமொடு
குணவேற்றுமைகளின் கூட்டுறுவிடத்தின்
பேதத்தானும் பெருகிடுங்கால
பேதத்தானும் பிறங்கிப்பிறங்கிடும்
ஒத்ததுமொவ்வா ததுமெனவுரைத்திடுஞ்
சூக்குமவிகாரமுந் தூலமாம்விகாரமும்
விளைத்திடக்கடவதாய் வீவிலாப்பகுதி
இளைத்தலிலவித்தை யிகுத்தலின்மாயை
யென்னும்பெயர்களை மன்னிக்கலப்புறு
சத்துவமென்னுமச் சத்துவவசித்தால்
வீக்குண்டதன்குண வேற்றுமைதம்மாற்

றுக்குண்டுழலுமித் தமியனேனித்தகை
அவித்தையாவரணமு மதன்குணப்பரிசமுங்
கவித்துநிற்றெருடாவணங் கனன்றபெருந்தகாய்
அபயமுயிர்க்கரு ளிரிந்தமனருளால்
உபயவிபூதியு மொருங்குறக்காணுறூஉ
மெய்யுணர்வாம்பெரு வீறையையுடையோய்
ஐயுணர்வயின்றிடு மைம்பொறியவித்தோய்
அலகோர்ந்துரைத்திடற் காகாவகத்தாராம்
உலகோர்க்காபபா ஞெருப்பட்டென்றும்
முருகார்மலர்ப்பொழில் மூவாதொளிர்தருங்
குருகாபுரிவருங் குணக்குன்றனையோய்
மாறன்பராங்குசன் மறைச்சடகோபனு
வீறன்வகுளவீ விரைத்தொடையணிகலன்
அன்னவூர்தியென் றறைந்திடும்பெயரோய்
நின்னைவழுத்தி நினைத்திடநேர்ந்ததென்
முன்னைநற்பாவினே முழுப்பேதைமையினே
என்னையோவெளியனே னிதனினென்றுணர்ந்திலன்
அன்னையொத்தென்பிழை யனைத்தையும்பொறுத்தென்
முன்னையூழ்வினைகளை முற்றவுமுருக்குபு
பின்னரும்பின்னரும் பிழைசெயாதிருந்திடும்
உள்ளமுந்தந்ததில் வெள்ளமெய்ஞ்ஞானமும்
பூத்திடச்செய்தெப் போதுங்
காத்தனின்கரையிலாக் கருணையின்கடனே. (௪)

வெண்பா.

கடனுணர்த்துமாமறைகள்கட்டுரைக்குங்காட்சித்
திடனுணர்ந்துதேறியென்சிந்தை—யிடனிகழீர்
தன்கொருக்கிநின்சரணேசார்ந்துய்யவோர்மாற்றந்
தென்குருகைமாறவெற்குச்செப்பு. (௫)

கட்டளைக்கலித்துறை.

செப்புறழ்கொங்கையர்ச்சேர்வழிசெல்லவென்சிந்தைதனைக்
கப்புறழ்வாங்கலிமாயைக்கடலைக்கடந்துநின்றன்

பன்னாடம்பினு நன்னாளமைதரும்
பொல்லாக்கோளிலா நல்லோரையினிற்
றண்டிலம்விரித்துநற் றருப்பைமேலணிந்து
விண்டலர்மலர்தூய் விதியுளிச்சூரியதா
வகுப்பனயாவையும் வரன்முறைவகுத்து
நல்விநயந்தருங் கல்வியாற்கேள்வியாற்
சான்றோர்தங்குலச் சட்டகங்கொண்மறை
போன்றோர்பொய்த்தலில் புடவித்தேவர்கள்
ஏம்பலினெழுச்சியா னோம்பியசெந்தீக்
கரியாவிதிமுறை கனிந்துகைப்பற்றிய
ஒண்புகழ்சேர்திரு வண்பரிசாரப்
பெருவாழ்வமைந்திடுந் திருவாழ்மார்பர்
விருப்பன்னவமெனுந் திருப்பின்னவராந்
தருப்பாசனத்தர் தவத்துயரில்லவள்
கருப்பாசயம்வரு கற்புருவானோள்
உடையநங்கைப்பெய ருடையோள்பல்பகல்
நோற்றநோன்பின்பய னோன்மையாலேற்றமார்
அறத்துருவாமவ ளகடாங்கிட்டிசை
திறச்சேனையர்கோன் செழுங்கலைதனைக்கொடு
புகுந்துகலியுகம் புகுந்தநாளெண்ணைங்
தொருமூன்றதனிலு முரைபிரமாதி
வருடம்வைகாசி வான்மதிமழைக்கோள்
வாரம்விசாகநா ணோருமுன்பக்கம்
பன்னஞ்சாந்திதி பகர்ந்திடுங்கவைத்தாள்
என்னுமோரையினு மிருள்வலித்திடுமினன்
இராமதிவாகர னிராமாநுசவொளி
தோன்றலிற்றொலையா தேன்றுறைந்திருந்ததாம்
உள்ளிருளுட்குறீஇப் பொள்ளெனப்போரவும்
வற்றாப்பவக்கடல் வற்றிவறளவும்
மலராநெஞ்செனு மரைமலர்மலரவும்
மகிழணிப்பருதி வானவனென்னவிம்
மகிதலத்துதித்தருண் மாறபராங்குச

எனைப்போற்கொடியோ ரிவ்வுலகத்தினும்
எனைத்தோருலகினு மெக்காலத்தினும்
இருந்தோரிருக்கின் றவரிருப்பவர்களில்
வருந்தித்தேடினும் வாய்ப்பவரிலரால்
இத்தகைக்கொடியனே னிவ்வுலகத்தினில்
எத்தனைபிறவியோ வெடுத்தெடுத்தெய்த்தனன்
எல்லாரையும்போ யிரந்தனனவரெலாம்
பொல்லானிவனெனப் புரந்திடாதொழிந்தனர்
இன்னும்பிறவிக ளெதிர்வதையெண்ணியென்
முன்னந்திடுக்கென முசிந்துசோர்கின்றது
வெய்யபிறவிகள் வேண்டேனுகின்
செய்யதாமரைத் திருவடியடைந்தனன்
மருளருணவந்தனை மானுமெற்கிரங்கி
அருளருணவமே யனையோயடியனேன்
உய்யும்விரகொன் றெல்லை
செய்தனின்னருட்குச் சிறப்புடைத்தாமே. (அ)

வெண்பா.

உடையநங்கைசேய்மணியையுன்னிற்பொறிகள்
அடையநங்கைவயமாமைம்பூப்—படையநங்கன்
போதன்மறலிபயம்போகுநெஞ்சேபுண்டரிகை
நாதன்பதமுநண்ணுங்காடு. (கூ)

கட்டளைக்கலித்துறை.

நாட்டிலெங்கேனுந்தனைநல்குநாரிநகிலுறுபால்
ஊட்டினுமுண்ணுதுறங்காதியோகினுறுகுழவி
ஈட்டியசீர்த்திநம்மாறனல்லாமலிருந்ததென்று
கேட்டதுண்டோகவிகாடுலைக்கோவிற்கிளத்துமினே. (க0)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கிளக்குமிரண்டியக்குமின்றிக்குத்துமின்றிக்
கிளர்நீர்வேட்கையுமின்றிக்கிடைத்தமெய்யை
வளர்க்குமவையயில்வாஞ்சைதானுமின்றி
மாசுணமன்னுமுறங்காமரப்புளிக்கீழ்
வளக்கமலாதனனுய்ச்சின்முத்திரைக்கை
வயங்கிடயோகத்திருந்தமாறன்றன்னை

உளக்கமலத்துன்னுவோருற்பவத்தி
னுறுகணுருநிலைவில்வீடுறுவர்தாமே. (கக)

நிலைமண்டிலவாசிரியப்பா.

உறுவர்களெவர்க்கு முளத்தொன்னலராம்
அறுவரையவரை யகத்தடைத்தோர்க்கும்
மறைகளின்முடிவினி லுறைதருமிறைநிலை
உணர்வரிதாமெனி னுணர்வினுதயமே
உறுதேனுடற்றுறு முபயச்செருக்கையும்
அறுதேனலைக்குழு மைம்பொறிக்கள்வரைச்
செறுதேன்சீரிய தேசிகர்திருவருள்
பெறுதேன்பேர்க்கொணுப் பெற்றித்தாமவா
மறுதேன்மனம்போ மார்க்கம்போதலை
ஒறுதேனுண்மையை யுணர்த்துங்கலைகளைக்
கல்லாதேன்கலை கழறியவிதிவழி
நில்லாதேனுயிர் நேயநெஞ்சினில்
இல்லாதேனிரப் பாளர்க்கின்சொலுஞ்
சொல்லாதேன்மனத் தூயோரிணைக்கிளைப்
புல்லாதேன்பிறர் புன்கணைப்போக்கிட
ஒல்லாதேனுயிர்க் குறுகணேயுஞற்றிடத்
தேடுவேன்றெரிவையர் சிற்றின்பத்தையே
நாடுவேனல்லவர் நற்பணிசெய்திட
ஊடுவேனுறுதகை யுற்றிடவுனியுனி
வாடுவேன்வளனிலா வஞ்சையர்தம்மொடுங்
கூடுவேன்குலப்பொருள் குவித்திடவெங்கணும்
ஓடுவேனதற்கென துறையெலாமொழிப்பேன்
உண்ணத்தகாதனை யுகந்துகந்துண்ணுவென்
பருகத்தகாததைப் பரிவுடன்பருகுவென்
எண்ணத்தகாததை யியற்றியெண்ணுவென்
சொல்லத்தகாததைத் துணிவுடன்சொல்லுவென்
செய்யத்தகாததைச் செப்பமாச்செய்குவென்
இத்தகையியல்பினே யெய்தியவேழையேன்
அத்தகையிறைநிலை யறிகிலேனாதலால்

அருளுருவாகிய வமலமெய்ஞ்ஞானத்
தெருளுருவாகிய சிற்பரதெள்ளியர்
போற்றும்புணையடிப் புண்ணியவடுத்தோர்த்
தேற்றிக்காத்திடுந் திருவருட்சிந்தைய
எண்டிசையெங்கணு மிலங்குறுஞ்சீர்த்திய
வண்டிசையுறுமண வகுளமாமாலைய
நன்குருகூர்நளிர் நளினநற்றடஞ்சூழ்
தென்குருகூர்வருந் தேசிகர்தேசிக
சொன்னிலையிலாப்பெருந் துட்டனாகிய
என்னிலைக்கிரங்கி யினிதருள்புரிந்தெனைத்
தூயோனாக்கியம் மாயோனிறைநிலை
ஒள்ளிதினுணர்தரத் தெள்ளிதினுணர்த்தியிவ்
வடல்வினைக்குரியதா முடல்விடுமளவும்
இகந்துபடாததை நுகர்ந்தினிதிருக்கச்
செய்வதுமன்றியித் தேகம்விட்டபின்
அர்ச்சிரவதர்தனின் மெச்சிடக்கொடுபோய்
ஒளிமயமாகிய தெளிவிசும்பதனில்
நித்தர்கணிலவிய முத்தர்கள்குழுவினில்
உறைதரச்செய்வது மூன்றன்பரமென
மறைபுகுந்தனனின் மரைபுரையடிக்கே. (கஉ)

வெண்பா.

அடிநாளடைந்தவவித்தைவினையாதி
முடிநாளுண்டாகநெஞ்சேமுன்னிற்—கடிநாண்
மகிழ்மாலைமாறன்மலரடிசிந்தித்து
நெகிழ்மாலையையாய்நீயில். (கங)

கட்டளைக்கலித்துறை.

நின்றுமதுரகவிப்பெருமான்முன்றன்னெஞ்சகத்தில்
ஒன்றுமயிர்ப்பறக்கேட்டவிறுவிற்குரியவிடை
மன்றுபடச்சொன்னமாறனடியைமனத்திருத்தல்
நன்றுநமர்கட்கெனநவில்வார்மறைநாவலரே. (கச)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வல்லவராய்ப்பண்டிருந்தவான்மீகாதி
வடமொழிதென்மொழிக்கவிஞர்வரப்பண்பில்லாப்

புல்லவராகக்குணத்துப்போதனுதிப்
புத்தேளிர்முனிவாருள்புக்கோரென்றும்
பல்லவப்பூம்பொழில்சூழ்தென்குருகைவந்த
பராங்குசமாமுனிக்கவிஞன்பராநூறேர்ந்த
நல்லவர்சொனாரணனல்லருளின்மாட்சி
நண்ணிடுனென்றும்வல்லோர்நவிலுவாரே. (கரு)

நேரிசையாசிரியப்பா.

ஆருயிர்ச்சொருபஞ் சீரியதாமுடல்
பொறிமனம்பிராண னறிபுத்தியெனக்
கூறுமிவைக்கு வேறுயுள்ளதாய்த்
தனக்குத்தானே தயங்குந்தகைத்தாய்
அகலாவியற்கைச் சுகமாயிருப்பதாய்
ஒன்றியகால மென்றுமிருப்பதாய்
வளமாரணுவி னளவாயிருப்பதாய்ப்
பொறிகளினுணர்வா னறியவொண்ணாததாய்
அசித்தின்குலத்ததாய் நினைக்கவொண்ணாததாய்
அசித்தெனவென்று முசித்திடும்விகாரந்
தட்டாதொருபடிப் பட்டிருப்பதாய்த்
திடஞானக்கிருப் பிடமாயிருப்பதாய்த்
துன்றவயவக்குழு வின்றியிருப்பதாய்ச்
சீரியநியாமியந் தாரியஞ்சேடமாம்
என்னுமிவற்றையு மன்னியிருப்பதாய்
இருக்குமிலக்கண வருக்கமுடைத்தென
உத்தமராகிய தத்துவதரிசிகள்
ஒருமிடருகத் தெருளுறத்தெரிக்கினுங்
காலதத்துவமெலாங் கணக்கிலாப்பிறவிகள்
ஞாலமீதெடுத்து நவிற்றுறுமிம்மைநாள்
காறுமவ்விலக்கணங் களிலொன்றேனும்
வீறுமவித்தையின் விறலிலகப்பட்
டுணர்ந்திலன்றத்துவ வுணர்ச்சியோரிணக்கமும்
புணர்ந்திலனெடுத்தவப் புலைப்பிறவிகடொறுஞ்
சிதடனாய்மக்கட் பதடியாயினன்

இத்தகையேழையேற் கிரங்கியிருக்குணர்
வித்தகர்வியக்குறும் விழுப்பொருளுணர்ந்தவ
சடத்தைச்சினந்தவ தாககுமைம்பொறிமேய்
விடத்தைப்போன்றதீ விடயமொறுத்தவ
இணக்கித்தம்வழி யெவரையுமீர்த்திடுங்
குணத்தைக்கடந்தவ குணநிதியானவ
முருகூர்மலர்ப்பொழிற் குருகூர்க்கொற்றவ
மோனிகளதிபத ஞானதேசிக
வணக்குடைத்தவநெறி யிணக்கர்தந்தலைவ
என்னிலையாளுறு நன்னிலையுணர்த்தித்
துறவுச்சுடர்கொளீஇப் பிறவிப்பிணியொரீஇ
அந்தாமத்தெனை யமைத்தல்
எந்தாய்நின்னருட் கேற்றதோர்செயலே. (கசு)

வெண்பா.

ஓர்ந்தோர்ந்துளத்துள்ளியோத்தின்பொருளையெலாந்
தேர்ந்தோர்தொழுங்குருகைத்தேசிகன்றாள்—சார்ந்தோரே
உய்யும்விரகரென்பருள்ளமேயுண்மையினீ
செய்யுங்கடமையஃதேதேர். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

தேர்ந்தோரைக்காக்கத்திரைககடற்றேயத்திற்றென்குருகை
சேர்ந்தோன்றமிழ்மறைசெய்தோன்சினந்துதெறுஞ்சடத்தைத்
தீர்ந்தோன்றிருவடிக்கத்தாணிச்சேவகஞ்செய்துவக்க
நேர்ந்தோர்பெருமைநிகழ்த்தவல்லாரெவர்நீணிலத்தே. ()

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நிலத்தோங்கிவருங்கருமகைங்கரியமெனுமிவற்றி
னிகழ்த்துங்கன்மங்
குலத்தோங்கும்வருணக்குங்கைங்கரியந்தொண்டிற்குங்
குறித்ததென்று
தலத்தோங்குந்தென்குருகைச்சடகோபன்றிருவுள்ளந்
தன்னையோர்ந்த
நலத்தோங்குநல்லோர்கணவில்வரிதைநாடோறு
நாடென்னெஞ்சே. (ககூ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

நாடுங்காலைப் பீடுசாலூல்கள்
கருமமுஞானமு மருமையாம்பத்தியும்
புரையிலதாக வுரைபிரபத்தியும்
ஆசரிப்பித்திடு மாசாரியாபி
மானமுமாமிவை ஞானநல்வீடடை
நெறிகளென்றெவரு மறிதரவுரைக்கும்
முதலின்மொழிந்தவம் மூன்றுநெறிகளும்
முதல்வருணத்தோர் முயன்றிடத்தக்கவாம்
நான்காநெறியையா னடத்தவல்லேனலேன்
ஐந்தாநெறிக்கே யமைந்தவனனவென்
சிந்தாகுலங்கெடத் திருவருளுட்கொளீஇ
எந்தாயெம்மோ யென்குலதெய்வமே
இயங்குதிணையியங் காத்திணையாகிய
உயிர்க்குயிராகி யுறைபவனுந்தனக்
குயிர்ப்பொருளெனமதித் துரைத்திடத்தக்கோய்
நான்மறைச்சாரமா நயந்துநீயருளிய
நான்குகலைகளு நான்குநகில்களா
மோக்கவிருப்பெனுந் தூக்கனல்வாதைகொண
மன்னுமாறரிசன வாய்மைதேரும்பிர
பன்னராகியபரி பக்குவக்கன்றுகள்
உண்டுதேக்கிடவருள் தொண்டநவரதமும்
ஊனமிலெம்பொருண் ஞானமாம்பால்பொழி
அழிவில்பேரின்பமே யொழிவிலாதொளிர்பரந்
தாமநின்றிழிதருங் காமதேநுவே
ஆரியரபிமா னத்திலமைந்துவாழ்
சீரியர்தமக்குநற் றெளிவிசும்பதனில்வாழ்
திருமகணாயகன் றிருவடிக்கடிமைசெய்
அன்பெனப்பெயரிய வழிவிலாக்கந்தர
முருகூர்மலர்ப்பொழிற் குருகூரெனும்பெயர்க
கற்பத்துறைதரு கற்பகத்தருவே
அடியனேன்றன்னைநின் னபிமானத்தினில்

ஓடிவிலாதென்று மொதுங்கிவாழ்தரச்செய்
தளித்திடியெல்யாவரும் களித்திடுநின்புகழ்
முன்னர்நிலையினு நன்னர்நனிதழைத்
தண்டங்களினுமவ் வண்டத்தொகைகளை
எண்ணிற்படைத்தவ னண்ணிக்களித்துவாழ்
உரந்தாங்கியவொளிப் பரந்தாமத்தினில்
இடமுடைத்தலத்திலோ ரிடம்விடாதெங்கணும்
மன்றுபட்டென்றினு நன்றுளிர்தருமே. (உ0)

வெண்பா.

ஒளியுருவாயுதக்கிலொண்டிருக்கோளுரற்
களியுடன்முன்சேவைதந்தவண்ணல்—ஒளிர்குருகை
மன்னேமரகதமேமாமணியேமாற்றுயர்ந்த
பொன்னேயெனதுபவம்போக்கு. (உக)

கட்டளைக்கலித்துறை.

போக்குதிபொய்க்கலைபுந்திபுகுவித்தபொய்யுணர்வைத்
தேக்குதிமெய்யுணர்வைத்திருவாய்மொழிச்செம்பொருளால்
நீக்குதிநெஞ்சி ளிறைந்தவவித்தையைநின்னடிக்காள்
ஆக்குதியென்னைத்திருக்குருகூருறையாண்டகையே. ()

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆண்டகைகளாமரசர்பொறியும்வேண்டே
னணிமாதிசித்திகளுமவாவகில்லேன்
ஏண்டகையிந்திரதிருவுமிவறகில்லே
னெங்கணன்றன்னிரும்பதமுமெண்ணகில்லேன்
மாண்டகையதிருக்குருகூர்வந்தமாற
மகிழ்மாலைச்சடகோபமறையோர்வாழ்த்திப்
பேண்டகையநின்றிருத்தாட்டொண்டியற்றும்
பெருஞ்செல்வப்பேற்றினையேபேணினேனே. (உரு)

நேரிசையாசிரியப்பா.

ஏனத்துருவெடுத் திருநிலமிடந்ததன்
தானத்துய்த்தவெந் தண்ணளித்தனிமுதல்
எண்ணிலண்டங்களை யியற்றியளித்திடுங்
கண்ணன்கருமணி வண்ணன்செம்மணி

நிறத்தினன்றோற்றியிந் நிலமிசையறங்களைத்
திறப்படச்செய்துளத் தெள்ளியர்ப்புரப்போன்
பாமசணுயகற் படைத்தோன்பரிமளப்
பூமகணுயகன் பொறைப்புருடோத்தமன்
திடப்படநிற்பன நடப்பனவாகிய
ஆருயிர்க்கெலாமோர் பேருயிராயவன்
மறைமுடிவுரைத்திடு மிறைநிலைக்குரியோன்
திருவருடன்னாற் றிருக்குருகூர்தனிற்
றிருவவதரித்தருள் செந்தமிழ்க்கரசன்
வேரியார்மகிழ்த்தொடைக் காரிமாறப்பிரான்
நிலவுறுநிலமிசைக் குலவிவாழ்பவர்மனம்
வாய்மலமறத்திரு வாய்மலர்ந்தருளிய
வெண்பாநண்பா வியக்குமாசிரிய
வொண்பாவுவப்புட னுரைக்குமாசிரிய
விருத்தமப்பெயரினால் விரித்திடத்தகுந்துறை
வஞ்சிப்பாவஞ் சித்துறைவிருத்தங்
கலிப்பாகலிவிருத் தத்துடன்கலித்துறை
என்னும்பெயரினை விசைப்பனவாகியுந்
துன்னும்பவநோய் துடைப்பவராகிய
மருத்துவரவர்தரு மாண்புறையென்னவும்
வயங்கிநாடொறு மியங்கிப்புறத்துறை
நள்ளிருடன்னினு நலிந்திடுந்தகைத்தாம்
உள்ளிருளொழித்தலி னுதயர்களென்னவுங்
கண்மையினனிபரிந் துண்மையுணர்த்தலின்
மாத்தகைக்குரியரா மாத்தர்களென்னவும்
பெரியர்களுரைத்திடற் குரியனவாகியுந்
திகழ்ந்திடுந்தகையவா யிகழ்ந்திடும்பிறவிப்
பையுளைப்பாற்றிடுஞ் செய்யுளாமாக்கள்
ஐம்பொருளாகிய செம்பொருட்டிடம்பால்
சொல்லச்சுரந்திடு நல்லியல்புளவா
அங்கண்மாஞாலத் தெங்கணுநிலையுறீஇ
இருக்கெனப்பெயரிய திருக்கிளர்செழுமறைச்

சாரமாய்த்தயங்குறுந் தகைத்திருவிருத்தமும்
போதமாரெசுர் வேதசாரமா
மருவாவொளிர்தருந் திருவாசிரியமும்
பதரதர்தொலைத்துநல் லதரினைக்காட்டுறும்
அதர்வணவேதத் தமைந்திடுஞ்சாரமாம்
உருவந்தனைக்கொளுந் திருவந்தாதியுங்
கிதமார்சாம வேதசாரமாப்
பெருவாழ்வளித்திடுந் திருவாய்மொழியுமாம்
மேனிலைக்குரியதா மாணிலைத்தலந்தொறும்
வணக்குடைத்தவநெறி யிணக்குடையவராங்
கன்றுகணேடியே நின்றிருக்கின்றனை
அத்தவநெறிக்கே யமைந்தவராகிய
சுத்தமாந்திருவுளத் தொண்டர்காள்பண்டைநாள்
பாண்டியனவைக்களத் தீண்டியபுலவர்முன்
மேன்மையைக்குறித்திடு நோன்மைசாலாரண
வாக்கியபரம்பரைத் தூக்கெடுத்துரைத்துத்
திருமால்பரத்துவஞ் செய்தவராகிய
பெரியாழ்வாரும் பிறங்கிடுமவர்திரு
நந்தனையாகிநன் னந்தனவனந்தனிற்
றிருத்துளவடிதனி லருத்தியினுலகினர்
வாதைதீர்தரவருங் கோதைநாயகியுமுன்
பேய்ச்சிபாலுண்டநம் பெருமான்பெட்புறாஉம்
ஆய்ச்சியர்பிறப்பினை யவாவிய்முறைமையின்
நீவிர்களியாவரு மேவியவினைக்குறுஞ்
சாதனமாகிய கோதனவுருவராம்
பாவனமாகிய பாவனையுளங்கொளீஇ
வம்மின்வந்தெனக்குறும் வடிவச்சேவையைத்
தம்மின்றந்தபின் றடையொன்றின்றியே
வேதமெய்யுணர்ந்தோர் விரிஞ்சனாதியர்
கோதறுஞானக் கொழுந்தின்முன்செல்கினும்
ஏதமின்றிலங்குறு மெக்கவிகளினோர்

பாதமுன்செல்லுமே பரஞ்சுடரெனவோர்
கடவுட்புலவன் கழறுதற்குரியவாங்
கடவுட்டன்மைசால் கவிக்குழாமாகிய
குடஞ்சுட்டுகளுறை யிடஞ்சுட்டிச்சென்
றேறுதலாகிய வூட்டுங்கடமையைச்
செய்துமவைபொழி தீம்பாலமுதுண்
டுய்துமுடனின் றுடற்று றும்வினைகளை
ஒழிதுமொழிவிலா வுற்பவவாரியைக்
கடத்துமெடுத்தவிக் கடவினைகழிந்தபின்
நடத்துமர்ச்சிர நடவையைநணிச்செலீஇ
நலமந்தமில்லதோர் நாட்டில்
உலவுமும்பர்களோ டுடன்குழீஇவாழ்துமே. (உச)

வெண்பா.

வாழ்வோங்குந்தென்குருகைமாறன்றாளுச்சியாற்
றாழ்வோர்களாந்தொண்டர்தாட்டுணையை—வீழ்வோ
நடப்போநெஞ்சேயவர்சொன்ஞானநெறியேநாங்
கடப்போம்பிறவிக்கடல். (உரு)

கட்டளைக்கலித்துறை.

பிறவிப்பிணிதனைப்போர்த்திடுஞானப்பிடகபெருந்
துறவித்தலைவசுடராழிமாலைத்துதிகவிஞ
அறவிப்பிரர்தொழுமாறநின்றாளையகத்திலுன்று
மறவிப்பகையினைமாய்த்தெனைக்காக்கமகிழ்ந்தருளே. ()

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அருள்கொளுநல்லகத்தராமடியார்தங்கட்
காரமுதாய்த்தேனுமண்ணிக்கும்பாலாய்
மருள்கொண்மனத்தோர்மாறாப்பிறவிநோயை
மறுவலும்வாராதொழிக்குமாமருந்தாய்த்
தெருள்கொளுஞ்செம்பொருட்கலையின்றிரள்கடம்மிற்
சீரியதாய்ப்பயில்பவர்க்குச்சிறந்தினிக்கும்
பொருள்கொளுநின்றமிழ்மறையாம்போதவைப்பைப்
புந்திவைத்துமாறநிதம்போற்றுவேனே. (உஎ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

போற்றுங்கலியெனும் புருடன்பெரும்பகை
ஆற்றல்சான்றென்று மலைக்குமாயைப்பகை
கவித்துக்கெடுத்திடு மவித்தைக்கொடும்பகை
வினைப்பகைவினையால் விளையுமுடற்பகை
காமப்பகைதெறும் வீமப்பொறிப்பகை
பசிப்பகைநோய்ப்பகை விசிக்குமவாப்பகை
இவைமுதலெண்ணிலாக் குவைகெழூஉம்பகைகளின்
வருக்கந்தன்னி னெருக்குண்டுழறும்
ஏழையேன்மூவகைப் பிழையேன்கோழையேன்
நாராயணநித நாடுறுந்தமிழ்மறைப்
பாராயணவுயிர்ப் பரிவுறும்பராங்குச
குருகூர்வந்தநற் குணச்சடகோபநன்
முருகூர்மகிழ்த்தொடை மொய்த்திடுமொய்ம்ப
மாறநாவீற மராளவூர்திய
அச்சுதனறிஞர்கண் மெச்சிடுமரிந்தமன்
திருத்தகுமருப்பொழி திருத்துழாய்மோலியன்
சங்குசக்கரந் தங்குகைச்சார்ங்கனன்
பதுமநாபன்செம் பதுமவிலோசனன்
மாயவன்றூயவன் மால்புருடோத்தமன்
முகுந்தனிருஞ்சிறைச் சகுந்தக்கோனையூர்
இந்திராவரசனெம் மிந்திரைநாயகன்
சிதரனருட்டா மோதரன்சௌரி
வாசுதேவன்வை குந்தன்கேசவன்
அனந்தசயந னநந்தமாம்பெயரினன்
உந்திபூத்தெண்கணற் றந்தநாராயணன்
கமலமாமலர்புரை விமலமாம்பதங்களை
அருத்தியினேத்திடுந் திருத்தகுதெய்வப்
புலவநற்றுமனா புனாயுநின்கழல்களிற்
புலமையேயில்லாப் புரியன்புனைந்திடுஞ்
சொற்றொடையதனிற் சொற்பொருளாதிய

குற்றவகைகள் குழூஉக்கொண்டிருக்கினும்
அன்னவையாவையு மளித்திடுந்தந்தையர்
அன்னையர்தத்த மருங்குழவிகள்சொலும்
மழலைச்சொற்களைக் குழலிசைதன்னினும்
ஏழிசைபாடுறும் யாழிசைதன்னினுங்
கனியினுந்தேனினுங் கண்டினும்பாலினும்
இனிதெனச்செவியுற் றிதயங்களித்தல்போல்
அத்தனுமன்னையும் வித்தகக்குரவனும்
வாகுறுதேவுமெற் காகுநீநின்றன்
கள்ளமிலாவருள் வெள்ளமாருள்ளத்
தருத்தியினங்கீ கரித்தத்தொடைதனை
அணிதியெனநின் னம்புயக்கழலிணை
பணிகுவல்பரசுவல் பன்முறையெண்ணுதல்
செய்குவனீயது செய்யினுய்குவலே. (உஅ)

வெண்பா.

உய்யவூ ழொன்றுமிலையுள்ளமேநம்புதியாற்
பையவரவுபெய்தபைங்குடத்தும்—வெய்ய
அழலினுங்கைவைப்பலருட்காரிமாறன்
கழலின்மறைபுகுந்தக்கால். (உ௯)

கட்டளைக்கலித்துறை.

காலினுருளிற்கறங்கும்பிறவிக்கலாம்விளைக்கும்
மாலினுழலுமனனேயஃதறவாருணத்தில்
ஆலினிலையமர்வோன்கவிமாறனருளியதீம்
பாலினினியபசுந்தமிழ்மாமறைபாடுதுமே. (௩0)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பாட்டிரதந்தேர்தருந்திருக்கோளூர்ப்
பண்ணவன்கைக்கொள்பட்டோலை
தீட்டிடநானுன்குணத்திடத்திருவாய்
திறந்தருள்செந்தமிழ்க்கரசே
கூட்டியிரெம்மான்றனைநுகர்பொருளாக்
கொள்ளலுமல்லதெம்பெருமான்

சேட்டுட னுயிரையன்னதாக்கொளலுந்
தெரித்தியாறிருவருள்சிறந்தே. (௩௧)

நிலைமண்டிலவாசிரியப்பா.

திருவருள்சுரந்திடுந் திருமகணாயகன்
அத்தனுமன்னையு மாயடியவர்க்கருள்
வைத்தமாநிதிப்பிரான் வைகலும்வைகுறூஉம்
ஒப்பிலாவொளிகெழூஉந் திப்பியதேயமாய்
மாயையில்வல்லனோர் தீயவன்பொருட்டுமுன்
பந்துரச்சுரிமுகப் பணிலமானுறூஉங்
கந்தரத்திதிபெறுங் கடவுளர்வேண்டலாற்
களையிலாக்கடலையங் கைக்கொளுமோர்துளி
வளையதாக்கொண்டுதன் வாய்மடுத்தருளிய
கும்பசம்பவனுங் குறுமுனிவரனுறை
வம்பவிழ்சோலைசூழ் மலயநின்றிழிதரும்
பொருநையாறெங்கணும் போந்தொழுகுதலாற்
பொருவில்பலவளங்களும் பொங்கிடுந்தகைத்தாய்ப்
பூவலயத்திற் புகழ்கெழீஇயறங்களை
நாவினராகிய நான்மறையாளர்கள்
இருக்கோதுஞ்சீர்த் திருக்கோளூர்க்கண்
ஆயிரங்கதிர்கொடு மாயிருநிலமிசை
விரிதரும்புறவிருள் வீட்டுவோனாகிய
அரியுதயக்குமுன் னருணோதயமென
ஆயிரஞ்சாகைகொ ளருமறைப்பொருளுறும்
ஆயிரஞ்செய்யுளா மங்கதிர்களைக்கொடு
தெண்டிரையெறிதருங் குண்டுநீர்க்குரவை
சூழுங்குவலயம் வாழுமன்பதைகடம்
உள்ளிருளொழிப்பான் கள்ளவிழ்விரைகமழ்
வகுளபாற்கரனென மகிமிசைவந்தநின்
உதயந்தனக்குமுன் றெளிர்ந்திடுமருண
உதயமென்ன வுதித்தவனென்னவுஞ்
சேலாயுலகினைச் செவ்விதிற்காத்தமால்

நூலோர்மகிழ்தரு நாலாயிரங்களாம்
அருமைசான்மறையெனும் பெருமைசானூல்கள்
தழங்குநீருலகினில் வழங்குதலின்றிக்
கிலமாய்க்கழிந்து கிடக்கவவைதமை
எப்போதையும்போ லிலங்குறச்செய்திட
முப்போதுஞ்சீர் முனிவரரேத்திடு
நாராயணனுறை நகரொனும்வீர
நாராயணபுர நண்ணிநலனுறூஉம்
நாதமுனிகளாம் போதமாநிதிக்கு
மூலகாரணமாய் ஞாலமீதிருந்த
கண்ணிநுண்சிறுத் தாம்பெனுங்கலைதனை
அண்ணித்திட்டமுன் ஞக்கியோனென்னவு
நந்தாநலந்தரு மைந்தாநெறிதனின்
முட்டொன்றில்லா நிட்டையனென்னவும்
அறிஞர்களாரண நெறிஞர்களுரைத்திடும்
மதுரகவிப்பெயர்ச் சதுரனைச்சாற்றுமெம்
பெருந்தகைதனையவன் றிருந்துறுமன்மையே
அடியுறையாக்கொண் டடிநிலையாக்கிய
புண்ணியகுருகா புரியுறைபுங்கவ
அண்ணியவாத்த வருட்சடகோபவென்
செடியார்வினைகளா மொடியாமலைகளை
நொடியார்பொழுதினி னுவனுநின்னருளெனும்
வச்சிரவேதியால் வகிர்ந்தொழித்தடியனேன்
உச்சிமீதுநின் னொளிர்ந்திடுந்திருக்கழல்
உபயமும்வைத்தெனை யோம்புதியெனவவ்
தபயம்புகுந்தன னக்கழல்களுக்கே. (கஉ)

வெண்பா.

கழலுந்தகைத்தாமிக்காயநிற்குங்காறும்
உழலுமென்னுள்ளம்முழலாதுன்ற—டொழுதுநிற்க
நன்குருகுசிந்தையராநல்லோர்களுடுஞ்சீர்த்
தென்குருகைமாறவருள்செய். (கக)

கட்டளைக்கலித்துறை.

அருளாக்கமு நல்லறவாக்கமுமரிலல்லதுதேர்
தெருளாக்கமுஞ்சிறிதேனுங்கொள்ளாதுதெறுமவித்தை
இருளாக்கங்கொண்டவிழிதகையாகியவென்னையுமோர்
பொருளாக்கியாட்கொண்டவன்குருகாபுரிப்புண்ணியனே

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புண்ணியப்புலவர்புகழ் மாறநிற்பொருவுவோர் பூதலந்த
ணிலுமில்லை - பொற்பரந்தாமத்து மில்லைநின்னிலை
நூல் புகன்றதோர்சாதனத்தை
நண்ணிப்படைத்ததல் லாமையாற்றென்குருகை நாதநீ
தானுமறியாய்-நானிலத்துன்போ லிருப்பவரிலாமை
யா னரருமறியார்கடன்சீர்
ஒண்மைக்குணங்கணின் னுழியன்றிவேறொருழி யொளிர்
தரக்காணுமையால் - உந்திபூத்தவனுமறி யானுதலா
லிந்த வுலகோர்களொளிவிசும்பிற்
பண்ணவர்கடம்மினும் வேறாய்விளங்கிடும் பான்மையோ
னென்றுநின்னைப் - பழமறைப்பொருளையை யந்திரி
பறக்கண்ட பருணிதர்பணிப்பர்மாதோ. (கூரு)

நிலைமண்டிலவாசிரியப்பா.

பணித்தடங்காப்புகழ்ப் பராங்குசப்பண்ணவ
மணித்தடமாளிகை மன்னும்வண்வீர
நாராயணபுர நண்ணிவாழ்வோன்மறைப்
போதமுன்னீரொனு நாதமுனிகளாம்
அடிகளுக்கடிநா ளவனியோர்க்காப்பான்
கோலமாவருமெதிர் காலவாரிய
விக்கிரகந்தனைப் பொக்கறவருளிய
கருணையாரகத்தமுக் காலமுமுணர்ந்தவ
தெருணிதியானவ தேசிகர்தேசிக
முப்புடைக்காய்க்குலை யெப்புடைதம்மினுந்
தாக்குற்றுதிர்தர மேக்குற்றெழீஇப்பெரு
வாளைமீன்பாய்தரு நாளிகேளத்தருத்

தோட்டமுங்கோட்டமுஞ் சுற்றுறும்பழனமும்
முட்புறக்கனித்தொகை விட்புறக்கோடரங்
கோடிறக்குதிபலாக் கோடரப்படப்பையும்
அகந்தொறுமூட்டிடு மகினறும்புகையும்
மகந்தொறும்வேதியர் மறைமுறைவழாது
நீம்பல்லவிசொரிந் தோம்பிடுஞ்செந்தீக்
குண்டந்தோறும் விண்டெழுந்தூமமுங்
கண்ணுடையாலையிற் கண்ணுடைத்திழிந்த
கன்னற்சாற்றினைக் கன்னலுங்குளமுமா
அடுதருஞ்சாலையி லிடுபெருந்தீயிடை
எழுதந்தெழுதந் துழிதருபுகையும்
மங்குலெங்கணு மங்குலின்மொய்த்தலாற்
கண்டுதஞ்சிறகளை விண்டிடவிரித்துச்
சிகாவளமகவிடு முகாவளப்பொழில்களுந்
திக்குந்திகந்துமுஞ் செலீஇமணங்கமழ்தரும்
இக்குறுநறுமலர் மொய்க்குநந்தனமும்
மேற்பான்முதலிய நாற்பாற்பாங்கருஞ்
சூழ்தருங்குருகையில் வாழ்தருந்தலைவ
கணக்கறநிகழ்ந்திடுங் காலதத்துவமெலாம்
உணக்குறுபவப்பிணி யொழித்தெனைக்காத்திடல்
வேண்டும்வேண்டும் வேண்டுமென்றேத்தி
உலகினில்வாழ்தரு மலகிலாவுயிர்கட்
கொருதாயாகி யரிதாவளர்த்திடும்
பொங்குறுகொங்குறை பங்கயமாமலர்
வீட்டில்வாழெம்பெரு மாட்டிதனக்கும்
இயங்கியனிலையிய லெனுமிருவுருக்களில்
வயங்கெழுமாயையின் மயங்குபுதிரிதரும்
ஆருயிர்தமக்கெலா மோருயிராயவை
அறியாநன்மைக ளமைத்தோர்பிறப்பிற்
குறியாநோக்கினன் னெறியரோடிணக்கித்
தூரவனருளையுங் கொளச்செய்தவற்றின்

கருமாறுடைக்குமெம் பெருமான்றனக்கும்
பூமிப்பிராட்டியின் பொற்கலைதன்னால்
நேமிப்பிரான்றிரு நெஞ்சகமகிழ்தரப்
பூத்தொடைபாத்தொடை புனைந்திடவந்த
மேதைநாயகியெனுங் கோதைநாயகிக்குங்
காளமாமுகிலெனக் கருணைபொழிகுண
வாளனாகியமண வாளமாமுனிக்கும்
மருட்படலத்தான் மறைந்திருப்பவர்தமைத்
தெருட்படத்திருத்தித் திருநாடுறச்செயத்
திருவநந்தாழ்வான் றிருவவதாரமா
வந்தவருட்கட லெந்தையெதிகட்
பெருமானெனுமெம் பெருமானார்க்கும்
மங்கையர்கொங்குறு கொங்கையிளம்பிறை
நுதலாழ்மாந்தரை நோக்கவந்தருளிய
முதலாழ்வார்களா மூவர்கடமக்கும்
எனக்கம்மனைபிதா விறைவன்றெய்வமா
நினக்குநெஞ்சக நெகிழ்தரூஉம்வணமெலாஞ்
சொன்முறையெடுத்துப் பன்முறைபகர்ந்தனன்
கொடியேனாகிய வடியேனுள்ளக்
குறைகளையெடுத்துறக் கூறிமிக்கிரந்து
முறையிடத்தக்கவர் முறைமையினோக்குறின்
நுமக்குமேலாயவ ரமைக்குமெவ்வுலகினும்
இலரிலரிலரொனு மிதுசத்தியநீ
காகினுமலதுகா வாதுகைவிட்டு
நீக்கினுநின்பர நின்பரமென்றுநின்
சரணந்தன்னிற் சரணமடைந்தனன்
பொக்கறநன்கெணித் தக்கதுசெய்தியால்
அரனாகியவச் சரணாகதிப்போர்
அறத்துறையறிந்த வறத்துருவோயே. (நடசு)

வெண்பா.

அறமுமறத்தாறடைந்தோரொழுக்கத்
திறமும்வளர்தென்குருகைச்செம்மால்—மறமே
பெருத்துதிக்குமாயைதனைப்பேர்த்துநன்ஞானம்
இருத்துதியென்னெஞ்சத்திடை. (௫௭)

கட்டளைக்கலித்துறை.

இடையாட்டங்கொங்கையிணையாட்டம்பொற்சிறையேந்தெகின
நடையாட்டங்காட்டுநாரியர்போகநரலைதனிற்
குடையாட்டநீக்கிக்குருகைமன்னாநின்குணக்கடலிற்
குடையாட்டமென்னுளங்கொள்ளத்திருவுளங்கொண்டருளே.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அருளுருவென்கோவமுதுருவென்கோ
வறுசுவைபவியுருவென்கோ
தெருளுருவென்கோவாழைமாவருக்கைத்
தீஞ்சுவைக்கனியுருவென்கோ
பொருளுறும்பானெய்த்தேனயிர்கண்டாம்
பொருள்களினுருவென்கோவவித்தை
இருள்வலித்தவிரொண்மதிக்கதிரென்கோ
வெழிற்குருகூரிறைவனையே. (௫௯)

நிலைமண்டிலவாசிரியப்பா.

இறைமைநிலைதனக் கின்றியமையா
முறைமைசாலிலக்கண முற்றவுமுடையோன்
நறைநிறைநறவ நளினக்கிழத்தியும்
பொறைநிறைபுந்திப் பூதலக்கிழத்தியும்
நிறையிறைநீங்கா நீளைகிழத்தியும்
அறைவலமிடமுற வகட்டில்வீற்றிருப்போன்
மாவுறைவெண்டா மரைமலர்க்கிழத்தியை
நாவுழைவைத்திடு நான்முகக்கடவுளும்
பூவுறையாகிப் பொலிதருமைந்தருக்
காவுழைவைகுறுங் கடவுளர்கூட்டமுந்
தாவருந்தெய்வத் தாபதரீட்டமும்

மூவரும்பிரம முனிவர்கோட்டமும்
பணிந்துவழங்குறூஉம் பாத்தொடைபூத்தொடை
அணிந்தழகலர்ந்திடு மம்புயக்கழலினேன்
ஆரணமுடிமிசை யமர்ந்தருணாரணன்
காரணமிலாததோர் கருணையினியாவையுங்
கண்கூடாகக் கண்டவழுபவின்
றண்கூடல்ரி தவழ்தருந்தண்டலை
நிறையுங்குருகூ ருறையும்பராங்குச
மூலமென்றடிநா ளோலமிட்டழைத்த
ஆனைக்கோவிட ரகற்றியவரிந்தமன்
சேனைக்கோவெனச் செப்புறுஞ்செம்மல்
சேடசயநனுஞ் சேடாசநன்மறைத்
தோத்திரவாணியன் வேத்திரபாணியன்
சூத்திரவதியிரு நேத்திரமணியனன்
வழுக்கிலாதநல் லொழுக்குடையரவோர்
சடங்கெனுமோர்வினை தொடங்குறுமெல்வையில்
இடைநேர்வனவா மிடையூறிரிந்திட
மொழிமனமுடலால் வழிபடுமண்ணல்
தோற்றமாஞான சூரியவாரிய
ஆற்றலசான்றநல் லருட்கடலானவ
தொக்கவென்றுளெலாந்தொடர்வினைத்தொடர்பால்
துக்கவெம்பரம்பரை துய்த்தனன்றுய்த்தனன்
எடுத்துக்கலையுரை யெல்லாப்பிறவியும்
எடுத்துச்சாலவு மெய்த்தனனெய்த்தனன்
வெய்யபிறவிகள் வேண்டேன்வேண்டேன்
ஐயபவப்பிணிக் காற்றேனாற்றேன்
முடிவில்பல்வகையாங் கொடியபிறவிகள்
எதிர்தருமோவென வெண்ணினெனுள்ளந்
துண்ணென்றுட்கிச் சோர்கின்றது
விண்ணென்றதிர்ந்து விதிர்விதிர்க்கின்றது
சுளிவருபிறவியிற் சுழன்றுதிரியுமென்

எளிவருநிலைதனை யெண்ணியிரங்கிநின்
பெருகருள்விழியினு லரிலறநோக்கியென்
மூவகைவினைகளு மோவிடச்செய்தெனைச்
சுத்தனுக்கியென் சூழலிற்பெறவொணு
முத்தவிலக்கண முற்றுமுண்டாக்கிச்
சிந்தாகுலமிலா வந்தாமத்தினில்
நித்தியர்குழுவிடை வைத்திடநினைதியேற்
பகட்டுறுமாயை புகட்டுறுமவிஞ்சையான்
மருண்மதிமாற்றிநின் மனைபுனைகழலினெற்
கருண்மதியழிவில்பே ரன்பெனுந்திருவே. (சo)

---

வழுதிநாட்டிற்குருகாபுரியில்வந்த
வள்ளலெங்கள்பராங்குசமாமுனிவனுக்கோர்
வழுவினுன்மணிமாலையென்னும்வாடா
மாற்றமாமாலையொன்றுவனைந்தணிந்தான்
தழுவியசீரெதிராசதாசனென்னுந்
தாசியநாமமுந்தாசர்தாசனுகி
எழுமையுமேமாப்புடையபள்ளிகொண்டா
னெனுமியற்பேரும்படைத்தவியல்வல்லோனே.

---

நம்மாழ்வார் நான்மணிமாலை

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## ஸ்ரீஆண்டாள் திருவடிகளே சரணம்.

# கோதைநாயகித்தாயார் மாலை.

---

### காப்பு.

விதுவைநிகராநகத்தாள் வேயர்குலதீபப்
புதுவைநகர்க்கோதை புனைய—முதுதமிழ்ச்சொற
பாமாலைபன்னப் பணித்தருள்வன்றணவகுளப்
பூமாலைமாறன் புரிந்து.

### நூல்.

நிலமங்கைதன்கலையாணிலமுய்யநினைத்துவந்த
குலமங்கையர்க்கரசாகியகோதைகுணைகழலிற்
பலமங்கலக்கவிபாடிப்புனைபவர்பார்மிசைநற்
பலமங்கைபெற்றுமறுமையிற்சேர்வர்பராங்கதியே. (௧)

செல்லுங்கலியினிற்றொண்ணூற்றின்மேனளச்செய்யசமை
புல்லுங்கடகக்கணைநாளில்வில்லிபுத்தூரடிகள்
கல்லுந்திருத்துளவத்தடியாங்கலசக்கடலிற்
சொல்லுஞ்சுதாகரன்போற்றோன்றினாளைத்தொழுநெஞ்சே.

மட்டார்குழன்மடவார்மையல்வாஞ்சைமகோததியிற்
பட்டாழுநம்மைப்புரப்பான்றிருப்பாற்பரவைதனை
விட்டாளைவிண்டுசித்தன்விளையார்விருந்தாவனத்தை
நட்டாளைநம்புதிநெஞ்சேநமக்கோர்நலிவில்லையே. (௩)

தூண்டாமணிவிளக்கைத்துளங்காதசுடர்க்கொடியை
ஆண்டாளைப்புத்தூரவதரித்தாளையணிமணிப்பூண்
பூண்டாளைப்போற்றிற்புராணவினைப்பயன்போந்துநம்மைத்
தீண்டாமற்செய்தருள்வாடிண்ணமாமிதுதேர்திநெஞ்சே.

சாதித்தருமஞ்சதுமறைத்தன்மந்தழைக்குமநு
நீதித்தருமநிகரிலதாம்பிரபத்திநிட்டை
ஆதித்தருமநிலைக்கவடியாகவிருடீர்
ஆதித்தனில்வந்தவாண்டாள்சரணேயரணமக்கே. (௫)

பூதத்தலைவன்புவியோர்ப்புரக்கும்பொருளுரைக்கும்
வேதத்தலைவன்விரிஞ்சித்தலைவன்விண்ணோர்விரும்பும்
பாதத்தலைவன்பணியாலுயிர்க்குப்பரிந்துவந்த
போதத்தலைவியெனுங்கோதைபாதத்தைப்போற்றுநெஞ்சே.

ஆவிசெங்கஞ்சவணிவிளக்கேந்தவலர்ந்துநிற்குங்
காவிகணேக்கக்களிவண்டுபாடக்கலாபமஞ்ஞை
மேவிநடிக்கநம்விண்டுசித்தன்வனவேரில்வந்த
தேவியையேத்துதிநெஞ்சேநந்தீவினைதீர்ந்திடுமே. (எ)

அன்னையிற்பைந்துளவந்தேனளிக்கவருகுநிற்கும்
புன்னைமுதலபொழிமலர்த்தொட்டிலிற்பூங்குயில்கள்
தன்னைகளாமெனத்தாலாட்டக்கண்வளர்தாய்தனைநம்
முன்னைவினையறநெஞ்சேவழுத்தமுயலுதியே. (அ)

வெள்ளைச்சிறகர்விரித்தன்னநின்றுவெயின்மறைக்கக்
கிள்ளைக்குழாங்கண்மழலைக்கிளவிகிளத்திநிற்கக்,
கொள்ளைப்பசுந்தென்றல்வீசவிருந்தநங்கோதையன்னைப்
பிள்ளைப்பருவப்பெருமைபிரமற்கும்பேசரிதே. (கூ)

செந்தாமரைத்திருவோதிருப்பாற்கடற்றெள்ளமுதோ
நந்தாதொளிர்விளக்கோசெய்யஞானத்தினற்கொழுந்தோ
சிந்தாமணியோவெனவிண்டுசித்தன்றினமுமகிழ்
கொந்தார்குழற்கோதையைவாழ்த்திவாழென்றன்கோழைநெஞ்சே.

கற்றவர்கண்மணியோவெண்கமலக்கலைமகளோ
உற்றிடுமெனபார்க்குயிரோவுயிர்த்துணையோவுலகைப்
பெற்றுவளர்ப்பவளோவென்றுபட்டர்பிரான்புகழ்ந்த
பொற்றொடிக்கோதைதன்பூங்கழலென்றும்புகனமக்கே. ()

பூதாதியானபொருட்கும்புவனக்கும்பொங்குயிர்க்கும்
ஓகாதியானவொருபொருளோவுயிரைப்புரக்கும்
வேதாகிநூலுருவோவென்றுவிண்டுசித்தன்வியந்த
மாதாதிகழ்புகழ்க்கோதையைநெஞ்சேவழுத்துதியே. ()

பட்டர்பிரான்வடபத்திரப்பாயற்பரனருளாற்
சிட்டர்தொழுந்தன்றிருமாளிகைதனிற்சேர்த்துநிதம்

இட்டமுடனேவுளர்க்கவளர்ந்தவளேயியற்கை
மட்டவிழ்கோதையன்றாய்நின்னையேத்தவரமருளே. (௧௩)

பாலோகரும்போபழமோசெந்தேனோபரம்பொருள்சேர்
நூலோவதன்பயனோவிவ்வுருவினைகோற்றதென்று
மாலோடும்பார்ப்பனமங்கையர்பேசிமகிழுநங்கள்
சேலோடியகட்டிருக்கோதைபாதஞ்சேமவைப்பே. ()

தெள்ளமுதத்திரட்டோபெரியாழ்வார்தினஞ்செய்தவ
வெள்ளமுருக்கொண்டதோவென்றுவேதியர்மெல்லிழையார்
மெள்ளவெடுத்துக்கொண்டாடுநங்கோதை விரைமலர்த்தாள்
உள்ளமதனில்வைப்பாருண்மையாகவுயர்தவரே. (௧௫)

மாசறுநீதிகருணைதிரண்டவடிவமென்றும்
ஆசறுஞானியரன்பர்களந்தணராவியென்றும்
வாசவனாதியர்வன்செல்வமென்றுமதிபடைத்தோர்
பேசுபெரும்புகழ்க்கோதையடியென்றும்பேணென்னெஞ்சே.

அண்டமனைத்தினுமுள்ளவழகையணைத்தெடுத்துப்
புண்டரிகத்தவனோருருவாக்கியிப்பூவிடுத்தான்
கண்டிர்நமர்காளெனக்காரிகையார்களித்துரைக்கும்
ஒண்டொடிக்கோதையையுன்னுவர்முத்திக்குரியவரே. ()

உலகிருணீக்குஞ்சுடர்விளக்கென்றுமுணர்வுதரும்
பலகலைமாதின்படிவமிதென்றும்பரம்பரன்றன்
இலக்குமியின்வடிவீதென்றுமன்பர்களெண்ணநின்ற
அலகில்புகழுடையாண்டாளையேத்துவரந்தணரே. (௧௮)

பின்னைகொல்பூமிப்பிராட்டிகொலெம்மான் பிரிமையெனும்
அன்னைகொலோவென்றயிர்க்கும்படியிவ்வவனியில்வந்
தென்னையடிமைக்கிசைவித்தகோதையிறைவிதன்றாண்
முன்னைவினையறநெஞ்சேமுதமொடுமுன்னுதியே. (௧௯)

தாழ்வாருடலுயிரொன்போர்நன்றாகத்தமையுணர்ந்தோர்
ஆழ்வார்கள்பட்டர்பிரானிலுமொண்மையறிவின்செல்வ
வாழ்வாந்தவண்மைத்திருக்கோதைநாயகிமாமலர்த்தாள்
வீழ்வார்கண்மாயைவிறலினைவென்றிடும்வித்தகரே. (௨0)

எந்தையுணர்த்தித்தனைக்காட்டக்கண்டவிதயத்தராங்
தந்தையர்போலன்றித்தானேசென்றன்னோன்றனையெழுப்பிச்
சிந்தைக்குறையைத்தெரிவித்தசெல்வியைச்சிந்தைவைப்போர்
நிந்தைப்பிறவிநெடுங்கடனீந்துவர்நிச்சயமே. (உக)

ஆடவராடவரைக்காமுறுதலினங்கனைமார்
ஆடவரைக்காமுறுதலியற்கையைந்தாண்டுதொட்டுப்
பாடவத்தோடெம்பரன்பண்பளக்காபடிந்துருகி
நீடவசம்பெறுநின்மலைபாதநினைதிநெஞ்சே. (உஉ)

கோனாபட்டர்பிரான்மகளாய்வந்தகொள்கையினுந்
தானாதன்மையினானும்பெருகித்தழைததுநிற்கும்
ஆனாதஞானமுமன்பும்வடிவிலமைந்தநங்கள்
தேனார்குழலியைநாடோறுஞ்சிந்தனைசெய்திநெஞ்சே. ()

மானுடர்வாழ்வைமறுத்துவடபெருங்கோயில்வளர்
கோனுடன்கூடக்குறித்தநங்கோதைகுரைகழலிற்
கானுடைமாமலரிட்டுவணங்குங்கருத்தினரே
வானுடையார்நிதம்வந்துவணங்கிடும்வண்மையரே. (உச)

கண்டுமொழியர்க்கலந்ததுகண்ணன்முன்கண்ணுமவர்க்
கொண்டவன்சென்றசுவடுநதியுந்தலவரையுங்
கண்டுதரிசிக்கக்கருதியகோதைகழலிணையிற்
றொண்டுசெய்வோரைத்துதிப்பார்கணிததியசூரிகளே. ()

சாற்றுஞ்சனகன்றனையைநப்பின்னைதவர்விடையால்
ஆற்றும்படிக்கோரவகைபெற்றுய்ந்தனரங்கன்றன்னைத்
தேற்றும்விரகென்னெனத்தேடியசெல்விசேவடியைப்
போற்றும்புனிதரடிநிலையென்முடிப்பூடணமே. (உசு)

குரவைபிணைத்தபின்கோவிந்தனீங்கிடக்கோவியர்கள்
அரவிலவனடித்தாங்குநடித்தாங்கமைவினவி
விரவியநுகரித்துத்தேறவெண்ணியவித்தகிதாள்
பரவுமவரெனையெம்மையுங்காக்கும்பரமர்களே. (உஎ)

இடமுடைப்புத்தூரிடைப்பாடிபெண்களிடைச்சியர்கள்
வடபெருங்கோயில்வளநந்தன்வீடதில்வாழுமவன்

குடமுடைக்கோவிந்தனென்றெண்ணுங்கோதையைக்கூர்ந்துநெஞ்சிற்
றிடமுடன்வைப்பவர்தேவர்கள்யாரினுஞ்சீரியரோ. (௨அ)

கூறியவண்ணந்திருவுள்ளம்பாடிகுடிபுகுந்து
தேறியபாவனையாலநுகாரஞ்சிறந்துமுற்றி
நாறியவாய்ச்சிநடைநொடியாதியநன்குறப்பெற்
றூறியகோதையடியேசரணமடைந்தனனே. (௨௯)

மார்கழித்திங்களின்மாயவன்றன்னைமணந்தொழுகும்
நார்கழியாவதிகாரிநெறிபலனற்சொருபச்
சீர்கழியாதுசுருக்கினிற்செப்பியசிற்பனைதன்
பேர்கழியாவன்பிற்பேசுதனுவிற்பெறும்பயனே. (௩0)

வையத்துவாழ்வினின்மேலதிகாரிகள்வாய்த்தவண்ணஞ்
செய்யத்தகுந்தகாதவிவையென்றுசெப்பியதைக்
கையத்தமென்னக்கழறியகோதைகழலிணையை
உய்யத்துதிப்போரடியனையாட்கொளுமுத்தமரே. (௩௧)

ஓங்கியுலகினிலவ்வதிகாரிகளுக்கமுற்றுத்
தீங்கின்றிநோன்பினைநோற்கவநுமதிசெய்தவர்க்குப்
பாங்கில்வரும்பயன்பன்னியதைச்சொலும்பண்ணவிதன்
பூங்கழல்பூசிப்பவரொன்னாளும்புரப்பவரே. (௩௨)

ஆழியிலாய்ச்சியர்பான்மழைத்தேவனடைந்தடியேன்
வாழிசெயத்தக்கசொன்மினெனவிவ்விவ் வண்ணஞ்செய்தி
பாழிமொய்ம்போயென்றவர்கள்பணித்தபரிசைச்சொன்ன
வீழியிதழிவிளைமலர்ப்பாதம்விரும்புநெஞ்சே. (௩௩)

மாயனிற்கோவியொருத்திமறுத்திடமற்றொருத்தி
மாயனன்றுமசங்கீர்த்தனஞ்செய்யமதிக்கினங்கள்
தீயபவந்தீத்துகிலாகுமென்றதைச்செப்பியநம்
வேயர்குலக்கொழுந்தின்பெயர்சொல்லவினையறுமே. ()

புள்ளுமுதலெல்வளைமுன்னர்ப்போந்தபொதுவியர்கள்
எள்ளலில்கண்ணனைக்கூடிக்களிக்கமற்றேனையரை
நள்ளியெழுப்பியவாற்றையெமக்குநயந்துரைத்த
தெள்ளியகோதைதன்சீரேயெமக்குச்செவியுணவே. (௩௫)

நாயகனென்பதிற்கோவியர்நந்தனளிர்மனையும்
வாயிலுங்காக்குநர்க்கூய்நீவிர்வந்துமணிக்கதவ
நேயமொடுதிறவீரென்றிரந்ததைநேர்ந்துரைத்த
தூயவளைத்தொழுவார்க்குப்பிறவித்துயரிலையே. (௩௯)

அம்பரத்தேநந்தகோபாலனையுமசோதையையும்
எம்பெருமானையுமூத்தபிரானையுமிப்பர்பெண்கள்
அம்பரெழுப்பியவாற்றையறைந்தவருட்கடலாம்
எம்பெருமாட்டிசரணேசரணென்றுமென்றனக்கே. (௩௭)

உந்தினிற்கோவியர்நப்பின்னைதன்னையுகந்தெழுப்பிக்
கந்தக்குழலிநின்கைவளையேங்கக்கடைதிறவாய்
வந்தெனக்கூறியவாற்றைநமக்குவகுத்துரைத்த
பைந்தொடிக்கோதைபதம்பணிவார்வினைப்பற்றறுமே. ( )

குத்துவிற்கண்ணநின்வாய்திறவாயென்றுங்கோலப்பின்னாய்
ஒத்துநின்றாதற்றுயிலெழவொட்டாயொருவகில்லாய்
தத்துவமன்றுதகவென்றுகோவியர்சாற்றியதை
நத்துநமக்குரைகோதைபொற்றாணங்கணற்றுணையே. ( )

முப்பத்துமூவரின்முல்லையர்பெண்கண்முகுந்தனையும்
நப்பின்னையையுமெழுப்பிநங்காய்நின்றனுதனையும்
வெப்பியவெம்மையுநீராட்டுதியென்றுவேண்டியதைச்
செப்பியகோதைதிருவடியேநிதஞ்சிந்திநெஞ்சே. (௪0)

ஏற்றகலத்திலிடைச்சியர்கண்ணனிருங்குணத்திற்
றேற்றவர்தோற்றினசொல்லியவனைத்துயிலுணர்த்தும்
மாற்றநமக்குமகிழ்ந்துரைகோதைமலரடியைத்
தேற்றமுடன்சிந்தித்தேத்துநெஞ்சேவினைதீர்ந்திடுமே. ( )

அங்கணிற்கண்ணனையாய்ச்சியரண்மியமலநின்றன்
பங்கயககண்ணிணைகொண்டுபரிவொடுபார்த்தியெனின்
எங்கடஞ்சாபமிழியுமெனலையிசைந்துரைத்த
திங்கள்வதனத்திருக்கோதைதாணஞ்சிரக்கணியே. (௪௨)

மாரியிலாய்ச்சியர்மாயநின்பள்ளிமனைவிடுத்துச்
சீரியசிங்காதனத்திருந்தெம்முடைச்செய்திகளை

ஆரியவாராய்ந்தருளென்றதைநமக்காய்ந்துரைத்த
காரியல்கோதைகழலிணையென்மனக்கண்ணனவே. (சங)

அன்றிலடைந்தகருமம்பொச்சாந்தங்தவாய்ச்சியர்கள்
நன்றுநங்கண்ணனடைச்செவ்விக்காப்புநவிற்றியதை
ஒன்றவுரைத்ததிருக்கோதைநாயகியொண்மலர்த்தாண்
மன்றநெஞ்சேநம்பவப்பிணிமாற்றிடுமாமருந்தே. (சச)

ஒருத்தியிற்கண்ணனுரைத்திரும்முள்ளத் துவந்தவென்ன
அருத்தியினய்ச்சியர்சொற்றவையாவையுமன்புடனே
திருத்தமுறச்சொல்லியகோதைநாயகிசேவடிநம்
பருத்தவஞ்ஞானவிருள்பாற்றுஞானப்பகலவனே. (சரு)

மாலேமணியிற்றங்கோன்புக்குவேண்டுவனபொருளைச்
சேலேய்கண்ணுயச்சிறுமியர்தேவகிதன்சிறுவன்
பாலேயிரந்ததைப்பன்னியகோதைச்செம்பங்கயநேர்
வேலேய்விழியருணெஞ்சேநம்பேற்றைவிளைவிக்குமே. ()

கூடாரைவெல்லினிற்கூறியகோவியர்கோவிந்தன்பால்
பீடார்ந்திடப்பெறத்தக்கநற்பெட்புடைப்பேறுகளை
நாடாவிரந்ததைநல்கியகோதைநயப்புகழைப்
பாடாதநாவினர்பல்பிறப்பும்பவம்பண்ணுவரே. (சஎ)

கறவையிற்கோவியர்கண்ணனைக்கண்டுகழற்றவொண்ணு
உறவினைக்கூறித்தம்முத்தேசியத்தையுரைத்ததைநம்
பிறவியைப்போர்த்திடப்பேசியகோதைப்பிராட்டிநற்சீர்
மறவியையின்றிமனத்துவைப்பார்மிக்கமாட்சியரே. (சஅ)

சிற்றமதிலாய்ச்சிறுமியர்கண்ணனைச்சேவித்துத்தாம்
பெற்றிடும்பேறுஞ்சுவையுமப்பேறுபெறும்பரிசும்
மற்றையகாமங்கண்மாற்றலும்பேசிமகிழ்ந்ததனைச்
சொற்றிடுங்கோதைதுணையடியென்றுந்துணைநமக்கே. ()

வங்கத்தினிற்றிருப்பாவைமுழுதும்வழாதுகற்றோர்
செங்கட்டிருவதனத்திருமாலருள்சேர்ந்தெவணுந்
துங்கச்சுகந்துன்னுவரென்றகோதைசுடர்க்கமலப்
புங்கக்கழனம்பவக்கடனீந்தும்புணைநெஞ்சமே. (ரு0)

தையொருதிங்கடலையாக்கருப்புவிற்றன்கடையாச்
செய்யொருபத்திற்றிருமாலுடன்றனைச்சேர்க்கும்வண்ணங்
கையொருவாதகணைமலர்க்காமனைக்கைதொழுத
மையொருவாக்கண்மடமல்லிநாடியைவாழ்த்தென்னெஞ்சே.

சிற்றிடையாயச்சிறுமியர்கண்ணவெஞ்சிற்றிலுன
சிற்றடியாற்சிதையேலென்றிரந்ததைத்தெள்ளியர்கள்
கற்றிடநாமமென்றோதியபத்திற்கனிந்துரைத்த
பொற்றொடிக்கோதைபுகழ்நெஞ்சமேசெவிப்போனகமே.

அடுத்துறுபத்திலறலாடுமாய்ச்சியராடைகளை
எடுத்துக்குருந்திடையேறிநங்கண்ணனிருக்கவவர்
கொடுத்தியெங்கூறையெனக்கூறியதைமுற்கோழியென்று
தொடுத்துரைகோதையைநெஞ்சேநினைந்துயரறவே. (

கோவியர்கோவிந்தனைக்கூடக்கூடவிழைத்ததனைத்
தேவியலுந்தெள்ளியார்பலர்கைதொழுந்தேவனெனும்
பாவினம்பத்திற்பகர்ந்தநங்கோதைபணிமலர்த்தாள்
நாவியலாற்றுதிப்பார்நண்ணுவார்முத்திநன்னகரே. (ரு௪

மன்னுபெரும்புகழ்ப்பத்திற்குருக்கத்திவண்செருந்தி
புன்னைப்பொதும்பினில்வாழ்குயிலேயெங்கள்பூவைவண்ணன்
றன்னைவரக்கூவுதியென்றுசாற்றுந்தமிழ்த்தலைவி
அன்னைநங்கோதையடிகளென்சென்னிக்கணிமுடியே. ()

தூயர்குலமறைச்சொற்படித்தோழிக்குச்சொப்பனத்தில்
ஆயர்குலமுதல்வேட்டதைவாரணத்தாய்ந்துரைத்த
வேயர்குலக்கொழுந்தானநங்கோதையைவேண்டுநெஞ்சே
தீயர்குலத்தையிரீஇத்தெள்ளியரொடுஞ்சேர்த்துவளே. ()

கருப்பூரமென்றெடுத்தோதும்பதிகத்திற்நார்க்களிற்றின்
மருப்பூறுசெய்தவன்செவ்வாயின்வாசமும்வண்சுவையும்
விருப்பூர்ந்துவெண்சங்கைக்கேட்டநங்கோதைவிளைவிரிக்குந்
திருப்பூங்கழனினைநெஞ்சேநன்முத்தித்திருப்பெறவே. ()

விண்ணீலப்பத்தினம்வேங்கடவாணற்கென்வேட்கையெல்லாம்
ஒண்மூரலோடுமுறுஞ்செவ்விநோக்கியுரைத்திரொன்று

கொண்மூக்குழாந்தமைத்தூதுவிடுத்தநங் கோதையந்தாள்
கண்மூடியோர்கணஞ்சிந்திநெஞ்சேநங்கசடறுமே. (ருஅ)

அத்தன்றிருமாலிருஞ்சோலைவெற்பனவயவங்கட்
கொத்தபொருள்களுடற்றநங்கோதையுடன்மெலிந்து
சித்தங்கரைஇச்சிந்துரமென்றெடுத்துத்தெரித்தசெய்யுள்
பத்தும்படிக்கவல்லார்படர்வார்நற்பரகதிக்கே. (ருகூ)

தெரித்தபருவம்பருவப்பொருள்கள்செகுக்கவினித்
தரித்துயிர்வாழ்தலரிதெந்தையாற்கண்ணன்றருளடைதல்
உரித்தெனவுட்கொண்டுகார்க்கோடலென்றெடுத்தோதும்பத்தும்
பரித்தநற்சிந்தையர்பாரோரைக்காக்கின்றபாவனரே. (கூ0)

அரங்கத்தமலனருளாமையாற்றுனடைந்தநிலை
இரங்கத்தன்றாய்க்குமிகுளைக்குஞ்சுட்டுமின்னுமையைப்பாற்
றரங்கத்தைவிட்ட வடாமுகக்கும்பத்திற்சாற்றியதை
இரங்குற்றுளம்பதிப்பாரின்பவீட்டினையெய்துவரே. (கூக)

மற்றிருந்தீரென்னும்பத்தினிற்கோதைமதுரைமுதன்
மற்றிருந்தீரிருதோட்கண்ணன்வாழும்வளம்பதிகட்
குற்றிருந்தீரென்னையுய்த்திடுமென்றதையுள்ளமதிற்
பெற்றிருந்திடுபடுவோரெமக்குப்பிராப்பியரே. (கூஉ)

கண்ணனிற்கோதையெங்காரிகையீரென்னைக்காக்கநுமக்
கெண்ணமிருக்கினவனுடையாதியவேங்கிவந்தென்
கண்ணவிடரைக்களைஇக்காமினென்றதைக்கற்றுணர்ந்தோர்
திண்ணநமரைத்திருத்திப்பணிகொள்ளுந்தேசிகரே. (கூங)

கருந்தாம்புதரற்கண்டீரோவென்கின்றகடாவினுக்கு
விருந்தாவனத்திற்கண்டோமென்றுசொல்லும்விடையிறுத்து
மருந்தாமெனப்பட்டிப்பத்திற்சொல்கோதைவண்மாற்றம்வல்லார்
திருந்தாவெனைத்திருத்திப்பணிகொண்டிடுஞ்சீரியரே. ()

பூமாலைவேய்ந்தெம்பிராற்களித்தாளைப்பொய்யாமொழியைப்
பாமாலையாகப்பணித்தாளைப்பார்த்தன்றன்பாகனுழி
மாமாலையேற்றுமணந்தாளைவாழ்த்துதியேன்மனனே
தோமாலைத்தாயபிறவித்துயரந்தொலைந்திடுமே. (கூரு)

சுருப்பார்குழலியைச்சுந்தரத்தோகையைத்தூயவளைத்
திருப்பாவைபாடியசெல்வியைத்தேவியைச்சேயிழையை
விருப்பாகவேண்டுதிநெஞ்சேயினியோர்விளங்கிழையாள்
கருப்பாசயம்புகவொட்டாமற்காப்பள்கடைக்கணித்தே.

கருக்கோதைநீக்கக்கருதுதியேலென்றன்காதனெஞ்சே
யிருக்கோதையென்றுயிரியாப்புத்தூர்வந்தவேந்திழையாந்
திருக்கோதைநாயகிதாள்களிற்செய்யுட்டெரியலொடு
மருக்கோதைவேய்ந்துவழிபட்டுநின்றுவழுத்துதியே. ()

தீமகள்வேண்டிடச்சித்ரவிசித்திரச்சேலைதந்த
பாமகள்மாமற்குப்பல்லாண்டுபாடியபட்டர்பிரான்
மாமகளைப்புவியோர்தமைவாழ்விக்கவந்தவருட்
கோமகளைத்தொழுவார்க்கொருநாளுங்குறைவில்லையே. ()

முத்தத்துவநிலைமும்மறையின்கண்முடிந்தபொருள்
அத்தத்திலங்காமலகம்பழுத்தவருங்கனியிற்
சித்தத்திலங்கச்சிறியேனுணருந்தெருட்சிதந்தாள்
முத்தத்தொளிர்நகையாய்கோதைநாயகிமூன்னவியே. ()

சுருதிமுடிவினிற்சொல்லும்பரம்பொருடோய்சுகத்த
பருதியநந்தத்தொளிரும்பரமபதந்தருவான்
கருதியிச்காயங்கழல்கின்றகாலத்தென்கண்களிக்க
வருதிநின்சேவைதரக்கோதைநாயகிவானவியே. (எ0)

உறிச்சொண்டவெண்ணெயுண்டோன்பண்டுபார்த்தற்குரைத்தருள்பின்
னெறிக்கொண்டநின்னடியார்க்கடியார்கணிகழொழுக்கக்
கிறிக்கொண்டொழுகக்கிருபைசெய்தந்தகன்கிட்டிடுங்காற்
குறிக்கொண்டுகோதையன்னையெனைக்காக்கக்குணித்தருளே.

ஒட்டகமானவுரிபோர்த்தவூன்மச்சைபுற்றவெற்புச்
சட்டகநாறுமலமூத்திரங்குடர்சான்றபுழுப்
பெட்டகமாம்பரந்தாங்கிநலிகின்றபேதைநின்றாள்
நட்டகம்வைத்துத்தொழக்கோதைநாயகிநல்குதியே. ()

கருப்படுமென்வினைக்காட்டைக்களைந்துகமலமலர்த்
திருப்படுநின்னடிப்பத்திமைச்செல்வந்திளைக்குமன்பர்

மருப்படுபாதம்வணங்கிவழிபடுவானென்சிந்தை
ஒருப்படுமாறருள்செய்கோதைநாயகியுத்தமியே. (எரு)

புண்ணியவில்லிபுத்தூர்வந்தபொன்னேபொலந்துகிரே
மண்ணியமாமணியேமுத்தமேநன்மரகதமே
திண்ணியநெஞ்சந்திருந்தியடியனின்சீர்நிதமும்
உண்ணியவண்ணமருள்கோதைநாயகியுத்துங்கையே. ()

விண்மணியென்னவிளங்கிவள்ளர்சீர்விரிவிபுலைப்
பெண்மணிபச்சைப்பெருமணிபேணும்பெரியருளக்
கண்மணிநங்கடிருக்கோதைநாயகிகற்பகமாம்
ஒண்மணித்தாளிலுயரன்பலர்பெய்வருத்தமரே. (எ௫)

அருளுருவேநல்லணியுருவேயறமாமுருவே
தெருளுருவேசின்மயவுருவாந்திருமந்த்ரமுதற்
பொருளுருவேபுண்ணியவுருக்கோதைப்பொலனுருவே
மருளுருவேய்ந்தவிம்மைந்தனுய்வண்ணமகிழ்ந்தருளே. ()

வனமாலைமாமணிமாலைவயங்குமணியுரத்த
கனமாலைக்காமித்துக்கள்ளவிழ்மாலைகவின்செயும்பா
வினமாலைசூடியும்பாடியுந்தந்தவிறைவியையென்
மனமாலைநீக்கத்தினமாலைவேய்ந்துவணங்குவனே. (எஎ)

கற்பகமேவியகாரிகையார்சிரங்கைகுவிக்குங்
கற்பகமேயென்னைக்கட்டிக்கவற்றுங்கனவிருளாங்
கற்பகமேதைகனத்தோங்கநின்னடிக்காமருசீர்
கற்பகமேவவருள்கோதைநாயகிக்காருணியே. (எஅ)

நெருங்கநிமிர்ந்துநிரந்தரநீங்காநிகளவினை
முருங்கவெனைமுற்றுமூடிமுருக்குமும்மோகவிருள்
ஒருங்ககநின்சேவடியொண்மலர்த்தேனையுவந்தெனுளப்
பிருங்கமுணச்செய்தருள்கோதைநாயகிப்பேரன்னையே. ()

தாநந்தருமந்தவனுசத்தியந்தத்துவமுணர்மெய்ஞ்
ஞாநந்தயைசற்றுமில்லாதநாயடியேற்கிரங்கிக்
கோநந்தன்மைந்தன்மகிழ்கோதைநாயகிநின்குணச்சீர்
ஆநந்தவாரியமைந்தாடுவானின்னருள்புரியே. (அ0)

சேனேடியோடிச்செவிகாறுநீண்டதிருக்கணியைப்
பானேடியோடிப்பழிக்குமதுரப்பணிமொழியைக்
கோனேடியோடுங்கொடியன்னவேயர்குலக்கொழுந்தை
மானேடியோடுமனத்தாளைவாழ்த்தென்மடநெஞ்சமே. ()

இடைச்சிநடையுமுடையுநொடியுமிச்சித்தருள்சிற்
றிடைச்சியையெங்குமிலங்குமிருங்குணத்தாளையன்ன
நடைச்சியைநாடுமவர்வினையீர்ந்திடுநல்லருளாம்
படைச்சியைவாழ்த்துமென்னுவென்னபாக்கியம்பண்ணியதே.

சுரிகுழற்கட்டுந்துவர்ந்தசெவ்வாயுஞ்சுடர்முகமும்
சுரிவளைக்கண்டமுந்தொல்லருளார்ந்ததுணைவிழியுஞ்
சரிவளைக்கையுமிடையுமுடையுந்தயங்குங்கஞ்சப்
பரிபுரத்தாளுமெனக்கென்றுமுன்னிற்கும்பான்மையவே.

வேதத்தலைவிநல்வேள்வித்தலைவிவிளங்குநுண்ணூற்
போதத்தலைவியிப்பூமித்தலைவிபொருவில்விண்ணும்
நாதத்தலைவிநன்ஞானத்தலைவிநகைமுகஞ்சேர்
கோதைத்தலைவிகுரைகழனங்கள்குலதனமே. (அச)

சீரார்கலுழனைக்கண்டையசென்றுதிருவரங்கத்
தாராவமுதைக்கொணர்கெனவவ்வாறவனிழைக்க
மாராயமோடம்மணவாளன்றன்னைமணந்துகந்த
பேரார்ந்தகோதையென்கண்ணுளம்விட்டென்றும்பேர்கிலளே

நாகாசனனைநயந்தேயரங்கநன்னாயகனோ
டேகாசனத்திலிருத்தியகோதையிறைவியென்றுஞ்
சோகாசனமுணுந்தொண்டனின்பாதச்சுகாநந்தமாம்
போகாசனமுண்டுபூரிக்கும்வண்ணம்புரிந்தருளே. (அசு)

இந்திரன்சென்றுமகட்பேசவெண்கணனோமஞ்செய்ய
மந்திரக்கோடிமணமாலைகொண்டுமகிழரங்க
மந்திரச்சுந்தரன்கைப்பற்றவுள்ளமகிழ்வதனை
சந்திரக்கோதைதளிரடியென்றைக்குஞ்சார்பெனக்கே. ()

இருக்கோலமிட்டுரைக்கும்போரங்கனிடவருகில்
உருக்கோலப்புள்ளிறைநீவலப்பாகத்துறைந்திருக்குந்

திருக்கோலந்தன்னைத்திருக்கோதைநாயகிசெவ்வனுள்ளத்
திருக்கோயில்வைத்தென்றும்பூசனைசிந்தனைசெய்குவனே.

கடிந்ததிற்செல்லுளங்கோதைகல்யாணகுணக்கடலிற்
படிந்துகுடைந்தாடியபின்னரென்னைப்படுத்தவினை
மடிந்ததுவாளாமயக்கித்துயக்கியமாயக்கங்குல்
விடிந்ததுதித்ததுமெய்ஞ்ஞானமாகியவிண்மணியே.(அகூ)

இங்கூழ்வினையினிடர்படுமேழையிதயச்செய்யிற்
றங்கூர்மியாங்களைகட்டன்புநீர்பெய்துசாரியற்கைக்
கொங்கூருங்குந்தளக்கோதைகல்யாணகுணகணமாம்
பைங்கூழ்வளர்ப்பனவனுகப்பாகும்பயன்பெறவே. (கூ0)

கடலேய்கட்காரிகைகாஞ்சனங்காசினிக்கண்ணசையாங்
கடலேயழுந்திக்கவலடியேற்குன்கழற்கண்ணன்பு
கடலேயச்செய்துதிருக்கோதைநாயகியாங்கருணைக்
கடலேபிறவிக்கடனீந்துமாறுகடைக்கணியே. (கூக)

பவநெறிநோக்கிப்படருமிப்பாரினர்பற்றிநிற்கும்
அவநெறிநீக்கியருளினருமையதாகுமுத்தத்
துவநெறிகாட்டித்தன்றொல்லடியாரைத்தொழுதுயுநற்
றவநெறிகாட்டியகோதைசரணேசரணெனக்கே. (கூஉ)

மங்கையர்கோன்முதலாழ்வார்களுளுமகிழ்மகளைச்
செங்கைமுக்கோல்கொண்டசீரெதிராசசிகாமணிதன்
தங்கையைநங்கண்ணன்றாரத்தையன்பர்தந்தாயைப்புத்தூர்
நங்கையைக்கோதையைநாடோறும்போற்றுவர்நல்லவரே.

ஆராதகாதனம்பாண்பெருமாளினணியரங்கத்
தாராவமுதனெடுமோரமுதாயணைந்துநிதம்
பேராச்சுகாநந்தப்பேரின்பவாரிபெருகவுஞ்
சீரார்ந்தகோதைதிருவடியென்னுட்டிகழ்ந்திடுமே. (கூச)

சிட்டர்கள்போற்றும்புதுவைநகர்வந்ததெள்ளமுதே
பட்டர்பிரான்செய்தவவுருவாகியபைங்கிளியே
துட்டர்சிகாமணியாகியவென்னைநின்றொண்டரடிக்
கிட்டர்கள்சங்கதிருத்திப்புரந்திடவெண்ணுதியே. (கூரு)

அழுத்தாளையள்ளலிலன்பரையாண்டைந்திலன்பறிவிற்
பழுத்தாளைப்பட்டர்பிரான்பந்தனையைப்பரும்பணிலக்
கழுத்தாளைக்கண்ணறைக்கஞ்சனைக்காய்ந்தநங்கண்ணன்கஞ்ச
விழுத்தாளையேத்தும்விமலையையேத்தென்விதேயநெஞ்சே.

மக்கண்மகார்தம்மழலைச்சொற்கேட்டுமகிழ்வதென
இக்கள்வன்சொல்லையுமேற்றுமகிழ்ந்திரும்பழனம்
புக்கள்ளற்கண்ணிறைதம்பிள்ளைக்கூட்டும்பொருட்டுச்சின்மீன்
கொக்கள்ளுமல்லிக்குளப்பதிக்கோதைக்குணமணியே. ()

கலித்துறைக்காலத்தடியேனியற்றுமிக்கட்டளைசேர்
கலித்துறைநூற்றையுமேற்றடியாருளக்கஞ்சமதிற்
சொலித்துறைகின்றதிருக்கோதைத்தாயென்றன்றொல்வினையை
மெலித்துறையாமளிதந்தென்பவப்பிணிவீட்டுவளே. (௯அ)

பத்தியில்லாதவன்பாமரன்பாவப்பசைப்பதகன்
புத்தியில்லாதவன்பொய்யன்பொல்லாதவன் பொங்குமனச்
சுத்தியில்லாதவன்கோதையன்னாய்நின்சுகிர்தஞ்சொல்லச்
சத்தியில்லாதவன்செய்நூலுமேற்றுத்தயைபுரியே. (௯௯)

சொற்பிழையோடுபொருட்பிழைநின்னடியைத்தொடரா
முற்பிழைமுன்னைவினைப்பயன்மூட்டமுயன்றுசெய்த
பிற்பிழையாவும்பொறுத்தாளிற்கேபெருங்கடனும்
ஆற்பிழையெங்கடிருக்கோதைநாயகியம்மனையே. (க00)

ஆவாழ்கவந்தணர்வாழ்கவவர்களறங்கரைநன்
னுவாழ்கநான்மறைவாழ்கநபக்குநல்லோர்பதின்மர்
பாவாழ்கவப்பாப்படிப்பவர்வாழ்கபரிக்குமிந்தப்
பூவாழ்கவாழ்கதிருக்கோதைநாயகிபொன்னடியே. (க0க)

திருப்பதிவாழ்கதிருவாழ்கநூற்றுடன்சேர்ந்தவெட்டுத்
திருப்பதிவாழ்கதிருத்தொண்டர்வாழ்கதெறுஞ்சிறையாங்
கருப்பதியாமனைமைககாக்குங்கோதைகழலிணையாம்
மருப்பதிமாமலர்வாழ்கவென்னுள்ளமடுவகத்தே. (க0௨)

---

ஆடிப்பகவதிநாளிலவதரித்தாயர்தங்கள்
பாடிச்சவுரிக்குப்பாமாலைதந்துபைம்பூம்படலை
சூடிக்கொடுத்தசுடர்க்கொடிக்கோர்சதச்சொற்றொடையல்
பாடிக்கொடுத்தனன்பள்ளிகொண்டானெனும்பாவலனே.

**கோதைநாயகித்தாயார் மாலை**

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவல்லிக்கேணி

# வேதவல்லித்தாயார் மாலை.

## காப்பு.

விண்புகழல்லிக்கேணி வேதவல்லித்தாயடிமேற்
பண்புடனேர்பாமாலை பாடவே—நண்புடனே
வேதந்தமிழ்செய்த மெய்ஞ்ஞானதேசிகன்றன்
பாதந்துணைமனனே பற்று.

## நூல்.

பூமகணீளையிவர்க்குந்தலைமையைப்பூண்டமகள்
பூமகள்பொன்மகள்புண்டரிகாதனைபோதமல்கும்
பாமகளாதியர்பன்னித்தொழும்பதபங்கயத்தாள்
மாமகள்வேதவல்லித்தாயைவாழ்த்தென்மடநெஞ்சமே.()

மூலப்பகுதிமுளைகாரியவர்க்கமூட்டுறவாம்
ஞாலப்பகுதியினண்ணியுநண்ணகில்லாவியலாள்
காலப்பகுதிகடந்தமறைவல்லிக்கற்பகத்தின்
சீலப்பகுதிதிசைமுகனாலுந்தெரிக்கரிதே. (௨)

உழுவைவனத்திலுழைக்கன்றுறைதலுக்கொப்புடைத்தாங்.
கழுவைநிகரிந்தக்காயத்துங்காலத்துங்கன்மமதாற்
புழுவைநிகர்புல்லியன்வாழ்தலாரணப்பொற்கொடியென்
வழுவைப்பொறுத்தந்தவைகுந்தநாட்டினில்வைத்தருளே.

நன்மையைநாடியிக்காயத்தைநல்கினைநானதனாற்
றுன்மைகள்செய்துதுயரப்பவக்கடலேய்ந்தனனென்
புன்மைபொறுத்துமறைவல்லிநின்னருட்போதந்தந்தென்
றன்மைதயங்கச்சதாநந்தவீட்டினைத்தந்தருளே. (௪)

பண்ணுஞ்சுவையும்பழுத்தபசுந்தமிழ்ப்பாவின்விண்ணும்
மண்ணுந்தொழுநின்புகழ்பாடிமாக்கதிமன்னவெற்குக்
கண்ணுங்கருத்துங்கழலாதுநிற்கின்றகற்பகமே
எண்ணுமெழுத்துமருள்வேதவல்லியெனுமன்னையே. (௫)

இள்ளைமொழிகேகயவியலன்னக்கிளர்நடைவார்
வள்ளைவள்வாண்மதியாநநவாரணவல்லியன்னாய்
சள்ளைசெய்யைவர்தமியேனறிவாந்தனத்தையென்றுங்
கொள்ளைகொண்டுண்டிடக்கேளாதிருக்கின்றகொள்கையென்னே.

என்னேயெனதுவினையின்வலிநின்னியற்கையதாய்த்
தன்னேரிலாதவருளைத்தகைந்திடுந்தன்மையதே
பொன்னேபுகழ்க்கணியேயெப்புவனமும்பூத்தளிக்கும்
அன்னைமறைவல்லியேயம்புயாதனவம்மனையே. (எ)

கட்டக்கரவடன்காமுகன்காதுகன்கன்மனமாந்
துட்டக்கரணந்துலங்குறும்வண்ணந்துகடுடைக்கும்
இட்டக்கரணவருள்கொண்டிரண்டென்றிசைமநுவும்
எட்டக்கரமுமருள்வேதவல்லியெனுமன்னையே. (அ)

பல்லவிப்பண்ணவரேத்தும்பதுமைக்குப்பன்னவித்தை
அல்லவிக்குஞ்சுடராரணவல்லிக்கடியிணையாம்
பல்லவிக்கன்பர்பரிவுடனாளும்பணிந்திறைஞ்சிச்
சொல்லவிர்மாலையுந்தூமலர்மாலையுஞ்சூட்டுவரோ. (௯)

குற்றம்விளைப்பவராகுங்குடும்பினிகுட்டன்முதற்
சுற்றந்துணையென்றுநின்றுணைகைவிட்ட துட்டனென்றன்
அற்றம்பொறுத்தெனையாட்கொளவாரணவல்லியன்னாய்
கொற்றந்தருநின்குணாகழலேத்தக்குறித்தருளே. (க0)

வறுத்தவிதையங்குரியாதுநின்னருள்வண்மையினாற்
பொறுத்தபிழைசன்மப்புன்கண்டராதிப்புடவிமையல்
வெறுத்தவர்போற்றல்லிக்கேணியில்வாழ்கின்றவேதவல்லிச்
சிறுத்தவிடையன்னையேயித்துணையருள்செய்தருளே. ()

அயனார்பலர்கற்பமார்ந்துமருவினையான்விவித
வியனார்பிறவிப்பெருவேலைவற்றும்விரகிலையாற்
பயனார்சொற்பாவலரேத்தாரணவல்லிப்பார்க்கவியே
நயனார்நின்பாதநளினமென்ஞான்றுநணுகுவனே. (க௨)

அஞ்ஞானத்தாலடியேன்செய்யரில்கட்கவதியிலை
விஞ்ஞானமில்லாவிவிதப்பிறவியில்வீழ்த்துகின்ற

சுஞ்ஞானமேவுநின்றொண்டர்கடொண்டினத் தோமறுத்து
மெய்ஞ்ஞானமீதிமறைவல்லிபாவவிமோசனையே. (க௩)

எத்தனைசன்மமெடுத்தனனோவின்னுமிப்புவியில்
எத்தனைசன்மமெடுப்பான்விதித்திருக்கின்றனையோ
எத்தனையேனுமிரங்காய்மறைவல்லியென்னுழிநிற்
கெத்தனைகாலஞ்செலுமோகருணையியல்வதற்கே. (கச)

பெற்றவளாகியநீயேயென்மீதுபெருங்கருணை
யற்றவளாயினடியேனென்செய்வலனைத்துயிர்க்கும்
உற்றவளேயன்பர்க்கூழ்வினையூட்டுமுறுகணெல்லாஞ்
செற்றவளேதிகழும்வேதவல்லிச்செழுந்திருவே. (க௫)

ஓலமெலாமிட்டுக்கூயழும்பிள்ளையையுற்றொழிவில்
காலமெலாஞ்சற்றுங்காவாமலன்னையர்கைவிடுதல்
ஞாலமெலாவற்றினுமில்லைபுண்டெனினன்குறையாய்
சீலமெலாங்கொண்டருள்வேதவல்லித்திருமகளே. (க௬)

தேக்குத்தெவிட்டிடுஞ்செந்தமிழ்ச்சொல்லெனுந்தேமலரால்
வாக்குப்பொறியேபொருண்மணம்வீசவகுத்திடுநற்
றாக்குத்துதிகளைச்சொல்லிமறைவல்லித்தொல்லருள்சேர்
நோக்குப்பெறுவானுவறியெங்நோன்புகணோற்றனையே. ()

ஏதமெனும்பிறவிக்கடலன்பரினங்கடக்கப்
போதமெனும்புணையாம்வேதவல்லிபொற்கோயில்வலம்
நீதமெனும்படியன்புடனித்தியநீவிர்செய்யப்
பாதமெனும்பொறிகாளெத்தவமுன்பயின்றனிரே. (க௮)

சுரேந்திரனாதிச்சுவர்க்கத்தவருந்துறவியரும்
நரேந்திரரும்பணிந்தேத்துமறைவல்லிநாயகியாம்
வரேந்திரைபாதத்திலஞ்சலிசெய்துமலர்வழங்கக்
கரேந்தியங்காள்பண்டைக்காலத்தென்புண்ணியங்கண்டனிரே.

தீப்பொறியாகுந்திறத்திற்செல்லாதுதினந்தினமும்
மாப்பொறிமாமலர்மாளிகையாரணவல்லியன்னை
பூப்பொறிநல்கும்புகழ்ப்பாச்சுவையிற்புனிதமெய்த
நாப்பொறியேநற்றவமென்னைமுன்னர்நயந்தனையே. (உ0)

சாத்திரமாமறையோதிமுனிவர்தழுதழுத்துத்
தோத்திரஞ்செய்யுநந்தாய்வேதவல்லித்துணையடியைக்
காத்திரரோமஞ்சிலிர்த்திடக்கண்டுகளிதுளங்க
நேத்திரங்காண்முன்னர்நீரெத்தவநிலைநின்றனிரே. (உக)

கன்னமெனும்பொறிகாள்கடிவீசுங்கமலமனை
அன்னமெனுநங்களாரணவல்லியகளங்கமாஞ்
சொன்னமெனும்புகழ்கேட்டுக்களித்துச்சுகிக்கும்வண்ணம்
என்னநன்னோன்புகணீவிர்முற்காலத்திழைத்தனிரோ.(உஉ)

காக்குங்கடமையைக்கைக்கொண்டுநாளுங்கருணைவெள்ளந்
தேக்குந்திருக்கண்மறைவல்லிசேவடிசேர்துளவ
மோக்குநிலையின்முயன்றுமுயன்றுமுதமடைந்து
மூக்குமனனேநமக்குநலஞ்செய்யமுந்துற்றதே. (உங)

வள்ளவனசமலர்மாளிகையைமகிழ்கருணை
வெள்ளமெனுநங்கள்வேதவல்லித்தல்லிமெல்லடியைக்
கள்ளமிலாமனின்கண்வைத்துக்கண்ணிக்களித்திடுவான்
உள்ளமெனும்பொறியேயெச்சுகிர்தமுனுற்றினையே.(உச)

திருமகடெய்வமணந்திக்கணவுஞ்செழுங்கமலந்
தருமகள்முத்தங்கொழித்திடுங்கிரச்சலதிமுன்னம்
வருமகளாரணவல்லியடியில்வண்பூசனையாம்
பெருமகஞ்செய்பவர்நாளுமெனக்குப்பிராப்பியரே. (உரு)

பாமகளாதியபாவையர்போற்றும்பதயுகத்தாள்
மாமகணங்கண்மன்னாதன்மகிழ்ந்துதன்மார்பிருத்தும்
பூமகள்போதத்தபோநிதியென்னப்புகழ்பிருகுக்
கோமகள்வேதவல்லித்தாயைவாழ்த்தென்றன்கோமைநெஞ்சே.

இந்திரையெண்டிசையேத்துமல்லிக்குளமென்றுரைக்கும்
மந்திரைமாமகள்மாதேவியுக்கமருவுமடிச்
சந்திரைசந்திரவத்திரையன்பர்தமைப்புரக்குந்
தந்திரைதேர்திமனனேயெவர்க்குஞ்சரணியையே. (உஎ)

தோகைமயிலியலாரணவல்லியைத்தூயவனை
ஓகைபெறுபரமேகாந்திகளுள்ளுறைபவனை

வாகைபெறும்வாரணதியுயிரின்வகுப்புக்கெல்லாஞ்
சாகைமறைகளனந்தமுந்தண்ணளித்தாயெனுமே. (உஅ)

பெருத்தாளஞ்ஞானப்பிழம்பினிற்றள்ளித்தற்பேணினரை
வருத்தாளவர்களை வைகுந்தநாட்டினில்வைத்துவக்குங்
கருத்தாள்கமலைமறைவல்லிநாமக்கனங்குழையின்
றிருத்தாளறிதிமனனேநமக்கென்றுஞ்சேமவைப்பே. ()

அல்லியங்கேணியடைவோர்க்குச்சேவையளிக்குமறை
வல்லிவரோதயைவானவியாருமகிழ்மதுரச்
சொல்லிசுகாவகைதொண்டர்க்கருளுஞ்சுரசுரபித்
தல்லிமனனேயறிசர்வபூததயாபரையே. (௩௦)

சாதாரணவண்டங்கட்குஞ்சராசரச்சார்புயிர்க்கும்
ஆதாரபூதையெனும்வேதவல்லியருட்புகழைக்
காதாரக்கேட்டுக்கருத்தாரச்சிந்தித்துக்கட்டழகார்
பாதாரவிந்தம்பணிவோர்க்குச்சன்மப்பயமில்லையே. (௩க)

கரமணிக்கங்கணங்கைவிரன்மோதிரங்கண்டமுத்துச்
சரமணிமாலைதலைக்கோலந்தாடங்கந்தாவின்மறைச்
சிரமணிதாளிற்பரிபுரநூபுரஞ்சேர்ந்திலங்கும்
வரமணியாரணவல்லியைவாழ்த்தென்மடமனனே. (௩உ)

அளியுருவாளையறவுருவாளையவனியந்தீ
வளியுருவாளைநல்வானுருவாளைமழகதிர்சேர்
ஒளியுருவாளையுபயவிபூதியுயிர்கட்கெல்லாங்
களியுருவாளைக்கனமறைவல்லியைக்கண்டனனே. (௩௩)

பாலைப்பழித்தபணிமொழியார்பகுவாய்ப்பகழி
வேலைப்பழித்தவிழியார்விழைச்சைவெறுத்துமின்னை
நூலைப்பழித்தவிடைமறைவல்லிநின்னூபுரப்பூங்
காலைப்பழிச்சுமவனெனைக்காக்குங்கடவுளரே. (௩௪)

அருவையுருவையருண்மறைவல்லியையன்புருவாந்
திருவைநஞ்சேனையர்கோற்குரியாசந்தெரித்தசுர
தருவைமருக்கமழ்தாமரையாளைச்சரணடைந்தென்
கருவைக்கடந்திடுங்காட்சிகண்டுள்ளங்களித்தனனே. ()

கருநிழலால்வருங்கம்பலைநீங்கக்கருதினர்க்குப்
பெருநிழலாகியவாரணவல்லிபெறற்கரிய
ஒருநிழல்பெற்றுய்ந்தவுத்தமர்தங்களுபயவடித்
தருநிழல்சார்ந்தென்றன்சன்மவிடாயைத்தணிப்பனின்றே.

நித்தியையாகுநிகமக்கொடியன்னைநீரசத்தாள்
சத்தியமாகச்சரணடைந்தேனற்றவர்களடை
முத்தியடையக்கருணையுறைதந்துமொய்யொழுக்கப்
பத்தியம்வைத்தென்பவப்பெரும்பையுளைப்பாற்றுவளே.

கன்மலைபோன்றவென்னெஞ்செகிழ்ந்துகசிந்துருகிச்
சொன்மலைவின்றிநின்றேல்புகழ்பாடித் துதிக்கும்வண்ணம்
பொன்மலையேமறைவல்லிப்பெயர்கொண்டபுத்தமுதே
நின்மலையேயருள்வாயல்லிக்கேணிநிகேதனையே. (ங அ)

முருடன்முதுக்குறைவில்லாமுழுமகன்மூர்க்கன்முற்றுந்
திருடன்றிருக்கனெனினுமறைவல்லிச்செந்திருவே
மிருடன்விழிவெந்தமீனக்கொடியோன்மிறைசெய்கலி
புருடன்னிவனைப்புறங்காண்விரகுபுரிந்தருளே. (ங கூ)

வேதத்தலைவிமுப்பத்துமுக்கோடிவிண்ணோர்தலைவி
பூதத்தலைவிபதினான்குலகும்புகழ்தலைவி
போதத்தலைவிபுராணபுருடனைப்புல்லிமகிழ்
நீதத்தலைவிநிகழ்மறைவல்லிநியாமகையே. (ச0)

கருக்குழிநட்டிக்கருக்குழிவீழுங்கடையனிரு
செருக்குழிச்செல்லாதெழிலாரணவல்லிச்செந்திருவே
இருக்குழிவாழ்நின்னிணையடியென்னிதயத்துழியும்
திருககுழியும்வைத்துச்சிந்திக்கச்செய்திருவருளே. (சக)

வாமவைப்பென்னமயக்கிளையாருழிவஞ்சன்கொண்ட
காமவைப்பென்றுகழிந்திடுமோகழியக்களிசெய்
சேமவைப்பேநிலைச்செல்வவைப்பேயிச்செகத்துக்கெல்லாம்
ஏமவைப்பேமறைவல்லியன்னாயென்றனின்பவைப்பே. ( )

விதிவிலக்கின்படிச்செல்லாதவனரவேடங்கொண்ட
மதிவிலங்கானவனாரணவல்லியன்னாய்வினையாஞ்

சதிவிலங்கைத்தறித்தெற்குன்றளிர்புனைதாட்டுணையாங்
கதிவிலங்காமற்கருணைசெய்தாளுங்கடனினக்கே. (சரு)

சீதவல்லிப்பல்வலப்பதிவாழ்நிறைசெல்வவல்லி
போதவல்லிப்பெயர்ப்புண்ணியவல்லிபுனிதவன்பர்
கேதவல்லிக்கென்றுங்கேடுசெய்வல்லிகிளரொளிசேர்
வேதவல்லித்தல்லிமெல்லடிநாளும்விரும்பென்னெஞ்சே.

தருமத்துறைநற்றவத்துறைதானத்துறையவற்றின்
மருமத்துறையொன்றுந்தேறேன்மறைவல்லிமாமகளே
கருமத்துறைபயின்றின்னுமொர்மாதின்கருவில்வந்து
சருமத்துறையிற்றவியாமற்செய்தருடண்ணளியே. (சரு)

நின்பூசனையுநிகழ்த்தினனில்லைநினதடியார்
இன்பூசனையுமியற்றினனில்லையெம்மான்பதத்தில்
முன்பூசனையுமுயன்றனனில்லைமுனிநடுவன்
றன்பூசலுக்கென்னைசெய்வேன்மறைவல்லித் தாக்கணங்கே.

நார்த்தனவாஞ்சையுநானிலவாஞ்சையுநாரியர்தஞ்
சேர்த்தனவாஞ்சையுந்தீராத்திருக்குளன்றேசமெங்கும்
போர்த்தனவாநின்புகழ்பாடியாடிநின்பொன்பெயர்ச்சங்
கீர்த்தனஞ்செய்துமறைவல்லியுய்யக்கிருபைசெய்யே. ()

கோட்டையெனவென்னைச்சூழ்ந்துவளைத்தகொடும்பவமாங்
காட்டையழித்துக்கதிபேதந்தன்னிற்கடுகிவருங்
கூட்டையொழித்துன்குலவடியார்கள்குலவுதிரு
நாட்டையளித்தருள்வேதவல்லிப்பெயர்நாயகியே. (சஅ)

இந்திரனெண்கணனீசானனென்றூழியக்கர்பதி
சந்திரனாகத்தவம்புரிந்தோரைச்செய்தாக்கணங்கே
சந்திரவாடைதரித்தமறைவல்லித்தல்லியென்னைத்
தந்திரமாநற்றவத்தினனாகத்தயைபுரியே. (சகூ)

எல்லையில்காலத்தியற்றியபாவத்தினீட்டமெல்லாம்
ஒல்லையொழியுமென்மேனின்கருணையுதிக்குமெனில்
இல்லையெனினில்லைநீயேயெளியவென்மீதிரங்கித்
தொல்லைமறைவல்லியன்னையவற்றைத்தொலைத்தருளே. ()

நின்னைநினைக்கப்புகுந்தவென்னெஞ்சமிந்நீளுலகந்
தன்னைச்சலதியைச்சக்கரவாளத்தைத்தாவியப்பால்
முன்னைப்பகோளககோளவிசாரமுயற்சிவிடா
தென்னையியற்றுவலெந்தாய்மறைவல்லியிந்திரையே. (ருக)

பூலோகமெங்கும்புகுந்துபுதுமைப்புவர்முதலா
மீலோகமுஞ்சென்றுவேட்கைமுற்றாதுவிளைந்துமனங்
கோலோகமுஞ்செல்லுமென்னென்றிக்கூத்தைக்குறித்திடுவல்
சாலோகமாதிதரும்வேதவல்லித்தயாம்புதியே. (ருஉ)

கால்வேகமுங்கலுழன்வேகமுங்கதிரோனிரதக்
கால்வேகமுங்கான்மகன்வேகமுநங்கள்காகுத்தன்கைக்
கோல்வேகமுமறைவல்லியன்னாயென்கொடுமனத்தின்
மால்வேகம்வெல்லுமதுநின்னடிநிற்கும்வண்ணஞ்செய்யே.

காலமெலாம்பெருங்காற்றிற்கறங்குகறங்கலென
ஞாலமெலாஞ்சுழன்றாலுந்தளர்வில்லைநன்மகவான்
சாலமெலாஞ்செயுமன்னத்தைநின்னடிசாரவைப்பாய்
கோலமெலாங்கொண்மறைவல்லியெங்கள்குலக்கொழுந்தே.

இன்னியவோதையியலல்லிக்கேணியெனும்பதியின்
மன்னியமாமறைவல்லியன்னாயென்மனோரதத்தை
உன்னியளித்தருள்வாயுலகோர்கட்குள்த்துணர்ந்து
பன்னியநான்குவிதபுருடார்த்தபலப்ரதையே. (ருரு)

சகத்துக்கிறைவிசராசரக்கூட்டந்தனக்கிறைவி
மகத்துக்கிறைவிமகப்பயனல்கிமகிழிறைவி
இகத்துக்கிறைவிபரத்துக்கிறைவியெய்தாதமுத்திச்
சுகத்துக்கிறைவிசுருதிக்கொடியெனுந்தூயவளே. (ருசு)

மண்ணுக்கினியவள்வானுக்கினியவள்வாய்ந்தநல்லோர்
கண்ணுக்கினியவள்காதுக்கினியவள்காசொன்றில்லா
எண்ணுக்கினியவளின்பந்தருமிசைநூல்வல்லோர்
பண்ணுக்கினியவணம்வேதவல்லிபராபரையே. (ருஎ)

அறத்தினுள்ளாளிவ்வகிலாண்டகோடியகத்தினுள்ளாள்
புறத்தினுள்ளாளன்பர்புந்தியுள்ளாள்புயல்வண்ணனெம்மான்

நிறத்தினுள்ளாணிகமத்தினுள்ளாணிறையொன்றுமிலேன்
றிறத்தினுள்ளாள்மறைவல்லிகரந்துறைசெப்பரிதே. (௫அ)

வீட்டையடையக்கொடுத்தவிச்சன்மத்தின்வீழ்நரகக்
கேட்டையடையத்தருமோமறைவல்லிகேதநெஞ்சின்
சேட்டையொழித்துன்றிருவடிசிந்திகைச்செய்தடியேன்
கூட்டைவிடுங்காற்கொடுபோயந்தாமத்திற்கூட்டுதியே. ()

பவித்திரமாநின்சரிதைச்சுவைகொள்பராவமுதைச்
செவித்திரமூட்டியென்சென்மச்சிறைதனைத்தீர்த்தருள்வாய்
சவித்திரளன்னவுருவார்சரோருகசம்பவையே
புவித்திரளோர்புகழாரணவல்லிபுராதனையே. (௬0)

பெண்மணியேயென்னனாதியஞ்ஞானப்பிழம்பறுக்கும்
விண்மணியேவியன்பாலாழிதன்னில்விரும்பிவந்த
ஒண்மணியேயெவ்வுயிர்க்குமுயிராயொளிர்ந்துநிற்குந்
திண்மணியேயெனையாள்வேதவல்லிச்சிந்தாமணியே. ()

அத்தியமுதமரவணையானாத்தாரமுதஞ்
சித்தியடைபவர்சித்தத்துத்தித்திக்குந்தெள்ளமுதம்
பத்தியுடையோர்பவந்திரவுண்ணுநற்பாலமுதம்
முத்தியமுதமறைவல்லிநாமத்தைமுன்னுநெஞ்சே. (௬உ)

புத்தியளிப்பவள்போகமளிப்பவள்போற்றுமெட்டுச்
சித்தியளிப்பவள்செல்வமளிப்பவள்சேர்ந்தவெற்குப்
பத்தியளிப்பவள்மெய்ஞ்ஞானந்தந்துபரமபத
முத்தியளிப்பவளாகுமறைவல்லிமுன்னவளே. (௬௩)

கோளென்செயுங்கொடுங்கூற்றமென்செய்யுங்குறிக்குங்கெட்ட
நாளென்செயுந்திக்கினண்ணுமிருவகைநாகங்களின்
றுளென்செயுமபிசாரமென்செய்யுந்தரியலர்கள்
வாளென்செயுமறைவல்லியருளெற்குவாய்த்திடினே. ()

கல்லாதவரெக்கலைகளுங்கற்றகவீச்சுரராம்
பொல்லாதவர்புண்ணியர்க்கரசாவர்பொருள்களொன்று
மில்லாதவரியக்கேந்திரராவரிருட்பிழம்பை
வெல்லாதவரினொளிர்மறைவல்லிவிரும்பிடினே. (௬௫)

பதிவாய்க்குமன்பதைப்பாலநம்வாய்க்கும்பகருமொன்பா
ணிதிவாய்க்குநேரினிருபர்சூழாம்புடைநின்றுசொல்லுந்
துதிவாய்க்குமீறில்சுகாநந்தந்துன்னிடத்தூண்டிடுநன்
மதிவாய்க்குநம்மறைவல்லியருள்விதிவாய்த்தவர்க்கே. ()

கமலாலயைகருணாலயையயல்லிக்கயநகராம்
விமலாலயையன்பர்மெல்லுள்ளவாலயைவேதவுச்சி
யமலாலயையலேயாரங்கொழியமுதோததியாம்
நிமலாலயைமறைவல்லியந்தாமநித்யாலயையே. (சுஎ)

சரோருகசம்பவையாமறைவல்லிதரிசனத்தில்
உரோருகமார்பன்மணிவடங்கான்றிடுமொள்ளொளியுங்
கரோருகங்கானகமாகுங்கலாநிதிகாலொளியுஞ்
சிரோருகக்காந்தியுங்கண்சும்புளித்திடச்செய்திடுமே. ()

ஶ்ரீதாரவிந்தத்திருமகளாமறைவல்லிச்செல்விப்
பாதாரவிந்தங்கள்பற்றறுத்தோர்பரிசுத்தமனப்
போதாரவிந்தத்தும்புண்ணியவேதத்தின்பொன்முடியாம்
நீதாரவிந்தத்தும்பூத்துக்கமழ்ந்துநிலாவிடுமே. (சுசு)

விரதச்செஞ்ஞானியர்வேண்டுமறைவல்லிவித்தகியின்
இரதச்செவ்வாயுமுறுவலுங்கண்களுமின்முகமும்
வரதக்கரமுமபயக்கரமுமலரடியுஞ்
சரதத்தெப்போதுமென்கண்முன்னர்நின்றுதயங்கிடுமே.()

ஆவித்துணைநங்களாரணவல்லிதன்னம்புயத்தாள்
பாவித்துநற்பரமானந்தவாரிபடிந்துநின்று
சேவித்துப்போற்றித்திசைமுகன்செய்கையுஞ்செந்திருக்காற்
கோவித்துப்பார்த்திடுங்கூற்றுவன்கொள்கையுங்கொய்குவனே.

மாயையிற்சிக்கிமயங்கித்திரியுமதியுடையேன்
தூயையநகைசுயம்பிரகாசைசுருதிவல்லித்
தாயையடைந்தேன்றமியேனைத்தாக்குந்தவாப்பிறவி
நோயையிரித்துநுவல்வீட்டில்வைத்தென்றுநோக்குவளே.

சீர்பூத்தநின்புகழென்றுமெனதுசெவிக்குணவாம்
ஏர்பூத்தநின்னிணைச்சேவடியென்கண்ணிணைக்குணவாம்

நார்பூத்தநின்றிருநாமமென்னாவுக்குநல்லுணவாம்
பார்பூத்தவல்லிக்குளம்வாழ்மறைவல்லிப்பண்ணவியே. ()

நின்றன்கிரீடைப்பரிகரமாய்நிறைமுக்குணங்கள்
ஒன்றியதாகியுயிர்க்குணந்தோன்றுதுறவுமறைத்
தென்றுமஞ்ஞானமிழைக்குநின்மாயையிகலைவெல்ல
என்றரமோசொல்லுதியாரணவல்லியிந்திரையே. (எச)

ஒத்திமையோர்கடொழுநின்னடியிலுழுவலன்பு
நத்திமைப்போதினுமில்லாதகன்னெஞ்சநாயடியேன்
சத்திமைக்குஞ்சித்தத்தார்பெறுமுத்தியைச்சாரநின்றாட்
பத்திமைச்செல்வம்பணித்தாள்மறைவல்லிப்பங்கயையே.

இருட்செல்லன்மூடியிடருற்றிரங்குமென்மீதுசற்றுன்
அருட்செல்வமெய்தினென்னல்லலெல்லாமறுமன்பெனும்பேர்ப்
பொருட்செல்வம்பொங்குமுபயவிபூதிமெய்பொய்யுணருந்
தெருட்செல்வஞ்சேருமறைவல்லியாகியசெய்யவளே. ()

அல்லிக்குளப்பதியார்ந்துறையாரணவல்லியென்னுந்
தல்லிக்குளமுருகித்தயைவெள்ளந்தவப்பெருகிற்
சொல்லிக்குளசுவைச்சொற்கவிபாடியென்றொல்வினைகாள்
கல்லிக்குளம்பறிப்பேன்கடிதோடுநுங்காப்பிடத்தே. (எஎ)

வாணிப்பதிமுதலானவர்போற்றமகிழுமல்லிக்
கேணிப்பதியுறைநம்வேதவல்லிகிருபையென்மேற்
பேணிப்பதிபிற்பெரும்பாவக்கூட்டம்பெயர்ந்துநனி
நாணிப்பதிவிருந்தோடுநரலையினுப்பணின்றே. (எஅ)

முன்னைப்பழவினைகாண்முறையாகமுனிந்துமுனிந்
தென்னைப்புறங்கண்டநீவிர்புறங்கொடுத்தேகறகும்
என்னைப்பரிசித்திடவிடமில்லையிருக்குவல்லி
அன்னைப்பரமவருள்சூழ்ந்தெற்காக்குமரணெனவே. ()

வினைநிலையானறியேனிவ்வுடலம்விடும்பொழுதிற்
கனைநிலையையங்கதித்தெழுங்கான்மரங்கற்கடுத்து
முனைநிலைமுற்றுமுன்னீயென்றன்கண்முன்னர்முந்திநின்னை
நினைநிலையெற்கருள்வாய்வேதவல்லிநிருமலையே. (அ0)

சுடர்சுடரெய்தச்செய்யாரணவல்லிதுணையிருக்கின்
இடரிடரெய்துமிரும்பகடேருமியமன்விடும்
படர்படரெய்துவர்பண்டைவினையிற்படர்பிறவித்
தொடர்தொடரெய்துமனனேயிதனைத்துணிந்துகொள்ளே.

விண்வாழ்குநர்கள்விளக்கமுறுவதும்வேலைசுற்றும்
மண்வாழ்குநர்கண்மகிழ்ச்சியடைவதுமாப்பதவிக்
கண்வாழ்குநர்கள்களிப்புற்றிருப்பதுங்காமர்சுவைப்
பண்வாழ்மறைவல்லிதன்கடைக்கண்ணினிற்பார்த்தலினே.

மாதனத்தாள்மறைவாணர்வணங்குமணக்கம
வாதனத்தாளன்பர்க்காதரத்தாளணியாருவணக்
கேதனத்தாளல்லிக்கேணிமறைவல்லிகேடின்முத்திச்
சாதனத்தாளெமைக்காத்தருள்வாள்சந்ததமனனே. (அ௩)

வாத்தியவோதையமுருவல்லிக்கேணிவளநகர்வாழ்
வேத்தியமாமறைவல்லியன்னாய்நின்விரைமலர்த்தாட்
பாத்தியங்கொண்டுபணிந்தனனென்பவம்பாற்றனிற்கே
சாத்தியங்கைவிடனின்குணபூர்த்திக்குத்தக்கதன்றே. ( )

சாத்திரத்தாள்மெய்யம்வேங்கடஞ்சோலைச்சயிலமெனுங்
கேத்திரத்தாள்புயக்கேயூரத்தாள்கிளருங்குழைசேர்
சோத்திரத்தாள்சுருதிக்கொடித்தாயென்றன்றோத்திரக்குப்
பாத்திரத்தாளுணர்வீர்பைந்தமிழ்க்கவிப்பண்டிதரே. ( )

விம்பநிகரிதழ்வாயாளைத்தண்கதிர்வேந்தனொளிப்
பிம்பநிகர்முகத்தாளைமறைவல்லிப்பேரனையை
நிம்பநிகரென்பவவோங்கலைவெட்டிநீறுசெய்யுஞ்
சம்பநிகரருளாளையடையென்றனிநெஞ்சமே. (அ௬)

முத்தாரக்கந்தரிமூவாமுதல்வியிம்மூதுலகார்
வித்தாரக்கீர்த்திவிழுச்செல்வியாநங்கள்வேதவல்லி
நத்தாரக்குங்குமநலலங்கராகத்தனாரணன்றன்
நத்தாரப்பூமகனோக்கினொழியுநங்கல்குரவே. (அ௭)

அருத்தியினாரணவல்லியடியையகநிலயத்
திருத்திமதிவிளக்கேற்றியிசைப்பூவிலம்பகத்தைப்

பொருந்தியன்பாகும்புனறீபதூபம்புரிந்துநல்கி
விருத்தியடைபத்தியன்னநிவேதித்துவேண்டுவனே.(அஅ)

எண்ணற்கரியசராசரங்கட்கோரிறைவிமதிக்
கண்ணற்றவர்கட்குக்காண்பரிதானவள்கல்விவல்லோர்
நண்ணற்குரியபுகழாரணவல்லிநல்லடியை
மண்ணற்குரியனசெய்துவழுத்தென்மடநெஞ்சமே.(அகூ)

அமரபயத்தொடுநம்பயந்தீர்ப்பதுமைங்கணைவேள்
சமரநிவாரணஞ்செய்வதுந்தண்டதரன்றருக்கை
யமரவடக்குவதுநங்களாரணவல்லியன்னை
பமரமடுப்பப்பைந்தேன்பொழியும்பதபங்கயமே. (கூ0)

ஆவத்தைத்தீர்க்குமருந்துணையாவதுமான்றமும்மைத்
தாவத்தைத்தீர்த்திடுந்தண்டடம்போல்வதுந்தண்டலிலாப்
பாவத்தைக்காற்றிற்பறந்தோடச்செய்வதும்பண்புருவந்
தீவத்தையொத்தமறைவல்லிபாதச்செந்தாமரையே.(கூக)

மும்மையுலகத்தவர்முறையீட்டுக்குமுன்னிடமுஞ்
செம்மைமறைபுகச்சிந்தையுட்கொள்பவர்சேரிடமும்
இம்மைமறுமைப்பயனெய்துவோரெண்ணியேத்திடமும்
அம்மைமறைவல்லியாரியச்சேவடியம்புயமே. (கூஉ)

தேவர்கள்சிந்தையுள்வைத்தெண்ணிப்பூசனைசெய்வதுமிப்
பூவர்கள்புந்தியுள்வைத்துப்புகழ்வதும்பூங்கலைசேர்
நாவர்கள்வாழ்த்திநன்மாலையணிவதுநங்கையர்கள்
மூவர்களின்முந்திருக்குவல்லிப்பதமுண்டகமே. (கூங)

வேதச்சிரமுடன்வேதங்களோத்துவியப்பதுவும்
வேதப்பொருளுணர்வித்தகர்நாளும்விரும்புவதும்
ஓதப்புவியினரேத்துமல்லிக்குளத்துற்றுறையுங்
கீதப்புனிதமறைவல்லிபாதபங்கேருகமே. (கூச)

நோய்க்குழுநோக்கத்தினோக்காமலுறுவலாசையெனும்
பேய்க்குழுவென்னைப்பிடிக்காமலும்பெட்குமைம்பொறியாம்
நாய்க்குழுவென்னைநலியாமலுநின்னைநாடிநிற்குஞ்
சேய்க்குழுச்சேர்ந்தவெனையாள்மறைவல்லிச்செந்திருவே.

வாய்மையினின்றுவழுவாமலுமனவிந்திரியத்
தூய்மையினின்றுசுருங்காமலுநின்றன்றொண்டருக்குச்
சேய்மையினின்றுதியங்காமலுஞ்செகத்தின்னுயிர்க்குத்
தாய்மையினீங்காமறைவல்லியெற்குத்தயைபுரியே. (௯௬)

சத்துவநீர்மைசததந்தழைக்கவுஞ்சால்புறுமுத்
தத்துவஞானந்தலைப்பெய்துநிற்கவுஞ்சாரடியேன்
சொத்துடையாய்நீசுவாமிநியென்னத்துணியுணர்வு
தத்துவமோங்கவுஞ்செய்வாய்மறைவல்லித்தம்மனையே. ()

பிறப்புமத்துன்பினுக்கெண்மடங்காம்பெரும்பீழைதரும்
இறப்புமியமன்றமர்செய்யிடருமிரித்திடுநின்
சிறப்புறுநாமசங்கீர்த்தனஞ்செய்துகிளைப்பதிலோர்
மறப்பும்வராதெனையாள்மறைவல்லிமலர்மகளே. (௯௮)

எம்மின்மிக்கார்களிலரென்றிதயத்தெண்ணுதலகில்
நம்மின்மிக்காரும்பலரிருப்பாரென்றுநாவலர்காள்
வம்மின்மகிழ்ந்துநல்வண்டமிழ்மாலைவகுத்துரைத்துத்
தம்மின்புகழ்ந்தணிவோமறைவல்லிதன்றாள்களுக்கே. ()

புத்தமிழ்தாமெனப்புத்தேட்புலவர்புகழ்ந்தணிந்த
அத்தமிழ்ப்பாத்தொடை முன்னரென்புன்கவியாமலங்கல்
உத்தமமாமணிகுன்றிமணிதனையொத்தலொக்குஞ்
சித்தமகிழ்ந்தருள்வாய்வேதவல்லித்திருவன்னையே. (க00)

வாழிவளங்கொடிருவல்லிக்கேணிவளநகரம்
வாழியடியவர்வாழியுபயமறைமொழிகள்
வாழிகலசக்கடனின்றும்வந்தமன்னாதவள்ளல்
வாழிநம்வேதவல்லித்தாயெனுமலர்மாமகளே. (க0க)

---

சீரால்லித்தடவேதவல்லித்தாய்திருவடிமேல்
நாரார்தமிழ்க்கவிநன்மாலைநூறுநன்ஞானநிதி
யேரார்ந்தகச்சிக்கடாம்பியிராமாநுசவிறைவன்
றாரடிசேரெதிராசதாசன்சமைத்தனனே.

## வேதவல்லித்தாயார் மாலை

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவல்லிக்கேணி

# உருப்பிணித்தாயார் மாலை.

## காப்பு.

கருப்பிணியைநீக்குங் கமலையல்லிக்கேணி
உருப்பிணியாமன்னை யுபயத்-திருப்பதத்திற்
பாமாலைசூட்டப் பணித்தருள்வான்றண்வகுளப்
பூமாலைமாறன் புரிந்து.

## நூல்.

திருவளர்செந்தாமரைமலர்மாளிகைசேரனமே
உருவளரொம்மானுரப்பஞ்சரத்திலுறைகிளியே
மருவளரோதியுருப்பிணித்தேவிமயிலன்னையே
கருவளரென்மனக்கண்வாழ்ந்திருக்கக்கருணைசெய்யே. ()

நெஞ்சகமேநந்நிராதாரைநின்மலைநித்தியைசெங்
கஞ்சமலர்மாளிகைவீற்றிருக்குங்கனங்குழைகார்
மஞ்சனவோதியுருப்பிணியன்னைமலரடியைத்
தஞ்சமெனநம்புதிநம்முத்தாபந்தணந்திடுமே. (௨)

அமலையநகையதுலையசலையரிப்பிரியை
கமலைகமலாசனைகமலாக்கிகராம்புயைநந்
நிமலையுருப்பிணியன்னையைநெஞ்சேநினைதிவினை
அமலையஞரம்பரமுற்றும்வற்றவருளுவளே. (௩)

நிரந்தரைநித்யகல்யாணிநிராமயைநிர்விகற்பை
தரந்தருசர்வஞ்ஞைசத்யசங்கற்பைதழையசர
சரந்தருசத்தியகாமையுருப்பிணித்தம்மனையை
நிரந்தரநின்றுநினைதிநெஞ்சேபவநீங்கிடுமே. (௪)

அநந்தவிபவையசோகையயோநிசையாவருஞ்சொல்
அநந்ததிருவபிதாநையகளங்கையாமதுலை
அநந்தைநல்லாநந்தரூபையுருப்பிணியன்னையைநீ
அநந்தலொழிந்தேத்துதிநெஞ்சமேநம்மயர்வறுமே. (௫)

அப்பிரமேயையபராசிதையநகூயைநல்ல
சுப்பிரசந்நைசுகாவகைசொல்லுந்துதிப்பிரியை
ஒப்பிலுருப்பிணியன்னைநமையுளமேயுவக்கின்
இப்பிரபஞ்சத்திடர்நீக்கிமோக்கத்திருத்துவளே. (கூ)

அருளுக்கணியையழகுக்கணியையறக்கணியைப்
பொருளுக்கணியைப்புகழுக்கணியைப்பொறைக்கணியைத்
தெருளுக்கணியையுருப்பிணிச்செல்வியைத்தேர்ந்துநெஞ்சே
மருளுக்கணிசெயுமாயையைமாய்த்திடவாழ்த்துதியே. ()

மூழுமதிபோன்றமுகத்தாளைமுத்தியைமுன்னிற்குஞ்
செழுமதியோர்க்கருள்செய்யுஞ்செய்யாளைநற்றெள்ளமுதோ
டெழுமதிரேகவுருப்பிணியன்னையையென்றுநெஞ்சே
தொழுமதிநந்தொல்லைத்துன்பத்தொகுதிதொலைந்திடுமே.

பாவனநாமிபதுமைபராபரைபல்லுயிர்க்குஞ்
சீவனகாமியுருப்பிணிசின்மயைசிற்பரைதாள்
நீவனமாலையும்பாவினமாலையுநித்தநித்தம்
ஆவனவாக்கியணிதிநெஞ்சேயல்லலற்றிடுமே. (கூ)

பராசரனாதிப்படிவர்க்குந்தேவப்படிவர்கட்கும்
இராசரதாங்கர்க்குமெண்கணனாதியிலேகர்கட்குஞ்
சராசரம்யாவைக்குந்தண்டலைசூழல்விக்கேணியில்வாழ்
தராசரண்போலுமுருப்பிணித்தேவியைத்தாயென்பவே.

ஆரணியம்புயையாதாரபூதையனைத்துயிர்க்குங்
காரணிகாருணியக்கடலெங்குங்கலந்தபரி
பூரணியாகுமுருப்பிணியன்னையைப்போற்றுநெஞ்சே
தாரணியின்புமந்தாமவின்புந்தந்துதாங்குவளே. (கக)

சுரமங்கையரானவர்களெவர்கட்குந்தோயுநில
நரமங்கையர்கட்குநாகவுலகத்துநங்கையர்க்கும்
வரமங்கலந்தருந்தாயாமுருப்பிணிமாமகளைத்
திரமங்கைகூப்பித்தொழுதிநெஞ்சேவினைத்தீதறுமே. ()

எண்வகைச்சித்தியுமெண்வகையோகமுமேன்றுவரும்
எண்வகைச்செல்வமுமெண்வகையானவிலக்குமியாய்

எண்வகையாவுமிசைக்குமுருப்பிணியெண்குணியை
எண்வகையெண்ணுதிநெஞ்சேயிடர்களிரிந்திடுமே. (கங)

அசனமளிப்பவளாடையளிப்பவள்யாருமெச்சும்
வசனமளிப்பவள்வண்ணமளிப்பவள்வாய்ந்துதொழும்
யசனமளிப்பவளாகுமுருப்பிணியன்னைநெஞ்சே
விசனமொழித்தருள்வாளவளுமம்விளம்புதியே. (கச)

பரமாளிகைதிருப்பாற்கடன்மாளிகைபத்தருள்ள
வரமாளிகைநல்லவாரிசமாளிகைமாயன்மணி
புரமாளிகைகொளுருப்பிணித்தாயையுள்ளேயுனினம்
புரமாளிகையையும்பொன்மாளிகையாப்பொருந்துவளே.

பண்ணின்சுவையைப்பழத்தின்சுவையைப்பழுந்தநல்லோர்
எண்ணின்சுவையையிருற்றேன்சுவையையிலங்குமிரு
கண்ணின்சுவையையுருப்பிணியன்னையைக்கண்டவடாள்
நண்ணின்னடலைநன்னெஞ்சேநடுங்கிநசித்திடுமே. (கரு)

பூததிடுந்தாயைப்புவனசராசரபூதமெல்லாங்
காத்திடுந்தாயைக்கதிதருந்தாயைக்கவலையெல்லாம்
நீத்திடுந்தாயையுருப்பிணித்தாயைநினைதிநெஞ்சே
யாத்திடுந்தாவத்தனுரஞ்சியற்றிடுமக்கணத்தே. (கஎ)

வறிஞரைச்செல்வர்களாக்கவல்லாளைவன்மணேயரை
அறிஞரெனச்செயவல்லாளைத்தன்னடியம்புயத்தைச்
செறிஞர்தந்தீவினைதீர்க்குமுருப்பிணித்தேவியைநீ
எறிஞமனென்னவிடர்செய்வினையறவெண்ணுநெஞ்சே. ()

ஆட்டாக்கரும்பையமைக்காக்கற்கண்டைவறுபதங்கள்
ஈட்டாததேனையெரிக்காதபாகையெண்ணேடியாற்
கூட்டாவமுதையுருப்பிணியன்னையைக்கூர்ந்துநெஞ்சே
கோட்டாலைக்கூட்டப்பவங்குன்றநீங்கிதங்கூறுதியே. (ககூ)

கறவாதபாலைக்கடையாதவெண்ணெயைக்காய்த்திறக்கப்
பிறவாதநெய்யைப்பெருமக்களின்பப்பெருக்கையன்பர்
மறவாமருந்தையுருப்பிணியன்னையைவாழ்த்துதியேற்
பிறவாதபேறுபெறச்செய்வணெஞ்சேபெரிதுவந்தே. ()

தலைக்கோலந்தாடங்கமூக்கணிமாமணித்தாழ்வடங்கள்
கலைக்கோலமங்கதங்கங்கணமாழிநற்காலணியிந்
நிலைக்கோலங்கொண்டவுருப்பிணித்தாயைநினைநெஞ்சே
மலைக்கோலத்துன்பமணுக்கோலமாகிமறைந்திடுமே. (உக)

அவணிவணென்றெவணுநிறைந்தவ்வவ்வாவிதொறுஞ்
சிவணியுறைந்துதிகழுமுருப்பிணித்தேவிநந்தாய்
சுவணவடியைத்தொழுதிநெஞ்சேயவடொல்லருளாம்
உவணன்வரிவிவ்வுறுவலுரகமொழிந்திடுமே. (உஉ)

அரிமாமுரலவவிழலர்க்காவல்லிக்கேணியன்னை
விரிமாமலராசனையாமுருப்பிணிவித்தகிதாள்
புரிமாயமின்றிப்புகழ்திநெஞ்சேயவள்பொங்கருளாம்
அரிமாவரிவிவ்வனூர்க்கரிமாநமக்கஞ்சிடுமே. (உரு)

பரவியபற்பலவண்டத்துயிர்களும்பாங்குபெறப்
புரவியைநங்களுருப்பிணியன்னையைப்பூமகளைக்
கரவியையாதுகருதுநெஞ்சேயவள்கட்கருணை
இரவிவரினமையிவ்விடும்பைத்தமமென்செயுமே. (உச)

பன்னிருபாலென்படிவத்தினின்னைப்பதிட்டைசெய்துன்
பன்னிருநாமமும்பன்னிப்பரவாப்பகலுளதோ
என்னிருகண்ணுமுருப்பிணியன்னாயிதயவின்னாத்
துன்னரிறுஞ்சவருட்சரபத்தினைத்தோற்றுவியே. (உரு)

எவ்வவதாரமெங்கோனிச்சையாலெடுக்கின்றனனோ
அவ்வவதாரந்தொறுமகலாமலவதரிக்கும்
எவ்வமிலாநம்முருப்பிணியன்னையையெண்ணினெஞ்சே
பவ்வப்பிறவிப்படர்ப்படலங்கள்பறந்திடுமே. (உசு)

அதிதிக்கரிமகனுங்காற்பதுமையென்னங்கனையாய்த்
துதிதிக்கணவுமுருப்பிணித்தம்மனைதோன்றினையாற்
கதிதிக்கிலாதகடையேனுழிநின்கருணைவரின்
மதிதிட்கொழிந்திடும்வாய்த்திடுமோக்கதிவாழ்வெற்குமே.

தாணியிலாதியிராமனெனவரிசார்ந்தவெல்லை
தரணியெனநீயுருப்பிணித்தம்மனைசார்ந்தனையால்

அரணியனின்னருளென் மீதிலேசமமைபினெற்கு
முரணியவல்வினைமோசனமாம்வருமோக்கமுமே. (உ௮)

முந்தைப்புவியெந்தைநேமியன்சேயாய்முளைத்தவெல்லை
தந்தைச்சனகன்றிருமகளாகத்தரணிவந்தாய்
இந்தைத்தொடும்பொழிலல்லிக்குளத்தன்னையேயெளியேன்
சிந்தைச்சிறுமையைத்தீர்த்தாளுருப்பிணிச்செய்யவளே.

பூவைவண்ணன்கண்ணனையிப்புடவியிற்போந்தவெல்லை
பூவையுருப்பிணித்தாய்நீபுவியிற்புகுந்துதித்தாய்
பூவையெரியிட்டெனவினையென்னைப்புலர்த்திநிற்கும்
பூவையயிற்கண்ணருண்மழையாலெற்புரந்தருளே. (௩0)

தேவப்பிறவியிலெம்பெருமான்றிருவுள்ளங்கொள்ளின்
மேவப்பிறவிவருதியுருப்பிணிவித்தகியே
கோவப்பிறவிக்குணத்தினன்மீதருள்கூரினென்றன்
பாவப்பிறவிப்படரோடுநெஞ்சப்பயமறுமே. (௩௧)

மானுடசன்மமெம்மான்கொளினீயுமோர்மானுடையாய்த்
தானுடனண்ணுதிசந்தத்தநஞ்சயன்சாரதியாங்
கோனுடனண்ணுமன்னாய்நீகுறிக்கிற்கொடுவினைகள்
வானுடன்வாரிவனம்வரையோடிமறைந்திடுமே. (௩௨)

என்றுமில்லாவிறும்பூதொளியெத்திசைக்கண்ணும்விம்ம
மன்றலந்தாமரையாசனையாய்மணிப்பாற்கடற்கண்
அன்றுவந்தாயெம்முருப்பிணிநங்கையன்னையடியேன்
துன்றுமனத்துயர்நீங்கவொர்சூழ்ச்சிதுணிந்தருளே. ()

தொல்லிசைநூல்வல்லவராகுந்தும்புருநாரதர்கள்
நல்லிசைபாடவரம்பையராடநயந்துவந்தாய்
சொல்லிசையோங்குமுருப்பிணித்தோகையன்னாய்தொடர்ந்து
மல்லிசைமம்மரைமாற்றியெற்காக்கமகிழ்ந்தருளே. (௩௪)

அருணோதயத்திற்றுவாதசிக்காலத்தமரர்தம்பாற்
கருணோதயகாரணத்தாற்கடல்வந்தகற்பகமே
தருணோதயத்திருமேனியுருப்பிணித்தம்மனையே
மருணோயிமத்தையருட்சூரியற்கொடுமாய்த்தருளே. (௩௫)

மதியறவோர்மறைமந்திரஞ்சொல்லிவழுத்திநிற்க
நதியறனல்கத்திந்நாகமணிப்பொன்னளிர்க்குடத்தால்
விதிவழிநன்மஞ்சனஞ்செய்யவந்தவிளங்கிழையே
கதியறமேயல்லிக்கேணியன்றேயென்னைக்காத்தருளே. ()

தேவத்தபதிதருந்தெய்வமாமணிச்சேயிழையுந்
தாவக்கடறந்ததாமரைத்தாருந்தரித்தவளே
ஆவத்தனமேயுருப்பிணிநங்கையன்றேயடியேன்
பாவத்தின்வந்தபடர்படரெய்தப்பணித்தருளே. (நுஎ)

பரமன்பிரமன்சுரமன்முதலினர்பார்த்துநிற்க
வரமன்னும்வானோர்சூழாம்வீற்றிருந்தவெம்மான்மணியார்
உரமன்னிலக்குமியேயல்லிக்கேணியுருப்பிணியே
திரமன்னியென்னைச்செறுக்குஞ்சிறுமையைத்தீர்த்தருளே.

வானவர்கோன்மனவெப்பந்தணிந்துமகிழ்ந்திடவுந்
தானவருள்ளந்தளரவும்பாற்கடறன்னின்முன்னாள்
தானவதாரஞ்செய்தம்மனையேதறுகட்டுயரக்
கானவர்கைவிடுவித்தெனைக்காக்குங்கடனினதே. (நுகூ)

நிரந்தரமூவுலகத்துந்தயையொடுநிற்றியென்று
புரந்தரன்போற்றிடவங்ஙனமேயான்புரிவலென்று
வரந்தருநங்களுருப்பிணிநங்கையைவாழ்த்துதியேற்
பரந்தருநம்வினைப்பையுள்பறந்திடும்பார்த்திநெஞ்சே. ()

அனைத்துலகத்துக்குமன்னையையவ்வவ்விலத்துள்ள
அனைத்துமுள்ளாளையுருப்பிணித்தாயையடியர்வெஃகும்
அனைத்துமருளுமமலையைநெஞ்சேயடைதிவினை
அனைத்துமொழியுநம்மல்லற்பகையுமழிந்திடுமே. (சக)

கஞ்சமலராசனையையுருப்பிணிக்காரணியைக்
கஞ்சமலர்கொடிருக்கங்கணக்கரக்காருணியைக்
கஞ்சமலர்த்திருக்கண்முகத்தாளைக்கருதுநெஞ்சே
கஞ்சமலரவன்காலன்செய்கவ்வைகழிந்திடுமே. (சஉ)

வேள்விக்கருமநல்வேதாந்தம்பன்மறுவித்தைகட்கும்
ஆள்விக்குமிந்திரஞாலவித்தைக்குமதிபதியா

மூள்வித்திடுநம்முருப்பிணியன்னையைமுன்னுநெஞ்சே
மாள்வித்திடுநம்மனத்துயரோடிமறைந்திடுமே. (சங)

நீதந்தருமேருமுவுவணிகதிரைபுரத்தல்
வேதந்தருக்கமுதலாம்வித்தைக்கும்விளைநிலமாப்
போதந்தருநம்முருப்பிணியன்னையைப்போற்றுநெஞ்சே
ஏதந்தருபிறவித்துயரின்றேயிரிந்திடுமே. (சச)

எல்லாவுலகுக்குமீடுமெடுப்புமிலாவிறைவி
எல்லாஞ்செயவல்லவளெல்லாமுணர்பவளேய்ந்திலங்கும்
எல்லாவுருவுளுமேயுமுருப்பிணியென்னன்னையை
எல்லாவினையுமிரிந்திடவெண்ணுதியேழைநெஞ்சே. ()

அருளுறினெவ்வுலகத்துப்பொருளுமமைந்திலங்கும்
அருளறினெவ்வுலகத்துப்பொருளுமழியுமென்ப
அருளுருவாகுமுருப்பிணிநங்கையன்னுயிரங்கி
அருளுதினின்னடியண்மிக்களிக்கவடியனுக்கே. (சசா)

தாழ்ந்தோருயர்ந்தோரெனும்பேதமின்றிச்சமநிலையா
வீழ்ந்தோர்க்கருளசெயும்வித்தகியேமறைமெய்ப்பொருட்கண்
ஆழ்ந்தோர்தொழுமல்லிக்கேணியுருப்பிணியம்மனையே
போழ்ந்தோங்குபுன்கலைப்போக்கித்தமியற்புரந்தருளே.

என்றைக்குமெம்பெருமானைப்பிரியாதிருப்பவளாய்
என்றைக்குங்கன்மவயச்சநாதிகளில்லவளாய்
என்றைக்குங்காக்குமுருப்பிணியன்னையையென்மனனே
என்றைக்குமேத்துதிபீறிலிருஞ்சுகமெய்துதற்கே. (சஅ)

எங்குங்கமலக்கண்ணெம்மானெனவிடையீடின்றியே
தங்குங்குணகலையாமல்லிக்கேணித்தலைவியைச்சீர்
பொங்குங்கருணையுருப்பிணியன்னையைப்போற்றுநெஞ்சே
கங்குங்கரையுமில்லாக்கவ்வைவாரிகரந்திடுமே. (சகூ)

பதமும்பொருளும்பகலுமொளியும்பணிமலரும்
இதமுண்மணமுமிரியாவணமெனவெக்கையுடன்
நிதமுமுறையுமுருப்பிணியன்னையைநேயநெஞ்சே
சதமுநினைதிசதாநந்தவீட்டின்பஞ்சார்வதற்கே. (ரு0)

அனலிலுருப்பமுமாசிலரதனவாதபமும்
புனலினிற்சீதமும்போலெங்குமேவும்புராதனைநம்
இனலிரித்தாளுமுருப்பிணிப்பேர்கொளிறைவிதன்ருள்
உனலின்புளத்துக்குறைத்திடறைவுக்குருசியதே. (ருக)

இடாதுண்ணுவார்களிலாவல்லிக்கேணியிறைவியைக்கை
விடாதன்பர்க்காக்குமுருப்பிணியன்னையைமேவுதியேற்
சுடாதுசுட்டுக்கவற்றுந்துயர்த்தீச்சற்றுந்தொட்டுநம்மை
அடாதருண்மாரிபொழிந்தவிப்பாளீதறிதிநெஞ்சே. (ருஉ)

வாணிக்கலைமகள்வல்லபன்வாழ்த்திவணங்குமல்லிக்
கேணிக்கண்வாழுமுருப்பிணியன்னையைக்கிட்டியவள்
தோணிக்கமலத்துணைத்தாடுதித்தியெனிற்றுயர்கள்
நாணிக்கவிழ்தலையிட்டோடும்பார்த்தியென்னன்னெஞ்சமே.

வையப்பட்டாரகர்வாழ்த்துமல்லிக்குளம்வாழுநங்கள்
சையப்பட்டாதபன்றன்மணவாட்டிதன்னுற்கருணை
செய்யப்பட்டார்தஞ்சிறப்பினைச்செய்யுளிற் செப்பலுடன்
உய்யப்பட்டோலைகொளலுமுரித்தாமுயர்தவர்க்கே. (ருச)

சகலவுலகுக்குந்தாரகையானதயாபரையே
சகலசுகுணநிதியாமுருப்பிணித்தம்மனையே
சகலசுபகரநின்னருளென்னுழிச்சற்றமையின்
சகலவிகபரசாதனத்தன்மந்தழைத்திடுமே. (ருரு)

விண்பான்மண்பாலார்விபுதமனிதவிலங்குகளுட்
பெண்பாற்பொருள்கடன்கூறெனச்சொல்லெம்பிராட்டியையித்
திண்பார்புகழுந்திருவல்லிக்கேணித்திருவைநெஞ்சே
நண்பாகவெண்ணுதிநற்றிருநாட்டினலம்பெறவே. (ருசு)

மூவர்க்குமுன்னவனுங்கண்ணன்மார்பமுளரிவைகும்
ஓவர்க்குந்தீட்டவொண்ணவுருவார்ந்தவுருப்பிணியை
யாவர்க்கும்யாவைக்குமந்தாமத்தின்பமநுபவிக்குந்
தேவர்க்குந்தாயைச்சிறியேனென்னென்று சிறப்பிப்பனே.

பரந்தெரிந்தோங்கும்படிவர்களோடுபழமறையின்
சிரந்தெரிந்தோரும்புகழுமுருப்பிணித்தேவியருள்

வரந்தெரிந்தோர்தமைவாய்மையின்வாழ்த்தி வணங்கியுய்யுந்
தாந்தெரிந்தோர்சரணேசரணருந்தமியனுக்கே. (ருஅ)

தீயகியுச்சிகடித்தருடேவகிசெம்மன்மகிழ்
நாயகியாகுமுருப்பிணிநின்னருணன்மைபெற்றோர்
போயகிலேசர்களாம்போதனுதியர்புன்பவமாய்
மேயகிலேசமொழிகுநராவர்கள்மெய்ம்மையிதே. (ருகூ)

அனைத்துலகங்களுமீன்றவுருப்பிணியன்னைநின்னை
நினைத்துநிதமுநெகிழாதநெஞ்சமுநின்புகழே
தினைத்துணையேனுங்கிளையாச்செவியுநிற்றெண்டனிடாப்
பனைத்துணைக்காயமுநின்சுதனெற்கேன்படைத்தனனே. ()

மருப்பிணிவிள்ளுமலர்க்காவல்லிக்குளவாணன்மகிழ்
உருப்பிணிநாமவன்னுயிவ்வுலகத்துறுபொருட்கட்
பருப்பிணிநீக்கிநின்பாதத்திற்பத்திமைபல்கச்செய்தென்
கருப்பிணியின்னேகடிந்தெனைக்காக்குங்கடனினதே.(சுக)

நினக்குமெனக்குமிந்நீளண்டகோடிநிலவுமுயிர்
தனக்குங்களைகணுருப்பிணித்தாயின்றடுப்பரிய
கனக்குங்கருணையென்காத்திரியுண்டென்றன்கையின்முன்போற்
சினக்குந்தொழில்சற்றுஞ்செல்லாதென்மேற்றென்றிசைச்சமனே.

நாசத்தைநல்குமரக்கியராமெனுநாரியர்பால்
நேசத்தைநீக்கியதைநின்னடியிணிறுவியமன்
பாசத்தைப்பாற்றிப்பரம்வீழ்பதத்திற்பரமபத
வாசத்தைத்தந்தாளுருப்பிணிநாமவரானனையே. (சுங)

வேதனைப்பெற்றவிமலையையல்லிக்குளம்விளங்கி
வேதனையூதியவிண்டுவின்பாடுறைவித்தகியை
வேதனைதீர்க்குமுருப்பிணியன்னையைவேண்டுநெஞ்சே
வேதனைத்துங்கொண்டவெந்துயர்யாவும்விளிந்திடுமே. ()

பாரியைபுத்திரர்பந்துக்களன்பர்பணிவகைகள்
நேரியைவீடுநிலந்தனமூர்திகணேர்ந்தருளுஞ்
சீரியைநற்குணச்செல்வியுருப்பிணித்தேவியன்னாய்
போரியையென்மனப்புன்கணைப்போக்கிப்புரந்தருளே. ()

அறப்பெரிதாந்தன்னருட்கிலக்கானவர்க்கன்பினென்றுஞ்
சிறப்பதிகாரந்திடகாத்திரஞ்சுகஞ்சேரலர்கள்
விறப்புறும்வெற்றிதந்தாளுமுருப்பிணிவித்தகியை
மறப்பறவென்றுமனனஞ்செய்நெஞ்சேமயக்கறவே. (சுசு)

நித்தியநின்றனருட்கிலக்காகுநெறிமையிலார்
சத்தியஞ்சௌசந்தவம்பொறையாதியசாரகிலார்
சித்தியளிக்குமுருப்பிணித்தாயாஞ்செழுந்திருவே
நத்தியநாயேனவைப்பவந்தீரநயந்தருளே. (சுஎ)

உன்றிருவுள்ளக்குரித்தானவரேயுயர்குலத்தோர்
ஒன்றியவுத்தமருநியர்மேதையரோங்கறத்தோர்
வென்றியராவருருப்பிணியன்னாய்விரும்புமென்றன்
கன்றியநெஞ்சக்கலக்கங்கடிந்தெனேக்காத்தருளே. (சுஅ)

நிதியாநினதுகல்யாணகுணங்கணிகிலமறை
மதியார்விதியுமதிக்ககிலானெனின்மாண்மதியே
உதியாதவனெங்ஙனமுரைக்கேனுலகம்புரக்கும்
விதியாருருப்பிணியன்னையென்வெவ்வினைவீட்டுதியே. ()

பத்தர்க்கினியசெந்தேனேநற்பாலேபரவுநித்தர்
முத்தர்க்கநுபாவியமாம்பராநந்தமுக்கனியே
சுத்தச்சுகவுருவாகுமுருப்பிணித்தோகையன்னாய்
சித்தச்சிறுமையைத்தீர்த்தருள்செய்பசசிந்தித்தருளே. ()

ஐப்படுமீயினவலமுறுதல்லிக்கேணியில்வாழ்
மைப்படுகண்ணியுருப்பிணியன்னையைவாழ்த்துதியேல்
வைப்படுதூறெரியிற்படுமாநம்வருத்தமறுங்
கைப்படுநெல்லிக்கனியெனக்காண்டிகவலனெஞ்சே. (எக)

எட்டனேயேனுமிதயத்தினின்னடியீரமில்லாத்
துட்டனேத்தொன்றுதொட்டுன்பொருளாமுயிர்ச்சோரனெனும்
பட்டனேநீயேயுருப்பிணியன்னாய்பனிப்புடன்கை
விட்டனேயேன்மற்றுக்காப்பாரெவரிவ்விபூதியிலே. (எஉ)

செய்யாளேயல்லிக்குளத்தாளேயன்புதிகழ்திருக்கண்
மையாளேமைத்தமலர்க்குழலாளேத்தண்மாதுளம்பூ

மெய்யாளைமெய்ம்மையின்மேதக்கநம்மையிம்மேதினிமேல்
வையாளைவானத்துவைப்பாளைவாழ்த்தென்மடநெஞ்சமே.

இலக்குமியைத்திருவல்லிக்குளத்திந்திரையைநன்னூல்
துலக்குமிறைவியைத்தோந்திருருப்பிணித்தூயவளைச்
சலக்குமிழிக்குநிகர்தநுவீழ்சமயத்தினமைக்
கலக்குமியமபடர்க்கடிவான்முற்கருதுநெஞ்சே. (எச)

இளையாளையல்லிக்குளப்பதியாளையிலாங்கலிக்கை.
வளையாளைவான்மதிமானுமனோகரமாம்வதனக்
களையாளைநெஞ்சேகடைப்பட்டநம்மையுங்காத்தளிக்கச்
சளையாளைநங்களுருப்பிணித்தாயைச்சரணடையே. (எரு)

அகிலாண்டகோடியுயிர்கள்படைத்தவையாங்கமைய
நகிலாண்டபாலன்றிநல்லருட்பாறந்துநாட்டுமன்னாய்
முகிலாண்டமேனியன்பாஞ்சாலிமானத்தைமுன்னருளாந்
துகிலாண்டவாறென்றன்மானமுங்காத்துத்துணைநிற்றியே.

நனையார்பொழிலல்லிக்கேணியுருப்பிணிநங்கையெனும்
அனையேநங்கண்ணனடுக்கலினுக்களளித்தமைபோல்
வினைமேகம்பெய்துக்கச்சோனைமழையின்மெலிந்துநிற்கும்
எனைநீயருட்குடையேந்திப்புரக்கவிசைந்தருளே. (எஎ)

சொக்கக்கருணைசுதந்தரமின்மைச்சுகுணமற்றும்
ஒக்கப்பிறர்க்குரித்தாகாமைகொண்டெம்முடையவற்குப்
பக்கச்சொற்சொல்லுமுருப்பிணித்தாயைப்பழிச்சினெஞ்சே
துக்கப்பிறவித்துயர்தொலைந்தோடத்தொடங்கிடுமே. ()

மூன்றுகுணத்தையுமூதலிப்பானெண்ணிமுற்பவத்தின்
மூன்றுமுறைபிரிந்தாளைமுந்நீர்வளைமூதுலகோர்
என்றுதொழுநம்முருப்பிணியன்னையையேத்துதியேற்
றேன்றுதுயரநெஞ்சேநம்மைவிட்டுத்தொலைந்திடுமே. ()

பிரிந்துழிச்சேதநனைப்பிரியாவுழிப்பேணியெங்கும்
விரிந்துறைவிண்டுவைவேட்டுத்திருத்தும்விமலையைநூல்
தெரிந்தவர்போற்றுமுருப்பிணியன்னையைத்தேர்திநெஞ்சே
சரிந்தலைந்தோடுநமைத்தாக்குஞ்சன்மத்தனித்துயரே. ()

வரதந்திரவுபதேசத்திருவர்க்கும்வாய்கரும
பரதந்திரமொழிப்பாளையல்லிக்குளப்பண்ணவியைச்
சுரதந்திரர்தொழுந்தூப்பதத்தாளைத்தொழுதிநெஞ்சே
சரதந்திரணமெனத்தீர்ந்தறுநம்மைச்சார்துயரே. (௮க)

தெருளார்மொழியிற்றிருந்தாதிருக்கின்றசேதநரை
அருளாற்றிருத்திபுமவ்வாறுறையண்ணலையழகாம்
மருளாற்றிருத்துமுருப்பிணியன்னைமலரடியை
இருளாரிடாறவெப்போழ்துமேத்துதியென்னெஞ்சமே.

அறியாப்பொருள்களனைத்தையுமன்பர்க்கடைவுடனன்
னெறியார்குரவற்கொடுதெரிவிக்குநிமலைதன்னை
வறியார்தனத்தையுருப்பிணியன்னையைவாழ்த்தினெஞ்சே
பிறியாவினைத்துயர்பீரிட்டுப்பேதுற்றுப்போந்திடுமே. ()

தன்னிலைமேலாம்பரநிலைசார்புருடார்த்தநிலை
யுன்னுமுபாயவிரோதிநிலைகளுணர்த்துவிக்கும்
அன்னையுருப்பிணியம்புயத்தாளையடைதிநெஞ்சே
முன்னைவினைப்பயனுந்துயர்முற்றுமுடிந்தறுமே. (௮ச)

பெருமாறுடைத்துப்பிறங்கொளிவைகுந்தப்பேறுதருந்
திருமால்பரனென்னுஞ்செஞ்ஞானக் ல்வியைத்தேர்குவிக்கும்
பெருமாட்டியைநம்முருப்பிணியன்னையைப்பேணுநெஞ்சே
கருமாட்டுறுவினைதாமேகழியுங்கலகலத்தே. (௮ரு)

பொருடீஞ்சொற்பூவையர்பூமிப்புரிவிற்புகுந்துநிற்கும்
மருடீர்த்தெம்மானுடன்வாதுகள்பேசிவழக்குரைத்துப்
புருடீகரிக்குமுருப்பிணியன்னையைப்போற்றுநெஞ்சே
இருடீர்ந்தவராஃதிலாதவரோடுமியைவிப்பளே. (௮சு)

பெற்றவர்பிள்ளையின்பீழையைக்கண்டுபெருதவுற
வற்றவர்போலப்பராமுகமாகவமைந்திருத்தல்
சுற்றவனீர்ப்புவிதன்னிலுண்டோசொல்லுதியவித்தை
அற்றவர்போற்றுமுருப்பிணிநாமவகளங்கையே. (௮எ)

நோக்குமிடந்தொறுமுள்ளவனீயென்றுநானுவலுந்
தேக்குமென்னுள்ளத்துயரைத்தெரிவித்துந்தீர்த்திலையாற்

சூக்குமமொன்றிருக்கின்றதெனக்கதுதோன்றவில்லை
ஆக்கியளிக்குமுருப்பிணியென்னுமென்னம்மனையே. ()

அடியன்முறைநின்செவியமையாமலடுத்துநின்றென்
இடியன்னவல்வினையீர்க்கின்றதுபோன்மியங்குமதைக்
கடியன்புகூர்ந்தெனைக்காத்தாளுதிகருணாலயையே
பிடியன்னமேயெம்முருப்பிணிகாமப்பிராப்பியையே. ()

பெற்றோருபயவிபூதிப்பெருஞ்செல்வராய்ப்பிறங்க
அற்றோரெனநந்தநரல்லலம்புதியாழ்ந்திருந்தல்
கற்றோர்தொழுமெம்முருப்பிணிப்பேர்க்கருணைக்கடலே
எற்றோவதனையிதயத்திரங்கியிசைத்தருளே. (௯௦)

இருட்செல்விழுங்குறுமீர்ங்குழலாளெளியோர்க்கிரங்கும்
அருட்செல்வியாளுவமுதமமரடியார்க்கருளுந்
தெருட்செல்வியல்விக்குளம்வாழுருப்பிணித்தேவியன்னை
பொருட்செல்விபூங்கழனெஞ்சேநமக்குப்பொன்றுப்புகலே.

பிறர்துயர்சற்றும்பொறுக்குணத்தாயென்றுபெட்புறுநூல்
திறமுறக்கூறுமென்சிந்தைத்துயர்கண்டிரங்கித்தெரிந்தல்
அறமன்றடைக்கலமென்றவடியனையாதரித்தாள்
அறவுருவாகுமுருப்பிணிகாமவபோகினியே. (௯௨)

தீராவியற்கைச்சிறுமியர்சிற்றின்பந்தீர்த்துமற்றை
ஆராவியற்கையவாவினடியறுத்தல்லலென்றும்
பேராவியற்கைப்பிறப்பறுத்தாளுதிபேணுமருள்
சோராவியற்கையுருப்பிணிகாமச்சகோதரையே. (௯௩)

மயற்கைப்படைகொண்டுபாய்ந்தின்மையைமறைக்கவைத்த
செயற்கைக்குணக்கடுந்தம்வராதறத்தீர்த்துவிட்டென்
இயற்கைக்குணங்கனைக்காணுமிலங்கவிலந்தருள்வாய்
புயற்கைக்கொடைகொளுருப்பிணித்தாயெனும்பூமகளே.

அண்டமெலாம்பெற்றளிக்குமுருப்பிணியம்மனையே
பிண்டமெலாம்பெற்றுக்கீழ்மேலுலகம்பிறந்துழல
கண்டமெலாஞ்சுழன்றெய்த்தேன்கதியிலைகாணென்னை
தண்டமெலாந்துடைத்தின்றிருத்தாணைப்படுத்தருளே.

கடைக்கலங்கிட்டிக்கனநோய்க்கணங்கள்கறுவிமொய்க்கக்
கிடைக்கலந்தையக்கிழவன்றன்கேதக்கிரீடைசெய்ய
முடைக்கலம்வீழ்முன்னுருப்பிணிநாமமுதல்விநின்றன்
அடைக்கலநாயேனணியடிநீழறந்தாதரியே. (கூகூ)

சீர்க்கவிவாணர்புகழல்லிக்கேணிசிறந்துவளர்
பார்க்கவியேயெம்முருப்பிணித்தாயெனும்பண்ணவியே
கார்க்கவிகைக்கைக்கமலாதனாய்கடையேன்கவிதை
நார்க்கவினற்றதெனினுமதனைநயந்தருளே. (கூஎ)

எழுத்துக்கிளவிபொருளாதியேதங்கவேய்ந்தவென்றன்
வழுத்துக்கவிகளைவானிளமைந்தர்மழலையெனப்
பழுத்துக்கனிந்தபழமெனவேற்றடியேன்பகரும்
வழுத்துக்கநீக்கியெற்காத்தாளுருப்பிணிமாமகளே. (கூஅ)

முழுமூடனின்முளரிக்கழலின்கண்முறைமொழிந்த
வழுமூடியகவிதம்மைவண்மாலையெனமகிழ்ந்து
குழுமூடியதுயர்தீர்த்தென்கருமங்கைகூடும்வண்ணம்
எழுமூதருள்செய்துகாத்தாளுருப்பிணியென்னம்மையே.

சங்கீதவோதைத்தமிழ்மறைச்சும்மைசதுமறையில்
அங்கீதவேதவமலையருவல்லிக்கேணியில்வாழ்
எங்கீதைவள்ளன்மகிழுமுருப்பிணியென்னம்மையே
அங்கீகரித்தருளென்செய்யுள்யாவுமகமகிழ்ந்தே. (க00)

வாழிகயிரவக்கேணித்திருப்பதிவண்மையென்றும்
வாழியுருப்பிணித்தாயுளமேய்ந்தமணாளனொடும்
வாழியவளடிசேருங்குரவர்தம்வர்க்கமெலாம்
வாழியெப்போதுமென்மீதவண்மைக்கண்வளரருளே.

---

கொண்டானெடுங்கைரவக்கேணியுள்ளங்குளிர்ந்துகுடி
கொண்டாளுருப்பிணித்தாய்மலர்த்தாளிற்குலவும்பள்ளி
கொண்டான்கடாம்பியிராமாநுசனைக்குலதனமாக்
கொண்டான்சொற்பூந்தொடைசூட்டினன்றன்பவக்கோதறவே

## உருப்பிணித்தாயார் மாலை

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருநீர்மலை

# அணிமாமலர்மங்கைத்தாயார்மாலை

## காப்பு.

ஆய்நீர்மலைவா ழணிமாமலர்மங்கைத்
தாய்மேற்றமிழ்மாலைசாத்தவே—பாய்நீர்ப்
பொருநைத்துறைக்குருகைப் புங்கவன்மாறன்சீர்க்
கருணைக்கடற்கழலே காப்பு.

## நூல்.

பார்மலிநின்புகழ்பாடவொட்டாதெனைப்பற்றிநின்று
போர்மலைந்தெற்றைக்கும்புன்கண்டருமென்புராணவினை
வேர்மலைந்துண்மைவிளக்குமெய்ஞ்ஞானம்விழைந்தருள்வாய்
நீர்மலைவாழுமணிமாமலர்மங்கைநித்தியையே. (௧)

கச்சகக்கொங்கையர்காமக்கலவியென்காலமெல்லாம்
நச்சகத்தேனுநின்னாயிரநாமநவின்றுமனக்
கச்சகச்சேட்டைகழிந்துகளிக்கக்கடைக்கணித்தாள்
முச்சகம்போற்றுமணிமாமலர்மங்கைமுன்னவளே. (௨)

மாயாத்திரிகுணமண்டிமயக்கமயங்கியென்றும்
ஓயாத்திரிகையினுற்றுப்பிறந்துலகெங்கணுமோர்
நாயாத்திரியுமென்மீதுநினக்கருணண்ணிடுமோ
தோயாத்திரிவாழணிமாமலர்மங்கைத்தூயவளே. (௩)

கதகாத்திரிகொண்டுகாலனென்கண்வருங்காற்கலுழப்
பதகாத்திரிமேற்படர்ந்தருள்வாயெம்பழவினைகட்
குதகாத்திரியமலாத்திரியென்றென்றுமண்டர்தொழும்
உதகாத்திரிவாழணிமாமலர்மங்கையுத்தமியே. (௪)

புவிபயனெய்துநின்பொங்கருளாலென்புலத்தவிழி
செவிபயனெய்துநின்சேவையினின்சீர்ச்சிரவணத்தின்
கவிபயனெய்துநின்காதுறிற்காமுறிற்காழ்மறையோர்
அவிபயனெய்துமணிமாமலர்மங்கையம்மனையே. (௫)

ஞாலமுண்டானொடுநாரகத்துறைநாயகியே
காலமுண்டாயினவெல்லாம்விடயக்கலுடமெனும்
ஆலமுண்டேனும்பிழைப்பனின்சீர்த்தியமுதமுனுஞ்
சீலமுண்டாயினணிமாமலர்மங்கைச்செந்திருவே. (சு)

கன்றுகொலுய்த்தளித்தானொடுநின்கழல்காண்குறுநாள்
இன்றுகொலன்றுகொலென்றிருப்பேற்கஃதியைந்திடுவ
தென்றுகொலென்னையிம்மாயப்புலிக்கிரையாக்கவெண்ணல்
நன்றுகொலோசொல்லணிமாமலர்மங்கைநாயகியே. (எ)

மாலாழியேந்துமெம்மானுடன்முத்தமணிவரன்றும்
பாலாழிப்பந்தனையன்னாய்நீவந்தென்பவப்படல
நீலாழிநீக்கியென்னெஞ்சகிலாவந்நிதியொளி
காலாழியங்கையணிமாமலர்மங்கைக்கண்மணியே. (அ)

தோயமலையடிக்கண்ணுஞ்சுருதிச்சுடர்ச்சிரத்துந்
தோயமலைத்திருவேநின்றிருவடித்தொண்டுசெயும்
நேயமலைக்கடனேரப்பெருகநினைவினைக்குப்
பாயமலைக்குமணிமாமலர்மங்கைப்பண்ணவியே. (கூ)

நண்ணுதவனின்றிருக்கோயினின்னடிநண்ணியன்பு
பண்ணுதவனென்றுநீசெயகிருடிபரம்பரையை
யெண்ணுதவனுயினுமடியேனவ்விருணரகம்
நண்ணுதருள்செய்யணிமாமலர்மங்கைநற்றிருவே. (க0)

கல்லாதவனின்கனச்சீர்க்கவிகணின்கட்டளையில்
நில்லாதவனெஞ்சநேயமிலாதவனீள்பொறியை
வெல்லாதவனுயினுமடியேனின்னும்வீண்பிறவி
புல்லாதருள்செய்யணிமாமலர்மங்கைப்புங்கவியே. (கக)

பொறைக்கடலேபுண்ணியக்கடலேபவப்புன்கணுக்கோர்
உறைக்கடலேநல்லொளிக்கடலேயுவர்ப்பாம்விடயக்
கறைக்கடலேபுமெனைநின்றன்கீர்த்திக்கதாவமுதத்
துறைக்கடல்சேர்த்தியணிமாமலர்மங்கைச்சோபனையே.()

பாவக்கனலும்பதப்பாவையர்பற்றுப்பாழ்ங்கனலுங்
கோவக்கனலுமொண்குக்கிக்கனலுங்கொளுத்திடுமுத்

தாவக்கனலுந்தணித்தெனைக்காத்திநின்றண்ணருளால்
ஆவத்தனமாமணிமாமலர்மங்கையச்சுதையே. (கரு)

பாக்கியமாகப்பகுத்தகுரவர்பரம்பரையின்
வாக்கியவல்லிபிடித்தேறிநின்மணவாளனடி
ஊக்கியவென்னையுயரயனாதியவும்பரெலாம்
நாக்கிலராமணிமாமலர்மங்கைநோன்மையளே. (கச)

பன்னியகாரணமாயுலகாகப்பரிணமிக்கு
நன்னியமங்கொண்டநாரணனாயகியேகருணை
மன்னியநின்னைமறைபுகுந்தேனென்மலமறுத்தாள்
அன்னியனல்லேனணிமாமலர்மங்கையம்மனையே. (கரு)

ஊழாய்வகுத்ததபதினான்குலகமுமுள்ளடக்கி
ஏழாவரணமுமேற்கொண்டவண்டவினங்கணின்றன்
காழார்கடகக்கரமேந்தியாடுநற்கந்துகமாம்
யாழாமொழிகொளணிமாமலர்மங்கையம்புயையே. (கசு)

சக்குறுசந்திரசூரியகாந்தமென்னைசயமெண்ணிற்
புக்குறுநீர்கனனெய்யெனவென்புரம்புக்குநிற்கும்
முக்குணசசேய்களுமொய்த்தாயுநின்னருளான்முசிதது
நெக்குணச்செய்தியணிமாமலர்மங்கைநின்மலையே. (கஎ)

சொத்துத்துலங்கொளெனக்குச்சுவாமினியாகியநீ
பத்துத்தலையிட்டமூன்றுமிலககணப்பான்மையெலாம்
ஒத்துத்தயங்கிடச்செய்தசத்தென்னவுறங்குமெனைச்
சத்துப்பொருள்செய்யணிமாமலர்மங்கைத் தாககணங்கே.

வேதத்தடிப்பணவப்பொருளேமிகுமேதையுருப்
பூதத்தடிகள்புகழ்புனற்பூதாப்பொற்கொடியே
மாதத்தடியுனும்வல்வினையேற்கென்றும்வண்டுணைநின்
சீதத்தடிகளணிமாமலர்மங்கைச்செய்யவளே. (கசு)

வண்கலிகன்றியடிகள்செய்வாழ்த்துடையாயெனது
கண்கலிதீரநின்காட்சியுங்காதல்கொள்காதிரண்டும்
அண்கலிதீரவபயவின்சொல்லுமளித்தருள்வாய்
மண்கலிதீர்க்குமணியேயணிமாமலர்மங்கையே. (உ0)

விண்டலமோங்குங்குவட்டறல்வேதண்டவித்தகியென்
சுண்டலங்கண்டுகளிக்கக்கனகக்கசேசுரன்மேற்
புண்டலமெய்விட்டியானெழும்போதென்முன்போந்தருள்வாய்
மண்டலங்காக்குமருந்தேயணிமாமலர்மங்கையே. (உக)

பத்திநெறியும்பகர்பிரபத்திப்பதவையுமென்
சத்திநெறிக்குத்தகாதனவாரியன்றண்ணளியின்
சித்திநெறியெற்குச்சித்திக்கச்செய்துதிறம்பலிரா
முத்திநெறிதாவணிமாமலர்மங்கைமுன்னவளே. (உஉ)

சவிப்பெரும்பூணவிர்மார்பன்சுறவத்தகைக்குழைசேர்
செவிப்பெருமானருளாற்றிருக்கோனூசெனிமதுர
கவிப்பெருமானிட்டைகைகூடச்செய்திகலைமறையோர்
அவிப்பெருமாட்டியணிமாமலர்மங்கையம்மனையே. (உ௩)

மகவைமணாளனைமயநின்றூட்டுமடவியர்போல்
உகவையினூமயனத்திடையுற்றுறைபவளே
முகவைநிகர்க்குமிம்மூடனையாளுமுறைமையினின்
றகவையென்சொல்வலணிமாமலர்மங்கைத்தம்மனையே. ()

தேவாதிதேவன்றிருத்தேவித்தன்மையுந்தீச்சிறையின்
ஓவாவிழிபுமுன்னுதும்பரொண்டொடியார்க்கிரங்கி
மேவாதகாவலின்மேவியவர்சிறைமீட்டநின்சீர்
ஆவாவென்சொல்வலணிமாமலர்மங்கையம்மனையே. )

குழவிவிழுகுழிதானும்விழுமன்னைகொள்கையென
இழவுறுமெம்மொடுமீண்டியெந்துன்பமிரித்தலினின்
எழலுறும்வாற்சல்லியாதிகுணங்களிலங்கிடுமால்
நிழலுமிழ்மேனியணிமாமலர்மங்கைநித்தியையே. (உசு)

வினைவயத்தாற்சிறைமேவவிழிபுவிதிர்விதிர்த்து
நினையடைந்தோர்சிறைநீக்கக்கருணையினீவலிந்து
முனையடையாதுசெயலினின்சீர்புவிமுற்றிடுமென்
வினையறுத்தாளணிமாமலர்மங்கைவிளக்கொளியே. (உஎ)

அடலறியாதாரறைபபலவநுமானையங்கி
சுடலெனுநிற்கத்துரோகியைத்துஞ்சுகவென்றுசொல்ல

மிடலிலையோபிறர்துன்பறச்செய்தலின்மேன்மையதே
மடலவிழ்பூங்குழலாயணிமாமலர்மங்கையன்னே.' (உ அ)

விதித்தனவிட்டுவிலக்கியனசெய்வினைஞரையும்
கதித்துக்கைக்கொண்டுகைக்கோடற்குமன்னவைகையுறையாய்
மதித்துக்கொளனின்புருடகாரத்தினல்வைபவமாம்
மதித்துணிமானுநுதலணிமாமலர்மங்கையன்னே. (உகூ)

சாற்றுமவரைக்கைக்கோடலுக்கேதுதயைபொறையாம்
ஏற்றுகுற்றங்களைக்கையுறையாக்கொளற்கேதுசொலில்
ஊற்றுறும்வாற்சல்லியமாகுநின்புகழோதவல்ல
ஆற்றலளித்தாளணிமாமலர்மங்கையம்புயையே. (௩0)

காற்பட்டபுல்லைக்கறியாக்கபிலைதன்கன்றுடம்பின்
மேற்பட்டதானவழும்பின்பமாகவிரும்பலினின்
பாற்பட்டவிப்பண்பினுக்குறழ்ந்தோங்குமொர்பண்புமின்றூற்
சேற்பட்டகண்ணணிமாமலர்மங்கைத்திகழ்விளக்கே. ()

இக்குணமெம்பெருமானினுநின்னுழியெப்பொழுதுந்
தொக்குமிக்குள்ளதுதாய்த்தன்மைத்தன்மத்தொடர்பதனாற்
பொக்குடையேனெனவென்னைப்புறத்தினிற்போக்கவொண்ணு
திக்குமொழிகொளணிமாமலர்மங்கையென்னம்மையே. ()

தோடத்தொடுகுணவானியெனுமித்துகளிரண்டும்
ஈடற்றெழுழியினெனையேற்றுக்கொள்ளுவலென்றிருக்கின்
பீடற்றவவ்விருகுற்றமுநின்கட்பிறங்கிடுமால்
மாடற்றவர்க்கருள்வாயணிமாமலர்மங்கையன்னே. (௩௩)

ஆருயிர்க்கெல்லாநிருபாதிகவன்னையாயிருந்தும்
ஊருமென்னன்மையுமூறுநிறைதென்றுன்றைதனைக்கை
சோருதியேலவ்வுறவிற்கரிறுன்னுந்தாய்க்கருணை
வாருதியேயணிமாமலர்மங்கைவரோதயையே. (௩ச)

என்னலக்கண்கண்டிரங்காமையானுமென்னேதநெஞ்சில்
நன்னலமாகக்கொளாமையினானுநின்னற்கருணை
மன்னலவாற்சல்லியத்திற்குந்தோடம்வருமருங்குல்
மின்னலங்கொண்டவணிமாமலர்மங்கைமெய்ப்பொருளே.

எம்பெருமானையுமேதங்கள்காணவொட்டாவியற்கை
யெம்பெருமாட்டியவைநினைந்தென்னையெடேனெனிவ்
வம்புவிதன்னில்விலக்கியனசெய்யுமாறொக்குமால்
விம்பவிதழாயணிமாமலர்மங்கைவித்தகியே. (௩௬)

என்குற்றமாதியவெண்ணுதுகைக்கொண் டெம்மானுடனே
நன்குற்றடையச்செய்நீயேபொச்சாந்தென்னவைநினைக்கின்
புன்குற்றமாகும்விதித்தனவிட்டபுகருமுண்டென்
றன்குற்றுநீக்கணிமாமலர்மங்கைத்தயாம்புதியே. (௩௭)

ஏகாக்கியாதியெழுநூறரக்கியரேசினைநீ
வாகாக்கிக்கொண்டதேவனும்வயங்கிடும்வாய்மையன்றே
சேகாக்கியவினைதீர்த்தெனையாட்கொள்ளல்சீரியதே
பாகாக்கியசொல்லணிமாமலர்மங்கைப்பங்கயையே. ( )

நபாலம்பனரினென்னுளைக்கழித்துநல்லோர்கடமை
உபாலம்பனஞ்செய்தொறுத்தேயுரணிலியாவொழிந்தேன்
கபாலம்பனந்தெறுங்காலத்தெனக்குநின்கான்மலரே
சுபாலம்பனமாமணிமாமலர்மங்கைத்தூயவளே. (௩௯)

சுரமத்தமாதங்கமானதவாவிச்சுகோதிமத்தின்
வரமத்தமென்னடைமாதர்விழைச்சின்கண்மையல்கொளென்
பிரமத்தைப்பேர்த்துப்பெருஞானந்தந்திப்பிறவிதனைச்
சரமத்ததாய்ச்செய்யணிமாமலர்மங்கைத்தற்பரையே. (௪0)

என்னகத்தாளெறிந்தென்னைத்திருத்துகைக்கென்னுபலம்
என்னகத்தாரியையாயிருப்பர்டண்ணிமகரனோர்
என்னகத்தாமரையேய்கழலாளிலங்கப்புமலை
என்னகத்தாணம்மணிமாமலர்மங்கையென்பவளே. (௪௧)

மும்மைப்பொழிற்குமுதல்விமுயற்கூடெனுமுகத்தி
மும்மைப்பொழுதுமுனிவர்தொழும்பதமுண்டகத்தி
மும்மைச்சுடர்களினூங்கவிர்மூர்த்தத்திமோசனிப்பாள்
மும்மைப்பளகுமணிமாமலர்மங்கைமுன்னவளே. (௪௨)

மூதண்டமுற்றவும்பெற்றமொய்த்தாய்மொய்ச்சிகரநன்னீர்
வேதண்டத்தானுதலாமெனுமன்மதவேள்கரங்கொள்

கோதண்டத்தாள்கடைநாளர்ச்சிராதியிற்கூட்டியெனை
மாதண்டத்தப்புறஞ்சேர்ப்பாளணிமாமலர்மங்கையே. ()

இலம்படுமெய்யிற்றிகழ்பொருள்யாவுந்திளைத்துநிற்கும்
பொலம்படுபூணவிர்பூமகளேபொற்புனற்பொருப்பார்
நலம்படுநின்கழற்கென்னாளுஞ்சோத்தநவின்றுதொழா
திலம்படுவேனென்னணிமாமலர்மங்கையிந்திரையே. ()

கட்டுவடமலையான்மண்ணிமார்பிற்கதிர்த்துறையுங்
கடடுவடப்பூங்கதுப்பாய்கடையிலென்கன்மமெலாங்
கட்டுவடகிரிநேர்கசுமேல்வந்தெற்காத்திகளக்
கட்டுவடத்தாயணிமாமலர்மங்கைக்கற்பகமே. (சரு)

பூண்டாத்திரிக்கும்புராணவினையிற்பொருந்திவரும்
வேண்டாத்திரிகுணமெய்யின்னுமேவாவிரகுசொல்வாய்
காண்டாத்திரிக்கமலாலயையேயிக்கடல்புடைசூழ்
மாண்டாத்திரியேர்க்கருளணிமாமலர்மங்கையன்னே. ()

கவைத்தாட்கரும்பகடூர்திகபம்வந்துகட்டுமுன்னின்
சுவைத்தாட்டரிசனந்தந்தாளவென்னெதிர்தோன்றுதியால்
நவைத்தாளவித்தைமுதலனினைநிதநட்பவர்கட
கவைத்தாளருணிதியேயணிமாமலர்மங்கையன்னே. ()

கடிகொண்டகற்பகக்கண்மலர்க்கண்ணிக்கடவுளரும்
படிகொண்டபண்ணவரும்பன்மறையும்பகர்துதிகள்
குடிகொண்டநின்னடியென்றனுளங்குடிகொள்வதென்றோ
தொடிகொண்டகையணிமாமலர்மங்கைச்சுகாவகையே. ()

மிச்சையடியனின்மேதகவொன்றும்விதந்தறியாக்
கொச்சையனின்றன்குலவடியார்குழுக்கூடிமலர்
செச்சையணிந்தவர்சேவடியேத்தித்தெருளடைவான்
விச்சையளித்தாளணிமாமலர்மங்கைமெய்விளக்கே. ()

குலையளியார்பூகமொழுகிவண்டாலுங்குளிர்பொழினீர்
மலையளிமாமருந்தேமணியேநன்மரகதமே
நிலையளிநீள்கடலேநினைநேடுமிந்நீசனுய்யத்
தலையளிசெய்தாளணிமாமலர்மங்கைத்தற்பரையே. (ருo)

விரைக்கின்றபூம்பொழில்வீறுதகாத்திரிவித்தகியே
திரைக்கின்றவிம்மெய்சிதையாமுனம்பொற்சிறுசதங்கை
குரைக்கின்றநின்கழல்கொண்டாடியுய்யக்குறிக்கொளுல
குரைக்கின்றகீர்த்தியணிமாமலர்மங்கையொண்மணியே.()

சுருக்கவிபெய்துசெந்தீநாளுமோம்புந்தொழுகுலத்தோர்
செருக்கவிசேடத்துவகிட்டையோர்தொழுஞ்சேவடியாய்
திருக்கவிர்ப்பூநிறச்செய்யவளேயுட்டிருக்கறுத்தென்
திருக்கவிர்வாயணிமாமலர்மங்கைத்திருமகளே. (ருஉ)

எண்கரிமாவொலிநீங்காதநீர்மலையேய்ந்தசெல்வி
வெண்கரிவேந்தன்விபூதியும்வீழணிமாமகிமா
திண்கரிமாமுதற்சித்தியும்வேண்டிலன்செப்புமிதற்
கொண்கரிநீயேயணிமாமலர்மங்கையுத்துங்கையே. (ருங)

பொருப்பணியாகும்புனன்மலைமேவும்புராதனையே
குருப்பணிலங்கோகனகங்குலிசங்கொடிமுதலாம்
விருப்பணிரேகைவிளங்குநின்றுளில்விதம்விதமாந்
திருப்பணிதந்தாளணிமாமலர்மங்கைச்செந்திருவே. ()

மிகுந்தத்தைமேவியடியனிச்சட்டகம்விட்டெழுங்கான்
முகுந்தத்தலைவனுநீயுமணிமலைபோன்முடுகுஞ்
சகுந்தத்தலைவன்புயம்வந்தளித்திர்சலத்தடம்வாழ்
நகுந்தத்தைச்சொல்லியணிமாமலர்மங்கைநாயகியே. ()

குவட்டுமரகதவில்லைப்புல்லென்றுகுளிர்மதிமான்
கவட்டுந்தண்ணீர்மலையாயெனையாதியங்காலந்தொட்டுச்
சவட்டும்வினையைச்சவட்டிப்புரந்தருட்கண்கருணை
உவட்டிடுங்கண்ணணிமாமலர்மங்கையுயிர்க்குயிரே.(ருசு)

கொடுமுடியாதிநற்கூழ்மணிதுன்னவிற்கூடமகட்கோர்
நெடுமுடியன்னநன்னீர்மலையாயிந்தநீசன்விழுந்
தொடுமுடிவில்பவப்பௌவத்தெடுத்தாள்சுருதிக்கையால்
நடுமுடிபற்றியணிமாமலர்மங்கைநாயகியே. (ருஎ)

அம்பரக்கம்பலம்வேய்ந்துநொவியலங்கலவிர்
அம்பணவத்திரியத்தாணிதன்னிலரசியற்றும்

எம்பெருமாட்டியெளியேன்முறைசெவியேற்றுச்செங்கோற்
றம்பமளித்தியணிமாமலர்மங்கைச்சற்குணியே. (ருஅ)

மருத்தமலர்ப்பொழில்சூழ்திருநீர்மலைமாமகளே
திருத்தமுடனின்றிருத்தாளிற்றேமலர்சிந்துவித்துப்
பொருத்தமுடனின்றன்பூசனைசெய்வித்திதன்புன்பிறவி
வருத்தமறுத்தாளணிமாமலர்மங்கைவானவியே. (ருகூ)

ஓயாத்திரைபினுகண்டெழுதன்பத்துடற்பருவஞ்
சாயாத்திரைநரைசார்ந்தனகாலன்றமர்கயிற்றுற்
காயாத்திரைப்புழிக்கண்முன்னர்வந்தெனைக்காத்தருடண்
மாயாத்திரைதீர்த்தணிமாமலர்மங்கைமாமகளே. (கூ0)

தசும்புந்திடுதனத்தையலர்மைபலிற்றங்கிமண்ணும்
விசும்புந்திரிதருவேனுதின்பொன்னடிமேவுவன்கோல்
விசும்புந்தியோங்கறல்வெற்புறைவாய்கல்விரைமலர்த்தேன்
அசும்புந்திருக்குழலாயணிமாமலர்மங்கையன்னே. (கூக)

மானுறழ்நோக்கியர்வாஞ்சைபின்மூழ்கிமதிமயங்கிக்
கானுறழ்தீவினைகண்டகயவன்கடவுளர்தம்
ஆனுறழ்நின்னையடைந்தனன்காத்திபருட்பாவை
தானுறழ்மைக்கண்ணணிமாமலர்மங்கைத்தம்மனையே. ()

அதர்த்தவகமங்கலண்மியரிகள்றுங்கனிகள்
சிதர்த்தவிற்செப்பங்கள்சேருமடுநீர்ச்சிகரியன்னாய்
பதர்த்தபடிறனைப்பாங்குடன்காத்தனின்பாரமதாம்
மதர்த்ததிருவிழியாயணிமாமலர்மங்கையன்னே. (கூஉ)

பிறையேக்கறுப்பப்பிறங்கிடுமொண்ணுதலாய்புவியின்
பொறையேக்கறுப்பப்பொலிபொறையாய்தெய்வப்பூவையர்கள்
நிறையேக்கறுப்பமிர்நிறையாய்நின்னடியனெஞ்சக்
குறையேக்கநீக்கணிமாமலர்மங்கைக்குசேசயையே. (கூச)

கருப்புச்சிலையன்கணைவிளைவித்தகடும்பவமாம்
இருப்புச்சிலைபினிறுமாப்படக்கியிகழ்தலைத்
திருப்புச்சிவணமோய்தாக்கியெளியனை யென்றுகொணிர்ப்
பொருப்புச்சிவனுமணிமாமலர்மங்கைப்பொன்மகளே. ()

காற்றுப்பொரக்கழைக்கோற்றேன்ஞெமிர்ந்தென்றுங்கானறவ
ஆற்றுப்பெருக்கொடருவிப்பெருக்குமமைந்தெவனுஞ்
சேற்றுப்பழனஞ்செயுநீர்மலையாய்சிறியன்முறை
யேற்றுப்புரத்தியணிமாமலர்மங்கையிந்திரையே. (சுசு)

ஒன்பான்முருகைகொண்டொளிர்கோளுடுக்களினூங்குதிகழ்
ஒன்பான்மணிகொண்டுஞற்றுமிழைகளொளிர்களத்தாய்
ஒன்பான்றுளையுடல்வீழ்கால்வந்தாளொழியாதவுற
வொன்பானுமெண்ணியணிமாமலர்மங்கையுத்தமியே. ()

பான்மதியைப்புறங்கண்டெட்கமுத்தம்படுமுகத்தாய்
நான்மதியைக்கொண்டுனைவழுத்தாதெட்டுநாற்றினுக்கும்
மேன்மதியைக்கடந்தெய்த்தேனென்செய்வல்விழைந்தருள்வாய்
வான்மதிக்கும்புகழாயணிமாமலர்மங்கையன்னே. (சுஅ)

குடப்பால்வளைகடவழ்வயனீர்க்குன்றக்கோட்டங்கொண்டாய்
திடப்பாடுடனின்றிருவடித்தொண்டுசிறந்துசெய்யுங்
கடப்பாடிலாதகயவனையாளுங்கடனினதே
படப்பாவையேயுமணிமாமலர்மங்கைப்பண்ணவியே. ()

நித்தியமாகநிகழ்த்தும்பொருளினிகாயக்கெல்லாந்
தத்தியநீயன்னைமாறந்தையென்னுஞ்சதுமறைகள்
சத்தியமாயினென்றத்தைத்தணந்திடத்தக்கவர்யார்
நத்தியளித்தியணிமாமலர்மங்கைநாயகியே. (எ0)

மாளாவினையான்மறுகியயான்செய்மனுத்தனைநீ
கேளாமறுமொழியொன்றுங்கிளக்ககில்லாதுவர்த்து
வாளாவிருத்தலெவ்வையுகக்கண்ணும்வழக்கலகாண்
தோளாமணியணிமாமலர்மங்கைச்சுடர்மணியே. (எக)

கருமக்களஞ்சியங்காஞ்சிரைநேர்கயவோனெனினுந்
தருமக்கடலேதவிர்த்தியெந்துன்பென்றுசார்ந்தவர்க்குப்
பெருமக்களோர்மொழிபேசிற்பிழையென்பிரமன்றந்தை
மருமக்கலாநிதியேயணிமாமலர்மங்கையன்னே. (எஉ)

பொருளாருச்சைச்சமாதிவழக்கெனப்போற்றுதியேல்
அருளாளனம்பிக்கறுமொழிகூறலவத்தியமாந்

தெருளாருமற்றைநிலைக்குஞ்சிறப்பிலவாஞ்சிறியேன்
மருளாய்ந்தறுத்தியணிமாமலர்மங்கைமன்னவியே. (எங)

அருளாளனண்டர்பிரான்கச்சிநம்பியடிகளுக்கோர்
இருளாரூங்காலத்திராவணமேந்தியியங்கியதும்
மருளாகுநீர்மலைவாழுங்கருணைமகோததியே
இருளாருங்கூந்தலணிமாமலர்மங்கையிந்திரையே. (எச)

முந்தைமறைகளநந்தமுநாளுமுறைகளிட
எந்தைவெஃகாவண்ணலெம்பத்திசாரனொனுமடிகள்
பைந்தமிழ்ப்பின்சென்றதென்னும்பாணிப் பறம்புமன்பர்
சிந்தையும்வாழுமணிமாமலர்மங்கைச்செந்திருவே. (எரு)

ஆழிவளைதொண்டைமானெனும்பற்காவமலை
ஊழிமுதல்வனுகந்தன்றளித்ததுமுண்மையன்றும்
வாழியவென்றடியார்கள்வழுத்தும்வனமலைவாழ்
ஆழிவிரற்கையணிமாமலர்மங்கையம்புயையே. (எசா)

அத்தனரங்கநகரப்பன்புத்தூரடைந்துமுனம்
புத்தமுதொத்தநங்கோதையைவேட்டதும்பொய்யெனலாம்
நித்தமுநீர்மலைவாழ்நின்மலையேநெடுந்தகையோர்
சித்தமுகக்குமணிமாமலர்மங்கைச்செய்யவளே. (எள)

திகழ்ந்தொளிர்சீர்த்திக்குறுங்குடிநம்பிக்குந்தேமறையோர்
புகழ்ந்தொளிர்சீர்த்தியெதிராயமாமுனிபுங்கவற்கும்
நிகழ்ந்ததொர்நீதிச்செயல்களும்பொய்யாநிகழ்த்துமெனை
யிகழ்ந்துவிடற்கவணிமாமலர்மங்கையென்னம்மையே. ()

நாதமுனிகளெனுமெம்மடிகட்குநற்குருகைப்
போதமுனிவன்புராணத்தமிழ்மறையும்பொருளும்
நீதமுறமுன்றிருவாய்மலர்ந்ததுநீர்ப்பொறியாம்
வேதமுதல்வியணிமாமலர்மங்கைவித்தகியே. (எகூ)

சீர்க்கண்டியாதிதிருவாபரணந்திகழ்களத்தாய்
நீர்க்கண்டியூரடியூர்களினீர்மலைநேர்ந்துகந்தாய்
மார்க்கண்டியோடுபிருகுக்கருள்செய்வகையெவனென்
சூர்க்கண்டிதஞ்செய்யணிமாமலர்மங்கைத்தொல்லமுதே.

சக்கரவர்த்துலத்தாரணியாடொண்டைமானெனும்பேர்ச
சக்கரவர்த்திக்கருள்செய்தவாறெவன்றண்சலில
சககரம்வர்த்திக்குந்தாயேயெனக்கருடையலர்கள்
சக்கரவர்த்தியணிமாமலர்மங்கைத்தம்மனையே. (அக)

பன்னுமருச்சையினீயுமெம்மானும்பகுத்தசெயல்
இன்னும்பலவுண்டவையெளியேனாலிசைப்பரிதால்
உன்னுமென்னின்னலொழித்தாளவுள்ளத்துவத்தியெங்கும்
மன்னும்பெரும்புகழாயணிமாமலர்மங்கையன்னே. (அஉ)

கருவுருவாங்கண்ணன்காதலியாகியகாரணிநின்
றிருவுருநாடொறுஞ்சிந்தையிற்சிந்திக்குஞ்செல்வமுற்றுற
கருவுருக்கட்டறுங்கார்தோயுநீர்மலைக்காமவல்லி
மருவுருவாகியவல்லியணிமாமலர்மங்கையே. (அங)

அபிபூதமாயையறுத்தாளும்வல்லியவிரனந்த
வபிதானவல்லியணிநீர்மலைவாழசாதவல்லி
அபிராமவல்லியடுத்தோரையெவ்வாற்றினுமளிக்கும்
அபிமானவல்லியணிமாமலர்மங்கையாம்வல்லியே. (அச)

பொங்கணுமேருப்பொருப்பெனவேபுகலும்பொருள்கள்
எங்கணுமேவியிருக்கின்றநீயெளியேனுடலாம்
இங்கணுசிற்றியிதன்றுயர்யாவுமிலக்குகின்றன்
அங்கணுக்காகிலைகொல்லணிமாமலர்மங்கையன்னே. ()

சன்மம்பலபலசெய்துயிர்க்குந்தலைவியென்றன்
கன்மங்கடைப்பிடித்தென்னைக்கைவிட்டிடக்கண்ணிநனி
வன்மஞ்செயினிந்தமண்ணையென்செய்வல்வதானியைக்குத்
தன்மம்மிதுவன்றணிமாமலர்மங்கைத்தம்மனையே (அரு)

செருத்தற்கபிலைதன்றீம்பானெய்யுண்டுசிறுத்தவுடல்
பருத்தற்குவேண்டும்பணநேடிக்காலத்தைப்பாழ்ப்படுத்த
வருத்தற்றொழிலினன்வானாட்டுப்பேரின்பவாழ்வுநுகர்ந்
திருத்தற்கென்செய்வலணிமாமலர்மங்கையிந்திரையே. ()

எற்றுந்திரைக்கடலெல்லைப்புவிபிறந்தெய்ப்புறுதன்
முற்றுங்கணித்திடினெவ்வொன்றுமென்பிழையாய்முடியுஞ்

சற்றுந்தவறிலேநின்றுற்றவத்தர்சரணடைந்து
பற்றுந்திருத்தாளணிமாமலர்மங்கைப்பார்க்கவியே. (அஅ)

சுந்தரிநீர்மலேச்சோமாநனேவெண்சுரிமுகநேர்
கந்தரிகந்தக்கமலாலயத்திகராம்புயத்தி
அந்தரியாதியர்வாழ்த்தடியம்போருகத்தியம்ம
மந்தரிதேர்திமனனேயணிமாமலர்மங்கையே. (அகூ)

தென்னுதெனுவென்றுதேன்பாடுங்காநீர்ச்சிகரியன்னுய்
மன்னுதெனுவிம்மகிப்பொருளோவ்வொன்றுமற்றுமன்ற
உன்னுதெனுமனமுன்பெயரன்றிமற்ருேர்பெயரும்
பன்னுதெனுவணிமாமலர்மங்கைப்பராபரையே. (கூ0)

கயப்படுதாமரைக்காடலர்ந்தன்னநின்காட்சிதந்து
பயப்படச்செய்யென்படிவமுநாளும்படர்பொறிகள்
வயப்படச்செய்கியென்வஞ்சகநெஞ்சுடன்யானுமென்றன்
மயப்படச்செய்தியணிமாமலர்மங்கைமாமகளே. (கூக)

சித்தைத்தொடர்பைச்சிதைத்துநின்சீர்த்தித்தெளியமுதப்
பாத்தைப்பருகிப்பகாப்பரமானந்தப்பத்தியுற்றுக்
கூத்தைப்புரிநின்குலவடியார்குழுக்கூட்டியென்றன்
ஊத்தைக்குடிநீரணிமாமலர்மங்கையொள்ளொளியே. ()

உடங்குறுதீவினையென்றுமுட்டற்றவுழல்புழுப்போல்
நுடங்குறுமெற்குநின்னூபுரமாக்கழனைச்சிநிழற்
படங்குறுமேவிப்பரவையினூங்குபடரவித்தை
யடங்குறமுய்வலணிமாமலர்மங்கையம்மனையே. (கூரு)

ஒளிததும்பும்பணியாடைநல்லுண்டியொளிர்புனறேத்
துளிததும்புமலர்கொண்டுநிற்பூசித்துத்தோத்திரித்துக்
களிததும்பிக்கண்கணீர்வார்ந்தெக்காலுநிற்கண்டுநிற்க
அளிததும்பச்செய்யணிமாமலர்மங்கையம்புயையே. ()

மாற்றற்கரியநின்மாயையைமாற்றிமனமுவந்து
போற்றற்கரியநின்பொன்னடிபோற்றப்புரிந்தெவரும்
பாற்றற்கரியபவப்பிணிபாறப்பணித்திவிண்ணோர்
சாற்றற்கரியாயணிமாமலர்மங்கைத்தம்மனையே. (கூரு)

பூந்தாற்றுக்கந்திப்பொழில்சூழ்புனன்மலைப்புண்ணியையே
சாந்தாற்றிவீசிடலாதிப்பணிகணின்சந்நிதிக்குப்
போந்தாற்றகில்லாப்புலையனின்றுளிற்புகக்கருணை
யீந்தாற்றுவாயணிமாமலர்மங்கையிறையவளே. (௯௬)

ஐயெனச்சொல்லுமமித்திரனென்னையடர்த்திடுங்கால்
ஒய்யெனவல்விரைந்தோடிவந்தென்றுன்பொழித்தருள்வாய்
மெய்யெனநிற்றிநினைமேவினோர்க்கங்ஙன்மேவலர்க்குப்
பொய்யெனநிற்றியணிமாமலர்மங்கைப்பொன்மகளே. ( )

ஆகாத்தவண்ணறன்னகமுமப்பத்திரியுமுறை
மாகாத்தமாமலர்மாளிகையாவென்மனமுடம்பு
நாகாத்தல்செய்யாநவையினிந்நாயனையேனுழக்குஞ்
சோகாத்தனீத்தியணிமாமலர்மங்கைச்சுந்தரியே. (௯௮)

நாரினுஞானத்தினும்யாப்புண்ணீர்மலைநாயகியே
பாரினும்விண்ணினும்பாதலந்தன்னினும்பற்றறுத்தோர்
யாரினும்சிறியனுகுவனீநின்னருட்கடைக்கண்
கூரினுசிதமணிமாமலர்மங்கைக்கோமகளே. (௯௯)

கருவிகரணங்கலங்கக்காலத்துனைக்கண்டுகண்ணா
அருவியின்வாரப்புள்குடல்போர்ப்பவவசநனி
மருவியிருக்கப்பெறினெனைச்சூழ்ந்தடும்வல்வினைகள்
வெருவியொழியுமணிமாமலர்மங்கைமெய்ப்பொருளே. ( )

வாழ்கநன்னீர்மலைவாழியநீர்வண்ணமாயனென்றும்
வாழ்கமறையவர்வாழ்கவடமொழிமாமறைகள்
வாழ்கபதின்மர்கள்வாழ்கநல்வண்டமிழ்மாமறைகள்
வாழ்கவணிமாமலர்மங்கையன்னையிவ்வையகத்தே.

---

நீர்மலைவாழுமணிமாமலர்மங்கைநின்மலைக்கோர்
சீர்மலிசெந்தமிழ்ப்பாமாலைநூறிதிகழ்புகழின்
ஏர்மலிகச்சிக்கடாம்பியிராமானுசவிறைவன்
நார்மலியுள்ளத்தெதிராசதாசனவின்றனனே.

**அணிமாமலர்மங்கைத்தாயார் மாலை**
**முற்றிற்று.**

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருநின்றவூர்

# என்னைப்பெற்றதாயார் மாலை.

## காப்பு.

நனையீன்றநாண்மலர்ககா நாப்பணுறைநின்றை
யெனையீன்றதாயி னிணையில்—கனையீன்ற
நாபுரத்தாண்மீதுகவி நோன்றுடைசாத்தக்குருகை
மாபுரத்தான்காப்பன் மகிழ்ந்து.

## நூல்.

திங்கடினகரனன்னசங்காழிதிகழ்திருக்கைப்
பங்கயநோக்கெம்பிரான்பத்தராவிப்பரமன்மகிழ்
பங்கையையேயென்பவப்பிணிபசறப்பரிந்தபய
அங்கைகவிநின்றவூர்வாழெனைப்பெற்றவம்மனையே. (க)

அமுதவுணவினரேத்தவமுதவளக்கர்வந்தாய்
அமுதமொழிதொடுத்தன்பிற்பழிசசுமடியவர்கட்
கமுதமுதவுந்திருவேயடியன்கணன்புவைத்தாள்
அமுதகிரணமுகத்தாயெனைப்பெற்றவம்மனையே. (உ)

பொருட்கண்ணும்பூவையர்கண்ணும்புவிக்கணும்பொங்கவித்தை
யிருட்கண்ணிரீஇநின்னடியாரிணையடியென்றுமெண்ணுந்
தெருட்கண்ணுதவியென்செஞ்ஞானகன்னிலைதிண்ணநண்ண
அருட்கண்புரிநின்றவூரவாழெனைப்பெற்றவம்மனையே. ()

பிறந்தங்குமிங்குமபெரிதலைப்புண்டுபெயர்த்துமுடல
இறந்தங்குமிங்குமிடும்பையுற்றேனினியேனுநின்றன்
நிறந்தங்குதாணிணைந்துய்யவோர்சூழ்ச்சிநினைத்தருள்வாய்
அறந்தங்குநின்றைப்பதிவாழெனைப்பெற்றவம்மனையே. ()

தீக்கால்புனல்விண்புவிசெர்செகத்தைச்செழுங்கருணை
நோக்காலளிக்குமளிக்குநொதுமலர்நோக்கருடகும்
வாக்காலொருவகைவாசிவகுக்கின்லண்வாரிதியும்
ஆக்காலறலுநிகராமெனைப்பெற்றவம்மனையே. (ரு)

அடுக்கலுறுமண்டகோடியுளார்ந்தவனைத்துயிர்க்கும்
இடுக்கண்செய்மாயையொரீஇக்காத்தளிக்குநின்னின்னிசைக்கும்
எடுக்கும்பிறர்தம்மிசைக்குமுவமையிசைக்கின்முகட்
டடுக்கலனுநிகராகுமெனைப்பெற்றவம்மனையே. (௬)

கலைக்கும்புராணவகைக்குந்தலைமைக்கனமறையின்
றலைக்குமெட்டாநின்றகவார்குணகணச்சால்பினுக்கும்
மலைக்குமற்றோர்மாட்சிமைக்குமுவமைவகுத்திடற்குண்
டலைக்குங்கழிக்குநிகராமெனைப்பெற்றவம்மனையே. (௭)

காணிக்கருமட்கடம்போன்றகாயங்கழிந்திடுங்கான்
மாணிக்கச்செப்பின்வருந்திப்பியவுடன்மன்னிமறை
வாணிக்கணங்கொடுவாழ்த்தடியார்குழுமன்னவைப்பாய்
ஆணிக்கனகமுடியாயெனைப்பெற்றவம்மனையே. (௮)

கூரத்தினுயர்ந்தோனென்றெனைநின்கொழுநனென்றுங்
கோரத்தினுயரிச்சிறையிட்டனன்கூய்ப்புருட
காரத்தினலெனைக்காத்தருள்வாய்நற்கனகமணி
ஆரத்தினயின்னமுதேயெனைப்பெற்றவம்மனையே. (௯)

தன்புடையன்பிலனென்றுசுதந்தரனாந்தலைவன்
என்புடையிச்சிறையிட்டனனென்றுமிவர்ந்தெழும்பேர்
இன்புடைவீட்டினையெய்தும்விரகொன்றிழைத்தருள்வாய்
அன்புடையார்க்கரணாவாயெனைப்பெற்றவம்மனையே. ()

ஓராவியற்கையொருமாயையானின்னுடையவன்செய்
தீராவியற்கைச்சிறுமியர்சிற்றின்பச்சேற்றையொரீஇத்
தூராவியற்கைச்சுடர்ச்சடரக்குழிதூர்த்துநின்பால்
ஆராவியற்கையவாநல்கெனைப்பெற்றவம்மனையே. (௧௧)

கவித்தையவேடனுங்காலன்றமருஞ்செய்கவ்வைதம்மாற்
றவித்தையவோவம்மவோவென்றரற்றுஞ்சமயமதிற்
புவித்தையலோடுநின்னன்பனுநீயும்புரிந்துவந்தென்
அவித்தையினாற்றலறுத்தாளெனைப்பெற்றவம்மனையே. ()

தீர்த்தப்பெருமைத்திருநின்றைவாழ்திருவேகொடிய
தூர்த்தப்படிறர்தொடர்பாற்றொடர்ந்ததுகளையெல்லாந்

தீர்த்தப்புறநின்றிருப்பதஞ்சேர்ந்துயத் திண்ணமெண்ணும்
ஆர்த்தப்பிரபன்னனாச்செயெனைப்பெற்றவம்மனையே. ()

மலக்கண்மகிழ்புழுமானநிரந்தரமம்மர்செய்யும்
நிலக்கண்ணிதமுநன்னீலக்கண்ணேரிழையார்நிதம்பப்
பிலக்கண்விரும்பும்பெரும்பேதைமையிற்பிறந்திறக்கும்
அலக்கண்டவிர்த்தலறமாமெனைப்பெற்றவம்மனையே. (கச)

பூத்திகழ்பொய்கைபொலிதிருநின்றைப்புரித்திருவே
ஆத்திகநாத்திகனாகியறத்தைவிட்டல்லவைசெய்
தோத்திகழ்ந்தேனென்னுறுபிழைநீத்தென்றுமுள்ளத்தூண்மை
யாத்திகனாக்கியருள்வாயெனைப்பெற்றவம்மனையே. (கரு)

மூலைப்பாலருந்தாமுதிர்ஞானமாமுனிமுன்னியருள்
கலைப்பாற்பொருளென்கருத்திற்பதித்தவன்காட்டுநெறி
நிலைப்பாலிருக்கநினைத்தருள்வாய்நின்றைநித்திலமே
அலைப்பாலுததியமுதேயெனைப்பெற்றவம்மனையே. (கசா)

படியார்தொடர்பைப்பரீஇப்பரமானந்தப்பத்திவெள்ளப்
படியார்படியிற்பயில்வித்தெனைநின்றன்பங்கயத்தாட்
கடியாரடியார்க்கடியாரடியார்தமக்கடியார்
அடியார்க்கடியவனாச்செயெனைப்பெற்றவம்மனையே. (கள)

ஆழ்வார்கடம்புகழாரியர்தஞ்சீரமைத்தமுத
வாழ்வாரநல்கிடும்வண்டமிழ்மாலைவகுத்துரைத்தென்
றூழ்வார்பிறவிதணப்பானருள்சன்மசாகரத்தில்
ஆழ்வாதமக்கம்பியாவாயெனைப்பெற்றவம்மனையே. ()

மருங்கலநீர்வயல்சூழ்நின்றைமாமகளேவினையாஞ்
சிருங்கலந்தேய்க்கும்படைபவசிந்துவிற்சேர்ந்தெடுக்கும்
பெருங்கலநின்பெயர்பேசுமென்சென்னிப்பெருமகுட
அருங்கலநின்னடியாகுமெனைப்பெற்றவம்மனையே. (கசு)

கார்க்கோலமாயவன்கண்மணியாநின்றைக்காரணிநின்
சீர்க்கோலங்கண்டுசிறக்காதசிந்தையன்றீயசமன்
போர்க்கோலங்கொண்டுபொருக்கெனவென்னுழைப்போதருங்கால்
ஆர்க்கோலமிட்டழைப்பேன்சொல்லெனைப்பெற்றவம்மனையே.

விதுரன்சுதன்மாவிழைகூனிமுன்னம்விமலனுக்கு
மதுரவடிசிலுமாலையுஞ்சாந்தும்வழங்கியபோற்
சதுரர்கள்வாழ்கின்றைத்தாக்கணங்கேகிற்குத்தண்பிறவி
பதுரனளிக்கவலனோவெனைப்பெற்றவம்மனையே. (உக)

முத்திநிலையைமுகுந்தனைநின்னைமொழிமறைவைச்
சித்திசெய்தேசிகனைச்சீர்ச்சமந்தமஞ்சேர்க்கவல்ல
சத்தியவன்னதழைத்திடச்செய்திதழங்கிடும்பால்
அத்திபெறுநந்தனையேயெனைப்பெற்றவம்மனையே. (உஉ)

வலைப்படுமீனினிவ்வையத்துமாயைமயக்கவென்று
நிலைப்படுநெஞ்சமிலாதுழல்வேனுக்குநேயநின்பாற்
றலைப்படும்வண்ணந்தயைசெய்துகாத்திதரையுடுத்த
அலைப்படுநித்திலமன்னாயெனைப்பெற்றவம்மனையே. (உங)

தாதேயுமிச்சடந்தள்ளியிலிங்கத்தனுவுடனே
மீதேயமையர்ச்சிராதிவழியினைமேவிடுங்காற்
பாதேயநின்பெயர்பாடல்பரிக்கும்பரம்பொருணீ
ஆதேயநானெனையாள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

கோணைப்படுநின்பொருள்கொளனீகுறிக்கொண்டுகொள்ளும்
ஊணைத்தடுத்தலுயர்குருமந்திரமுள்ளுறைதே
ஏணைப்பரிபவஞ்செய்தலிவற்றையிரித்தெனைநின்
ஆணைப்படியொழுகச்செய்யெனைப்பெற்றவம்மனையே. ()

சூரியையிந்தத்துவக்கெனைவிட்டுத்தொலைதுணையுஞ்
சீரியையாரியன்செய்ந்நன்றியென்றுமென்சிந்தைதனிற்
கூரியையன்பிற்குறித்துய்யநீகுறிக்கொண்டருள்வாய்
ஆரியையேநின்றவூர்வாழெனைப்பெற்றவம்மனையே. (உசு)

நினக்குமெனக்குமுபகாரகன்குருநேருதவி
தனக்குத்தகுதியதாகுங்கைம்மாறுசமைக்கவெணின்
எனக்குப்பலருந்தகுபொருளெங்கணுமில்லையென்ப
அனக்குமரன்றொழுந்தாளாயெனைப்பெற்றவம்மனையே. ()

சீர்பூத்தநின்றன்கல்யாணகுணத்தின்சிறப்பினையும்
பார்பூத்தநின்னருட்பத்தர்கள்பாவனப்பண்பினையும்

நார்பூத்தவென்னெஞ்சிருட்டியருளுதிரைப்புழனத்
தார்பூத்தநின்றைப்பதிவாழெனைப்பெற்றவம்மனையே. ()

தெருடிகழ்வண்ணஞ் சிருட்டிதொடங்கித் தினஞ்செயுநின்
திருடிபரம்பனாகேழ்பெறவின்னேகிளத்திடுமைம்
பொருடிரிபுந்தியென்புந்தியினுள்ளிதிற்போந்துதிக்க
அருடிதிருநின்றையூர்வாழெனைப்பெற்றவம்மனையே. ()

ஐந்துவிதமாமரும்பாதகத்தைப்புமாந்துவிக்கும்
ஐந்துபுலனுமவிக்கறியேனறிதற்கரிய
ஐந்துபொருள்களுமன்னவையோவ்வொன்றினுமடங்கும்
ஐந்துபகுப்புமறிவியெனைப்பெற்றவம்மனையே. (கூ0)

பாவப்பரப்புப்பெரும்புறவாழிப்பரப்படக்குங்
கோவத்துருப்பங்கொடுமுற்றககோரங்குளிர்த்திவிடும்
ஓவத்தமில்லனவன்னவைநீக்கியுணர்வுதந்தாள்
ஆவத்தரும்பொருள்வைப்பேயெனைப்பெற்றவம்மனையே.

காலமெலாம்விழைச்செய்தினுமாயிரங்கண்ணன்றன்பேர்
சாலமெலாஞ்செயுந்தையலராசைதவிர்தலில்லை
ஞாலமெலாமிதைநசசிநசிக்குநவிற்றுமிதற்
காலமெலாநல்லனவாமெனைப்பெற்றவம்மனையே. (கூஉ)

அகற்றவொண்ணுவன்பமைந்திடுமன்னையரிசினத்தால்
அகற்றினுமன்னுளருணினைந்தேயழுமக்குழவி
இகத்திலெனும்பெரியோர்மொழிகேட்டிலையோவெனைநீ
அகற்றிவிடுதலறமன்றெனைப்பெற்றவம்மனையே. (கூகூ)

விரதிகள்போற்றுந்திருநின்றைவாழ்கின்றவித்தகியே
இரதிநிகரில்லவளின்பமாதியிகச்சுகமுஞ்
சுரதிருவாதிச்சுகமுந்தவ்வென்றெற்குத்தோற்றும்வண்ணம்
அரதிபிறப்பதென்றோசொல்லெனைப்பெற்றவம்மனையே.()

வியர்த்துவினைவழியிவ்விளையாட்டுவிபூதியிலெற்
பெயர்த்தும்பெயர்த்தும்பிறப்பிக்கினல்லபிராப்பியமா
உயர்த்துறைபூமியுறுவதென்றோவிவ்வுடலொழிகால
அயர்த்தொழியாதருள்செய்வாயெனைப்பெற்றவம்மனையே.

சேட்பட்டதீவினைத்தெட்பாற்சிறுமியர்சிற்றின்பத்தே
கோட்பட்டசிந்தையனுயவரோவல்குயிற்றெனைநின்
றாட்பட்டபத்திமைத்தாளாண்மையோர்திருத்தாள்களுக்கே
ஆட்பட்டடிமைசெயச்செய்யெனைப்பெற்றவம்மனையே. ()

முத்தத்துவமுமுகுரப்பொருளெனமுற்றுமென்றன்
சித்ததிரீஇச்சித்திச்சிந்தையனுயெனைச்செய்திடநீ
சித்தத்துவக்கிற்றிருநாட்டுப்பேரின்பச்செல்வமென
தத்தத்தடைந்ததலவோவெனைப்பெற்றவம்மனையே.(௩எ)

போகம்பலவும்புராதனவீடும்புகுத்துங்கன்ம
யோகம்பயிலவுணாவாதியில்லேனுரியனலேன்
சோகம்பலவுந்தருமிப்பிறவிதொலைவதெங்ஙன்
யாகம்பயினின்றலூர்வாழெனைப்பெற்றவம்மனையே. (௩அ)

எட்டங்கங்கூடியயன்ஞானயோகமிசைந்தியற்றல்
கட்டங்கடைப்பிடியில்லாவெனக்குநின்காமருதாள்
எட்டங்கமுநிலனேயவிறைஞ்சினனென்வினையை
அட்டங்கமுதமருள்வாயெனைப்பெற்றவம்மனையே. (௩கூ)

இகழ்தல்செயாதுனையெண்ணுமவரிதயாம்புயத்திற்
றிகழ்தல்செயுநின்றிருவடித்தாமரையைத்தினமும்
புகழ்தல்செய்வித்தென்றன்பொல்லாவினையின் புகர்க்கிழங்கை
யகழ்தல்செய்தாளலறமாமெனைப்பெற்றவம்மனையே. ()

தாயுந்தகப்பனுஞ்சந்ததியுந்தமரும்பெருமை
வாயுங்குரவனுந்தெய்வமுமற்றும்வளனுநன்மை
யேயும்பதங்களுமீறினல்வீட்டின்புமென்றுமெனக்
காயும்பொழுதுன்னடியாமெனைப்பெற்றவம்மனையே. ()

மடியாநின்மாயைமயக்கமெனுமங்குன்மாற்றுவதும்
வடியாப்பவக்கடல்வற்றிடச்செய்வதும்வாரவித்தை
விடியாவிரவைவிடிந்திடச்செய்வதுமெய்ம்மையெற்குன்
னடியாகுமாதித்தியனேயெனைப்பெற்றவம்மனையே. (சஉ)

அவத்தைக்கொடுத்தடையாவரும்பேற்றையளிக்கவல்ல
தவத்தைக்கெடுத்துச்சதாநந்தவாழ்வைத் தடுத்திருள்சேர்

பவத்தைக்கொடுத்தெனைப்பாழாக்குமாயை பயிற்றிநிற்கும்
அவத்தைக்கொருமுடிவின்றோவெனைப்பெற்றவம்மனையே.

பொறுக்கவொண்ணாப்பெரும்பொல்லாப்பிழைப்பொறைப்போக்கணத்
குறுக்கவொண்ணாக்குமார்க் கவஞ்ஞானத்தின்கோட்டகத்தன் [தன்
இறுக்கவொண்ணாகவிருசெருக்கேனென்னிருவினையும்
அறுக்கவொண்ணாகவறுத்தாளெனைப்பெற்றவம்மனையே.

வறிஞர்க்குச்செல்வம்பசியர்க்குண்வல்சிவுறந்திடுநாச்
செறிஞர்க்குத்தீம்புனறேயோர்க்கதகந்தெறும்பண்டையால்
எறிஞர்க்கிசைந்திடுமீரிரண்டோடியேதமிலா
அறிஞர்க்குநல்லமுதாவாயெனைப்பெற்றவம்மனையே. ()

என்னையுடம்பையினத்தைக்குடும்பியையெண்ணயற்றேத்
தன்னை வயிணவர் தம்மையெனககருள்சற்குருவை
நின்னையெம்மானைநினைத்திருக்கும்வண்ணநேர்ந்தருள்வாய்
அன்னையருக்கன்னையாயெனைப்பெற்றவம்மனையே. (சுசு)

வேதமிருதிமுதனூலில்வீறிவிளங்குலக
நாதனுறுபொருளாகிநம்மாரியாநற்றனமாய்
ஏதமறுசரணாகதியின்பொருளீரைந்தையும்
ஆதமுறவெற்கருள்வாயெனைப்பெற்றவம்மனையே. (சுஎ)

சோதரர்புத்திரர்சொல்லன்னைதந்தையர்தொல்லையயன்
ஓதரனாதியரோவுறுவற்பொழுதோம்பல்செய்யார்
காதரநீக்கிக்கைசோராதடியரைக்காத்தளிக்க
ஆதரங்கொள்பவணீயேயெனைப்பெற்றவம்மனையே. (சுஅ)

குரவர்குலநின்குலங்கூடிநின்றுகுரவர்புகழ்
பரவியென்குற்றம்பகர்ந்துகுரவர்பரம்பரைமந்
திரமணிநன்குசெவித்துய்யச்செய்திசெய்யாமறையின்
அரவமறுநின்றவூர்வாழெனைப்பெற்றவம்மனையே. (சுகூ)

ஆதிக்குரவருரையுமொழுக்கமுமாய்ந்துகொண்டு
வாதிக்குமற்றையர்வார்த்தையும்வாகையும்வாய்ந்தொருவி
நீதிக்குரவன்பணிநின்பணிசெய்துநிற்கவருள்
ஆதிக்கமலத்தணங்கேயெனைப்பெற்றவம்மனையே. (ருo)

அருச்சித்தசித்தொடுநின்னிலைநன்னரறிந்தவித்தை
வருச்சித்துநாளும்வளருமொளிமயமாய்வயங்குன்
னுருச்சித்தம்வைத்தெண்வகைமலர்கொண்டுவட்டாதவன்பின்
அருச்சித்துநிற்கவருள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

எண்ணிக்குரம்பையையேனுறச்செய்யவிழிபொருளை
நண்ணிச்சுவைத்தவென் ஹவினைநின்னருணாரமதான்
மண்ணிப்பழமையைமாற்றிமறப்பித்துன்மாண்பெயரோ
அண்ணிக்குமாறருள்செய்வாயெனைப்பெற்றவம்மனையே.

பாகாரடையுடனிற்குநிவேதித்துப்பாவனமாம்
ஆகாரநீருண்டுன்னட்டாக்கரத்தினடைவறிந்து
வாகாரதன்மூப்பதமுமுறையேவகுத்துரைக்கும்
ஆகாரமூன்றுமளித்தாளெனைப்பெற்றவம்மனையே. (ருரு)

ஓங்காரணமுறைப்போர்தவர்வாழ்நின்றையுத்தமியே
தூங்காரவாரத்தொடுகடல்போனின்று தொன்றுதொட்டு
வீங்காரஞர்செய்பிறவிவித்தென்னவிளம்புமிரண்
டாங்காரமுமறுத்தாள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

மாய்ந்துபிறந்துவருந்துமண்ணோர்க்குற்றவல்வினையைக்
காய்ந்துகழறாநின்றைப்பதிவந்தகற்பகமே
வாய்ந்துவரம்பின்றியெங்குமவழங்குநின்வான்புகழை
ஆய்ந்துசொலவல்லவராரெனைப்பெற்றவம்மனையே. (ருகு)

கழலைக்குயமுடைககாந்தையர்நெஞ்சங்கரையவுரை
மழலைச்சொற்காமுற்றுமாழாந்தவல்வினையேன்பிறவி
நிழலைத்துமித்தென்றுநீடுமுத்தாபநெடுவடவை
அழலைத்தணித்தெனையாள்வாயெனைப்பெற்றவம்மனையே.

விருப்பங்கொள்பஞ்சாக்கினிவித்தையின்படிவிண்ணொருவி
உருப்பக்கதிருறையுண்கூழ்புருடர்பின் றெண்டொடியார்
கருப்பத்தில்வந்துசுவற்சியுறச்செய்கடுவினையாம்
அருப்பத்தைவெட்டியருள்வாயெனைப்பெற்றவம்மனையே.

உவாவின்மதியொத்தவொண்முகத்தாய்நின்றவூரகத்தாய்
தவாவின்மைசெல்வந்தழைக்கினுந்துன்பின்பத்தன்மையுற்றுச்

சுவாவின்படித்துப்பிறுச்சப்பொருள்களைத்துய்க்கவெண்ணும்
ஆவாவின்மைநல்கியருள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

மூவாவென்றாழின்மிளிர்மணிமோலிமுடிகவித்தாய்
ஓவாவென்னூழ்வினையோவும்படிநினைக்கோலமிட்டால்
நீவாவென்றன்பினெனைக்கூயென்காரியநீர்மையுடன்
ஆவாவென்றாராய்ந்தருள்வாயெனைப்பெற்றவம்மனையே.()

மருளார்ந்துகன்மரம்போன்றேவலதும்மனதுநின்பாற்
றெருளார்ந்துதானிந்தத்தேகம்விடுமோதெரியகிலேன்
பொருளாகவெண்ணிப்புகல்புகுந்தேனென்புகலையெண்ணி
அருளாதொழிதலறமன்றெனைப்பெற்றவம்மனையே. (௯௦)

பாவத்தின்மிக்காய்படர்கென்றியமபடர்கயிற்றாற்
கோவத்தின்வீக்கிக்கொடுபோகுங்காலங்குறுகுமுன்னர்
மாவத்திவண்ணவெம்மானுடனென்முன்னர்வந்துநின்றென்
ஆவத்தைத்தீர்த்தருள்செய்வாயெனைப்பெற்றவம்மனையே.

பந்தோபயோதரம்பாலோமொழிமுகம்பான்மதியோ
தந்தோவிடைதாளப்பந்தியோதந்தந்தாங்குகளென்
நந்தோவெனநைந்துநாரியர்ப்பேணியென்னாள்களெலாம்
அந்தோவழித்தேனருள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

செந்தாமரைமலர்ச்செந்திருவேநின்றைச்செய்யவளே
சிந்தாமணிகினஞ்சிந்தாகுலமுழுந்தீனசன
மந்தாரமென்றுநின்மாமலர்த்தாளின்மறைபுகுந்தேன்
அந்தாமவாழ்வையளித்தாளெனைப்பெற்றவம்மனையே. ()

சுரும்பேய்மலர்ப்பொழில்சூழ்நின்றைவாழுஞ்சுகாவகையே
துரும்பேயெனைப்பொருளாக்கிநிற்பேணுஞ் சுமதிதந்தாள்
கரும்பேகனிந்தகனியேகற்கண்டேகடிகமழும்
அரும்பேயலரேயமுதேயெனைப்பெற்றவம்மனையே. (௯௪)

நாடேனெந்நாளுநின்னற்றுணையினலங்கனிந்து
கூடேனின்றொண்டர்தங்கூட்டங்குறுமயிர்க்கூச்செறிந்து
பாடேன்பளகறுபல்லாண்டுபத்திப்பாவசனாய்
ஆடேனுய்வெங்ஙனருள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

தாயத்தமருந்தயருந்தாரமுஞ்சார்பினரு
நேயத்தமைந்துநிலன்வீழ்ந்துநெஞ்சநெகிழ்ந்தரற்றக்
காயத்தைவீழ்த்தியெனைக்காலதூதர்கவர்ந்திடுங்கால்
ஆயத்தமாய்நின்றருள்வாயெனைப்பெற்றவம்மனையே. (சுசு)

தொட்டகட்டவிருவர்தஞ்சோணிதசுக்கிலத்தாஞ்
சட்டகந்தாழ்பொருளென்பனயாவுஞ்சமைத்துவைத்த
பெட்டகம்பேர்காற்பிறந்தலைக்கும்பிணியில்குபுரி
அட்டகக்கூடறுத்தாள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

அஞ்சுபொறிகளுமவ்வவற்றின்செயலாற்றகிலா
தெஞ்சியெவற்றையுமெண்ணுமுணர்வுமிறந்துகபம்
விஞ்சிவிளம்பவொண்ணுவிழுமத்தைவிளைத்திடுங்கால்
அஞ்சலெனவந்தருள்வாயெனைப்பெற்றவம்மனையே. (சுஅ)

நிறமானமானுடதேகிகணீதிநெறிதனக்குப்
புறமாநெறிபுகல்பொல்லாதுசன்மத்தைப்போக்கவல்ல
திறமானஞானநெறிநிற்றெள்ளிதிற்றெள்ளியநல்
அறமாமதனையருள்வாயெனைப்பெற்றவம்மனையே. (சுகூ)

போதன்முதலாப்பிபீலிகையீறும்பொருளனைத்தும்
நீதன்மவாணையினுண்டுபைங்கூழ்க்குநன்னீர்நிலைபோற்
காதன்மையினலவற்றிற்கரந்துறைகாரணியே
ஆதன்மனத்துறைந்தாள்வாயெனைப்பெற்றவம்மனையே. ()

உலகினுயிர்களைவீட்டைடைகாறுமுன்னூழ்முறையே
பலகிலக்கூட்டிற்படைத்துப்புரந்துபரிகரித்து
விலகவிலாதுசுழற்றிடுநின்விளையாடல்களோ
அலகில்லனவென்கதியென்னெனைப்பெற்றவம்மனையே. ()

விழித்தங்கிக்காண்பொருள்காணுப்பொருள்கள்விளங்குநின
துழித்தங்குவனவென்றுண்மையுணர்த்தியுளத்தைமற்றோர்
வழித்தங்கவைக்காதெனைக்காத்தியாவும்வகுத்தளித்தே
அழித்தங்குகக்குமமலாயெனைப்பெற்றவம்மனையே. (எஉ)

வீறுபெறும்விழவோங்குந்திருநின்றைமேயவளே
ஊறுதருமென்னுருகவுறுவலொழித்தடையாப்

பேறுபெறும்படிசெய்தியெவர்கட்கும்பேசரிய
ஆறுகுணங்களுமான்றேயென்னைப்பெற்றவம்மனையே.(எங)

சத்தைகொணீராற்சரீரமுஞ்சத்தியத்தான்மனமு
நித்தியந்தூய்மையுறல்போலநின்றன்னிலையுணர்த்தும்
வித்தையினாலெனைமேத்தியஞ்செய்துநல்வீடருள்வாய்
அத்தையுலகினுக்காவாயென்னைப்பெற்றவம்மனையே. (எச)

மன்னிலைமாடங்களோங்குந்திருநின்றைமாமகளே
புன்னிலைப்போகம்புசிப்பித்துப்போதம்பொலிசுகமாம்
என்னிலைநின்றுயிரீஇயிருந்துன்பமியற்றவித்தை
அன்னிலைநீக்கியருள்வாயென்னைப்பெற்றவம்மனையே. (எரு)

முடிநிழனெற்றியணிநிழல்குண்டலமூசுநிழல்
தொடிநிழலங்கதநீழல்முத்தாரத்தொகுதிநிழல்
மடிநிழல்சன்மவிடாயைத்தணிக்காமதைபுரைநின்
அடிநிழலேயதுசெய்யுமென்னைப்பெற்றவம்மனையே. (எசு)

வடியாக்கருணைநல்வாரிதியாநின்றைவானவிநின்
அடியார்க்களித்திடல்யாகாக்கினிபெய்யவியதுபோன்
மடியாதொளிருமம்மாட்சியர்பபேணுமதியளித்துன்
அடியாநிழல்வைத்தளித்தியென்னைப்பெற்றவம்மனையே.(எஎ)

புவியார்புகழ்த்திருநின்றைப்பொலப்பதிப்பூமகளே
கவியார்நின்கண்ணென்றுங்காதலிலாக்கபவர்க்களித்தல்
சவியார்தழல்சற்றுஞ்சாராததாம்வெறுஞ்சாம்பரிற்பெய்
அவியாகுமன்னதுநீத்தாளென்னைப்பெற்றவம்மனையே.(எஅ)

வாகருந்தநுவுமனமுமறைகண்மறமெனவே
நீக்குநெறியினிகழாதுநீத்தென்றுநேயநின்பாற்
றேக்கும்படிச்செய்தென்றீமைபொறுத்தெனைச்செய்யவனு
ஆக்குங்கடமைநினதேயென்னைப்பெற்றவம்மனையே .எகூ)

சத்துவமாக்குணச்சால்பேயென்றூனந்தழைத்துநிற்க
நத்துவனேமெனனினுமெனதென்னுநவையபறுத்தென்
சொத்துவமென்றுந்துலங்கச்செயுங்கிஞ் சுகச்சுமம்போல்
அத்துவடிவமமைந்தாயென்னைப்பெற்றவம்மனையே. (அ0)

திருவேசரணந்தெருளேசரணஞ்சிறக்கும்பஞ்ச
தருவேசரணந்தவமேசரணஞ்சகமயமாம்
உருவேசரணமொளியேசரணமுணர்வரிய
அருவேசரணஞ்சரணமென்னைப்பெற்றவம்மனையே. (அக)

மாவேசரணமறையேசரணமறைவிளக்குங்
கோவேசரணங்குணமேசரணங்குறைபொறுக்குங்
கூவேசரணமிக்கூவோர்விழைந்தகொடுக்கவல்ல
ஆவேசரணஞ்சரணமென்னைப்பெற்றவம்மனையே. (அஉ)

சொல்லாதிசொற்பொருளாதியுலகினிற்றோன்றிநிற்கும்
புல்லாதியானபொருளாதியன்னபுலப்படுத்தும்
எல்லாதியெல்லினிலங்கொளியாதியிருடழைக்கும்
அல்லாதியாவையுமாதியென்னைப்பெற்றவம்மனையே. (அங)

ஆதியளவற்றவண்டமுமண்டத்தவிர்விளக்கும்
ஆதிபதினான்குலகுமுலகத்தமைபொருளும்
ஆதிமறையுமிருதியுநூல்களுமாதியென்றும்
ஆதிநடுமுடிவில்லாயென்னைப்பெற்றவம்மனையே. (அச)

அடைக்கலமையென்னமித்திரனென்னையடர்த்திடுங்கால்
அடைக்கலமந்தகன்வந்தென்னைப்பாசத்தசைத்திடுங்கால்
அடைக்கலம்யானிந்தயாக்கையைநீக்கவமைந்திடுங்கால்
அடைக்கலநின்னடிக்கென்றுமென்னைப்பெற்றவம்மனையே. ()

அடைக்கலமம்பகமோரிரண்டுஞ்சவியற்றிடுங்கால்
அடைக்கலங்காதுகடம்புலன்கொள்ளாதடைபடுங்கால்
அடைக்கலங்கன்மரம்போன்றென்றன்மேதையழிந்திடுங்கால்
அடைக்கலநின்னடிக்கென்றுமென்னைப்பெற்றவம்மனையே. ()

திறனொன்றியநின்றிருவடிசிந்தனைசெய்தலன்றிப்
புறனொன்றும்புந்திபுரிந்திலன்பூசல்பொரமறலி
மறனொன்றிமண்டிடுங்காலெனைக்கைவிடன்மாட்சிமைத்தன்
றறனன்றறனன்றறனன்றென்னைப்பெற்றவம்மனையே. (அஎ)

நயவாசநாண்மலர்க்காவுகள்சூழ்நின்றைநாயகியே!
சயவாசகஞ்சொல்லிச்சண்டன்றமரென்னைச்சார்ந்தொறுக்கும்

பயவாசரத்திலென்பக்கத்துநிற்றியென்பாவப்பஞ்சிற்
கயவாகனன்பொறியாவாயெனைப்பெற்றவம்மனையே. ()

நளிவிசுவந்தொழுநற்றிருநின்றைநளினமின்னே
ஒளிவிசுவம்பரனாந்தலைவனையுட்படுத்தித்
தெளிவிசும்பாந்திருநாட்டடியார்குழுச்சேர்ந்திடவைத்
தளிவிசுவாசமகங்கொளனைபெற்றவம்மனையே. (௮௯)

கோடியருக்கரொளிக்கூங்கொளிரும்வைகுந்தநகர்
நாடியருத்தியினாருநின்னைமநவின்றுநின்சீர்
பாடியருச்சனைபண்ணுமென்னெண்ணம்பலிக்கவருள்
ஆடியருக்குங்கவுளாயெனைப்பெற்றவம்மனையே. (௯௦)

கவசந்தனியறங்கொண்டாய்திருநின்றைக்கற்பகமே
துவசந்தங்கைககொடுசூர்க்காலதூதர்கடொட்டிழுக்குந்
திவசந்தனிற்சிந்தையுட்கிவட்கித்திடுக்கிட்டயர்க்கும்
அவசந்தனில்வந்தருள்வாயெனைப்பெற்றவம்மனையே.(௯௧)

கலர்மகவாகப்பிறந்ததமையுமிக்காசினிக்கட்
பலர்மகவாகவினும்பிறவாமற்பணித்தியுயர்
குலங்மகமாற்றியிறைஞ்சவவர்க்கருள்கூர்ந்தளிக்கும்
அலர்மகளேநின்றவூர்வாழெனைப்பெற்றவம்மனையே. (௯௨)

பெற்றார்க்குங்கூடப்பிறந்தார்க்குநட்புற்றபெற்றியர்க்கும்
உற்றார்க்குஞானத்துயர்ந்தார்க்குமிவ்வுலகத்துநசை
செற்றார்க்குந்தீயவனின்றன்றிருவடிசேர்தலெங்ஙன்
அற்றார்க்கருந்துணையாவாயெனைப்பெற்றவம்மனையே. ()

கொங்காரமாப்பொழில்சூழ்திருநின்றைக்குலக்குயிலே
செங்காந்தளங்கைச்சிகியேயென்றீவினைதீர்த்தருள்வாய்
சங்காரகாலத்துதரத்தில்யாவுந்தனித்தொடுங்க
அங்காக்குங்காந்தற்கணியேயெனைப்பெற்றவம்மனையே. ()

நல்வழிநல்லவர்நாட்டியிருக்கநடத்தலின்றிப்
புல்வழிமுளவழிபொல்லாப்புதர்வழிபோகவொண்ணாக்
கல்வழிசெல்லுங்கயவரினின்வழிக்காப்பைவிடுத்
தல்வழிசெல்வேனரணென்னெனைப்பெற்றவம்மனையே. ()

தெருள்வாய்ந்தவேதச்சிரமானுங்கீதைச்சிரமுறைக்கும்
பொருள்வாய்ந்தென்புந்தியிற்பொங்கறம்யாவும்பொருக்கெனவிட்
டருள்வாய்ந்துதித்தவொருவனையேசரணுற்றுநிற்க
அருள்வாய்திருநின்றையூர்வாழெனைப்பெற்றவம்மனையே.

மனக்குற்றம்வாக்குமெய்க்குற்றந்தமியன்வகுக்குமிப்பா
வினக்குற்றநின்னையடியரையெள்ளியிகழ்ந்தகுற்றம்
சினக்குற்றஞ்சிற்றின்பக்குற்றந்தினமுநிறசேவித்துண்ணு
அனக்குற்றம்யாவும்பொறுத்தாளெனைப்பெற்றவம்மனையே.

சாவவொட்டாதமருந்தனையாய்மும்மைத்தாவமதால்
வேவவொட்டாமல்விலக்கிவிடயவிருப்பின்மனம்
மேவவொட்டாமற்றடுத்தெனையாள்விறல்வேள்வெரிநார்
ஆவவொட்டாமுழந்தாளாயெனைப்பெற்றவம்மனையே. ( )

தராமுகத்தோர்விண்முகத்தோர்தொழுநின்றைத்தாக்கணங்கே
யிராமுகமன்னவியமன்படையாயிரித்தெனையாள்
பராமுகமின்றியியாதன்செய்சூத்திரபாடியஞ்செய்
அராமுகநோக்கியெனினுமெனைப்பெற்றவம்மனையே. ( )

அதிபதிதன்னளிக்கப்படுவோனலனாயினுநன்
னதிபதிசூழ்புவிநன்றுறநண்ணியஞானநிதி
எதிபதிசெய்யஞ்சலிநோக்கியேனுமிலங்குநின்றைக்
கதிபதியேயமுதந்தாவெனைப்பெற்றவம்மனையே. (௧௦௦)

வாழ்கதிருநின்றைவாழியவுற்பலமானவள்ளல்
வாழ்கவெனைப்பெற்றதாயாம்வனசமலர்மனையாள்
வாழ்கவடமொழிதென்மொழியாகியமாமறைகள்
வாழ்கபதின்மர்கள்வாழ்கநம்மாரியவர்க்கநன்றே.

---

திருநின்றைவாழுமெனைப்பெற்றவன்னைதன்சேவடிமேற்
கருநின்றுநீங்கியுய்வானொருநூறுகவித்தொடையல்
தருநின்றகாககச்சிவாழுமிராமானுசத்தலைவன்
மருநின்றதாள்சேரெதிராசதாசன்வனைந்தனனே.

## என்னைப்பெற்றதாயார் மாலை

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவெவ்வுளூர் கனகவல்லித்தாயார் மாலை.

## காப்பு.

கனகவகிவல்லி கடுக்கும்வினைதீர்
அனகவெவ்வுள்வாழு மமலே—கனகவல்லித்
தாயடியிற்பாமாலை சாத்தவுடையநங்கைச்
சேயடியைச்சிந்திநெஞ்சே தேர்ந்து.

## நூல்

கடல்வண்ணன்காமருமார்பமுறையங்கனைமணியைக்
கடல்வந்தகாரிகையாருடுக்கூட்டக்கலாநிதியைக்
கடல்வண்ணமானுங்கனகவல்லிக்கருணாலயையை
கடல்வண்ணக்காதலிற்கண்ணுநெஞ்சேநற்கதிபெறவே.()

கனகவல்லிப்புண்ணியவினைகாழ்த்துக்கனத்தகருங்
கனகவல்லிப்பாதகவினைதீர்த்துக்கருத்துள்வைத்துக்
கனகவல்லிக்கஞ்சவீட்டுந்திருவெவ்வுட்கண்ணுமுறை
கனகவல்லித்தன்னைகாப்பணெஞ்சேகொள்ளல்காதரமே.()

எஞ்சியபொன்புடமாதியின்மாற்றுயர்ந்தென்னவென்றும்
விஞ்சியநின்னடியார்தங்குழுவில்விரவச்செய்தென்
துஞ்சியஞானந்துலங்கச்செய்திப்பவத்துக்கவலைக்
கஞ்சியவென்னைக்கனகவல்லித்தல்லியாதரியே. (௩)

சந்திரன்வேணிவிருதுவின்வெப்பந்தணித்தவெனை
மந்திரநின்னடியார்க்கடியாரருண்மன்னியுய்யுந்
தந்திரஞ்செய்தென்முத்தாபந்தணியச்சமைத்தருள்வாய்
இந்திரையெவ்வுட்கனகவல்லித்தன்னையென்பவளே. (௪)

இந்தனத்தோங்குமெரியெனநல்லுணர்வின்மையெனும்
பந்தனத்தோங்குமென்பாவமீரீஇநின்பணியருள்வாய்
சந்தனத்தோங்குந்தடமூலைத்தாமரைத்தாக்கணங்கே
நந்தனத்தோங்குந்திருவெவ்வுட்பொற்கொடிநாயகியே.()

துட்டரிணக்கந்தொகையில்பிறவித்துயர்க்குவித்தாம்
சிட்டரிணக்கநற்சித்திக்குவித்தெனச்செப்புவரால்
பட்டர்கள்போற்றுங்கனகவல்லித்தல்லிபத்தசனர்க்
கிட்டர்கள்சங்கத்தடியேனிணங்கிடவெண்ணுதியே. (சா)

அபயம்பெறவெண்ணிநின்னம்புயப்பூவடியையண்மி
அபயம்புகுந்தவடியேன்கண்முன்னர்வந்தஞ்சலென்றெற்
கபயந்திருவாதந்தருமாய்மலரத்தங்களாம்
உபயமுநல்குதியொண்பொற்கொடியன்னையுத்துங்கையே. ()

அலைதீர்ந்தவாழியெனவடியேனுள்ளமார்ந்தவித்தை
நிலைதீர்ந்துநின்னடிநேயத்தினின்றுகெடும்பிறவி
வலைதீர்ந்துவாகைக்கனகவல்லித்தன்னைவானவியே
தொலைதீர்ந்தவைகுந்தந்துன்னிச்சுகிக்கவொர்சூழ்ச்சிசொல்லே.

அசத்தாம்பொறிகளலைக்கவலைப்புண்டலந்தவற்றின்
வசத்தாயனேகபவமெடுத்துக்கும்பிவாசமுறீஇ
நிசத்தாபமெய்தியநீசனிச்சன்மத்தினின்னருளின்
வசத்தாற்கனகவல்லித்தல்லிநின்னடிவந்தனனே. (கூ)

புகுந்திடுஞ்சன்மந்தொறுநானெனதெனும்பொய்ச்செருக்கின்
மிகுந்தவனாகிவிருப்புவெறுப்பினைமேவியிருள்
வகுந்துவினின்றுமயங்குமென்மையலைமாய்த்திடநீ
தகுந்தவளென்றுனைச்சார்ந்தேன்கனகவல்லித்தன்னையே. ()

மோகத்தைமூர்க்கத்தைமூட்டும்வழியின்முயன்மனது
சோகத்தையின்பந்தனைச்சமமாவெண்ணுந்தூயபரி
பாகத்தைப்பற்றிநின்பாதத்திற்பத்திமையண்ணியுய்யும்
யோகத்தைத்தந்தாள்கனகவல்லித்தன்னையுத்தமியே. (கக)

நல்லவர்நண்ணலரில்லவரொன்றினயப்புவெறுப்
பில்லவரிந்தியமோடிதயத்தையுமேன்றுவெல்ல
வல்லவராகிநின்னடியார்குழாத்தெனைவைத்திமறைச்
சொல்லவரோத்துங்கனகவல்லித்தன்னைச்சுந்தரியே. (கஉ)

இயற்கையடையடையிவ்வேழையின்மீதிரக்கமெய்திப்
புயற்கைகொடைச்செல்வர்பொங்குந்திருவெவ்வுட்பொற்கொடியே

செயற்கைநின்மாயையிற்சேர்ந்ததிரிபுகடீர்த்தினியென்
இயற்கைக்குணங்களிலங்கவிழைத்தருளின்னருளே. (கங)

எல்லாவருத்தியும்விட்டநின்னன்பரிணக்கந்தந்தென்
எல்லாவழுவுமிரித்துன்னிசையின்னமுதையொல்லும்
எல்லாவழியினுமுண்டுய்யும்வண்ணமினிதருள்வாய்
எல்லாவறமும்வளரெவ்வுட்பொற்கொடியென்னம்மையே. ()

மோகாந்தராக்குழுவையில்லவண்முதன்முற்றுமொரீஇ
ஏகாந்தபத்தியிழைப்போரிடர்களிரித்திடுநின்
மாகாந்தனுக்கொருமாற்றம்வகுத்தெனைவைகுந்தமாம்
மாகாந்தந்தன்னிற்கனகவல்லித்தல்லிவைத்தருளே. (கரு)

பகுதியின்பான்மையைப்பாற்றிடுந்தத்துவப்பண்பினையும்
விகுதிசெயுமகங்காரத்தைவீட்டும்விஞ்ஞானத்தையுந்
தகுதியிலேனெனினுந்தந்துமற்றெருருதையல்பண்டி
புகுதிசெயாதருள்வாயெவ்வுள்வாழ்கின்றபொற்கொடியே.()

சீர்பூத்தவெவ்வுட்கனகவல்லித்தல்லிச்சிற்பரையே
ஏர்பூத்தநின்னபிதாநசங்கீர்த்தநவீட்டினரை
நார்பூத்தயோகந்தவமறையோதனதிமுழுகற்
பேர்பூத்தபுண்ணியஞ்செய்தவரொன்பபெரியவரே. (கஎ)

நின்னுமதேயநினைத்தலிற்கேட்டலினீடுபவ
இன்னுமடியுமமுதாமதைநன்கிசைத்தலினால்
உன்னுமலினச்சண்டாளனும்யாகமுனூற்றுநனும்
என்னுமறையோர்கனகவல்லித்தல்லியேத்துவரோ. (கஅ)

சன்மத்துயரத்தழலாற்புலனசைத்தாவமதான்
மன்மத்துயவுற்றவென்மனவும்பனின்வான்கதையாந்
தன்மச்சுதாநதிதாழ்ந்துசதாநந்தஞ்சாரவைப்பாய்
கன்மப்புனிதர்தொழுமெவ்வுட்பொற்கொடிக்கற்பகமே. ()

தாக்குமிடியனெர்சக்கரவர்த்தியைச்சார்ந்துவரி
நூக்குமிவேண்டலெனவன்றென்வேண்டனுவவினது
காக்குங்கடமைகொள்காஞ்சனவலவிநின்காற்பணிசெய்
பாக்குமிதமில்பரமபத்திப்பெரும்பாக்கியமே. (உ0)

பவச்சமவாயஞ்செய்மாயையின்வஞ்சிக்கப்பட்டடியேன்
சவச்சமமெய்ச்சுகநச்சுற்றுத்தையலர்தங்கலவி
அவச்சமரத்திலலைதலறுமாறருள்புரிவாய்
தவச்சமநோக்கினரோத்துங்கனகவல்லித்தல்லியே. (உக)

நுறக்கவசந்தச்சுரு சிரறுதிச்சுரர் துதிக்கும்
அறக்கவசம்புனையாடகவல்லியன்னையவித்தை
உறக்கவதன்வயத்துற்றவெற்குன்னிலையுன்னமனஞ்
சிறக்கவசப்படுங்காலமென்றேவதைச்செப்புதியே. (உஉ)

நிலைவைநிகரானனநிதிவல்லியன்னையடியன்
உலவையெவனுமுலவியுமொன்றினொன்றாததுபோற்
செலவையுடையதிரிகுணத்தோடுசெறிந்திருந்துங்
கலவையவற்றிற்கொளாநிலைநிற்கக்கருணைசெய்யே. (உங)

அன்னையெனுமெவ்வுளாடகவல்லியறைவெளிசப்
பொன்னைவிழுங்கியமீனினவித்தைபுரியும்பொம்மல்
தன்னைவிரும்பித்தெளவாதுதமியனின்றுள்விரும்பிப்
பின்னையொன்றெண்ணுதிருந்துபெறவருள்பேரின்பமே. ()

பெருங்காற்றடியுண்பெருங்கலத்தென்மனம்பேரவித்தை
ஒருங்காற்றுமூறுகளாலுலைப்புண்டொல்குமவ்வுலைவு
சுருங்காற்றினுய்த்துச்சுகந்தருள்பிறர்துன்புறுதல்
ஒருங்காற்றகில்லாநிதிவல்லியெவ்வுளுறைபவளே. (உரு)

என்றுமிருபாடெரிகொள்ளிக்கட்டைடையிடையெறும்பின்
என்றுமிருவினைத்தீச்சுடுமிம்மெய்யிதயமிருந்
தென்றுமிருளினிடர்படுமெற்கருள்வாயிமையோர்
என்றுமிருதிசெய்தேத்திடும்பொற்கொடியிந்திரையே. ()

கன்மாந்தரமுக்கரணங்களாலுங்கடிதியற்றிச்
சன்மாந்தரத்திற்றடுமாறுமேழைநின்றுளடையுந்
தன்மாந்தரவழிசார்ந்துதனவல்லித்தல்லியிருண்
முன்மாந்தலரிவழிமுத்தியான்பெறமுன்னுதியே. (உஎ)

வானந்திக்குப்புகழாடகவலலிநின்மாயைதரு
மானந்திகைகும்பிமன்னுவழிசெய்தென்மனோவிருத்தி

ஈனந்திக்காரஞ்செய்தெப்போதுநின்னடியெண்ணியெண்ணி
ஆனந்திக்குந்தன்மையென்றோவடியேனடைவதுவே. ()

கோளாண்மையனாயுங்கோள்செய்குசுமக்கொடுங்கணைகொள்
வேளாண்மைவீட்டிவெருட்டுறுமாயைவிறலைவெல்லுங்
நாளாண்மைதந்துன்சரோருகத்தாணிழல்சாரவைப்பாய்
வேளாண்மைவாழ்க்கையர்வாழெவ்வுட்பொற்கொடிவித்தகியே.

இராகத்தைநீத்தவிருடிகளேத்தெவ்வுளிந்திராயே
பராகத்தைத்தேனைப்பொழிபதுமாதனப்பண்ணவியே
இராகத்தையேய்சொல்லிரணியவல்லியன்றுயெழும்பூ
பராகத்தையெண்ணினுநின்குணமெண்ணப்படாவென்பவே.

கங்குலைச்செங்கதிர்க்காவலன்காய்ந்துகடிதலென
மங்குலைச்சின்னபின்னப்படமாருதமாய்த்தலென
இங்குலைப்புண்ணுமெளியேன்பவத்தையிரித்தருள்வாய்
அங்குலைக்கங்கிப்பொழிலெவ்வுட்பொற்கொடியம்மனையே.

திருட்டுடன்காமஞ்சினங்கொலைபொய்த்தல்செருக்குவதம்
வெருட்டுறுசூதாதியவிளைத்துத்தனைவேட்டவனை
மருட்டுறும்பொனமயன்மாற்றிநின்பாதம்வழுத்திநிற்கும்
பொருட்டென்மனத்தைப்புணர்த்துபொற்கொடிப்பூரணியே.

தாய்தந்தையர்க்குஞ்சகோதரர்கட்குந்தகவரென
வாய்தந்தவர்க்குமற்றோர்க்குமெந்நாளுமனமழுங்கு
நோய்தந்திடும்பொன்னசையறநின்கடைநோக்கருளால்
ஆய்தந்தவர்கள்புகழெவ்வுட்பொற்கொடி யன்னையெற்கே.

இகத்திற்குமேலாம்பரத்திற்குமாவெண்ணியீட்டுநர்தஞ்
சுகத்தின்பொருட்டுந்துறவோர்பொருட்டுநின்றொண்டர்தங்கள்
மகத்தின்பொருட்டுமுதவாப்பொருணசை மாற்றிநின்றாள்
அகத்தின்புறவெண்ணியுய்வானருளாடகவல்லியே. (௩௪)

ஒருமித்தவுள்ளத்தவருநட்டோருமுறவினரும்
பொருமித்தலைப்பட்டுப்போர்புரியச்செய்யும்புன்பகையைத்
தருமித்தமனியவாசைதவிர்த்துநின்றாளிலன்பு
திருமித்தருள்செய்திபொற்கொடியாகியநின்மலையே. ()

மண்ணுற்றுநீருற்றுத்தீயுற்றுக்காலுற்றுவானமுமுற்
றெண்ணுற்றுநோக்குறுங்கேட்குறமெவ்வெப்பொருள்கடோறும்
நண்ணுற்றுநிற்கின்றபொற்கொடித்தாய்நின்னைஞானமென்னுங்
கண்ணுற்றுக்கண்டுகளித்தேத்தியுய்யக்கருணைசெய்யே. ()

பந்தப்புரளிதருநவவாயில்படைத்தழியும்
இந்தப்புரத்தினிடையாரிதயகமலமெனும்
அந்தப்புரம்விட்டடியேனெழுங்காலளித்தியெவ்வுட்
சந்தப்புரம்வாழ்தமனியவல்லிசரோருகையே. (௩௭)

குக்கன்மனைதொறுஞ்சென்றடிகூழ்கொள்ளுங்கூற்றின்வலி
தக்கன்மகன்மந்தரும்பலன்றுய்த்துத்தளர்தமியேன்
விக்கன்மறுகலுற்றிம்மெய்விடுங்கால்விசுங்கமிசை
மிக்கன்பின்வந்தாள்வெறுக்கைக்கொடியெனும்வித்தகியே.

தேகத்தினாலயற்சீவர்களாற்றெய்வத்தாலடையுஞ்
சோகததின்மூழ்குறுந்தொண்டன்றுலைவில்சுகமயமாம்
போகத்தின்மூழ்குநின்றொண்டர்கள்வாழும்புகழ்ப்பரம
மாகத்தின்மன்னமகிழ்ந்தருளாடகவல்லியன்னே. (௩௯)

தலைச்சுமையத்தலைநோங்காற்புயத்திடைததாங்கிடினும்
நிலைச்சுமைநீங்கிற்றிலைதுயர்நீங்கநிகழ்த்தும்வினை
வலைச்சுமையென்னவருத்துந்தமனியவல்லியன்னாய்
புலைச்சுமைநீங்குமுன்னல்வழியுய்த்தெற்புரந்தருளே. ()

புண்ணியபாவத்திகிரிபொறியாம்புரவிகள்பூண்
டண்ணியதேகவிரதத்திதயமென்னுதநத்தில்
நண்ணியவென்னைமனச்சாரதிதிருநாட்டினின்பம்
உண்ணியநல்வழியுய்க்கநிதிவல்லியுன்னுதியே. (௪௧)

புலிங்கக்கனலிற்பொலிமணிப்பூண்கள்புனைந்தவிர்பொற்
கலிஙகக்கனகவல்லித்தல்லிகாருத்தன்காதுகணை
குலிங்கக்குறியுய்த்தவென்னவடியற்குறித்துவிட்ட
இலிங்கக்கடத்தையிரிக்குமியவையிசைத்தருளே. (௪௨)

சிட்டியிற்றந்ததுமண்டச்சிதைவிற்சிதைவதுமா
ஒட்டியதுட்பவுடலிடைநீங்குமுபாயமென்னே

கிட்டியுயிர்க்குயிராந்துணையேயென்றன்கேதநெஞ்சுந்
திட்டியுநீங்காக்கனகவல்லித்தல்லிசெய்யவளே. (சங)

அஞ்ஞானிகளறியாவணமாவியடங்கிநிற்பாய்
சுஞ்ஞானிகடொழுதேத்தவவருளந்தோன்றிநிற்பாய்
கைஞ்ஞானியாமிக்கடையேன்கனகவல்லித்தல்லியே
மெய்ஞ்ஞானிகணிட்டைமேவியுய்வானோர்விரகுசெய்யே.

அமங்கலமாகுமவித்தைபஞரையடியறுப்பான்
சுமங்கலம்பூண்டநின்றாமூர்த்தமுஞ்சுடர்ச்சோதிமயச்
சுமங்கலமாநின்சொருபமுங்காட்டியித்துட்டனென்றுந்
தமங்கலவாதபரிசருள்பொற்கொடித்தம்மனையே. (சரு)

வண்டானதுபாரிசாதமலர்கண்டுமற்றோர்மலர்
உண்டாயிருக்கினுமன்னதைக்கண்டுகவாததுபோற்
றெண்டாமடியன்சுவணக்கொடித்தல்லிதூயநின்றாட்
டண்டாமரைமலரன்றிமற்றொன்றினைச்சார்கிலனே. (சசு)

யூகித்துணரவொண்ணாதநின்மாயையுண்டாட்டினுற்று
மோகித்துநிற்குமென்சன்மந்தொறுநின்முளரியந்தாள்
பாகித்துக்கொண்டுண்ணும்பாகவதர்ப்தம்பற்றியுய்வான்
தாகித்துநிற்கத்தயைசெய்கனகவல்லித்தல்லியே. (சஎ)

எண்ணான்குகோடியிரட்டியிரட்டியெண்ணேய்ந்தவராய்
தண்ணார்சிருட்டிதிதிலயந்தான்செயுஞ்சத்திகட்குக்
கண்ணாரிறைவியெனுங்காஞ்சநவல்லிக்கான்மலரை
நண்ணாதவர்முத்திநண்ணாதவரெனுநான்மறையே. (சஅ)

பூதங்களைக்கொண்டுபூதச்சிருட்டிபுரிந்துநிற்றி
பூதங்களைக்கொண்டுபூதப்புரவுபுரிந்துநிற்றி
பூதங்களைகொண்டுபூதத்தழிவுபுரிந்துநிற்றி
பூதங்களைப்புரமாகக்கொள்பொற்கொடிப்பூமகளே. (சகூ)

மூளைக்கின்றமுக்குணமுத்திவழிமுயலாமலெனை
வளைக்கின்றவாரணித்தேயவைதம்மைவயப்படுத்தி
யிளைக்கின்றநுண்ணிடையேமவல்லித்தல்லியென்றுநின்றாட்
டிளைக்கின்றபத்திமைச்செல்வந்தந்தென்னைத்திதித்தருளே.

மிடியன்றனம்பசியுற்றேனனம்புனல்வேட்கையுற்றேன்
குடியம்புதம்பெற்றருந்திமனங்களிகூர்தலென்னக்
கடியம்புயக்கட்கனகவல்லித்தல்லிகாமர்நின்றாள்
அடியன்விழிகள்கண்டானந்தவாரியடையச்செய்யே. (ருக)

இருமைப்பயனையுமீறிலின்பத்தையுமீவதுவும்
இருமைப்படவருமின்னாவிடர்களிரிப்பதுவும்
பெருமைப்பிறவிக்கடற்கோரணையாப்பிறங்குவதும்
அருமைக்கனகவல்லித்தல்லியன்பரடிப்பொடியே. ()

காழ்த்தபொறிக்குப்புலனுங்கடன்மைகள்கண்டிறுத்துப்
பாழ்த்தவென்னெஞ்சம்பயிர்படும்வண்ணம்பதப்படுத்தத்
தாழ்த்தலிலாததிற்றுவரநேர்நிலைசார்ந்துநிற்பாய்
வாழ்த்தற்குரியபெரும்புகழ்க்காஞ்சனவல்லியன்னே. ()

அருள்வாளுருவியகச்செய்யகத்தூறறுத்தழற்றித்
தெருள்வாய்பத்திப்பயிர்செய்வித்துணர்வறநேக்கு வித்தே
இருள்வாய்செருக்குக்களைகளைவித்துனதேவலின்பப்
பொருள்வாய்த்திடவருள்வாயெவ்வுட்பொற்கொடிப்புண்ணியையே.

வேதந்தருநல்விவேகப்பொருளைவிரித்திடுங்காற்
போதந்தருநினைநின்றுதன்றன்னைப்புரிந்துபற்றல்
ஏதந்தருபிறவிச்சிறைநீத்தலெனமுடியும்
நீதந்தரும்பொற்கொடித்தல்லியின்னனநேர்ந்தருளே. ()

துன்புப்பரமாவதிபிறவிக்கடற்றோய்ந்தழுந்தல்
இன்புப்பரமாவதிநின்னடியிலினைந்திருத்தல்
என்புப்பரமுமஃதில்லாப்பரமுமெடுக்கினுநின்
அன்புப்பணியையருளாடகவல்லியம்மனையே. (ருசு)

நிரதிசயாநந்தநீங்காததுக்கநிதானஞ்சொல்லின்
இரதிசயவைம்பொருளுணர்வுண்மையுமின்மையுமாம்
அரதிசயித்தப்பொருளைந்துந்தேறவருள்புரிவாய்
விரதிசயந்தொழும்பொற்கொடித்தாயெனும்வித்தகியே.

ஒண்மையவாமிப்பொருளைந்தினையுநன்குள்ளுமுணர்
வெண்மைக்கடிசத்துவகுணமின்மைக்குரைக்குமடி

தண்மையிராசதந்தாமதமாஞ்சத்துவமளித்தி
வண்மைத்திருவெவ்வுள்வாழ்பொற்கொடிப்பத்தவற்சலையே.

முற்குணமூலநின்கோனருணைக்கத்தின்மூழ்குதலாம்
பிற்குணமூலமிப்பேரிருண்ஞாலப்பிறவியென்ப
முற்குணமென்றுமொர்முட்டின்றியென்னுழிமூட்டுவிப்பாய்
நற்குணவாரிதியேபொற்கொடியெனுநாயகியே. (ருகூ)

அருணைக்குக்காரணமெம்மானியற்கையருட்குணமே
இருணைக்கியபிறவிக்கடியெண்ணிலிருவினையே
அருணைக்கடியேன்பெறவொருமாற்றமறைந்தருள்வாய்
தெருணைக்கினர்புகழ்சீதேவிபொற்கொடிச்சின்மயையே.

சொல்லுமருளுககடிசுகிர்தத்துவந்தோமதரிற்
செல்லுமிருவினைக்காரணமென்றுஞ்செறுமவித்தை
புலலுஞ்சுகிர்தத்துவத்தைப்பொருத்திப்பொய்ஞ்ஞானமதை
வெல்லும்படிக்கருள்வாய்பொற்கொடித்தல்லிவேண்டலிதே.

அறைந்தவவித்தைநிதானமநாதியசித்துறவாம்
நிறைந்தசௌவார்த்தத்தடியயநத்தினிகழுறவாம்
பறைந்தவசித்துத்தொடர்பறநின்னருட்பார்வைதந்தாள
உறைந்தபுகழெவ்வுளூர்வாழும்பொற்கொடியுத்துங்கையே.

கிட்டமரதனக்கேழ்கின்றுருவைக்கெடுப்பதெனத்
தொட்டவசித்துயிர்த்தொன்மைக்குணங்கடொலைத்தழிச்சுந்
துட்டவசித்தின்றொடர்பறுத்தென்றன்மைதோன்றுவித்தென்
இட்டமளித்தருள்வாயெவ்வுட்பொற்கொடி யிந்திரையே.

வேட்டுவன்கிடத்தையூகித்தன்போற்செய்விதமெனவே
நாட்டுமயநமுஞானம்பெறும்வழி நன்குறுவித்
தீட்டுமுயிரையுந்தற்சமமாக்குமிவ்வீடுதந்தாள்
நீட்டும்புகழ்கொள்கனகவல்லிபயோத்திருமகளே. (கூச)

திகந்தங்கமழைந்தருமலாதேவர்கள்சிந்தியுளம்
உகந்தங்கமாமறையோதிப்பராவுமொளிப்புகழ்முச்
சகந்தயகிப்பொங்குந்தமனியவலலிநின்றுணிணையா
திகந்தங்கமுற்றுழல்வேனுய்யநின்னுளத்தெண்ணுதியே. ()

ஊரகநீரகங்காரகமாதியுயர்பதிபோல்
ஏரகவெவ்வுளும்வாழேமவல்லியையிந்திரையைத்
தாரகவாச்சியன்றன்மணவாட்டியைத்தாழ்ந்துதொழச்
சேரகமேயெங்ஙன்றுன்னுதிமுத்திச்சுகத்தினையே. (கூகூ)

பிரபஞ்சவாழ்க்கைப்பெருமயல்போர்த்திடும்பெற்றிமைத்தாம்
வரபஞ்சவத்திரவானவனுண்டவயச்சிலையின்
உரபஞ்சனஞ்செய்துலகையொறுத்தவொள்வாளரக்கன்
சிரபஞ்சனஞ்செய்தசீராமன்றேவிதிருவருளே. (கூஎ)

பிறவிப்பிணிக்குப்பெருமருந்தானதுபேசிடுங்கால்
மறவிப்பிரபஞ்சமாயையைமாய்த்துமனமொருக்குந்
துறவிப்பிருந்தமுந்தொண்டர்தொகையுந்துகளறுசீர்
அறவிப்பிரருந்தொழும்பொற்கொடித்தாயகத்தருளே. ()

குன்மவியாதிமுதலானநோய்கட்குக்கொள்கலனுய்க்
கன்மவிபாகத்தினுற்கதிதோறுங்கடுத்தெடுக்குஞ்
சன்மவிடாயைத்தணிப்பதுபொற்கொடித்தல்லிசுபத்
தன்மவிலாசத்திருவடித்தெய்வத்தருநிழலே. (கூகூ)

கற்பகத்தாள்மும்மைக்காசினியோர்தமைக்காத்தளிக்கும்
அற்பகத்தாளமுதக்கடலாலயத்தாளருளாம்
பொற்பகத்தாள்புலமைப்பாவலர்புகழ்பொற்கொடித்தாய்
கற்பகத்தாளைக்கருதுநெஞ்சேநற்கதிபெறவே. (எ0)

மண்ணிலுதித்தமணப்பூங்கொடிமறைபோரிதய
விண்ணிலுதித்துவிளங்கிடுமின்கொடிமெய்ம்மைகண்டோர்
எண்ணிலுதித்திடுமீறிலின்பக்கொடியேழையிந்தப்
புண்ணிலுதித்தலைப்போக்கிப்புரந்திடும்பொற்கொடியே.

பெருந்தன்னைபேருலகத்தோரெவர்க்கும்பிறங்கி யெங்கும்
பொருந்தன்னைபுங்கத்தபோதனர்வாழ்புரை தோறும்புக்க
விருந்தன்னைவேதவிளக்கன்னையென்பவவேறுக்கும்
மருந்தன்னைபொற்கொடிப்பேர்கொண்டெவ்வுட்பதிவாழன்னையே.

நரர்தொழுந்தாய்நல்லஞானியர்நண்ணிநவிற்றிடுந்தாய்
சுரர்தொழுந்தாய்சுருதிச்சிக்கறுத்தோன்சுகாதிமுனி

வரர்தொழுந்தாய்நல்வரந்தருந்தாய்வளர்வைகுந்தமா
புரர்தொழுந்தாயெவ்வுட்பொற்கொடித்தாயென்றுபோற்றுநெஞ்சே.

கொல்வியைகோல்விடுங்கோத்திரைசேர்கொடுங்கோதண்டப்பேர்
வில்லியைவேட்டவிதேகர்குலவிளக்காமுலகத்
தல்லியையாவரும்வேண்டும்வரங்கடருங்கனக
வல்லியைவாழ்த்தின்வருந்திருமாமணிமண்டபமே. (எச)

எழுநூறரக்கியரீண்டிப்பகலுமிரவுமிழை
வழுநூறுமாற்றியவண்மையின்வல்வினையேன்செய்வழுக்
குழுநூறிக்காத்திகுகுத்தொறுமெவ்வுட்குறித்துவந்து
தொழுநூறுகோடியுயிர்கட்கருள்சுவணக்கொடியே. (எரு)

கழுகுககரசன்முன்னின்னிலைகண்டுகனலிடைசேர்
மெழுகுக்குமேற்பட்டுருகியமென்னெஞ்சமேன்மைநிலை
புழுகுக்கடிகமழ்பூங்குழற்பொற்கொடிப்புங்கவியே
தொழுகுக்கனேற்குஞ்சுரந்திடுங்காலத்தைச்சொல்லுதியே.

வீடணன்வேதவிழுப்பவொழுக்கினன்மெய்ம்மையன்புப்
பூடணன்புத்திரிக்குன்னுழிப்போந்தபுரிவெவருந்
தூடணனென்றுசொலுமெற்குந்தோன்றிடுமோசுரர்கள்
தேடணன்மாதவன்சேர்பொற்கொடியெனுஞ்செய்யவளே.

புனமானெனவந்தபொன்மான்செய்புள்ளுவம்போலடியேன்
மனமான்செய்வஞ்சனைமாண்டிடும்வண்ணம்வரமளிப்பாய்
தினமான்மநிட்டையர்சிந்தையுள்வைத்தெண்ணுஞ்செய்யவளே
கனமான்மியவெவ்வுட்பொற்கொடிப்பங்கயக்கண்ணனையே.

மகோதரன்பிண்டிவனக்கண்புரிபெருமாயைகட்குச்
சகோதரமாயைபுரிமனமாயைதவிர்த்தருள்வாய்
சுகோதரப்பள்ளியன்கற்பத்துயிர்கள்களித்தடங்குஞ்
சுகோதரன்றேளணைசுந்தரப்பொற்கொடித்தூயவளே. ()

குயந்தனைக்குன்றிற்கொடியுருவாய்க்குத்திக்குற்றமிழை
சயந்தனைக்காத்திட்டதன்மையினுளுநின்றுமனைத்தாள்
வியந்தனையேயென்றுவேண்டுமென்குற்றம்விமோசனிக்க
நயந்தனையாயினலம்பொற்கொடிநளினாதனையே. (அ0)

வீட்டும்படைதசைவெட்டும்படையங்கவேதநன்னூல்
நீட்டும்படைசித்தர்வேதகப்பொன்றொடிற்றேசிகமாம்
ஈட்டும்பரமவருளூறின்யான்முத்தனென்பவனும்
நாட்டும்புகழ்ப்பொற்கொடியன்னையேகடனந்தனையே. ()

பத்துககளத்தன்பவநத்திருப்பினும்பாழ்த்திழிந்த
வத்துக்களாமுடல்வன்சிறைவாசம்வயாவுடைத்தாம
நத்துககளநளிநாதநப்பொற்கொடிநாயகியென்
தத்துக்களைந்துநின்னந்தாமவாழ்க்கையைத்தந்தருளே. ()

அரககியரீட்டத்துறவிற்கொடிதாலடியனுக்குத்
தரக்கியற்றாரந்தநயர்களாதியர்தம்முறவு
குரக்கியலாமனச்சேட்டையிரீஇப்பொற்கொடியன்னையே
அரக்கியற்றுமனைதாணினைவண்ணமருள்புரியே. (அங)

பெருவடிவுற்றுப்பெருநீர்கடந்துநிற்பேணிவந்த
திருவடியைக்கண்டதென்னவடியனின்சீரத்தகொண்கன்
றிருவடிவானநற்றேசிகன்றாளைச்சிறந்துபற்றல்
மருவடிவுற்றதெனத்தோன்றும்பொற்கொடிமாமகளே. ()

நினக்குப்பிரியமுடனஞ்சனைசுதனேர்ந்துரைத்த
மனக்குப்பிரியகாணமெம்மான்குணமாட்சிமைபோல்
எனககுப்பெரியர்தம்மின்னுவொழிக்குமிருங்கதையாந்
தன-குப்புரையிலதாமெவ்வுட்பொற்கொடித்தாக்கணங்கே.

திருவழிதந்துதிருவடிசெப்புந்திறஙகளெனத்
திருவாழிசங்கம்புயத்திற்பொறித்திடுந்தேசிகன்சொல்
கருவாழிநீக்குங்குரவர்பரம்பரைக்கட்டுரையாம்
திருவாழிலக்குமிபொற்கொடியம்பொருட்செல்வியன்னே.

தலைமணிதன்னைத்தகைமாருதிகையிற்றந்ததொக்கும்
அலைமணியாழிப்பவநீக்கவத்தனருள்செய்மறைக்
கலைமணியாகுந்திருமந்திரம்பொற்கனங்குழையே
சிலைமணிப்பூருக்கனகவல்லித்தல்லிச்சிற்பரையே. (அஎ)

கிரிசடைச்செல்விநினக்குத்துணையெனச்சேர்ந்ததொக்குங்
கரிசடையேழைகருவாழிவற்றிடக்காததளிக்கும்

பரிசடைபுண்ணியராகுநின்பத்தர்பதத்துணைகள்
விரிசடையோர்புகழ்பொற்கொடியாரணவேத்தியையே. ()

இராவணகும்பகருணதிமாற்றலரிவ்வுலகில்
இராவணங்கொல்வித்ததென்னவெனையென்றுமீடழிக்கும்
இராவணமாயையிருவித்தருள்பெரியோரிதய
இராவணமேயெங்கனகவல்லித்தன்னையிந்திரையே (அகூ)

பானீர்பிரித்திடுமன்னத்தினரியன்பண்புரையாற்
கானீர்கனன்மண்ககனத்திற்கண்டவிக்காயத்தன்மை
மேனீர்மையுற்றவுயிர்த்தன்மைதேறவிழைந்தருள்வாய்
சூனீர்முகிறவழ்காவெவ்வுட்பொற்கொடிச்சுந்தரியே.(கூ0)

நினக்காகச்செய்யவேனையென்னப்பவக்கடனீந்துகிற்பான்
எனக்காகவன்பணைகட்டிமுத்திக்கரையேற்றுவிப்பாய்
சினக்காகங்காத்திட்டசீர்த்தியினிறைசெய்யவளே
புனக்காகதுண்டப்புன்கைகமழ்வீட்டெவ்வுட்பொற்கொடியே. ()

பெட்பகலாதகனகவல்லிப்பெருமாட்டிமுன்னி
புட்பகமேறியயோத்திபுக்கென்னப்புலைச்சிறையாங்
கொட்பகநீக்கிப்பிரணவத்தோமிசைக்கொண்டுசென்று
நட்பகலாதவர்வாழ்திருநாட்டெனைநாட்டுதியே. (கூஉ)

செல்லுழியென்றெடுசெல்லாதவர்க்குச்சிறப்பளித்துச்
செல்லுழியென்றெடுசெல்லுநினக்கொன்றுஞ்செய்தறியேன்
அல்லுழிதந்தவென்னைசையறப்பொறுத்தாதரித்தாள்
எல்லுழிதந்தவிறையேமவல்லியிலகருமியே. (கூங)

பழித்துணைக்காரணமாம்பாவையர்பண்டிப்பாழ்த்தகருக்
குழித்துணைகூத்துணைகோத்துணைகும்பித்துணைகுலவும்
விழித்துணைமீளாக்கதித்துணையக்கதிவீட்டினுய்க்கும்
வழித்துணையெவ்வுட்கனகவல்லித்தல்லிவானவியே.(கூச)

பெருநாடுமன்பதைபேசிசையெம்பெருமாட்டிசெங்சேழ்
மருநாட்டுமாமலராதனையாடகவல்லியன்னை
கருநாட்டுமென்வினைகாட்டைக்களைந்துகலக்கமில்லாத்
திருநாட்டுமாமணிமண்டபத்தென்னைததிகழ்ததுவளே. ()

இலங்கைவிட்டேகுழியெம்மானிடப்பண்பிசைத்ததென
அலங்கையஞரங்கம்விட்டெழுங்காலர்ச்சிராதிவழி
அலங்கைவகைசொல்லியாற்றைக்கடப்பித்தமாநவர்தம்
வலங்கைதொடுவித்துப்பொற்கொடித்தாய்வைப்பள்வைகுந்தத்தே.

மெத்தியசூரியையிக்குடில்விட்டெழும்வேலேயன்பாம்
உத்தியசூரிகளேத்திடும்பொற்கொடியுற்றெவரும்
நத்தியசூரியமண்டலவாயினடத்துவித்து
நித்தியசூரிகாயத்திலென்னைநிறுத்துவளே. (கூஎ)

செத்துப்பிறக்கின்றதேவர்க்குமானுடதேகிகட்கும்
செத்துப்பிறவாவமரர்க்குந்தாயெனுஞ்செய்யவளே
நத்துப்பிறங்குங்களப்பொற்கொடியெனுநாயகியே
தத்துபபிறவிதவிர்த்தெற்கந்தாமத்தைத்தந்தருளே. (கூஅ)

மைந்தன்மறையவன்மார்த்தாண்டன்றந்தமறலியெனும்
மைந்தன்றெழில்களிம்மைந்தன்வயின்மருவாதொழிய
மைந்தன்பின்மாற்றிநின்மாளாச்சுகாநந்தவாரிதியாம்
மைந்தன்பெரும்பதம்வைத்தருளாடகவல்லியன்னே. ()

இக்குற்றசீர்த்திக்கனகவல்லித்தல்விசேய்மழலே
எக்குற்றமேயினுமீன்றேருளத்தின்பினேற்பதுபோற்
சொக்குற்றநெஞ்சன்றெடுத்தவித்தண்டமிழ்ச்சொற்றொடையல்
பொக்குற்றதேனுந்திருவுளங்கொண்டுபுனைந்தருளே. ()

வாழிதிருவெவ்வுள்வாழியுட்டாபம்வரையிலஞ்சி
வாழிவிரீகியவிமுனிமாசுணமன்படுக்கை
வாழியதிற்கண்வளர்வீராகவமாயனென்றும்
வாழிகனகவல்லித்தாயென்னுள்ளமலரகத்தே.

---

உவ்வுட்பொருளாயுலகுமுயிருமுயிர்த்தளிக்கும்
எவ்வுட்கனகவல்லித்தாய்க்கொருநூறிசையலங்கல்
அவ்வுட்பொருள்சொலிராமானுசாரியனம்பதத்தான்
தெவ்வுட்பகைதீரெதிராசதாசன்றெரித்தனனே.

கனகவல்லித்தாயார் மாலே

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# அத்திகிரிப்

# பெருந்தேவித்தாயார் மாலை.

## காப்பு.

திருக்கச்சிமேவுபெருந் தேவித்தாய்தாண்மேல்
உருக்கத்தமிழ்மாலை யோதத்—திருக்கருணை
வாரிமாறன்பதமே வாழ்த்தியுய்ந்ததென்குருகைக்
காரிமாறன்பதமே காப்பு.

## நூல்

பூவிற்சிறந்ததம்போருகப்பூமணம்பூத்துயிர்க்குங்
காவிற்சிறந்ததுகற்பகக்காவெனக்கற்றுணர்ந்தோர்
பாவிற்சிறந்ததுநம்பெருந்தேவியைப்பன்னிடும்பா
நாவிற்சிறந்தவள்பேர்நவின்றிடுநாவென்பவே. (க)

அருந்தேவியன்பிற்றலைப்பிரியாதவடியர்முன்னர்
வருந்தேவிவானவர்மண்ணவர்வேண்டும் வரங்களெல்லாந்
தருந்தேவிதந்தித்தரணிச்சநார்த்தனன்றன்றுணையாம்
பெருந்தேவிதன்புகழ்பேசநெஞ்சேயென்றும்பேணுதியே.()

அத்திகிரிப்பதிவாழமரேசனன்பாந்துணைவி
நத்திகிரிக்கரநான்குடையாணளிறுதனையாள்
அத்திகிரிகொளிவ்வண்டமெலாம்பெற்றளிக்குமகா
சத்திகிரீசைபுகழ்பெருந்தேவிசரணெனக்கே. (ங)

கச்சித்திருப்பதிவாழ்கனகாம்பரைகாதலுடன்
மெச்சித்திருப்புகழ்பாடுநர்க்காக்கும்விமலைவிண்ணோர்
உச்சித்திருப்பொறியாம்பெருந்தேவிதன்னொள்ளடியை
இச்சித்திருப்பதுநெஞ்சேநம்பேற்றுக்கிலக்கணமே. (ச)

வரத்திற்சிறந்தபெருந்தேவியன்னைவடிவவொளி
சிரத்திற்றிருவுத்திநெற்றியிற்சுட்டிசெவிக்குழைகள்
உரத்திற்பெருமணிமாலையொண்காலணியூற்றுமொளித்
தரத்திற்புகுந்துதரிசித்தல்கண்ணின்றரமலவே. (ரு)

அளியின்கடலையழகின்கடலையறக்கடலைக்
களியின்கடலைக்கலையின்கடலைக்கற்புக்கடலைத்
தளியின்கடலன்னதந்திகிரிப்பெருந்தேவியென்னும்
ஒளியின்கடலையுளக்கடல்வைத்துவக்கின்றனமே. (சு)

அவிப்பாத்திரருமறவோருமந்தமிழாரியத்தின்
கவிப்பாத்திரருங்களிக்குநின்கீர்த்திக்கரும்பிரதஞ்
செவிப்பாத்திரத்தின்மடுத்துண்டுநாளுந்திளைக்கும்வண்ணம்
புவிப்பாத்திரர்தொழுந்தாட்பெருந்தேவிபுரிந்தருளே. (எ)

புலிவாயினின்றும்புல்வாயைப்புரப்பதுபோற்பொறியின்
வலிவாயினின்றும்வதைக்குமறலிதன்வாயினின்றுங்
கலிவாயினின்றுமெனைக்காத்தளித்திகடவுளர்கள்
பொலிவாயிற்கோயிற்பெருந்தேவித்தாயெனும்புண்ணியையே. ()

சருப்பத்தின்வாய்கொடவளையைக்காத்திடுந்தன்மையென்னக்
கருப்பத்தில்வந்துபிறந்துகுடும்பமென்காட்டடழலின்
உருப்பத்தினையுமெளியனைக்காத்தியுயர்புலவர்
விருப்பத்தின்மேவும்பெருந்தேவிநாமவிசித்திரையே. (கூ)

காயமயக்கமுங்காரிகையார்தங்கலவிதனில்
நேயமயக்கமுநேமிமயக்கமுநேடுபொருண்
மாயமயக்கமுமாகுமலினங்கண்மாயவருட்
டோயமளித்தருள்வாய்பெருந்தேவிசுகோதயையே. (க0)

வரற்குமரற்கும்வளர்பூதங்கட்கும்வகுக்கும்பஞ்ச
சரற்குந்தறுகட்புலியாதிகட்குந்தடித்ததண்ட
தரற்குநின்னன்பர்கள்சற்றுமஞ்சாரித்தரணியில்வாழ்
நரர்க்குஞ்சுரர்க்குமருள்பெருந்தேவிநளினமின்னே. (கக)

கண்டென்கொகன்னற்பாகென்கொகைத்தோங்குமிக்குத்
தண்டென்கொதழைவாழைபலாமாத்தருக்கடரும்
பண்டென்கொபசும்பாலொடுதேனென்கொவமுதத்
துண்டென்கொபெருந்தேவிநின்னாமச்சுவையினையே. ()

செவிக்குமமுதநற்சிந்துவைக்குந்தெவிட்டாவமுதங்
கவிக்குமமுதங்கடிந்தோர்மனங்களிகொள்ளமுதம்

புவிக்குமமுதம்பொன்னாட்டவர்க்கென்றும்புத்தேளமுதங்
குவிக்கும்புகழ்ப்பெருந்தேவிகல்யாணகுணகணமே.(கரு)

மணியென்கெனோவிம்மகிதலத்தோர்க்குவயங்குமுத்து
மணியென்கெனோமம்மர்மாரியைமாய்த்திடவந்தசித்த
மணியென்கெனோமந்திரமென்கெனோமெய்ம்மதிதருங்கண்
மணியென்கெனோபெருந்தேவியென்சூடாமணியினையே. ()

பூவைநிகர்த்தமென்சொல்லாள்பொன்னாடுபுகழ்தருவின்
காவைநிகர்த்தகரத்தாள்கண்ணாடிக்கபோலத்தினாள்
பாவைநிகர்த்தபடிவத்தினாள்பதுமப்பதத்தாள்
மாவைநிகர்த்தவிழிப்பெருந்தேவியைவாழ்த்துநெஞ்சே.()

போதனத்தாற்கும்புருகூதனாதிப்புலவர்கட்கும்
மாதனத்தாற்கும்வருணாதிகட்குமறலியெனுஞ்
சோதனத்தாற்குந்துறவோர்க்குமாந்தர்க்குஞ்சுத்தசித்த
சாதனத்தார்தொழுநம்பெருந்தேவிசரணியையே. (கசு)

எல்லாவுலகமுமின்புறவேண்டிமுன்னீன்றவளாம்
எல்லாவுலகுக்குமென்றுமெவணுமிரட்சகையாம்
எல்லாவுலகத்தவர்க்குநியாமகையாமியங்கும்
எல்லாவுலகும்புகழ்பெருந்தேவியிறையவளே. (கஎ)

விரத்தியில்லார்கட்குமெய்ஞ்ஞானங்கூறல்வியர்த்தமென்றே
தரத்தியல்சாத்திரஞ்சாற்றுமதனாற்சகத்துக்கெல்லாங்
குரத்தியெனுநீயதுநன்குவாய்த்திடுங்கொள்கைசொல்லிப்
புரத்தியெனைப்புண்ணியம்பெருந்தேவிபொற்பூமகளே. ()

பொறிக்கள்வர்நின்பூசனைக்கேயுரியபொருளைச்செந்நாய்
கொறிக்கொண்டுபோவதெனக்கொடுபோவர்குறித்திடுநன்
னெறிக்கொண்டுநின்றுன்றிருப்பணிசெய்துநிதமுமுய்யக்
குறிக்கொண்டுகாத்தருள்வாய்பெருந்தேவிகுணக்குன்றமே. ()

புகுவழிமாயையிற்போந்திட்டுநல்லபொல்லாதவெனப்
பகுவழிக்கன்மரிபந்தின்பாட்டுப்படர்குடும்பச்
செகுவழிக்கானந்திரிகின்றவென்னைத்திதித்தருடன்
மிகுவழியோர்புகழும்பெருந்தேவியிலக்குமியே. (உ0)

மனைநிலைஞானவசுவெரிக்காவிடின்மற்றுமற்றும்
வினைநிலைவீயாவரிதாள்கொளுத்தாவிளைநிலத்திற்
சினைநிலைப்பூடுசெழிப்பெனச்செய்வனசெய்தருள்வாய்
அனைநிலைநீங்காப்பெருந்தேவித்தாயாமருணிதியே. (உக)

கருப்பூரமின்றியுமப்பேழையவ்விரைகால்வதென
விருப்பூர்மனைநகையின்றியும்வாசனைவீறிநிற்கும்
நெருப்பூர்துகிலினைதைநீத்தருடிநிமிர்ந்ததந்திப்
பொருப்பூர்சினகரம்வாழ்பெருந்தேவிபுராதனையே. (உஉ)

நின்கதைகேட்குநியமநின்னாமநிதமுரைத்தல்
நின்பலிநிட்டைநின்றோத்திரநின்பணிநேசமென்றும்
நின்வழிபாடுநினக்காப்பொருள்சுகநீத்தலிவை
நின்னளிக்காரணமாம்பெருந்தேவிநிருமலையே. (உ௩)

புராதனைபொன்மகள்பூமகள்மாமகள்பூங்கமல
வராதனைவாரிசக்கண்ணிமணிவண்ணன்வண்மணிசேர்
உராதனைநங்கள்பெருந்தேவியுய்வின்கண்ணூக்கமிலாக்
கிராதனையாளும்பரமகல்யாணிக்ருபாகரியே. (உ௪)

வேதனையீன்றவளேவேழவெற்புறைவித்தகியே
வேதனைசெய்யும்வினைப்பகையாலும்விறற்பொறியின்
சாதனையாலுந்தளர்வேனையின்னுந்தளரும்வண்ணஞ்
சோதனைசெய்தல்பெருந்தேவியன்னாய்சுகிர்தமன்றே. ( )

ஓலவட்டத்துவரோதவொலியலுடுத்திருக்கும்
ஞாலவட்டத்தினுநல்லின்பவீட்டினுநாயடியேன்
காலவட்டத்தென்றுமெம்பெருந்தேவிகளித்துநினக
காலவட்டப்பணிசெய்துய்யும்வண்ணமருள்புரியே. (உ௬)

பாக்கியவானச்சுதன்மாவைப்போலப்பழுத்தவுள்ளந்
தேக்கியவன்புடன்றேமலர்கொண்டுதினந்தினமும்
ஆக்கியமாலைநின்னம்புயத்தாளிலணிந்துயவே
வாக்கியநல்லருள்செய்பெருந்தேவிவரோதயையே. (உ௭)

அந்தரங்கப்பணிப்பாற்கடறன்னையரிதின்விட்டு
வந்தரங்கப்பெருங்கோயிலும்வாரணவெற்புமுறை

இந்தரங்கப்பண்முகப்பெருந்தேவியிறைவிநின்றன்
அந்தரங்கப்பணிசெய்துய்யும்வண்ணமருள்புரியே. (உஅ)

சோகாந்தகாரத்தொடுகடனீத்தபின்றோகையர்கள்
மோகாந்தகாரமுன்னீர்மூழ்குமூடனுமோனமுற்ற
ஏகாந்தசீலரிறைஞ்சுநின்பாதமிறைஞ்சியுய்வான்
மாகாந்தநாட்டில்வைப்பாய்பெருந்தேவிமறைக்கொழுந்தே.

வானத்தில்வையத்தில்வாழ்வோர்கள்வந்துவணங்குஞ்சந்நி
தானத்திற்சந்ததநின்பணிசெய்துதழைக்கும்வண்ணம்
ஈனத்தின்மிக்கவெளியேற்கிரங்கியினிதருள்வாய்
ஞானத்தின்மிக்கோர்புகழ்பெருந்தேவிநயாசலையே. (௩0)

கரத்திற்சிரத்திற்றொழுதிறைஞ்சாதகயவர்கட்கும்
மரத்திற்குமாவிற்கும்வேற்றுமையொன்றுமதிக்கிலேன்
வரத்திற்சிறந்தோர்புகழ்பெருந்தேவியிம்மானுடமாந்
தரத்திற்சிறந்தபிறப்புமந்தோதவத்தாழ்வுற்றதே. (௩க)

சேராதனமுதலாகவெண்ணெண்வகைசேர்வளமுந்
தீராதனமடவார்நகைமண்ணகைசெம்பொனகை
வாராதனகநல்வைகுந்தவாழ்வும்வழுத்திநினை
ஆராதனம்புரியார்க்கத்திமாமலையம்புயையே. (௩உ)

அந்திகிரிப்புவிபோற்றருளாளனருளுஞ்சங்கஞ்
செந்திகிரிப்புயஞ்சேர்ப்போனருளுந்திகழுமொற்றை
வெந்திகிரித்தேரவர்போலொளிர்முத்திவீடுமெய்துந்
தந்திகிரிப்பெருந்தேவிதிருவருள்சார்ந்திடினே. (௩௩)

பொருள்வருநல்லபுவிவருமெண்வகைப்போகம்வருந்
தெருள்வரும்பத்திமைச்செல்வம்வருநற்றிருக்குரவன்
அருள்வருமன்னதனலழியாதவமுதம்வரும்
இருள்வருகூந்தற்பெருந்தேவிசீர்த்திபிசைப்பவர்க்கே. ()

எவ்வழியெண்ணிலிருணரகங்களிரித்தொழிக்கும்
அவ்வழிதன்னையடியேற்கிரங்கியறைந்தருள்வாய்
செவ்வழியோர்தொழுஞ்சேவடியாய்சிறைத்தேன்கணங்கள்
செவ்வழிபாடும்பொழிற்கச்சிவாழ்பெருந்தேவியன்னே. ()

தனுவாதியாற்செய்பவக்கழுவாயினைச்சாற்றிடுங்காற்
றனுவாதியாற்றுனதுசெய்துகோடறகுதியென்று
மனுவாதியர்சொல்வர்செய்துய்யவுள்ளமகிழ்திமறை
மனுவாதியாற்றெழுமெம்பெருந்தேவிமலர்மகளே. (௩௬)

பவர்க்கந்தரும்பவமென்றுபன்னூல்கள்பணித்திருந்துங்
கவர்க்கமுதலிருபானுன்கின்மூலங்கவற்றமின்னோர்
சுவர்க்கம்விரும்பித்துயர்தேடுமென்மதிச்சூனியத்தைச
 வர்க்கந்துதிபெருந்தேவிநிற்கென்னென்றுசொல்குவனே.

 யாதியரசனில்யெளவனமங்கையரின்பமையல்
வியாதிவருத்தவிளமைக்குமூப்பினைவிற்கவெண்ணுங்
கியாதியறிவினனெவ்வாறுநின்பதங்கிட்டியுய்வேன்
தயாதிகுணமுடையாய்பெருந்தேவிசரோருகையே.(௩அ)

வருத்தும்பிணிநிலைக்கேற்றபடிநல்வயித்தியர்கள்
திருத்துஞ்சிகிசசையிற்சீர்த்துஞ்சிறுத்துஞ்செறுக்குந்துன்பைப்
பொருத்தும்பவங்கட்குப்போக்கைவிதித்தனர்போற்றகிலேன்
மருத்துன்றடியடைந்தேன்பெருந்தேவிமலர்மகளே.(௩௯)

போதகநீராட்டினும்பின்னுந்தூளியைப்போர்த்தலென
ஒதகநீக்குமுபாயமியற்றினுமுற்றுமற்றும்
பாதகஞ்செய்தலின்வீணனைதருள்பார்த்துநிற்பன்
சாதகமென்னப்பெருந்தேவியன்னாய்தயைபுரியே. (௪0)

அதிகாரியானவடியேனஞ்ஞானத்தனன்னதனல்
உதிகாரியமெனும்பாவங்களொட்டற்றொழியகில்லா
விதிகாரியமதியேபாவவேரறவெட்டிவிடும்
அதிகாரிகைகொள்பெருந்தேவியன்னதருள்புரியே. (௪௧)

பத்தியமாவுண்பவர்க்குப்பிணிபருக்காதடியேன்
நித்தியமாகநியமவொழுக்கத்தினின்றுமெல்லத்
தத்தியந்தத்துவஞானமடையத்தயைபுரிவாய்
சத்தியகாமிப்பெருந்தேவித்தாயாஞ்சரோருகையே. ()

ஐந்துபொறியையவித்துமரிவையராசையற்றும்
நந்துகருமபலனைவிடுத்துநவையொழித்தும்

முந்துசரணாகதிசெய்துமுய்குவர் மொய்கருணைச்
சிந்துவெனும்பெருந்தேவியெளியனென்செய்குவனே. ()

நத்தியிழைத்தகழுவாய்பலவுநின்னல்லடியிற்
பத்தியிலாதவர்க்கென்னேபயக்கும்பரமபத
முத்தியடையமுயல்வோர்க்கருளுமுதல்வி நின்பாற்
பத்தியளித்தருள்வாய்பெருந்தேவிபராபரையே. (சச)

எவர்நின்குணத்தன்பும்பாதத்திதயமுமேயவைப்போர்
அவர்கழுவாய்களனைத்தும்புரிந்தவராருயிரைக்
கவர்சமன்றன்னையுங்காணாரவர்பதக்காதறந்தாள்
தவர்துதிபாதப்பெருந்தேவித்தாயெனுந்தாக்கணங்கே. ()

மங்கையைமன்னரைமாதாபிதாவைமறையவரைச்
சங்கையறக்கொல்லறன்குருபன்னியைத்தான்முயங்கல்
கொங்கைக்குடித்தல்முதலகுற்றங்களைக் கொல்லுநஞ்சாம்
நங்கைக்கரசிபெருந்தேவிநாமநவில்வதுவே. (சசு)

சீருற்றநின்றிருநாமங்கள்செப்புந்திறத்தினரை
நேருற்றுநின்றதுநின்மலராக்கிடுநீர்மையென்னச்
சூருற்றிடுகன்மயோகஞ்செய்யாதுதொடுகடல்சூழ்
பாருற்றகீர்த்திப்பெருந்தேவித்தாயெனும்பண்ணவியே. ()

தோலடியன்னநடையாரிரதித்துணைவன்மலர்க்
கோலடியுண்டுங்குவிகொங்கைமங்கையர்குத்திரக்கண்
வேலடியுண்டுழிளைத்தசிறுவனின்வேதமுடி
மேலடிவாழ்த்திடுய்வான்பெருந்தேவிவிழைந்தருளே. ()

முப்பொருணீர்மையொர்முட்டின்றிமுற்றுமுறையினுள்ளங்
கைப்பொருளென்னநடையேனிதயக்கண் கண்டுணர
எப்பொருளும்பெற்றளிப்பவளேயிருக்கின்றலையார்
அப்பொருள்வேட்கும்பெருந்தேவியன்னையருள்புரியே. ()

எண்கூடெனுநின்னிடம்வைத்திபக்குன்றிறைவிதனைப்
பண்கூடெனும்பசும்பாப்பாடியேத்திப்பணிதியெனிற்
புண்கூடெனுமிப்புரநீக்கிமுத்திப்புரத்தில்வைப்பள்
கண்கூடெனவிதைக்காண்டிகவலலென்காதனெஞ்சே. ()

வாரணமாமலைவாழ்பெருந்தேவிமலரடியை
ஆரணவாணருமந்தரவாணருமன்பறிவிற்
பூரணபூதரும்போற்றிடநீயங்ஙன்போற்றகில்லாக்
காரணமென்மனனேநீயெனக்கதைக்கட்டுரையே. (ருக)

திலத்தினினெய்யெனத்தீக்காலம்விண்புவிசேருமெவ்வெத்
தலத்தினுமத்தலஞ்சார்ந்தபொருளினுஞ்சார்ந்துறைவாள்
நலத்தினுயர்பெருந்தேவியொன்றுப்பதநல்கடியைப்
புலத்தினுழல்மனனேயென்றுஞ்சிந்தித்துப்போற்றுதியே.

மைப்பட்டகூந்தற்பெருந்தேவிவண்புகழ்வாழ்த்தலொரீஇச்
சைப்பட்டவேனையர்தம்புகழ்வாழ்த்தறடையொன்றின்றிக்
கைப்பட்டகாமரமிழ்தைக்கமரிற்கவிழ்த்துவிட்டுப்
பைப்பட்டபாம்பின்பழிநஞ்சயின்றிடும்பான்மையதே .()

நெய்யிடுந்தோறுநெருப்பவியாதந்தநீர்மையென்ன
மையிடுங்கண்ணியர்மையனுகர்தொறுமாய்தலில்லை
செய்யிடுசெங்நெற்பயிரோங்குங்கச்சித்திருப்பதிவாழ்
கையிடுகங்கணமாதேவியஃதுகடிந்தருளே. (ருச)

கறையடிமாமலைவாழ்பெருந்தேவியென்கற்பகமே
தறையடித்தாலெனத்தப்பாமலெற்குச்சரமநின்றன்
உறையடிச்சேவையுறுமோவுறுதோவெனவெனுள்ளம்
பறையடிக்கின்றதுநின்றிருவுள்ளப்பரிவென்னையே. (ருரு)

குறவருமஞ்சிடுங்குன்றக்கொடுமுடிகொள்கழையில்
உறவருதேனைமுடவனுற்றுண்டிடவுன்னலொக்கும்
அறவருங்காணவரியநின்சேவையையான்விரும்பல்
துறவருவந்துதொழும்பெருந்தேவிசுகோதயையே. (ருசு)

மகரக்கொடியோன்மலர்க்கணைமாரிவருத்தவந்த
திகரக்களையுடன்சென்மக்களையையுந்தீர்த்தருள்வாய்
தகரக்கருங்குழற்றுயேதசிரக்கைத்தந்திகிரிச்
சிகரச்சிகரம்வாழ்பெருந்தேவிதிருமகளே. (ருஎ)

சத்தியஞ்சாந்தம்பொறைசுகதுக்கச்சமத்துவமுட்
சுத்திபொறிவெற்றிசூழ்ந்திடும்பூதத்துரோகமின்மை

பத்தியிவைகொணின்பத்தர்பெருமைபகர்வதற்குச
சத்தியிலேலென்னையாள்பெருந்தேவிதயாபரையே. (ருஅ)

அயலவர்துக்கங்கண்டாற்றுமையன்பர்கட்கன்புசெய்தல்
மயலவர்கேண்மைமறுத்தனெஞ்சுன்னுழிவைத்தலிந்தச்
செயலவராகின்னடியார்பெருமைகள்செப்பரிதாற்
கயலவிர்கட்பெருந்தேவியன்னாய்பொற்கரம்புயையே. ()

வீறங்கவேதச்சிரத்தினுமெட்டுவிதங்களெனக்
கூறங்கயோகியருள்ளத்தும்வாழ்நின்குணைகழலிற்
றேறங்கமானபுளகாதியுற்றுத்தினமிரண்டோ
டாறங்கந்தோயப்பணிவேன்கரிகிரியம்மனையே. (ரு0)

வாசனைவாய்ந்தவனமாலைமார்பில்வயங்கிருடீ-
கேசனைநின்னைக்கிளருளத்தான்மிக்கேண்மையொடும்
பூசனைசெய்புமடியேனைப்புல்லிப்பொரும்விடய
வாசனைதீர்த்தருள்வாரணமாமலைவானவியே. (சுக)

மும்மையுலகமுதல்விமுக்காலமுமோர்தலைவி
இம்மைமறுமைப்பயனையளிக்குமிறைவிநம்மை
எம்மையுமாட்கொளுமெம்பெருமாட்டியிபமலைவாழ்
அம்மையெனும்பெருந்தேவியிதனையறிநெஞ்சே. (சுஉ)

தருக்கறுத்துச்சன்மச்சக்கரம்வற்றுத்தகவுசெய்யுஞ்
செருக்கறுத்துச்செல்லறீராமைசெய்துதெறுமவித்தைத்
திருக்கறுத்தன்பர்தஞ்சிந்தையிற்செம்பொருடேருணர்வாம்
பெருக்களித்தாளும்பெருந்தேவியெங்கள்பெருந்தனமே.

தாமக்கருங்குழற்றையலர்தாய்தந்தைசாருறவோர்
ஈமக்கடமுடைப்போரிவ்வுடற்கேயியைந்தவராம்
நாமக்கடற்புவியீர்கேண்மினென்மொழிநாளுநங்கள்
சேமக்கருத்துடையாள்பெருந்தேவியென்சிற்பரையே. ()

தேவப்பிரமவிராசமுனிவருந்தேவர்களும்
ஓவப்படிவவுமையாகியருமுலகினரும்
மேவப்பகட்டுக்கிரிக்கோயிலிற்கொலுவீற்றிருக்குந்
தாவப்பன்காந்தையைக்கண்டென்றன்கண்கள்களித்தனவே.

என்னிலையும்மறந்தில்லத்துமோகவிருளிற்சிக்கிச்
சின்னிலைக்காலம்பொருடேடலாதிச்செயல்புரிந்தும்
புன்னிலைப்போகம்புசித்துமுறங்கியும்போக்கியன்றாய்
நின்னிலையும்மறந்தேன்பெருந்தேவியென்னீர்மையென்னே

மன்னுவுடம்புமனைவிமதலைமனைபொருட்கண்
மன்னுசைவைத்துமரணமறந்துமதிமயங்கி
இன்னுவியற்றுமிவ்வேழைக்கிரங்கியினிதினுய்யப்
பொன்னுசிகூறுதிபோதகவெற்புறைபொன்மகளே. (சுஎ)

தாரந்தருபவள்சந்ததியூர்திதனம்பலபூண்
ஆரந்தருபவளம்புவியாளதிகாரமுடன்
வீரந்தருபவள்வெற்றிதருபவள்வேதவிழுச்
சாரந்தருபவடந்திகிரிப்பதித்தம்மனையே. (சுஅ)

யோகத்தினவ்வவ்வருணச்சிரமத்தொழுகுபலப்
பாகத்தைநோக்காதியற்றவினையெய்தும்பயன்களினும்
மோகத்தைநீத்துநினையெண்ணிடும்பயன்முக்கியமாம்
மாகத்தைநண்ணியமாதங்கமாமலைமன்னவியே. (சுகூ)

தீராதசன்மஞ்செறுத்தமுதம்பெறுஞ்சிந்தையர்கட்
காராதவன்புடனின்றிருநாமமனவரதஞ்
சோராதநாவிற்சொலலன்றிவேறொருசூழ்ச்சியில்லை
ஓராதவுள்ளத்துறையாக்கரிகிரியுத்தமியே. (எ0)

விஞ்சியவாயுள்குடும்பிக்கிருப்பினும்வீண்மிகவும்
எஞ்சியவாயுளிரதியிலார்க்கின்பவீடளிக்கும்
கொஞ்சியநின்னடியேனுடைக்காலத்தின்கூறுதனைப்
பஞ்சியல்பாதப்பெருந்தேவிசெய்தியயன்படவே. (எக)

அந்தியகாலமணித்தாகவினென்றறுசையெல்லாம்
நந்தியஞானவயிராக்கியமெனுநாந்தகத்தான்
முந்தியறுக்குமுயற்சிதந்தாளுதிமூவுலகும்
உந்தியகீர்த்திப்பெருந்தேவித்தாயெனுமுத்துங்கையே. ()

பரணியெனப்பவப்பஞ்சரம்பூரிக்கும்பாவிநின்னைச்
சரணியையென்றடைந்தேனென்சழக்கைச்சமித்தருள்வாய்

அரணியிலங்கியெனவெங்குமார்ந்துறையம்மனையே
தரணிபுகழுஞ்சநாதநபுண்யசரித்திரையே. (எ௩)

சாத்திரச்சக்கினர்சால்புறும்யோகந்தருமுணர்வாம்
நேத்திரரென்னவடியேனினது நிலையறியும்
பாத்திரனல்லேனெனினுநின்பாதப்பணியளித்தாள்
தாத்திரியோர்புகழும்பெருந்தேவிசநாதனையே. (எச)

தீதேவிளைத்துப்புறந்திரிசேரலர்தீயநட்புங்
கோதேவிளைக்குமுட்கூடார்குறும்புங்குலைத்தருள்வாய்
பூதேவிநீளையுடனெம்பிரான்கட்புரிந்திருக்குஞ்
சீதேவிசீர்த்திப்பெருந்தேவித்தாயெனுஞ்சின்மயையே. ()

ஈயாரிரக்கமிலாதாருயிர்கட்கிடும்பைசெய்வார்
ஆயாரருங்கலையாயார்நின்னன்பராருச்சனைக்குச்
சேயாரிணக்கத்தைத்தீர்த்தருள்வாய்பெருந்தேவியன்னாய்
தூயாரிதயசுகந்தநளினசுகாசனையே. (எகூ)

வையத்தின்மையல்வருத்தாமலுங்கடைவைகலென்னை
ஐயத்தின்பைப்புளனுகாமலுமென்னகமலரின்
மையத்தினுமறைவாணர்வழுத்துநல்வாரணமாச்
சையத்தினுமுறையும்பெருந்தேவிதயைபுரியே. (எஎ)

வானோக்கியோங்கியவாரணமாமலைமாமகளே
சேனோக்கியதிருக்கட்பெருந்தேவியென்சிற்பரையே
பானோக்கிநிற்கின்றபாலனினின்னருட்பார்வையென்செங்
கோனோக்கிநிற்பனெனதியல்பெற்குக்கொடுத்தருளே. ()

பொறிவழியோடிப்புலன்மேயுமென்மனப்பூசல்வண்டு
குறிவழிவந்துன்குரைகழற்கோகனகத்தினின்றும்
வெறிவழிதேனுண்டுவேட்டைகடீர்ந்துவிரும்பிநின்னை
நெறிவழியுன்னவருள்வாய்கரிகிரிநின்மலையே. (எகூ)

மாயையின்மம்மர்மருவிக்குணம்பொறிமன்னுதன்மச்
சாயையடைந்தென்றன்றன்மைத்தருமந்தவிர்ந்துபவ
நோயையடைந்ததைத் தீர்ப்போர்களின்றி நுடங்குமிந்தச
சேயையளித்தல்பெருந்தேவியாநினுஞ்சீரியதே. (அ0)

செடியார்வினையின்றிறத்தன்சினத்தன்றெருள்கொளுநின்
அடியார்பெருமையறியாவவலனரும்பொருணூல்
படியார்பகுப்பினனுகுமெற்பாலிக்கும்பாரமிற்கே
கடியாரளகப்பெருந்தேவியாங்கருணாலயையே. (அக)

நின்னைச்சரணவரணமடைந்திடுகிட்டையிலான்
றன்னைச்சனனமரணாதிதாபந்தணக்கில்லா
அன்னைத்திறப்பெருந்தேவிநின்பாதத்தடைக்கலமாம்
என்னைப்பகரவையெய்தாவிரகொன்றிழைத்தருளே. ()

சீரியதேசிகன்சீரருளின்றித்தெறும்பொறியைப்
போரியனெஞ்சத்தைப்போதத்தடக்கிடப்புந்திசெய்வோன்
பூரியன்றேசிகனேவலிற்போதகப்பூதாம்வாழ்
ஆரியவர்க்கத்தரசியவற்றையடக்குவனே. (அ௩)

புரந்தரனாதியர்போற்றுநின்பொன்னடிப்போதைநெஞ்சில்
நிரந்தரமெண்ணியுநின்னன்பர்பாதநிருமலநீர்
உரந்தரவுண்டுமென் னேவாப்பவப்பிணி யோவவெற்கோர்
வரந்தரவெண்பெருந்தேவியன்னாய்பத்தவற்சலையே.(அச)

ஓத்துமறைப்பொருளோர்ந்தோர்களுநன்குணர்வரிய
ஆத்துமதத்துவமத்தத்திலங்காமலகமெனப்
போத்துமதியற்கும்போதருமோபுவிபூத்தலொடு
காத்துமறைக்கும்பெருந்தேவித்தாயேகருணைசெய்யே. ()

தாவரசங்கமமானசரீரந்தனைத்தயியேன்
மூவரவின்னுமெடுக்கினுமுக்குணமோகவிருள்
மாவரவென்னைமறைக்காதுநின்னைவழுத்திநிற்க
மாவரமீந்தருள்வாய்பெருந்தேவிமலர்மகளே. (அசு)

ஈனவொழுக்கோரிணக்கம்பெருதுமிழுக்குறாந்துன்
மானவொழுக்கினர்மாடடையாமலுமன்னுநல்ல
ஞானவொழுக்கங்கணல்குதிநால்வாய்நகத்தலைவி
தானவொழுக்கத்தவரேத்துஞ்சத்தியசங்கற்பையே. (அஎ)

வெருவந்துன்பமுமின்பமுந்தாமேவிளைதல்கண்டுந்
தெருமந்தசிந்தையனாய்த்தீவினைகளைச்செய்துசெய்தென்

அருமந்தகாலத்தையந்தோவழித்தவழிவியாம்
பெருமந்தனைக்காத்தருள்பெருந்தேவிப்பிராட்டியன்னே.

ஆதிக்கமலையகளங்கையாவினுமாய்ந்துபரிச்
சேதிக்கவொண்ணுத்திருமாலூரத்துறைசெல்விபெற்குப்
போதிக்கத்தக்கனபோதித்துன்மாயையைப்புந்தியெஃகால்
வேதிக்கச்செய்தருள்வாய்வேழமாமலைவித்தகியே. (அகூ)

விண்ணேறுமாப்புகழ்நம்பெருந்தேவிவியனியற்கை
மண்ணேறுமாட்சிவடிவழகாகுமகோததிக்குக்
கண்ணேறுதன்னைக்கழிப்பான்கவிகாள்கடிதுவம்மின்
பண்ணேறுபாவினிற்பல்லாண்டுபாடிப்பாவுதுமே. (கூ0)

கபநாமநோய்கண்டங்கண்டுகவற்றுங்கடைப்பொழுதுன்
சுபநாமஞ்சொல்லித்துதித்துநின்றேயிந்தத் தொலலைவினை
நிபநாமநீசவுடனீத்திடநீநினைத்தருள்வாய்
இபநாமமாமலைவாழ்பெருந்தேவியிறையவளே. (கூக)

ஆற்றுப்பெருக்கிற்சுருக்கிற்பெருக்கஃகலாற்றகில்லா
ஊற்றுக்கடலினுறுபேறிழவினிலுள்ளமென்றும்
வேற்றுக்குணமடையாநின்றமர்குணவீற்றினுக்குத்
தோற்றுத்தொண்டாகவருள்பெருந்தேவிசுகாநந்தியே. ()

பூத்திரணின்றும்பொறிவண்டுதேனைப்புசிப்பதெனச்
சாத்திரசாரந்தனைக்கொளுநின்றமர்தாளிணையை
நேத்திரங்கண்டுநிருமலமாமவர்நீள்புகழைச்
சோத்திரங்கேட்டும்பெருந்தேவியுய்ந்திடுஞ்சூழ்ச்சிசெய்யே.

விளக்கினில்வீந்திடும்விட்டிலொவ்வாதுவியனுலகைத்
துளக்கிடுமாயையுருவாகுந்தோகையர்துச்சவின்பங்
கொளக்குறியாநின்குலவடியார்குழுக்கூடியுய்வான்
கிளக்குறுங்கேண்மைதந்தாள்பெருந்தேவிக்ருபாகரையே.

கானத்துவேடர்தங்கானத்தின்மான்கணங்கட்டமுறும்
ஈனத்தையெண்ணியவைபோல்வவிட்டுநின்னெண்ணில்புகழ்க்
கானத்தைக்கேட்டுக்களிக்குநின்னன்பரைக்காதலித்துய்
ஞானத்தைத்தந்தாள்பெருந்தேவிபாற்கடனந்தனையே. ()

வீட்டின்கணெண்ணமுமானுபிமானமும்விட்டுவிளை
யாட்டுறுபாலனிலல்லலொழிந்தகத்தும்புறத்துங்
காட்டுறுநின்னைக்கருதும்பெருமகிக்கண்ணுடையோர்
மாட்டுறும்வண்ணமருள்பெருந்தேவிமனோகரையே. ()

நயக்கும்பயனல்குவதாய்முயற்சியினண்ணரிதாய்
இயக்குமவன்குருநின்னருளேதையியக்கமைந்து
பயக்குமுடலம்பிகொண்டும்பவக்கடல்பாயகிலான்
துயக்குந்துரோகியன்றோபெருந்தேவிசுகோதயையே. ()

புருடார்த்தசாதனமாமிப்புரம்பொன்றுமுன்னர்மும்மைப்
புருடார்த்தநீக்கிப்புகற்கரிதாகப்புகல்முடிவாம்
புருடார்த்தசித்திக்குரியகுணங்களைப்பூரித்தெவ்வெப்
புருடார்த்தமுந்தந்தருள்பெருந்தேவிபுரந்தருளே. (௯அ)

புதைத்தமண்டோண்டப்புனறேன்றுமாபோற்புகுந்திடையிற்
புதைத்தவஞ்ஞானத்தைப்போக்கியென்போதம்புனிதமொடு
கதைத்தநல்லானந்தந்தோன்றிவிளங்கக்கருணைசெய்வாய்
புதைத்தபொன்னேபெருந்தேவியன்னேபுண்டரிகமின்னே.

முத்தமிழ்வல்லமுதிர்ஞானிகணின்முளரியந்தாள்
புத்தமிழ்தென்னப்பெருந்தேவியன்றாய்புனைகவிபோல்
இத்தமிழ்மாலையினியதன்றேனுமிரும்பிறவிப்
பொத்தமிழ்வேனைப்புரப்பான்மகிழ்ந்துபுனைந்தருளே. ()

வாழ்கதிருக்கச்சிவாழ்கவிமலைவாழ்கவெம்மான்
வாழ்கநந்தாய்பெருந்தேவிதிருமுகமார்பமுந்தி
வாழ்கவரதாபயநல்குமத்தநல்வாரிசங்கள்
வாழ்கதிருவடித்தாமரையென்மனவாக்கினுமே. (௧0௧)

---

மன்னும்புகழ்க்கச்சிவாழ்பெருந்தேவிதன்மாணடியை
உன்னுந்தமிழ்த்தொடைநூறுமிராமானுசவுரவன்
பன்னுஞ்சரோருகபாதந்தொழுதுய்யும்பள்ளிகொண்டான்
என்னும்மியற்பேரெதிராசதாசனியம்பினனே. (௧0௨)

பெருந்தேவித்தாயார் மாலை.

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## திருச்சுகனூர்

# அலர்மேன்மங்கைத்தாயார் மாலை.

---

### காப்பு.

வண்மைத்திருச்சுகனூர் வாழலர்மேன்மங்கைத்தா
யொண்மைத்திருவடிமே லோர்சதமா—முண்மைத்தாஞ்
சொன்மாலை சூட்டநெஞ்சே தொல்குருகைத்தண்வகுள
நன்மாலைமாறன்றுணம்பு.

### நூல்

மணிமேவியவாரிதிமஙமாந்தரும்வானவரும்
பண்மேவியபாதலரும்பணிகின்பதாம்புயமென்
திணிமேவியவுட்சிலைபூக்தெங்நாளுந்திகழ்ந்திடச்செய்
அணிமேவியசுகனூரலர்மேன்மங்கையம்மனையே. (க)

வஞ்சகவல்வினைவித்திட்டுமாயைவண்ணீர்மடுத்து
விஞ்சகங்காரம்விளைத்துப்பிறவிவிழுமநல்கும்
நெஞ்சகச்செய்யினின்பத்திப்பைங்கூழ்நிலைநிற்கும்வண்ணம்
அஞ்சகப்புன்களைபோக்கலர்மேன்மங்கையம்மனையே. (உ)

காற்றிற்கறங்குகறங்குதலென்னவெக்காலமும்வீண்
பேற்றிற்றிரியுமென்பேதைமனத்தைநிற்பேணுமன்பாம்
ஊற்றிற்றிளைப்பித்துயர்நியாசநிட்டையுதவிமுத்தி
ஆற்றிற்செலுத்தியருளலர்மேன்மங்கையம்மனையே. (ங)

கோற்றேனொழுகும்பொழிற்சுகனூர்வாழ்குலவிளக்கே
காற்றேனுமோர்நிலைநிற்குமதினுங்கடுகிநெஞ்சங்
கூற்றேயெனவெனைக்கொல்லுமதுசெய்கொடுமைதனை
ஆற்றேனடக்கியருளலர்மேன்மங்கையம்மனையே. (ச)

அலையேனுமோர்காலடங்கியுமோர்காலடங்கலிலா
நிலையேயுமென்னுளநிச்சலுமோர்நிலைநிற்றலின்றிப்
புலையேய்வழியேபுகுமினியானப்புலைவழிபோய்
அலையேனளித்தெனையாளலர்மேன்மங்கையம்மனையே. ()

துன்பக்கடலிற்சுழற்றிச்சுழற்றித் துறுத்திடுஞ்சிற்
றின்பக்கடற்சேயிளையநெஞ்சையென்றுமினித்தெழும்பே
ரின்பக்கடற்கணினிதாடும்வண்ணமிசைவிநல்ல
அன்பக்கயத்தர்தொழுமலர்மேன்மங்கையம்மனேயே. (அ)

அலகைச்செயலினேயுமென்னெஞ்சநின்னன்பர்தமை
உலகைத்திருத்தவுதித்தவரென்றுணராதவர்பாற்
பலகைத்திடுஞ்செயல்பண்ணுமவர்தமபதப்பெருமை
அலகைத்தெரித்துத்திருத்தலர்மேன்மங்கையம்மனேயே.

நவைநவைநெஞ்சகநாடொறுஞ்செய்தவினண்ணுகின்ற
குவைகுவையாம்பவக்கூட்டமிவ்வண்டமுங்கொள்ளகிலா
சுவைசுவையென்றெனேதோற்பையிடுதியென்சொல்குவல்யான்
அவையவைத்தன்னதடக்கலர்மேன்மங்கையம்மனேயே. ()

கடிப்போதில்வாழயன்கற்பம்புசித்துங்கழிவில்பவ
கொடிப்போதிற்செய்யவலதாமென்னெஞ்சத்திருேள்மையென்னே
பிடிப்போதகநடைப்பெண்ணணங்காமெம்பிராட்டி நின்றனை
அடிப்போதடைந்தேனருளலர்மேன்மங்கையம்மனேயே.

அல்லவைசெய்தெனக்காகாததாகியலேயுமனம்
நல்லவைசெய்துநலம்பெறுநாளென்றுநண்ணிடுமோ
பல்லவையோர்சொல்சுகாச்சிரமத்துறைபார்க்கவியே
அல்லவைத்தன்னதடக்கலர்மேன்மங்கையம்மனேயே. (க0)

குடகருங்குமமுலேக்கோகனகாய்சுகக்கோப்பதியாய்
கடக்குஞ்சராதியடக்குவனல்லகருமஞ்செய்யத்
தொடக்கும்பொழுததற்கூறுசெய்தேகிற்குந்துட்டநெஞ்சை
யடக்குந்திறமென்னருளலர்மேன்மங்கையம்மனேயே. (கக)

விடத்தைமுறிக்குமருந்துண்டெவரும்வியக்கவயத்
தடத்தைபொன்னுச்சமைக்குங்குளிகைகடாமுமுண்டு
வடத்தையிலேவயிற்றெம்பெருமாட்டியென்வஞ்சநெஞ்சின்
அடத்தையடக்குவதென்னலர்மேன்மங்கையம்மனேயே. ()

பகத்தையுந்தன்றொழிலால்வென்றெழிலிளம்பாவையர்தம்
பகத்தையுகக்கப்பறமபையுமெண்ணியவர்பணைத்தோட்

சுகத்தைவிரும்பித்தொலையாநரகத்திற்றுன்னு மென்னெஞ்
சகத்தைத்திருத்தியருளலர்மேன்மங்கையம்மனையே. (கங)

கனைக்குங்கடற்புவிக்கண்ணுஞ்சுகப்பதிக்காரணியே
நினைக்குங்கருவியெனத்தந்தநெஞ்சகநின்னையென்றும்
நினைக்கும்படிநிருமித்தென்னையின்னுமொர்நேரிழையாம்
அனைக்கும்பியண்டாதருளலர்மேன்மங்கையம்மனையே. ()

சித்துப்பொருளாமெனக்களிநெஞ்செனச்செப்புசட
வத்துப்பொருளென்வழிபடராதவகையெனைநின்
சொத்துப்பொருளெனைக்காத்தனினக்குச்சுகிர்தமன்றோ
அத்துப்பதபங்கயவலர்மேன்மங்கையம்மனையே. (கரு)

பந்தமுமோக்கமும்பார்க்கினென்னெஞ்சகப்பண்பினிற்குப்
பந்தமுறுதனைப்பக்குவஞ்செய்தனின்பாரமதாங்
கந்தமும்பூவுமெனவெம்பிரான்கட்கலந்திருக்கும்
அந்தமுமாதியுமில்லலர்மேன்மங்கையம்மனையே. (கசா)

புனலுறுபங்கத்தையப்புனல்கொண்டறப்போக்குதல்போல்
உனலுறுமுள்ளத்தினுற்றநவையையவ்வுள்ளங்கொண்டே
கனலுறுதூசெனக்கண்டருளன்பர்கசட்டையருள்
அனலுறுத்தித்துடைத்தாளலர்மேன் மங்கையம்மனையே.

தடித்தினுஞ்சஞ்சலஞ்சாலவும்வாய்ந்துதகாப்புலனே
பிடித்ததையேயெண்ணிப்பேராதுநிற்கின்றபேதைநெஞ்சை
வடித்தென்வயநிற்கும்வண்ணஞ்செய்வாயென்றுன்வாரிசநேர்
அடித்துணையண்டைகொண்டேனலர்மேன்மங்கையம்மனையே.

சாத்துவிகவகங்காரத்திற்றோன்றியுஞ்சாத்துவிகம்
நீத்துவிகடவிராசததாமதநேர்ந்தவித்தைக்
கூத்துவிகற்பங்கொளுநெஞ்சைநின்னடிகூடிநிற்க
யாத்துவிகசிதஞ்செய்யலர்மேன்மங்கையம்மனையே. (கஅ)

பத்துப்பொறியையுமாளுந்தலைமைப்பராக்ரமத்தின்
சித்துப்பொருளென்னையுமங்ஙனுளச்சிந்திக்குமதன்
பித்துப்பொடித்துப்பிரபஞ்சவாழ்க்கையைப்பேணித்துய்க்கும்
அத்துப்புரவொழித்தாளலர்மேன்மங்கையம்மனையே. ()

உபலமனமிவ்வுலகவுஞற்றிலுழைத்துழைத்து
விபலமடைந்ததினியேனுநின்னடிவீழ்ந்திறைஞ்சிச்
சபலமுறுமோவுருதோவறியேன்றயைபுரிவாய்
அபலமில்லாச்சுகனூரலர்மேன்மங்கையம்மனையே. (௨௧)

வியர்த்தவினையேவிரும்பிவிரும்பிவெறுப்பிலதாய்ப்
பெயர்த்தும்பெயர்த்துமதுதனையேயென்றும் பேணிநின்று
மயர்த்துமயர்த்துவருந்துமென்பேதைமனத்துக்கென்றும்
அயர்த்தலிலைகொலருளலர்மேன்மங்கையம்மனையே.(௨௨)

அறன்கடையானதெனநூலறையவறிந்திருந்தும்
பிறன்கடைநிற்பவட்பேணிவருந்துமென்பேதைநெஞ்சத்
திறன்கடையானதித்தீக்குணந்தீர்த்துத்திருமியென்றும்
அறன்கடையெண்ணுதருளலர்மேன்மங்கையம்மனையே. ()

நின்னைப்பெறின்மனனேயென்குறையினநேர்ந்தென்செய்யேம்
என்னப்பராங்குசமாமுனிசொற்றவியலின்மனந்
தன்னைப்பெறிலெற்குன்சாயுச்சியமுத்திதான்கிடைக்கும்
அன்னத்துவசன்றொழுமலர்மேன்மங்கையம்மனையே. (௨௪)

நின்புகழ்பாடிநிருத்தமிடநின்னிமலவுரு
இன்புறவெண்ணியிறைஞ்சிடலாதியியற்றிடவிப்
புன்புரம்வேண்டலினன்னதைமொய்த்திடும்புன்கணெலாம்
அன்புடனீக்கியருளலர்மேன்மங்கையம்மனையே. (௨௫)

சூரணங்கைத்தருமந்நோய்கடம்மைத்துடைக்கவொண்ணுக்
காரணமுண்டெனிலக்காரணத்தையுங்கட்டுரையாய்
நாரணனுசத்தினண்ணுநங்காய்நினைநம்பிநின்றேன்
ஆரணம்போற்றித்தொழுமலர்மேன்மங்கையம்மனையே. ()

எளியேன்முறைகேட்டிரங்காயெனினுலகெங்கணுநிற்
கிளிபோயியையுமியைந்தாலுநானின்றனெண்ணின்வணம்
அளியேனெனிலென்னைசெய்வலதுவென்னகச்செயலே
அளியேதிருவுருவாமலர்மேன்மங்கையம்மனையே. (௨௭)

ஒல்லியியற்றினுமொல்லாதென்றேகினுமுள்ளநிலை
சொல்லிவிடுவனென்றொல்லைவினையிற்றொடர்ந்தபவ

வல்வியறுத்தெனை வைகுந்தநாட்டின்கண்வாழவைப்பாய்
அல்லிமலர்க்குழலாயலர்மேன்மங்கையம்மனையே. (உஅ)

கடுங்காலதூதுவர்போலவெருட்டிக்கடுகடுத்து
நெடுங்காலமென்னைநெருக்கியநோய்களுநீமைகொண்டு
விடுங்காலம்வந்ததுவேண்டினனின்னைவிளம்பவற்றை
அடுங்காலமிஃதேயருளலர்மேன்மங்கையம்மனையே. (உகூ)

சரணவரணப்பெருமையறிந்ததலைவிநின்னைச்
சரணமடைந்தவெனக்கைவிடுதறருமமன்றுன்
சரணகமலமென்னெஞ்சக்கமலந்தயங்கவமைத்
தரணமெனநின்றளியலர்மேன்மங்கையம்மனையே. (௩0)

சீர்க்குணயோகஞ்சிறந்ததயாபரையென்றுசெப்பும்
பேர்க்குரித்தானவளாயெனக்கென்றும்பிராப்பியையாய்
நார்க்குரித்தானநின்பாலன்றியென்றனவிவையெல்லாம்
ஆர்க்குரைப்பேனருளாயலர்மேன்மங்கையம்மனையே. ()

நம்பியவென்னையெந்நாளும்பிணியினடுநடுங்கி
வெம்பியழுங்கவிடுதலறமெனவேண்டுகியேற்
பம்பியபாவக்கடனின்றுமென்னைப்பரிந்தெடுக்கும்
அம்பியனையவராரலர்மேன்மங்கையம்மனையே. (௩உ)

சேயின்சிறுமையைத்தீர்த்திடுவானதைச்சேர்ந்தொறுக்கும்
நோயின்றகவுக்கநுகுணமுண்டதைநோக்கல்பெற்ற
தாயின்செயலெனிற்றண்ணருளாற்சகந்தந்தளிக்கும்
ஆயின்கடனென்னருளலர்மேன்மங்கையம்மனையே. (௩௩)

அண்டப்பிணிசூடர்வாதமிருமலுக்காகரமாங்
கண்டக்கபாமயக்காரணந்தன்னைக்கழித்தருள்வாய்
துண்டப்பிறைக்குளத்தாய்சுகனூரெஞ்சுடர்க்கொடியே
அண்டக்குலாதிபன்போற்றலர்மேன்மங்கையம்மனையே. ()

கபவர்க்கநோய்நெடுங்காலம்வருத்திக்கவற்றுமதைச்
சுபவர்க்கம்யாவுஞ்செயவல்லநின்னருளாற்றுடைத்தாள்
நிபவர்க்கஞ்சொற்றதைநீக்காவிடுதனியாயமன்றால்
அபவர்க்கமார்க்கமருளலர்மேன்மங்கையம்மனையே. (௩௫)

கொடுநோய்க்குவாற்குங்குமைக்குங்குசுமக்கொடுங்கணையான்
விடுநோய்க்கும்வீணேமனத்தையெப்போதும்விடாதுபற்றித்
தொடுநோய்க்குஞ்சூர்க்கட்சுடுமுகத்தொன்னமன்றூதுவர்வந்
தடுநோய்க்குமஞ்சாதருளலர்மேன்மங்கையம்மனையே. ()

குற்றஞ்செய்யாதெற்றிருத்தியென்னுற்பணிகொள்ளுதியேற்
குற்றங்கள்கோடிநினக்குறுமோநற்குலமறைகள்
குற்றங்கள்கூறிடுமோவெனைக்காக்கக்குறித்திருக்கும்
அற்றம்வரவிலையோவலர்மேன்மங்கையம்மனையே. (௩௭)

பொறுக்கவொண்ணாப்புரைசெய்தாரையுநீபொறுத்தளித்தாய்
பொறுக்கவொண்ணாப்பிழைசெய்தவனென்றெனைப்புந்திதனில்
வெறுக்கவிடுக்கவிரகில்லைநந்தம்வியனுறவோ
அறுக்கவொண்ணாதுநம்மாலலர்மேன்மங்கையம்மனையே.()

இப்பவநீங்கிடினெப்பவம்வாய்க்குமெனவறியேன்
இப்பவத்தேநீயிரங்கியருளாயெனினெதிரும்
அப்பவத்தல்லலுக்காற்றேனகமுமழுங்கியஞ்சும்
அப்பவப்பாகொடிதாமலர்மேன்மங்கையம்மனையே. (௩௯)

அடியேனெடுத்தவயனமநந்தமவற்றிலென்றுந்
துடியேனுநின்னைத்துதித்திலனுகுந்துதித்திருக்கிற்
கடியேய்பிறவிகழியாதிராதுகவலையுற்றுன்
அடியேயடைந்தேனருளலர்மேன்மங்கையம்மனையே. (௪௦)

எடுத்தபிறவிகள்யாவும்பதராயிழுக்கினவித்
தொடுத்தபிறவியின்காலமும்வீணேதொலைந்ததிங்ஙன்
விடுத்தனையாயினென்செய்குவல்யானென்விதியறியேன்
அடுத்தனனின்னையருளலர்மேன்மங்கையம்மனையே. (௪௧)

அத்திரவின் பத்தடியேனழுந்தியலையச்செய்நின்
மித்திரனென்னநினக்குமின்றேநினைவேண்டிநிற்கும்
புத்திரவாற்சல்லியமென்வினையைநின்பொங்கருளாம்
அத்திரத்தாலறுத்தாளலர்மேன்மங்கையம்மனையே. (௪௨)

எத்தனைகாலமெளியேனிறைஞ்சியிரங்கினுமெண்
ணத்தனையேனுமந்தோவென்றிரங்கியருளகில்லாச்

சித்தனைநின்கொண்கனையெற்கருளோர்சிறியதினை
அத்தனைசெய்யச்செய்வாயலர்மேன்மங்கையம்மனையே. ()

அகிலாண்டவாவியளகமதிமுகமாடகநாற்
றுகிலாண்ட சிற்றிடைத்தோகாய்சிறியனைத்தொண்டுகொண்டாள்
முகிலாண்டசோலைத்திருச்சுகனூர்ச்செம்முளரியின்னே
அகிலாண்டநாயகியேயலர்மேன்மங்கையம்மனையே. (சச)

மோக்கத்திலிச்சையிலனுயடியன்முரணவித்தைத்
தூக்கத்திருககின்றனனந்தவிச்சையைத் தோன்றுவித்தெற்
காக்கத்திருவுளங்கொள்வாய்சுகப்பதிக்கற்பகமே
ஆக்கத்திருமகளேயலர்மேன்மங்கையம்மனையே. (சரு)

என்னேயென்னைதந்தியமோக்கவிச்சையெழாமலன்றே
கொன்னேகழிந்தன்றிதுகாறுங்கோகனகாதனம்வாழ்
பொன்னேயதுவினியேனும்பயன்பெறப்புந்திசெய்வாய்
அன்னேயருட்கடலேயலர்மேன்மங்கையம்மனையே. (சசா)

குடும்பத்தைப்பூண்கட்டிக்கொள்ளுமெனக்கதன்கோளறுத்து
விடும்பத்திதியில்லைநீயேநமையென்றும்விட்டொழியாக்
கடும்பத்தநோக்கிச்சுகப்பதிவாழ்கமலாயதனை
அடும்பத்திரவருள்செய்யலர்மேன்மங்கையம்மனையே. ()

நின்னையுநின்னன்பனையும்விதியினிநேர்ந்தடையும்
முன்னைமுத்தத்துவஞானமுண்டாக்கிமுறைப்படியே
என்னைநின்றொண்டரினத்தொடுஞ்சேர்தியெல்லாவுயிர்க்கும்
அன்னையெனும்பின்னையேயலர்மேன்மங்கையம்மனையே. ()

தத்துவஞானமடையாத்தமோகுணத்தனெனினுந்
தத்துவஞானிகள்சார்புறத்தித்தமியேனையவர்
சொத்துவமாக்கியவரபிமானத்திற்றொண்டுகொண்டாள்
அத்துவமேனிப்பொன்னேயலர்மேன்மங்கையம்மனையே. ()

விலங்குபறவைமிகுசடரேனுநம்விண்டுசித்தர்
இலங்குமருளினிலெய்தாதமுத்தியுமெய்துமென்ப
கலங்குங்கடையனையன்னோர்கருணையிற்காத்தருள்வாய்
அலங்குமணியணியாயலர்மேன்மங்கையம்மனையே. (ரு0)

பாதவமாயினுநின்னடிக்கன்புசெய்பண்புடைய
மாதவர்கைதொடின்கண்பார்க்கின்மாயைமயக்கமென
ஓதவநீங்கியுயர்வீடடையுமெனவுரைப்ப
ஆதவர்நேர்குழையாயலர்மேன்மங்கையம்மனையே. (௫௧)

அசித்துறவான்வருமஞ்ஞானநின்னையண்டாதவணம்
விசித்தெனைநாடொறும்வீழ்கதியிற்றள்ளிவீண்பயனே
புசித்திடச்செய்யுமென்செய்கேனைநின்றன்பொங்கருளாம்
அசித்துமித்தென்றனையாளலர்மேன்மங்கையம்மனையே. ()

சொற்றவஞ்ஞானமென் றுன்மைக்குணங்களைத்தொட்டழித்து
வெற்றமுற்றென்றும்விவிதப்பிறவியில்வீழ்த்தியங்ஙன்
பெற்றவுருக்கதிநானென்றெண்ணச்செயும்பெற்றியதை
அற்றென்றனையடைவேனலர்மேன்மங்கையம்மனையே. ()

தேகத்தில்வேறெனுஞானமெனக்குச்செனித்ததுண்டேல்
ஏகத்தனிமுதல்பேர்கிசுதந்தரனென்றெண்ணுவேன்
பாகத்தப்புத்தியைப்பாற்றிடுவாய்பணிப்பாதவத்தான்
ஆகத்துறையமலாயலர்மேன்மங்கையம்மனையே. (௫௪)

சேடத்துவமதிசேர்ந்திடுமேலைத்தீயர்கள்பால்
வீடத்துவமாவினியோகித்தென்றும்விபலமுறுங்
கூடத்துவத்தைக்குலைத்தெனைநின்னன்பாகூட்டநிறீஇ
ஆடத்துவநினதேயலர்மேன்மங்கையம்மனையே. (௫௫)

உயிரபகாரஞ்செய்தூழிதொறூழியுண்டாலுமருச்
செயிரனைத்துஞ்செய்துதீப்புலத்தற்பரனுய்த்திரிவேன்
வயிரவினையறுத்தென்னைநின்பாதம்வணங்கச்செய்வாய்
அயிரநற்பாகனையாயலர்மேன்மங்கையம்மனையே. (௫௬)

ஒன்றுமிலாமற்கிடந்தவென்றுர்த்தசைக்குற்றிரங்கி
நன்றுநின்பாதத்தைநண்ணியுய்வானல்கியவுடல்கொண்
டென்றுநின்னுள்ளக்குகப்பாங்கருமமெனைத்துஞ்செய்யா
தன்றினனேனருளலர்மேன்மங்கையம்மனையே. (௫௭)

ஆறுகடக்கவருளம்பிபற்றியதன்கரையை
யேறுதலின்றியிருங்கடலெய்துவொன்னநினக்

கூறுசெய்தேனுமுபநின்றிருவுளத்துன்னிமுத்தி
ஆறுநடத்தியருளலர்மேன்மங்கையம்மனையே. (௫அ)

பிறவிப்பெருங்கடனீந்தக்கொடுத்தவிப்பிண்டமதைப்
பிறவிப்பெருங்கடற்கேயுடலாக்குமென்பேரவித்தை
அறவிப்பிரமந்தொலையவருள்செய்யணிச்சுகனூர்
அறவிப்பிரர்தொழுந்தாளலர்மேன்மங்கையம்மனையே. ()

அநாதியென்றுரணநூலாதிசொல்லுமவித்தையினுன்
மநாதிசெய்பெண்ணற்றபுண்ணியபாவமரபின்வணம்
வநாதிபலபிறப்பும்பிறந்தெய்த்தவிவ்வஞ்சகனுக்
கநாதிநல்வீடளித்தாளலர்மேன்மங்கையம்மனையே. (௬0)

இறந்துமுன்சென்றவினிச்செல்பவோராவியற்கையினுற்
பிறந்தபிறவிகடோறுமுத்தாபப்பெருங்கனலின்
வறந்தனனங்ஙன்வறந்துஞ்சிறிதும்வருத்தமிலேன்
அறந்தவிராச்சுகனூரலர்மேன்மங்கையம்மனையே. (௬க)

கருப்பஞ்சனனமிளமைநல்யௌவனங்காழ்முதுமை
விருப்பறுசாககாடிருளாமவத்தைவிளைவித்தென்றும்
உருப்பவுறுவற்பரம்பரையுண்பித்துறைபிறவி
அருப்பமொழித்தருள்வாயலர்மேன்மங்கையம்மனையே. ()

அனந்தவரந்தைகட்காகரமாமயனக்கடலில்
அனந்தவிதத்துமழுந்தாவணநீயனுதினஞ்செய்
அனந்தமுயற்சியையுந்தடுத்தென்னையலையவித்தை
அனந்தலொழித்தருள்வாயலர்மேன்மங்கையம்மனையே. ()

பிறந்தபொழுதுன்கடைவிழிநோக்கினைப்பெற்றிருக்கிற்
சிறந்தநற்சாத்துவிகனாய்விஞ்ஞானச்சிறப்பினனாய்த்
துறந்தநிலையினனாய்முத்திச்சிந்தையைத்துன்னிநிற்பன்
அறந்தலைநின்றவாபோற்றலர்மேன்மங்கையம்மனையே. ()

உண்மைமதியுதியாதாயினல்வீடுறுதலிலை
உண்மைநன்னூலினுபதேசந்தன்னினவ்வுண்மைமதித்
திண்மையுண்டாகுமெனச்செப்புபவச்சிறந்தமதி
அண்மையுண்டாகவருளலர்மேன்மங்கையம்மனையே. ()

சாத்திரஞானம்பிறத்தலருமைதவத்துயராஞ்
சாத்தியமானதுமன்றுபதேசத்தடத்தின்வரு
மேத்தியஞானம்விளைத்தெனைக்காத்திமுன்மேய்த்துகந்த
ஆத்திரளானுரத்தாயலர்மேன்மங்கையம்மனையே. (சுசு)

என்னிலைதேகம்பொறியுள்பிராணனிலங்குபுத்தித்
தொன்னிலைக்கென்றும்விலக்கணமாகுமெனத்துணிப
இந்நிலையென்றுமெனக்குவிளங்காதியற்றிநிற்கும்
அன்னிலைநீத்தானுதியலர்மேன்மங்கையம்மனையே. (சுஎ)

ஞானந்தனையொழிந்துந்தோன்றலின்னெனைஞானநன்னூல்
ஈனந்தவிர்ந்தசுயம்பிரகாசனெனவுரைக்கும்
ஏனந்தவிர்ந்தென்றுமிந்நிலைநிற்கவெனக்கருள்வாய்
ஆனந்தவாரிதியேயலர்மேன்மங்கையம்மனையே. (சுஅ)

சுகவுருவாகவிருத்தலினென்னைச்சுடர்மறைகள்
தகவுறுமானந்தத்தன்மையனென்னுமதத்தன்மையென்றும்
உகவுறுமாயையொழித்தெனக்கந்நிலையுற்றுநிற்க
அகமகிழ்ந்தின்னருள்செய்யலர்மேன்மங்கையம்மனையே. ( )

எப்போழ்தினும்யானிருத்தலினித்தியனிவ்வுடலம்
எப்போழ்துஞ்சேர்தல்பிறத்தலொழிதலிறத்தலென்ப
ஒப்போதரியசுகப்பதியாயிவ்வுடலம்விடும்
அப்போதென்முன்வந்தருளலர்மேன்மங்கையம்மனையே. ( )

இருக்குமிதயகமலவிருக்கையிருந்தெழும்பிப்
பொருக்கெனப்போதல்வருதல்புரிதலிற்போற்றுமெனை
அருக்கணுவென்பவதைக்கண்டுதேறவருள்புரிவாய்
அருக்கர்பலரொளியாயலர்மேன்மங்கையம்மனையே. (எக)

மணியாதியோருழிநின்றுமொளியின்மலர்தலெனத்
திணியாரிதயத்திருந்துந்தெருட்சியிற்றேகமுறும்
பிணியாதியானன்குதேர்ந்திடும்பெற்றிபிறங்கச்செய்வாய்
அணியார்சுகப்பதியாயலர்மேன்மங்கையம்மனையே. (எஉ)

விழியாதிகட்குச்சடாதிகள்போல்விளங்காமையினல்
இழியாப்பொறிகளுக்கெட்டான்வியத்தனன்றென்றுரைப்ப

கழியாதநாளிந்தக்காட்சியைக்கண்டுகளித்திருக்க
அழியாப்பதவியருளலர்மேன்மங்கையம்மனையே. (௭௩)

ஏண்ணாசித்தோடியையுஞ்சசாதியமென்றுணர
ஒண்ணாமையிற்றானசிந்தியனென்றெனையோதுவராற்
றிண்ணார்ந்தவிந்நிலைதேர்வித்தெனையுண்டதீநிரயம்
அண்ணாத்தல்செய்யவருளலர்மேன்மங்கையம்மனையே. ()

சொல்லாசித்துப்பொருள்போலவயவத்தின்றொகுதி
இல்லாமையினாலவயவமில்லானெனவுரைப்ப
வில்லாருணர்வுருவேனென்னுமீதுவிளக்கிடுவாய்
அல்லார்குழன்மணத்தாயலர்மேன்மங்கையம்மனையே. ()

ஏய்ந்தவசித்தின்விகரிக்கையின்றியிருத்தலினால்
வாய்ந்தவிகாரமிலானென்பவிவ்வுரைவாய்மையதே
தோய்ந்தவெனதுசதைகவுருவந்துலங்கச்செய்வாய்
ஆய்ந்தவரோத்திப்புகழலர்மேன்மங்கையம்மனையே. (௭௬)

ஏதிப்படையெரிநீர்வாயுவெய்யிலிவ்வாதியினாற்
சேதித்தலாதிச்செயலென்கட்சேராத்தெளிவுதந்து
நீதித்தருமநிறுத்திநின்பூசனைநிட்டைதந்தாள்
ஆதிக்கமலவணையலர்மேன்மங்கையம்மனையே. (௭௭)

சாக்கியராவியையவ்வச்சரீரத்தனையதென்ப
தூக்கினதுமுராணாகுஞ்சுருதிக்கத்தோமதரி
னீக்கியெனையாளுதிநிகமாந்தநிகழ்த்தனந்த
ஆக்கியையேசுகனாரலர்மேன்மங்கையம்மனையே. (௭௮)

ஊனாச்சிரயவுடனேடியென்றுமுழனுமெனை
ஞானாச்சிரயனெனநவில்வாரதைநன்குணாத்தென்
நானாச்சிரமமுநாம்பிநசிக்கச்செய்நான்மறையின்
ஆனாச்சிரத்துறைவாயலர்மேன்மங்கையம்மனையே. (௭௯)

வித்தானஞாதாவெனவெனைக்கூறலின்வேட்கையுறுங்
கத்தாவுந்துய்த்திடும்போக்தாவுமாயினன்கண்ணுமிந்தச்
சத்தானசாரவிடயத்தைச்சாற்றுதிதாசருள்ள
அத்தாணியார்ந்துறைவாயலர்மேன்மங்கையம்மனையே. ()

நீக்கவரிய விலக்கணமாகுநியாமியத்தோ
டோக்கமுறுதாரியஞ்சேடமென்னுமுவையுளத்திற்
றேக்கிடும்வண்ணந்தெளிந்திடச்செப்புதிதீனசனர்க்
காக்கமளித்தருள்செய்யலர்மேன்மங்கையம்மனையே. ()

நன்றுசெய்சேடத்துவத்தொடுஞாதுர்த்துவமடியற்
கொன்றுமிலக்கணமென்றேருத்துணைக்குமுறைத்தபெற்றி
நின்றுதமியனினையிக்களேபரநின்றெழும்பும்
அன்றுநினைக்கவருளலர்மேன்மங்கையம்மனையே. (அஉ)

நிலக்கணிலவிநினைநினைப்போணைநிகழ்த்துமுத்தித்
தலக்கணுறுவிக்கத்தண்சுகனூர்வாழ்தலைவியென்றன்
இலக்கணமுற்றுமிலங்கச்செய்தின்னுவிடாப்பிறவி
அலக்கணறுத்தருள்வாயலர்மேன்மங்கையம்மனையே. ()

ஈட்டுடனெத்தனைகான்முறைசொல்லினுமென்னையென்று
கேட்டுணையொன்றுகிளக்கினிக்குறுங்கேதமென்னே
காட்டுதனுட்டுதல்வீட்டுதலென்னுங்கருமவினை
யாட்டுடையாய்சுகனூரலர்மேன்மங்கையம்மனையே. ()

பாவிகளிற்றலையாயவெனக்கருள்பண்ணவெண்ணிற்
ருவிகனின்னெடுசெய்துதடுக்கச்சமைபவரார்
நாவிகமழ்குழலாய்நாகவேதண்டனுயகியே
ஆவிகட்காவியெனுமலர்மேன்மங்கையம்மனையே. அரு)

திருக்காஞ்சிலயஞ்சினஞ்சோர்களஞ்சியஞ் சென்மவித்தாஞ்
செருக்காணிவேசமென்சிந்தைநின்சேவடிசேரச்செய்தென்
கருக்காணிநீக்கிநின்காற்காணிவாழக்கருணைசெய்தாள்
அருக்காணியானபொன்னேயலர்மேன்மங்கையம்மனையே.

ஒண்மையிலெளபாதிகத்தாயுஞ்சேய்க்குற்றமுற்றுணாயருள்
கண்மைகருதுவள்காழ்த்தபல்லண்டங்கள்கண்டளிக்குந்
திண்மைபெறுநிருபாதிகவன்னைசெயவிதுவோ
அண்மையினென்னையளியலர்மேன்மங்கையம்மனையே. ()

பேதைப்பிராகிருதத்தாயுந்தன்சுதன்பெற்றிகளைத்
தாதைக்குஞ்சாற்றலடன்னுளடக்கிச்சமித்திடுவள்

கோதைக்குழலப்பிராகிருதத்தன்னைகொள்கையிதோ
யாதைச்சொலவல்லனிற்கலர்மேன்மங்கையம்மனையே. ()

துன்பிழைத்தாரையுந்தூர்த்தர்களென்றுதுரத்திவிடா
தின்பிழைத்தாயிரக்கக்கடலேநின்னிணையடிகட்
கென்பிழைத்தேன்பிழைத்தேனுயினுமென்னிடர்க்கிரங்கி
அன்பிழைத்தாட்கொள்ளுதியலர்மேன்மங்கையம்மனையே.

தூக்கவொண்ணாததுசொல்லவொண்ணாதது தூண்டியென்றுற்
போக்கவொண்ணாததுநின்கொண்கன்மாயைபுரியுமையல்
காக்கவொண்ணாதிற்கட்டுண்டயர்க்குமெனைக்கசடன்
ஆக்கவொண்ணாதருள்வாயலர்மேன்மங்கையம்மனையே. ()

போதன்புராரிபுரந்தரன்பொன்னுலகோர்தபனன்
சீதன்முனிவர்செயிக்கவொண்ணாதிறலுடைநின்
னாதன்செய்மாயைநவிலவற்றேனுதனைட்பொழிக்க
வாதன்றரமோவருளலர்மேன்மங்கையம்மனையே. (௬க)

முக்குணமுள்ளதுமோகஞ்செய்விப்பதுமொய்ந்நரகும்
புக்குணச்செய்வதுபோர்ப்பொறிநீத்தவர்புந்தியையும்
நெக்குணச்செய்வதம்மாயையதுதனைநீக்கவல்ல
அக்குணந்தந்தருள்வாயலர்மேன்மங்கையம்மனையே. ()

ஈதிசெய்நோய்களைமுற்றுமொழித்தலெழிவிலையேற்
பாதிமுக்காற்பங்களவேனும்போக்கப்பரிந்திடுதல்
நீதியநீதியம்மட்டுஞ்செய்யாதுநிராகரித்தல்
ஆதிபராபரையேயலர்மேன்மங்கையம்மனையே. (௬௩)

சங்கற்பஞ்செய்யிற்றவறுதுசங்கற்பஞ்சற்றுமிலை
இங்கற்பனென்செய்வனின்றனிரக்கமிருங்கடலாஞ்
சிங்கற்பகுதியதன்றுமறந்திறந்தீனசனர்க்
கங்கற்பகம்போலருளலர்மேன்மங்கையம்மனையே. (௬௪)

சத்தியசங்கற்பையென்றுநின்றுளிற்சரணடைந்து
நத்தியநாயடியேனெண்ணமொன்றுநவையின்றியே
சித்தியடையச்செயினின்பெருமைசெகந்திகழும்
அத்தியளித்தோனுரத்தலர்மேன்மங்கையம்மனையே. ()

நீவேண்டிநின்னுளத்தேநினைந்தாலந்நிமிடமென்றன்
பாவேண்டியபொருள்யாவும்பலிக்கும்பகருங்கற்பக்
காவேண்டுவநல்குங்கம்புருவாதிக்கடவுணிதி
ஆவேண்டுவநல்குமேயலர்மேன்மங்கையம்மனையே. (கூசு)

உடற்சுகமுண்மையுயிர்ச்சுகமுன்னையுனவுதிக்குங்
கடற்சுகம்யானென்றுங்கண்டிலனிப்பகல்காறும்பச்சை
உடற்சுகம்வாழ்பொழிலோங்குஞ்சுகப்பதியுத்தமிநின்
அடற்சுகவீடெய்தவென்றலர்மேன்மங்கையம்மனையே. ()

எக்காலக்கண்ணுமெனைப்போன்றபாவிகளில்லையென்று
முக்கான்மொழிந்தனனுண்மைநின்சந்நிதிமுன்னர்நின்று
கைக்காமலென்னைநின்காற்றொண்டுகொள்ளக்கருணைசெய்யும்
அக்காலமென்றருளாயலர்மேன்மங்கையம்மனையே. (கூஅ)

முற்றுவியற்கைப்பொருளுமுண்டோவிம்முழுமகனைக்
கற்றுவெனவிரங்கிக்காத்துயிர்ககணங்காக்குநின்றன்
நற்றுயின்றன்மைமிந்நானிலத்தோர்கண்டுநம்பச்செய்தி
அற்றார்க்கருந்துணையேயலர்மேன்மங்கையம்மனையே. ()

சேகரவானவர்சேர்சுகனூருறைசெல்விநற்பாற்
சாகரநந்தனிநின்றனித்தண்ணளிச்சாகரத்தோர்
சீகரநல்கியென்காரியஞ்சித்திக்கச்செய்குணங்கட்
காகரமானவளேயலர்மேன்மங்கையம்மனையே. (க00)

வாழ்கதிருச்சுகனூர்வாழ்கவையத்துவானவர்கள்
வாழ்கசதுமறைவாழ்கபதின்மர்தம்வண்மறைகள்
வாழ்கவடதிருவேங்கடத்தெந்தைமலரடிகள்
வாழ்கநந்தாயலர்மேன்மங்கையென்றுமென்மாமனத்தே.

---

அலக்கணறச்சுகனூரலர்மேன்மங்கையன்னைபதத்
திலக்கணப்பாவினமாலையொருசதமிந்தியங்கொள்
புலக்கணநீத்தவிராமாநுசகுருபொன்னடிசேர்
விலக்கணனங்களைதிராசதாசன்விளம்பினனே.

## அலர்மேன்மங்கைத்தாயார்மாலை
முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# அரங்கநகரன்வண யடைக்கலமாலை.

## காப்பு.

சீராரரங்கநகரன்னைசேவடிசேர்த்தும்வணம்
நாராரடைக்கலநன்மாலையொன்றுநவில்வதற்கிப்
பாரார்புகழெம்பராங்குசமாமுனிபாதமலர்
ஏரார்நின்பாங்கரிருத்திப்பராவுதியென்னுளமே.

## நூல்

பொய்கையாழ்வார்

திருக்கச்சிவெஃகாப்பதிவந்தபொய்கைத்திருமுனிவன்
உருக்கக்கலையென்னுளத்தொளிர்ந்தோங்கவுவத்தியென்றுன்
கருக்கச்சளந்தீர்கழற்சரண்புக்கனன்காமர்வளப்
பெருக்கத்தொளிருமரங்கநகரன்னைப்பெண்மணியே. (க)

பூதத்தாழ்வார்

பூத்திகழ்காக்கடன்மல்லைவருமுனிபுங்கவன்வெண்
பாத்திகழ்நூலென்னுளத்திற்படியப்பணித்தியென்றுன்
மாத்திகழ்வாரிசமாணடிமன்னிமறைபுகுந்தேன்
ஓத்திகழார்சேரரங்கநகரன்னைபுத்தமியே. (உ)

பேயாழ்வார்

மயிலைப்பதிவந்தமாமுனிவன்கலைமன்பொருளாம்
வெயிலைப்பொழிந்தென்றும்வீடாவவித்தைவினையிருள்செய்
துயிலைத்துடைத்தியென்றுன்றுணைத்தாட்சரண்டுன்னினனல்
அயிலைப்பொருங்கண்ணரங்கநகரன்னையாரணியே. (ங)

திருமழிசையாழ்வார்

ஆழிதருங்கலையாகுமழிசையடிகணன்னூற்
பாழிபெறும்பொருளென்னுளத்தென்றும்படர்ந்துநிற்க
வாழியருள்செய்தியென்றுன்மலரடிவந்தடைந்தேன்
வீழியிதழ்கொளரங்கநகரன்னைவித்தகியே. (ச)

மதுரகவியாழ்வார்

கோளூர் முனிவன்குருகூர் முனிமேற்குறித்தகலை
வாளூர்பொருளென்மனமன்னிநிற்கமகிழ்தியென்றுன்
தாளூர்சலசச்சரணடைந்தேனுயிர்தாங்குமொன்பான்
கேளூரரங்கநகரன்னையாங்கிருபாகரையே. (ரு)

நம்மாழ்வார்

உண்மையுலகினரோரநம்மாறனுகந்துரைத்த
திண்மைநன்னூல்களென்சிந்தையிற்றேங்கிடச்செய்தியென்றுன்
ஒண்மையடியையுவந்தடைந்தேனுலகோர்ப்புரக்கும்
வண்மையரங்கநகரன்னையாகும்வராநனையே. (சா)

குலசேகராழ்வார்

கொல்லிநகர்வந்தகோமுனிவன்கலைகொண்டபொருள்
புல்லியென்னெஞ்சிற்பொலியக்கருணைபுரிதியென்றுன்
அல்லிமலரடியண்டைகொண்டேன்மறையந்தமுறை
வல்லியரங்கநகரன்னையாம்பத்தவற்சலையே. (எ)

பெரியாழ்வார்

பரத்துவஞ்செய்துநற்பஞ்சவன்பொற்கிழிபார்ப்படுத்த
உரத்துவவில்லிபுத்தூர்க்கோன்கலையென்னுளத்துநிற்கத்
திரத்துவஞ்செய்தியெனநின்சரண்சரண்சேர்ந்தனனற்
றரத்துவர்முத்தவரங்கநகரன்னைத்தற்பரையே. (அ)

கோதைநாயகித்தாயார்

திருக்கோதைநாயகிசெய்ந்நூலென்சிந்தையிற்றேக்குவித்தென்
கருக்கோதைநீக்கக்கருணைசெய்வா யென்றுன்காண்மலரின்
மருக்கோதைசூடிமறைபுகுந்தேன்மறையோர்பயிலும்
இருக்கோதைத்தாயவரங்கநகரன்னையிந்திரையே. (கூ)

திருமங்கையாழ்வார்

விற்கலைவந்தபரகாலமாமுனிவேந்தனருள்
நற்கலையென்னுளநாடொறுநண்ணநயத்தியென்றுன்
அற்கலைத்தோட்டுமடிச்சரண்புக்கனனாரணமா
நற்கலையோங்குமரங்கநகரன்னைநாயகியே. (௧0)

தொண்டரடிப்பொடியாழ்வார்

விப்பிரநாராயணமுனியேந்தல்வியன்கலைகள்
பப்பிரதப்பொருளுமென்னெஞ்சிற்பதித்தியென்றுன்

சுப்பிரசன்னத்துணையடியிற்சரண்டுன்னினனல்
அப்பிரமேயவநகவரங்கநகரன்னையே. (கக)

திருப்பாணாழ்வார்

முனியூர்தியூர்ந்தெம்முகுந்தன்முன்வந்தமுனித்தலைவன்
கனியூர்சுவைக்கலையென்னுளநிற்கக்கணித்தியென்றுன்
பனியூர்திருமலர்ப்பாதத்தடைந்தனன்பக்கியிறைத்
தனியூர்தியூருமரங்கநகரன்னைத்தாக்கணங்கே. (கஉ)

ஸ்ரீமந்நாதமுனிகள்

நாதமுனிகளெனுமெம்மடிகணளினமலர்ப்
பாதமுவந்துப்பணிந்துய்யும்வண்ணம்பணித்தியென்றுன்
சீதமுளரித்திருவடியிற்சரண்சேர்ந்தனனல்
வேதமுழக்கத்தரங்கநகரன்னைவித்தகியே. (கங)

உய்யக்கொண்டார்

புலஞ்செயிர்த்தோங்கிய வுய்யக்கொண்டார்புகழ்பூத்தொளிர்ந்த
பொலஞ்செயடிகளென்புந்திவைத்தேத்தப்புரிதியென்றுன்
நலஞ்செய்திருவடிநண்ணினனல்லவர்நாளுநண்ணி
வலஞ்செய்யரங்கநகரன்னையாகும்வரோதயையே. (கச)

குருகைக்காவலப்பன்

கூறுபுகழ்க்குருகைக்காவலப்பன்குறிக்கொணிட்டை
தேறுமெனக்குஞ்சிறந்தோங்கநீயருள்செய்தியென்றுன்
நாறுமலரடிநண்ணினன்சீர்த்தியின்ஞாலமெலாம்
வீறுமரங்கநகரன்னைவேதவிளக்கொளியே. (கரு)

நம்பிகருணாகரதாசர்

நம்பிகருணாகரதாசவள்ளறன்னல்லொழுக்கங்
கும்பியுழைக்குமெனக்கும்வரநின்குரைகழலை
நம்பியடைந்தனனாளும்பிறவிநரலையுற்றோர்க்
கம்பியனையவரங்கநகரன்னையம்புயையே. (கசு)

ஏறுதிருவுடையார்

ஏறுதிருவுடையாரென்றுரைபெம்மிருநிதிக்குப்
பேறுதருமவன்பால்வருநேயப்பெருக்கின்வளந்
தேறுமெனக்குமளித்தியென்றுன்பதந்தோர்ந்தடைந்தேன்
நாறுமலர்ப்பொழினண்ணுமரங்கநகரன்னையே. (கள)

திருக்கண்ணமங்கையாண்டான்
தூயதிருக்கண்ணமங்கையாண்டானெஞ்சுரநிதன்
நேயவடிகளடியினுறுமன்பினீத்தயிந்தத்
தீயனுற்றுய்யநின்சேவடிசேர்ந்தனன்றெய்வமயிற்
சாயலரங்கநகரன்னையாகுந்தயாபரையே. (கஅ)

வானமாமலையாண்டான்
மறையோர்புகழ்வானமாமலையாண்டான்மகிழ்தருதன்
இறையோனுழிக்கொண்டவீரமடியற்குமீதியென்றான்
பொறையோங்குதாளிற்புகல்புகுந்தேனம்புலனைவென்ற
நிறையோர்நிலவுமரங்கநகரன்னைநின்மலையே. (கசு)

உருப்பட்டூரோச்சான்பிள்ளை
பேணுமுருப்பட்டூரோச்சான்பிள்ளைப்பேர்ப்பெருந்தகைதன்
மாணுறுமாரியன்பாற்கொண்டநிட்டைமரபெனக்கும்
பூணுறும்வண்ணம்புரிதியென்றுன்றாட்புகல்புகுந்தேன்
சேணுறுசோலையரங்கநகரன்னைச்செந்திருவே. (உ0)

சோகத்தூராழ்வான்
சோகத்தூராழ்வான்சுகநிலைநிட்டைதுடியிடையார்
மோகத்தூரெற்குமுரணற்றுண்டாகநின்முண்டகத்தாள்
ஆகத்தூடுய்த்தின்றடைக்கலம்புக்கனனையவெள்ளை
நாகத்தூர்தித்தலைவன்போற்றரங்கநகரன்னையே. (உக)

கீழையகத்தாழ்வான்
கீழ்வானெழுபகல்போலொளிர்வண்புகழ்க்கீழையகத்
தாழ்வானெனத்தமிழாரணம்பாடும்பண்ணூரமைவு
தாழ்வாரெனக்குந்தயைசெயநின்னைச்சரணடைந்தேன்
வாழ்வாரரங்கநகரன்னையாகும்வதானியையே. (உஉ)

மேலையகத்தாழ்வான்
மேலையகத்துறையாழ்வானெனயான்வியந்துதிரு
மாலையகத்தமறைத்தமிழ்பாடிமகிழும்வளத்
தாலையளித்தியெனநின்சலசச்சரணடைந்தேன்
சோலையகத்தவரங்கநகரன்னைச்சுந்தரியே. (உங)

மணக்காலநம்பி
திருமணக்காலநம்பிசேவடிசிந்தையிற்சேரச்செய்தென்
கருமணக்காகரமாங்காமநோயைக்களைதியென்றுன்

மருமணத்தாளின்மறைபுகுந்தேன்மணிவண்ணனெம்மான்
திருமணக்காந்தையரங்கநகரன்னைச்செய்யவளே. (உச)

திருவல்லிக்கேணிப்பாண்பெருமாளரையர்

பெருக்கத்திருக்கைரவக்கேணிப்பாண்பெருமாளரையர்
தருக்கத்தவாளந்தணந்தநடையெற்குஞ்சார்கவென்றுன்
திருக்கத்தினைக்கழலிற்சரண்சேர்ந்தனன்றோர்வரிய
இருக்கத்தையானவரங்கநகரன்னையின்பவைப்பே. (உரு)

சொட்டைப்பூசிச்செண்டலங்காரதாசர்

சொட்டைப்பூசிச்செண்டலங்காரராரியன்றூவடியில்
கெட்டைப்பேரன்புற்றநிட்டையெனக்குநிகழ்கவென்றுன்
மட்டைச்செய்தாமரைமாணடிபுக்கனன்மன்னனந்த
முட்டைப்பெற்றாளுமரங்கநகரன்னைமுன்னவளே. (உசா)

கோமடத்துத்திருவிண்ணகரப்பன்

குருவிண்ணகர்தருவானெனுங்கொள்கைகொள்கோமடத்துத்
திருவிண்ணகரப்பன்சேவடியேத்துந்திறம்பெறநின்
மருவிண்ணளவுமரையடிமேவினன்வையகத்துப்
பெருவிண்ணரங்கநகரன்னையாஞ்சுப்பிரசன்னையே. (உஎ)

உலகப்பெருமாணங்கை

நல்லொழுக்கத்துலகப்பெருமாணங்கைநண்ணுநிட்டை
புல்லொழுக்கேற்கும்புகுமாகருணைபுரிதியென்றுன்
எல்லொழுகநிண்டையிணைத்தாளடைந்தனனென்றும்பொன்னி
நல்லொழுக்காருமரங்கநகரன்னைநப்பின்னையே. (உஅ)

ஸ்ரீபுண்டரீகாக்ஷதாசர்

சீரார்ந்தநற்புண்டரீகாக்கதாசர்தந்தேசிகன்பால்
நாரார்ந்தொழுகுநடையெற்குநண்ணநயத்தியென்றுன்
ஏரார்ந்தவிண்டையிணைத்தாளிலில்லடையெய்தினனற்
பாரார்ந்தகீர்த்தியரங்கநகரன்னைப்பார்க்கவியே. (உகூ)

ஸ்ரீஆளவந்தார்

ஆளவந்தாரொம்மடிகளடியாமருத்தவைப்பென்
நாளவந்திரமனமஞ்சிகம்வைத்துநன்றுறநின்
தாளவந்தாமரைநறுமணனுகினனண்பர்பவ
மாளவந்தாளுமரங்கநகரன்னைமாநிதியே. (௩0)

திருவரங்கப்பெருமாளரையர்
திருமான்முனஞ்செந்தமிழ்மறைபாடுந்திருவரங்கப்
பெருமாளரையரெனப்பாடியாடுநற்பேறெனக்கு
வருமாறுன்றாளின்மறைபுகுந்தேன்வழுவாதமுத்தி
தருமாவரங்கநகரன்னையாகுந்தயாம்புதியே. (௩௧)

சொட்டைநம்பி
கையொழியாநன்னடைச்சொட்டைநம்பிதன்கான்மலரைப்
பொய்யொழியாதவென் புந்திவைத்தேத்தப் புரிதியென்று
மெய்யொழியாவன்பர்மேவுநின்றாட்சரண்மேவினனுன்
மையொழியாக்கண்ணரங்கநகரன்னைமைதிலியே. (௩௨)

அரசுநம்பி
அகந்தூயனுமெம்மரசுநம்பிப்பெரியோனடியை
உகந்துதியமெனவுன்னிடவுள்ளமுவத்தியென்றுன்
சுகந்தூங்குதாளிற்றுணைந்தடைந்தேனற்றொறுப்புரப்பான்
நகந்தூக்குநாரணனண்ணுமரங்கநகரன்னையே. (௩௩)

தெய்வத்துக்கரசுநம்பி
அவாநிலைநீத்தவடிகடெய்வத்துக்கரசுநம்பி
சுவாநிலையேற்குந்துணைநிற்கவன்புசுரத்தியென்று
தவாநிலைத்தாபதர்தாழுநின்றாளிற்சரணடைந்தேன்
உவாநிலைத்துண்டத்தரங்கநகரன்னையொள்ளொளியே. ()

பிள்ளைக்கரசுநம்பி
பிள்ளையரசுநம்பிப்பெரியோன்கழல்பேணிநின்றிவ்
வெள்ளையறிவனும்வீடுபெற்றுய்யநின்வீங்குமொளிக்
கொள்ளையடிச்சரண்கூடினன்பேரண்டகோடிக்கெல்லாந்
தள்ளையரங்கநகரன்னையாஞ்சத்யசங்கற்பையே. (௩௫)

சிறுபுள்ளூடையார்
செருக்காற்றிற்செல்லாச்சிறுபுள்ளுடையார்திருவடியிற்
பெருக்காற்றிற்பீடுறும்பேரன்புநாளும்பிறங்கவென்றுன்
இருக்காற்றினமொண்ணிணையடிக்கில்லடையெய்தினனால்
அருக்காற்றுப்பொன்னேயரங்கநகரன்னையக்கனையே. ()

திருமாலிருஞ்சோலைதாசர்
சீரார்திருமாலிருஞ்சோலைதாசர்தஞ்சீர்த்திகளை
நாராரொன்னுவினவிற்றியுய்வானருணல்குதியென்

றோரார்நின்ருள்களிலில்லடையெய்தினனீர்ம்பொழிற்கட
காராரரங்கநகரன்னையாங்கருணாலயையே. (௩எ)

வங்கிபுரத்தாய்ச்சி

தெருள்சேர்ந்தவங்கிபுரத்தாய்ச்சிநிட்டையைச்சேர்ந்தொழுகி
மருள்சேரொன்ருேற்றத்தைமாற்றிடவுள்ளமகிழ்ந்தியென்றுன்
பொருள்சேர்கழலிற்புகல்புகுந்தேன்பொழில்பூத்தளிக்கும்
அருள்சேரரங்கநகரன்னையாகுமகளங்கையே. (௩அ)

பெரியநம்பிகள்

அருங்கலைக்கேள்விப்பெரியநம்பிக்குத்தன்னாரியன்பால்
ஒருங்கவில்பேரன்புதித்தாங்கெனக்குமுதிக்கவென்றுன்
பிருங்கமிமிரம்புயத்தாளடைந்தனன்பெட்குமின்னின்
மருங்குலரங்கநகரன்னையாமங்களாகனையே. (௩௯)

திருக்கோட்டியூர்நம்பி

திருக்கோட்டியூர்நம்பிச்செம்மற்குத்தன்றிருத்தேசிகன்பாற்
றிருக்கோட்டுமன்புசெழித்தாங்கெனக்குஞ்செழிக்கவென்றுன்
தருக்கோட்டுந்தாளிற்சரண்புகுந்தேன்மெய்ச்சதுமறையோர்
திருக்கோட்டியோங்குமரங்கநகரன்னைச்செஞ்சுடரோ. ()

பெரியதிருமலைநம்பி

பெரியதிருமலைநம்பியெனுமெம்பெருந்தகைதன்
அரியதிருவருட்காளாகும்வண்ணமருடியென்றுன்
உரியசரணடைந்தேனுனையோராவுளத்தினர்கட்
கரியவரங்கநகரன்னையாமம்புயாதனையே. (௪க)

மாறனேர்நம்பி

குற்றமிலாமாறனேர்நம்பிதன்குரவன்கழலில்
அற்றமிலாவன்படைந்தாங்கியானுமடைகவென்றுன்
சுற்றமிலார்துணையாமடியிற்சரண்டுன்னினனற்
செற்றமிலார்சேரரங்கநகரன்னைச்சிற்பனையே. (௪உ)

திருக்கச்சிநம்பி

திருக்கச்சிநம்பியடிகட்குத்தந்திருத்தேசிகன்பால்
அருக்கச்சுதவன்பமைத்தாங்கெனக்கு மமைத்தியென்றுன்
கருக்கச்சளங்கழற்றுங்கழற்கையடைகண்டனன்சிர்ப்
பெருக்கத்தரங்கநகரன்னையாகும்பிராப்பியையே. (௪௩)

திருமாலையாண்டான்

திருமாலையாண்டானெனுஞ்செம்மலுக்குத்தன்றேசிகன்பாற்
பெருமாலையாக்கியபெற்றியினெற்கும்பிறப்பியென்றுன்
மருமாலைத்தாளின்மறைபுகுந்தேன்மனமாசறுத்தோர்
கருமாலைநீக்குமரங்கநகரன்னைக்காரணியே. (சச)

ஆளவந்தாராழ்வான்

ஆழ்வானறிவின்றலைநின்றெழுகுமெம்மாளவந்தார்
ஆழ்வானுக்காரியன்பாலானவன்பெற்குமாகவென்றே
ஏழ்வான்பிறப்புமிரிக்குநின்றுட்சரணெய்தினனிற்
றாழ்வார்க்கருளுமரங்கநகரன்னைச்சற்குணியே. (சரு)

வானமாமலையாண்டான்

திருவானமாமலையாண்டான்றெருணடைச்செல்வமெற்கும்
வருவானருடியென்றுன்மணைத்தாளின்மறைபுகுந்தேன்
பெருவானவர்பெறும்பேற்றையடியவர்பெற்றுவக்கத்
தருவானரங்கநகரன்னையாகுஞ்சநாதனையே. (சசா)

தெய்வவாரியாண்டான்

அமலனெனுந்தெய்வவாரியாண்டான்றன்னடியிணையாங்
கமலமென்னுள்ளக்கமலம்வைத்தேதக்கணித்தியென்றுன்
நிமலவடிகளினீழலடைந்தனனித்தியர்சேர்
விமலவரங்கநகரன்னையாரணவேத்தியையே. (சஎ)

ஈசனாண்டான்

இலங்கெழின்மேதைகொளெம்மீசனாண்டாற்கிறைவனுழித்
துலங்கெழிலன்புசூரந்தாங்கெனகுஞ்சுரக்கவென்றுன்
கலங்கெழுதாள்களிற்கையடைபுககனன்காயம்வையத்
தலங்கெழுசீர்த்தியரங்கநகரன்னைத்தற்பரையே. (சஅ)

ஜீயராண்டான்

சிதஞ்செய்பஞ்சேந்தியச்சீயராண்டாற்குத்தன்றீர்த்தனுழி
இதஞ்செய்யும்பத்திமையேய்ந்தாங்கெனக்குமியைகவென்றுன்
பதஞ்செய்பதங்களைப்பற்றினன்பத்தர்கள்பாவமெலாம்
அதஞ்செய்யரங்கநகரன்னையாமருளார்கலியே. (சகூ)

சிறுக்குருகூரப்பன்

தன்னாரியன்பாற்றிருக்குருகூரப்பன்றானடைந்த
இன்னுவறுமன்பெனக்குமுண்டாகவிழைத்தியென்றுன்

பொன்னாரத்தவம்போருகத்தாளிற்புகல்புகுந்தேன்
கொன்னாரங்கநகரன்னையாகுங்குசேசயையே. (ருo)

திருமோகூரப்பன்

தேசிகன்பானந்திருமோகூரப்பன்சிறந்துகொண்ட
ஆசிலதாமன்பெனக்குமுண்டாகவருடியென்றான்
ஏசிகருள்களிலேன்றடைந்தேனெண்ணிருக்கெசுர்நற்
கோசிகமேத்துமரங்கநகரன்னைக்கோமளையே. (ருக)

திருமோகூர்நின்றான்

நீடுறுசீர்த்திருமோகூர்நின்றானெனுநின்மலன்றன்
பீடுறுநன்னடையின்பெருக்கெற்கும்பெருகவென்றான்
தோடுறுதோடகத்தாட்சரண்டுன்னினன்றும்பியிசை
பாடுறுசோலையரங்கநகரன்னைப்பண்ணவியே. (ருஉ)

தெய்வப்பெருமாள்

தெருணிதித்தெய்வப்பெருமாட்பெருந்தகைசீரடியைப்
பொருணிதியென்னவென்புந்திவைத்தென்றும்புகழுமன்பு
மருணிதியாமெற்கும்வாய்க்கவென்றான்னைமறைபுகுந்தேன்
அருணிதியானவரங்கநகரன்னையற்புதையே. (ருங)

வகுளாபரணசோமயாஜியார்

மதியார்வகுளவணிச்சோமயாஜிதன்மாணடியே
நிதியாயென்னுள்ளநிறுவியுய்வானின்னிறைதவர்க்குக்
கதியாங்கழல்களிற்கையடைபுக்கனன்கற்றவர்கள்
துதியாரரங்கநகரன்னையாகுஞ்சுடர்க்கொடியே. (ருச)

திருக்குருகூர்தாசர்

சீரார்திருக்குருகூர்தாசரென்னுமெந்தெய்வமணிக்
கேரார்தன்னாரியன்பாலேய்ந்தநிட்டையெனக்குமுற
வாராருள்செய்தியென்றான்கழலின்மறைபுகுந்தேன்
தேரார்தெருவாரரங்கநகரன்னைச்சின்மயையே. (ருரு)

திருமாலிருஞ்சோலைதாசர்

திருமாலிருஞ்சோலைதாசரெனுந்தெய்வத்தேறுதன்சீர்க்
குருமாமணியுழிப்பெய்யன்புப்பால்வெள்ளக்கோலமெற்கும்
வருமாறுன்வாரிசமாமலர்த்தாளின்மறைபுகுந்தேன்
திருமாமணிப்பூணரங்கநகரன்னைச்சேமவைப்பே. (ருசு)

வடமதுரைப்பிறந்தான்
வடமதுரைப்பிறந்தானென்னும்வண்மைமணிமலைக்குத்
திடமதுரைத்தவன்றேமன்புவதைசெழித்தலென
மடமலியெற்குமளித்தியென்றுன்றாண்மறைபுகுந்தேன்
நடமலிந்தோங்குமரங்காரரங்கநகரன்னையே. (ருஎ)

ஆட்கொண்டி
ஆட்கொண்டியென்னுமடிகளடிகளகத்தில்வைத்தென்
சேட்கொண்டதீவினைதீர்ந்துய்குவானின்சிறுசதங்கைத்
தாட்கொண்டதாமரைத்தாளடைந்தேனம்பிச்சார்ந்தவரை
ஆட்கொண்டருளுமரங்கநகரன்னையம்புயையே. (ருஅ)

அம்மங்கி
மறைகொண்டமாண்பொருண்மன்னுளத்தம்மங்கிவள்ளலினெற்
சிறைகொண்டதீவினைதீர்வானடியர்செயுஞ்செயிர்கள்
பொறைகொண்டநின்புண்டரீகப்பொற்பாதம்புகல்புகுந்தேன்
நறைகொண்டபூம்பொழிலண்ணுமரங்கநகரன்னையே. ()

இராஜபுரோகிதர் நாதமுனிகள்
பொன்னித்துறைவன்புரோகிதன்பொங்கெழிற்பொன்னடியென்
சென்னிக்கணியெனச்சேர்ந்துய்யுமாறருள்செய்தியென்றுன்
உன்னித்துறவோர்தொழுந்தாளடைக்கலமுற்றனன்மால்
பன்னிப்பிரியையரங்கநகரன்னைப்பார்க்கவியே. (சு0)

இராஜமகிஷி திருவரங்கத்தம்மன்
ஆத்தியந்தாரனற்றாரமரங்கத்தம்மன்றொழுக்கஞ்
சாத்தியமாகவெற்கென்றுன்சலசச்சரணடைந்தேன்
ஏத்தியமாமறைக்கெட்டாப்பரம்பொருளேயினிதாம்
வாத்தியவோதையரங்கநகரன்னைமாமருந்தே. (சுக)

எம்பெருமானார்
எம்பெருமாற்கென்றுமின்பணிசெய்திதயத்துகக்கும்
எம்பெருமானாரிணையடியேயெனக்கென்றும்பொன்றாச்
சொம்பெரும்பேறென்றுதுன்னக்கருணைசுரந்தருள்வாய்
நம்பெருமாண்மணவாட்டியரங்கநகரன்னையே. (சுஉ)

மலைகுனியநின்றார்
இனியகருத்துடனின்சொலெவர்க்குமிசைக்குமலை
குனியநின்றார்தங்குரைகழல்கூடியென்கோதறுப்பான்
நனியருள்செயதியென்றுன்கழனண்ணினனாரணற்குக்
கனியனையாயெம்மரங்கநகரன்னைக்கண்மணியே. (சுங)

ஆரிய ஸ்ரீசடகோபதாசர்
தன்மவுருவாரியச்சிசடகோபதாசனெனும்
நின்மலபாநுவினெஞ்சிருணீங்கியிந்நீடுகன்மச்
சன்மமொழிக்கநின்றாட்சரண்புக்கனன்சார்ந்தவர்க்குப்
பொன்மலைபோலுமரங்கநகரன்னைப்புண்ணியையே. (௬௪)

அணியரங்கத்தமுதனார்
அணியரங்கத்தமுதப்பேரடிகளடிகள்பவப்
பிணியரங்கப்பிடித்துய்வானருளென்றுன்பெட்குமொன்பான்
மணியரங்கத்தண்டைமாணடிபுக்கனன்மாதவிகள்
நணியரங்கத்துநடஞ்செய்யரங்கநகரன்னையே. (௬௫)

திருவாய்த்தலமுடையார்
திருவாய்த்தலமுடையாரடிசேர்ந்தடியேன்விவிதக்
கருவாய்த்தலமரனீங்கவருள்செய்துகாத்தியென்றுன்
மருவாய்த்திலங்குமரையடிபுக்கனன்மாணுருவாய்
அருவாய்த்திகழுமரங்கநகரன்னையம்புயையே. (௬௬)

கூரத்தாழ்வான்
இசையோங்குகூரத்திறைபெம்மடிகளிணையடியில்
நசையோங்கியுய்யநயந்திருக்காதியநான்மறையின்
மிசையோங்குநின்னடிமேவினனல்குதிமெய்ப்புகழெண்
டிசையோங்கரங்கநகரன்னையாகுஞ்சிந்தாமணியே. (௬௭)

முதலியாண்டான்
ஊண்டானெனநம்மெதிபதிசிருண்டுறைமுதலி
யாண்டானெனையென்றுமாள்வானருடியென்றஞ்சிறைத்தேன்
பாண்டான்முரலபதுமப்பதம்பற்றினன்பாரளப்பான்
நீண்டான்மகிழுமரங்கநகரன்னைநீரசையே. (௬௮)

அருளாளப்பெருமாளெம்பெருமானார்ஜீயர்
அம்புவிபோற்றருளாளப்பெருமாளெனுமடைகொள்
எம்பெருமானாரிணையடியென்பவமீர்க்குமென்று
நம்புறுநன்மனநண்ணநின்றாளைநயந்தடைந்தேன்
வம்பவிழ்சோலையரங்கநகரன்னைமாமணியே. (௬௯)

வடுகநம்பி
மைந்தாரைந்தாநெறிமாண்பினனாமெம்வடுகநம்பி
கந்தார்நடையெற்குக்கைகூடநின்றன்கருணைகொள்வான்
பைந்தார்புனைநின்பதஞ்சரண்புக்கனன்பாயும்பொன்னிச்
சிந்தாரரங்கநகரன்னைவேதச்சிரப்பொருளே. (௭0)

திருக்குருகைப்பிரான்பிள்ளான்
சீரார்திருக்குருகைப்பிரான்பிள்ளான்றிருவடியில்
நாரார்மனநலநண்ணிடநீயருணல்கிடென்றுன்
தாரார்சலசச்சரணத்துணையிற்சரணடைந்தேன்
ஏராரரங்கநகரன்னையாமெம்மிறையவளே. (எக)

அநந்தாழ்வான்
கனந்தாழ்பொழிற்றிருவேங்கடமாமலைக்கண்ணனுக்குத்
தினந்தாழ்ந்துதேமலர்க்கண்ணித்திருப்பணிசெய்துவந்த
அனந்தாழ்வானிட்டையளித்திடென்றுன்றாளடைந்தனனற்
சனந்தாழரங்கநகரன்னையாகுஞ்சரணியையே. (எஉ)

எழுபத்துநான்கு சிங்காதனாதிபதிகள்
சீரியஞானவெழுபத்துநான்குசிங்காதனராம்
ஆரியர்தங்களருட்கிலக்காகவருடியென்றுன்
வேரிமரைபுரைமென்றாளடைக்கலம்வேட்டடைந்தேன்
நாரியரதனமேநல்லரங்கநகரன்னையே. (எங)

எழுநூறு உத்தமாச்சிரமிகள்
சத்தமனெங்களெதிராசமாமுனிதாளடைந்த
உத்தமமாமாச்சிரமிகளோரெழுநூற்றுவர்கள்
தத்தமநிட்டைதமியேற்குறநின்சரணடைந்தேன்
புத்தமுதொத்தவரங்கநகரன்னைப்புங்கவியே. (எச)

பன்னீராயிரவரேகாந்திகள்
விதியாரெழுகெம்மிராமாநுசமுனிவேந்தனருட்
கதியார்பன்னீராயிரவரேகாந்திகள்காற்றுணையென்
மதியாரநின்னைமறைபுகுந்தேன்வையமையலற்றோர்
நிதியாமரங்கநகரன்னையாகுநியாமகையே. (எரு)

எழுநூற்றுவர் அம்மையர்கள்
எம்மையுமாட்கொளுமெம்பெருமானாரிணையடிசேர்
அம்மையரோரெழுநூற்றுவர்நிட்டையடியனுக்கும்
இம்மைவரநின்னிணையடிக்கில்லடையெய்தினனற்
செம்மையரங்கநகரன்னையாகியதேசிகையே. (எசு)

திருவரங்கத்தமுதனார்
திருவரங்கத்தமுதாந்தெள்ளியன்செய்தசெந்தமிழ்நூல்
கருவரங்கத்தினங்கற்றுய்யுமாறெனைக்காத்திடென்று
மருவரங்கத்தநின்மாணடியிற்சரண்வந்தடைந்தேன்
தெருவரங்கத்தவரங்கநகரன்னைச்செந்திருவே. (எஎ)

எம்பார்
கம்பார்களத்தியர்க்காதலிக்குந்தீக்கருமமொழிந்
தெம்பாரடிகளையெண்ணியுய்வானெற்கருடியென்றுன்
வம்பார்வனசமலர்த்தாட்சரணவரணமுற்றேன்
அம்பாரரிக்கண்ணரங்கநகரன்னையற்புதையே. (௭௮)

பராசரபட்டர்
தேக்கும்புகழெம்பராசரபட்டாதிருவடியென்
வாக்குமனமும்வழுத்திநினைக்கும்வரம்பெறநின்
சேக்குமரையடிசேர்ந்தனனிந்தச்செகமனைத்துங்
காக்குமரங்கநகரன்னையாங்கமலாலயையே. (௭௯)

அழகியமணவாளதாசர்
வெண்மணிப்பிள்ளைப்பெருமாளையங்கார்நின்வேந்தன்றன்பேர்
நண்மணித்தாசரைநண்ணியுய்வானுளநள்ளிருடீர்
விண்மணியேநின்விரையார்மலர்க்கழல்வேட்டடைந்தேன்
ஒண்மணிமாலையரங்கநகரன்னையுத்தமியே. (௮0)

சீராமப்பிள்ளை
ஆராமப்போதாலலங்கலணிந்தென்னகத்திருத்திச்
சீராமப்பிள்ளையைச்சிந்திக்கச்செவ்வருள் செய்தியென்றுன்
மாராமத்தாளின்மறைபுகுந்தேனன்மரபடியர்
நாராமப்பூவைநயகருமரங்கநகரன்னையே. (௮௧)

நஞ்சீயர்
வெஞ்சியமெண்ணிடுவேழத்தின்வேண்டார்வெருவவந்த
நஞ்சீயர்நற்கழலுடொறுநாடிநயக்கவெற்கு
நெஞ்சீதியென்றுநின்னீரசத்தாட்சரணேர்ந்தடைந்தேன்
மஞ்சீயன்முத்தவரங்கநகரன்னைமாணிக்கமே. (௮௨)

நலந்திகழ்நாராயணச்சீயர்
நலந்திகழ்நாராயணச்சீயர்நற்கழனண்ணியுய்வான்
பொலந்திகழ்நின்னடிப்புண்டரிகத்திற்புகல்புகுந்தேன்
வலந்திகழ்வன்னிவளர்ப்போர்வழுத்துமலர்மகளே
நிலந்திகழ்ந்தோங்குமரங்கநகரன்னைநிச்சலையே. (௮௩)

நம்பிள்ளை
சொல்லவரியசொல்லார்ந்தநம்பிள்ளைதுணையடியாற்
கல்லவரியபிறவியைக்கல்லக்கருதிவந்துன்
வல்லநற்றுளின்மறைபுகுந்தேன்மறைவாணர்தொழும்
நல்லவரங்கநகரன்னையாநளினும்பகியே. (௮௪)

ஸ்ரீசேனாபதிஜீயர்

சேனேங்குநல்லூரச்சேனாபதியெனுஞ்சீயரடி
கோனேங்குமென்னுளங்கொண்டுய்யநீயருள்கூர்தியென்றன்
பூனேங்குதாளிற்புகல்புகுந்தேன்சிறைப்புட்கணத்தின்
பானேங்குசோலையரங்கநகரன்னைப்பண்ணவியே. (அரு)

பெரியவாச்சான்பிள்ளை

மாண்டகுணத்தெம்பெரியவாச்சான்பிள்ளைமாணருளே
பூண்டவரன்புபுனைந்துய்யநின்கழல்புக்கடைந்தேன்
தூண்டலிலாதசுடர்விளக்கேதுகடீர்வளங்கள்
நீண்டவரங்கநகரன்னையாகுநிரஞ்சனையே. (அசு)

இராமாநுசாசாரியர்

எந்தைநம்பிள்ளைசுதனாமிராமாநுசாரியன்றாள்
சிந்தையில்வைத்தெளியேனுய்யநீயருள் செய்தியென்றன்
முந்தைமறைமுடித்தாளிலடைக்கலமுந்தினனோர்
நிந்தையுமில்லாவரங்கநகரன்னைநித்தியையே. (அஎ)

வடக்குத்திருவீதிப்பிள்ளை

நீடுமெய்ஞ்ஞானநெறிநின்றொழுகுநன்னிட்டைகள்கை
கூடும்வடக்குத்திருவீதிப்பிள்ளைகுரைகழலே
நாடுநலம்பெறநின்னடிநண்ணினனான்மறையும்
நேடுமரங்கநகரன்னையாகுநிராமயையே. (அஅ)

சிவிக்கைப்பிள்ளை

மாவளமோங்குஞ்சிவிக்கைப்பிள்ளைமலரடிச்சீர்
நாவளமோங்கநவிற்றியென்சன்மத்தின்ஞாட்பறுப்பான்
பூவளமோங்கிப்பொலியுநின்றாளிற்புகல்புகுந்தேன்
காவளமோங்குமரங்கநகரன்னைக்கற்பகமே. (அகூ)

வேல்வெட்டிப்பிள்ளை

மால்வெட்டியென்றன்மனத்தையெப்போதும்வளர்கருணை
வேல்வெட்டிப்பிள்ளைவிழுத்தாணிறுத்தும்விரகுபெற
நூல்வெட்டியோர்தொழுநின்றாளடைந்தனனேற்பவர்க்கு
மேல்வெட்டிகாட்டுமரங்கநகரன்னைவிண்ணவியே. (கூ0)

ஈயுண்ணி மாதவப்பெருமாள். இவர்க்கு
ஈயுண்ணி சிறியாழ்வானப்பிள்ளையென்றுந் திருநாமம்

எங்குநிறைபுகழீயுண்ணிமாதவனின்னருளாற்
றங்குமென்சன்மந்தவிர்ப்பானினதுதயைபெறநின்

கொங்குண்மலரடிகூடினனன்பர்கள்கூட்டுணுஞ்சீர்
பொங்குமரங்கநகரன்னையாங்கடற்புத்திரியே. (௬௧)

ஈயுண்ணி பத்மநாபப்பெருமாள்பிள்ளை

சுரக்குமளிப்பத்மநாபப்பெருமாடுணையடியென்
பரக்குமனத்திற்பதித்துய்யநின்னைப்பணிந்தனன்யான்
கரக்குஞ்சராசரம்யாவையுமீளவுங்கண்டவற்றைப்
புரக்குமரங்கநகரன்னையாமணிப்பூடணையே. (௬௨)

நாலூர்ப்பிள்ளை. இவர்க்குக்கோலேசர்,
கோலவராகப்பெருமாள்,இராமாநுஜதாசர் என்றுந்திருநாமம்

சீரார்நாலூர்ப்பிள்ளைசேவடியேத்தியென்றீவினையின்
வேரார்வம்வெட்டிவிரத்திவழிநின்றுவீடடைவான்
ஏரார்நின்னிண்டையிணையடியிற்சரணெய்தினனாற்
காரார்பொழில்சூழரங்கநகரன்னைக்கண்மணியே. (௬௩)

நாலூராச்சான்பிள்ளை. இவர்க்கு
நாலூர்தேவப்பெருமாள்பிள்ளையென்றுந்திருநாமம்

நாலூராச்சான்பிள்ளைநற்பதநண்ணிநளிர்ந்ததென்றற்
காலூர்தியைப்புறங்கண்டண்டர்யாவருங்காண்பரிய
மேலூர்புகநின்விழுத்தாளடைக்கலமேவினனாற்
சேலூர்திருக்கண்ணரங்கநகரன்னைச்செந்திருவே. (௬௪)

நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டர்

கடுவிற்கொடிதாக்கவற்றுமிருவினைக்கட்டறுத்த
நடுவிற்றிருவீதிப்பிள்ளைநற்றுணண்ணிநான்பிறவி
வடுவிற்றெழியநின்வண்மலர்த்தாளின்மறைபுகுந்தேன்
அடுவிற்புருவவரங்கநகரன்னையம்புயையே. (௬௫)

பின்பழகியபெருமாள்ஜீயர்

பின்பழகார்ந்தபெருமாளென்சீயர்பெருமைபுகழ்ந்
தென்பழங்கண்ணிரித்திறினல்வீட்டின்ப மெய்தவெண்ணி
இன்பழநேர்நின்னிணைத்தாளிலில்லடையெய்தினனாற்
றென்பழனஞ்சூழரங்கநகரன்னைச்சின்மயையே. (௬௬)

ஏறுதிருவுடையார்தாசர்

ஏறுதிருவுடையார்தாசர்சீர்த்திபிசைத்திதயத்
தேறுதிருக்கைபிரிப்பான்கருணையிழைத்தியென்றுன்
வீறுதிருப்புகழ்வேய்ந்தநின்றுண்மறைமேவினனால்
நாறுதிருமலர்ச்சேக்கையரங்கநகரன்னையே. (௬௭)

வானமாமலைதாசர்

தாரணியோர்புகழும்வானமாமலைதாசர்பதம்
ஏரணிநெஞ்சத்திருத்தியுய்வானருளீதியென்றுன்
தாரணிதாளிற்சரணடைந்தேனுயிர்தங்குலக
காரணியாகுமரங்கநகரன்னைக்கற்பகமே. (௯௮)

திருக்குருகூர்தாசர்

வானேய்புகழ்க்குருகூர்தாசர்நோக்கின்வளனெனக்கு
மீனேய்நோக்கென்றெண்ணியுய்வானருள்செயல்வேண்டுமென்றுன்
தேனேய்செழுங்கமலத்தாளடைந்தனன்சேர்ந்தவரை
ஊனேய்தனித்தாளரங்கநகரன்னையுத்துங்கையே. (௯௯)

நயினாராச்சான்பிள்ளை

ஞானவொழுக்கநயினாராச்சான்பிள்ளைநல்லடியென்
ஈனவொழுக்கமற்றெண்ணியுயநீயிரங்கிடென்றுன்
மோனவொழுக்கர்தொழுந்தாளடைந்தனன்முத்திநெறிக்
கானவொழுக்கர்க்கருளுமரங்கநகரன்னையே. (க00)

வாதிகேசரியழகியமணவாளச்சீயர்

தேவாதிகேசரிநின்கொழுநன்பெயர்ச்சீயர்புகழ்
ஓவாதிசைத்துய்யநீதிருவுள்ளமுவத்தியென்றுன்
தேவாதியர்தொழுஞ்சேவடியிற்சரண்சேர்ந்தனன்யான்
ஓவாதிருக்கோதரங்கநகரன்னையொண்மணியே. (க0க)

பரகாலதாசர்

பக்குவநெஞ்சப்பரகாலதாசர்பதத்துணையென்
சக்குவக்கக்கண்டுதாவங்கணீங்கத்தயைபுரியென்
றிக்குவட்டிண்டையடியினிலிலடையெய்தினனெண்
டிக்குவக்குஞ்சீரரங்கநகரன்னைச்செல்வவைப்பே. (க0௨)

சீரங்காசாரியர்

தெருளார்செழுநடைச்சீரங்காசாரியர்சேவடியென்
இருளாரிதயத்திருத்தியுய்வானீயிழைத்தியென்றுன்
பொருளார்பூம்புண்டரிகப்பொற்பதத்திற் புகல்புகுந்தேன்
அருளாரரங்கநகரன்னையாமநந்தாக்கியையே. (க0௩)

அழகியமணவாளநயினார்

நல்லவரேத்துநின்றுதன்றிருப்பெயர்நண்ணயினார்
பல்லவபாதம்பணிந்துய்யவன்புபணித்தியெற்கென்
றெல்லவர்போலொளிரிண்டையடிச்சரணெய்தினனூல்
வல்லவர்வாழ்த்துமரங்கநகரன்னைமாமணியே. (க0௪)

பிள்ளைலோகாசாரியர்

அண்ணன்முடும்பையுலகாரியன்கலேயார்பொருளென்
திண்ணன்னுளத்திற்றிகழ்த்துவிப்பாயென்றுன்சேவடியாங்
கண்ணன்மலர்களிற்கையடைபுக்கனன்காந்துமணி
வண்ணன்மகிழுமரங்கநகரன்னேவானவியே. (க0ரு)

கூரகுலோத்தமதாசநாயன்

சாந்தகுணனெங்கள்கூரகுலோத்தமதார்பத
காந்தமென்னெஞ்சக்கரும்பொற்கவரக்கணித்தியென்றுன்
சேந்தகமலத்திருவடியிற்சரண்சேர்ந்தனன்செங்
காந்தளங்கையாயரங்கநகரன்னேக்காஞ்சனமே. (க0சு)

விளாஞ்சோலைப்பிள்ளை. இவர்க்குநலந்திகழ்நாரணனென்றுந்திருநாமம்

விஞ்சியயோகிவிளாஞ்சோலைப்பிள்ளைவினையடியென்
நெஞ்சினில்வைத்துத்துதித்துய்யும்வண்ணநினேத்தியென்றுன்
கஞ்சவடிகளிற்கையடைபுக்கனன்காதரரை
அஞ்சலென்றுளுமரங்கநகரன்னேயாந்திருவே. (க0எ)

மணப்பாக்கத்துநம்பி

ஊக்கத்துடன்றன்குரவனேயுன்னுமுளத்துமணப்
பாக்கத்துநம்பிபதந்தொழுதுய்யப்பணித்தியென்றுன்
ஆக்கக்கழலிலடைக்கலம்புக்கனனன்பர்மனத்
தேக்கத்தைநீக்குமரங்கநகரன்னேயின்பவைப்பே. (க0அ)

சொல்லிகாவலதாசர். இவர்க்குக்கோட்டூர்
அழகியமணவாளப்பெருமாளென்றும்பெயர்

ஆவலறுத்தோர்க்கருளுங்குணநிதியானகொல்லி
காவலதாசர்கழறொழுதுய்யக்கணித்தியென்றுன்
பூவலர்பாதம்புகல்புகுந்தேன்புன்மைபோக்குமறை
நாவலரேத்துநலத்தாயரங்கநகரன்னேயே. (க0கூ)

கோட்டூரண்ணர்

வண்மைக்கோட்டூரண்ணர்வாரிசத்தாளேவழுத்தியென்றன்
தண்மைச்சனனந்தவிர்ப்பானுளத்தெண்ணித்தாழ்வொன்றில்லா
உண்மைச்சுருதித்தலைவாழ்நின்றுளிலுவந்தடைந்தேன்
ஒண்மைக்கருணையரங்கநகரன்னேயுத்தமியே. (கக0)

திருக்கண்ணங்குடிப்பிள்ளை

கண்ணங்குடிப்பிள்ளைகண்ணருளாலென்கடுவினையைத்
திண்ணங்குடியெவணேனும்புகுவிக்குஞ்சிந்தையனுய்

வணணங்குடிகொணின்வண்பதமெய்தினன்மாசறுத்தோர்
எண்ணங்குடிகொளரங்கநகரன்னையிந்திரையே. (கககக)

திருப்புட்குழிச்சீயர்

திருப்புட்குழியமர்சீயர்திருவடிசேர்ந்துபெரு
நெருப்புட்டணந்தருநீள்பவநீக்கநினைத்துநின்றன்
திருப்புட்கரச்சேவடிச்சரண்சேர்ந்தனன்சீதமதித்
திருப்புட்கரிணியரங்கநகரன்னைச்செய்யவளே. (ககஉ)

திருவாய்மொழிப்பிள்ளை

திருமலையாழ்வார்திருவாய்மொழிப்பிள்ளைசேவடியென்
கருமலைநன்மருந்தாவெண்ணிவாழக்கணித்தியென்றுன்
மருமலிதாளின்மறைபுகுந்தேன்றெண்டர்மாமனத்தின்
பொருமலைநீத்தாளரங்கநகரன்னைப்பொன்மகளே. (ககங)

மணவாளமாமுனிகள்

மாட்சிகுணத்தெம்மணவாளமாமுனிமாணடியைப்
பூட்சிக்குரியவென்புந்தியில்வைத்துப்புனிதமுறக்
காட்சிக்குரியநின்காற்சரண்புக்கனன்காழ்த்தவண்ட
ஆட்சிக்குரியாயரங்கநகரன்னையச்சுதையே. (ககச)

அஷ்டதிக்கஜங்கள்

எண்டிக்கிபங்களெனுமெண்மராரியரிண்டையடி
உண்டிக்கடைக்குழல்வேன்றெழுதுய்யவுவத்தியென்றுன்
தொண்டச்குலந்தொழுந்தூவடியிற்சரண்டின்னினனல்
அண்டக்குலத்தாயரங்கநகரன்னையற்புதையே. (ககரு)

*நானெறிப்பட்டகுரவர்பலரவர்நாமம்வண்சீர்
நானெறிகண்டுநவன்றுநிற்சாந்திடுநோன்மையிலேன்
ஏனெறிகாறுமியம்பிநினைச்சரணெய்துமென்னை
மேனெறியுய்த்தாளரங்கநகரன்னைமெய்ப்பொருளே. ()

சிருட்டிமுதலிதுகாறுமெடுத்தசெனனந்தொறும்
மருட்டிவருமனமாதியிற்செய்தவழுவறுத்தெற்
றெருட்டிப்பணிகொளெனப்புகல்புக்கனன்செய்யவருட்
டிருட்டிவைத்தாடியரங்கநகரன்னைசசெய்யவளே. (ககஎ)

---

* (1) ஆச்சிரயணகுருபரம்பரை. (2) இரகசியகிரந்தகுருபரம்பரை. (3) திவ்வியப்பிரபந்தவியாக்யானகுருபரம்பரை. (4) ஸ்ரீபாஷ்யசுருதப்ரகாசிகாகுருபரம்பரை.

தெருட்கடல்செய்மதித்திண்மையைத்தேய்த்துத் தெறுமவித்தை
இருட்கடல்வற்றவிழைத்தியென்றுன்னையிரந்தடைந்தேன்
அருட்கடலேயெனையாளுதியாரணத்தந்தமுறை
பொருட்கடலேநல்லரங்கநகரன்னைப்பூமகளே. (ககஅ)

ஒருகாலெனப்பலகாலுளத்தார்த்தியுவட்டலினின்
இருகாற்கமலத்திடைச்சரண்புக்கனனேன்றெனைநின்
பெருகாரருட்கிலக்காக்கனினக்குப்பெருமையதாம்
முருகார்குழலாயரங்கநகரன்னைமுன்னவளே. (கககூ)

ஊக்கத்தொடுநின்னுபயவடிகளினுற்றவன்பின்
ஓக்கத்தொடுசரண்புக்கவென்மீதுன்னுளமிரங்கிக்
காக்கக்கருதிடினின்பேர்கருணைகடலெனலாம்
ஆக்கத்துணைவியரங்கநகரன்னையம்புயையே. (கஉ0)

குற்றமெனநூல்குறிக்கின்றயாவைக்குங்கொள்கலனு
யுற்றவெளியனையோம்புமவரிவ்வுலகுதனில்
அற்றவனாய்நின்னடியிணையம்புயமண்டைகொண்டேன்
நற்றவர்போற்றுமரங்கநகரன்னைநாயகியே. (கஉக)

புறவொன்றுதன்பாற்புகுவேடன்றன்னைப்புரந்த துண்டவ்
வுறவொன்றுகொண்டுநின்னெண்கழலிற்சரணுற்றடைந்தேன்
துறவொன்றுதூயவர்நெஞ்சத்தொளிருஞ்சுடரொளியே
நறவொன்றுகூந்தலரங்கநகரன்னைநாயகியே. (கஉஉ)

கண்டுமுனிவரன்கட்டுரையின்படிக்கையடைநிற்
கண்டுபுகுந்தோனெவனாயினுமவற்காத்தனன்றும்
விண்டுகைசோரவிடாநீதுமெய்யின்பவீடளிக்கும்
விண்டுவின்பன்னியரங்கநகரன்னைவித்தகியே. (கஉங)

அறத்திற்கடைப்பட்டவாதனின்பாதவரணடைந்தேன்
அறத்திற்குறவிலனாயினுநீயெனையாதரித்தல்
அறத்திற்சிறந்தவறமெனநூல்களறைந்துநிற்கும்
அறத்திற்கருந்துணையாகுமரங்கநகரன்னையே. (கஉச)

பல்வழியானும்படர்படச்சன்மப்பரவையுய்க்கும்
அல்வழிகாட்டியடியனைகூத்துகளாட்டிநிற்கும்

வல்வழிமாயையைமாய்ப்பானினைச்சரண் வந்தடைந்தேன்
நல்வழிசேர்த்தியரங்கநகரன்னைநாயகியே. (கஉரு)

பிறவிப்பிணிக்குப்பெரும்பிரடைந்தைப்பேர்த்திடுநின்
அறவிப்பிரர்தொழுமம்புயத்தாளிணையண்டைகொண்டேன்
மறவிப்பிரமமொழித்துனையேத்தும்வரமருள்வாய்
துறவிப்பிரியவரங்கநகரன்னைத்தூயவளே. (கஉசா)

பிறப்பினையெண்ணவென்னெஞ்சந்திடுக்கிட்டுப்பிரடையும்
இறப்பினையெண்ணவிதயம்விதிர்விதிர்த்தேங்கிநனி
விறப்பினைநண்ணுமதனுனினைச்சரண்வேட்டடைந்தேன்
சிறப்பினைநல்குமரங்கநகரன்னைச்செய்யவளே. (கஉஎ)

பத்தியிலாதவன்பாமரன்பாதகன்பற்றுமனச்
சுத்தியிலாதவன்சொல்கவிச்சொற்பொருட்டோம்பொறுத்து
முத்திவைத்தாளநின்முண்டகத்தாளின்முயன்றடைந்தேன்
நத்தியெற்காத்தனலமாமரங்கநகரன்னையே. (கஉஅ)

போற்றிதிருமுகம்போற்றிகருணைபொழிதிருக்கண்
போற்றிபுன்மூரலதரங்களங்குழைபூண்டகன்னம்
போற்றிவாதாபயகரமுந்திபொலியுதரம்
போற்றியரங்கநகரன்னைபொங்கொளிப்பொன்னடியே. ()

வாழியரங்கமதன்வளமன்னதில்வாழ்முகுந்தன்
வாழியரங்கநகரன்னைநாளும்வளர்கருணை
வாழியிருமறையாழ்வார்களாரியவர்க்கமென்றும்
வாழியெதிபதிதிப்பியவாணையிவ்வையகத்தே. (கஙo)

---

வைப்பாமரங்கநகரன்னைதாளில்வயங்குசத
முப்பான்கவியாலடைக்கலமாலைமொழிந்தனனால்
ஒப்பாரிலாவைணவர்பதமுள்வைத்துவப்பவர்பாற்
பப்பார்பரிவினன்பள்ளிகொண்டானெனும்பாவலனே.

அரங்கநகரன்னை யடைக்கலமாலை.

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவல்லிக்கேணிப்

# பார்த்தசாரதிப்பரஞ்சுடர் மாலை.

---

## காப்பு.

மாமாலைநீக்கியருள் வண்பார்த்தசாரதிமேற்
பாமாலையொன்று பகரநெஞ்சே—நீமாக்
குணவாளமாமுனிவர் கொண்டாடுநங்கண்
மணவாளமாமுனிதாள் வாழ்த்து.

மாமணிமாலையுர மன்பார்த்தசாரதிமேற்
பாமணிமாலை பகரநெஞ்சே—கோமணிபோல்
வாதுூர் நதிட்டிமத வல்லிருடீரெல்லின்வந்த
பூதூர்முனிவரன்றுள் போற்று.

புலிமாலைநீத்தோர் புகழ்கண்ணன்றுளிற்
கவிமாலைநெஞ்சேகழறச்—செவியார
மாறன்புசழமுதே மாந்திவளர்மெய்ஞ்ஞான
மாறன்மலரடியே வாழ்த்து.

## நூல்

அகரப்பொருளாயமைந்தோயனைத்தும்மர்பவனே
உகரப்பொருளொடுமல்லியங்கேணியுறைபவனே
மகரப்பொருளென்மனத்தென்றும்வாழமகிழ்திகல்லோர்
பகரப்பொருள்பெறும்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (க)

உயிர்க்குயிராயதனூறுநின்றென்றுணர்பவனே
மயிர்க்குழிதோறுமருவும்பல்லண்டவகுப்பினனே
செயிர்க்குழிச்சிந்தையைச்செவ்வேதிருத்திச்சிறந்தபத்திப்
பயிர்க்குழியாப்பணிப்பாய்பார்த்தன்பாகபரஞ்சுடரே.(உ)

நித்தியவத்துநிகாயநிகிலமுநேர்ந்துநிற்குஞ்
சத்தியசத்தப்பொருளேசதாநந்தத்தன்மையதாம்
முத்தியதரின்முயன்முன்னமீதிமுதிர்ந்தபெரும்
பத்தியகத்துப்பயில்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (ங)

மறைகேட்டுவக்கின்றமாப்பாற்கடற்கண்மயிமடந்தை
குறைகேட்டுவந்தருணககடலேலெநாடியேன்குறையும்
இறைகேட்டருடியியற்குடக்கூத்தினெடுத்தபெரும்
பறைகேட்கவெற்றியபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (ரு)

கீரக்கடல்வந்துதேவர்கள்வாழ்த்தக்கிளாந்தவரைப்
போரக்கருணைபுரிந்தேயதுசூலம்போந்துதியின்
நாரக்கருளவருதுமென்றுரையென்னவிவகற்றும்
பாரக்கடனினதேபார்த்தன்பாகபரஞ்சுடரே. (கூ)

நற்குணப்பூணணிதேவகிதக்கியினன்சமைந்த
சிற்குணப்பிளையுரோகணிதன்வயிற்சேர்த்தவனே
முற்குணப்பாவனமூடன்மும்மோகத்தைமோசனித்தாள்
பற்குனப்பேர்கொண்டபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ()

புண்ணியமோருருக்கொண்டன்னதேவகிபொன்னகட்டில்
நண்ணியவீரறுதிங்களிருந்தவநாளுநல்லோர்
எண்ணியநின்னடியேத்தித்தொழுவெற்கருளிருக்கின்
பண்ணியலல்லிக்குளப்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (எ)

ஆவணிமாதமபரபக்கத்தட்டமிதிதியிற்
பூவணிரோகணிப்பொன்னொளிவிப்புவிபோந்துதித்தாய்
தாவணியென்மனச்சஞ்சலந்தீர்த்திதகைப்புலவோர்
பாவணிதிண்புயப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (அ)

ஆழிசங்கந்தமைக்கண்டஞ்சியன்னையவைவொளித்தி
ஊழிமுதல்வவெனவொளித்தாயடியேனுளமோர்
நாழிகையேனுநின்னற்றுடொழுதுய்நலமளித்தாள்
பாழியந்தோளுடைப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கூ)

பெற்றார்தனைவிடத்தந்தைகைமீதிப்பிச்சமன்ன
வற்றுநதியும்வழிவிடநந்தன்மனைபுகுந்தோய்
செற்றாரிற்செல்லல்செயுந்தீவினைதனைத்தீர்த்தருள்வாய்
பற்றார்பயங்காபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (க0)

கஞ்சனிற்கொல்பவன்வேறுளனென்றுமியாதிக்கத்தி
வஞ்சவெனவான்கரந்தபெண்மாயைவாவிடுத்தோய்

நெஞ்சநெகிழ்க்குநெடுந்துயர்நீக்கவினைத்தருள்வாய்
பஞ்சசரனன்னபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கக)

பூதனைமாய்த்தவகன்றொருபாலரைப்போந்தொளித்த
போதனைமுன்னம்புரந்தவபுந்திபுழுக்கிற்கும்
வேதனைவீயவிழைந்தருள்வேட்டவர்வேட்டனதப்
பாதனைபோலருள்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கஉ)

பகாசுரன்கேசியரிட்டன்பிரலம்பன்பண்டிநின்றோன்
அகாசுரனுயிர்ச்செற்றோயடியனகத்துறையும்
அகாசுரனலலலசுரனிவர்சசெற்றருள்புரிவாய்
பகாசுரவைரிபின்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ( )

இணைமருதாசவெனவிட்டசாவமியககரற
அணையுரலோடுமணைந்தம்புயவடியாலளித்தாய்
கணையெனகாய்ந்துகவற்றுநகைபாற்றைக்கடிந்தருள்வாய்
பணைவளவல்லிக்குளப்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (கச)

முஞ்சாரணியமுதிர்தீத்திரளுண்டுமுன்னிளையோ
டஞ்சாயரையுமஞ்சேன்மினென்றோம்பியவையொறிப்
பஞ்சாகுலங்கழும்பாறப்பணித்தருள்பற்றலர்கூப்
பஞ்சானனமன்னபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கரு)

மடப்பிடியாயர்மடந்தையர்வத்திரம்வவ்விமுன்னர்க்
கடப்பினிலேறியதுநற்கதிபெறக்கண்டவனே
கடப்பரிதாமென்கருக்கடல்வற்றக்கடைக்கணித்தாள்
படப்பையராவணையாய்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (கசு)

காட்டுவன்றீயைக்கணத்தினுண்டாயரைக்காத்தவனே
சூட்டுவன்றாகத்தின்மீதுநடித்ததுணையடியாய்
வாட்டுமென்சன்மவருக்கமொழித்தருள்மாமறைநற்
பாட்டுமன்னல்லிகுளப்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (கஎ)

நீண்டுவளர்ந்தவரையேழ்நினமானிரைபுரப்பான்
பூண்டுநின்றுமையமொறிவெல்லுமாற்றைப்புரிந்தருள்வாய
மாண்டுறுமைந்தனைத்தக்கணையாய்மறையோற்களித்தாய்
பாண்டுபயந்தகுளபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கஅ)

நந்தனைக்கொண்டோரசுரன்புனற்கிறைநாட்டினுய்க்க
முந்தனையோனைக்கொணர்ந்தோயிம்மூடனுமுத்திபெறச்
சிந்தனைசெய்திருவல்லிகேணியசேர்ந்தவன்பர்
பந்தனைதீர்ப்பவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௧௯)

கோவமொடாயமைவவ்வியவிஞ்சையக்கோளரவின்
சாவமொருவிடத்தைவந்ததாட்டாமறைத்தலைவ
சாவமொழியிற்சவட்டுந்துயரைத்தணத்தியன்பர்
பாவமொழிப்பவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (உ0)

வந்தனஞ்செய்யாதிகழ்காழியனைவதைத்துமணச்
சந்தனந்தந்தவக்கூனிகருச்சந்தத்தனுவளித்தோய்
உந்தனலேருமுருவலொரீஇயென்னுளத்தைநின்பாற்
பந்தனஞ்செய்தருள்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (உ௧)

கஞ்சனும்விட்டகளிறுங்களிற்றைக்கடவிவந்த
வஞ்சனுமல்லருமவானுறச்செய்தவவல்வினையேன்
நெஞ்சநெகிழ்வுற்றுநின்னைநினைக்கநினைத்தருள்வாய்
பஞ்சவர்தூதுவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (உஉ)

சிரதர்தேர்தெருள்சேரக்குரூரனச்சிந்துவினுந்
தேரதன்மீதுந்தெரியநின்றோயென்றிருக்கறத்தாள்
நீரதமூருமபொழிலல்லிக்கேணிநிகழமலா
பாரதபண்டனப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (உ௩)

மாத்துப்பிதழியர்மத்திமமத்திமமன்னியங்கை
கோத்துப்பரதக்குரவைசெய்தோயென்குறைமுடித்தாள்
ஓத்துப்பயிலல்லிக்கேணியுறைபவவுற்றவர்க்குப்
பாத்துப்பருகிடும்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (உ௪)

சேணியன்றந்தபொற்சேலையுடுத்துநற்செல்வநல்ல
வாணியவற்குவழங்குங்கருணைமகோததியான்
பூணியற்றுன்பமபொருக்கெனப்போகப்புரிதிவல்லிற்
பாணியனாகியபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (உ௫)

மணவாசிகைநல்குமாச்சுதன்மாயீமலர்க்கணிநீஇக்
குணவாளநின்குலம்வாழ்கவென்றாசிகொடுத்தவனே

தணவாதவென்சன்மசாகரம்வற்றத்தயைபுரிவாய்
பணவாளராப்பகைப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ()

அருத்தியொடுக்கிரசேநற்கணிமகுடங்கவிப்பான்
மருத்தினைக்கொண்டுசுதன்மையைமண்மிசைவைத்தவனே
விருத்தியடையென்வினைத்துயர்வீயவிழைந்தருள்வாய்
பருத்திவர்தோளுண்டப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ()

காலயவனற்கடிவான்முசுகுந்தற்கண்டவற்குக்
காலவினையொன்றுமில்லாக்கதிதந்தகற்பகமே
ஓலமிடுமென்னுறுவலொழித்தியுயர்மகவான்
பாலனெனப்படும்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (உ௮)

குண்டினமாபுரநங்கையுருப்பிணியைக்கொணர்ந்து
வண்டினமார்காத்துவரைப்பதியில்வதுவைசெய்தோய்
தொண்டினனெஞ்சத்துயர்துடைத்தாள்சுடராழிதொட்டுப்
பண்டினனைப்புதைத்தாய்பார்த்தன்பாகபரஞ்சுடரே. ()

அம்பரமீதிலகிதனெனக்கொண்டமூத்தியவச்
சம்பரனைப்பிரத்யும்நனைக்கொண்டுசெகுத்தவனே
அம்பரமென்னவகைதுயர்தீர்த்தியடற்சிலைசேர்
பம்பரமொய்ம்புடைப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ()

சாம்பவனோடமர்செய்தவன்வாழ்த்துந்தகைமணியுஞ்
சாம்பவதியுமவன்றரக்கொண்டசநார்த்தனனே
தீம்பரினென்னைக்கெறுந்தீவினையைச்செகுத்தருள்வாய்
பாம்பரிவைப்பதியாம்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (௩௧)

நத்தியமாமணிசத்ராசித்துக்கன்பினல்கியவன்
சத்தியபாமாமணிதரக்கைப்பற்றுந்தத்துவவென்
தத்தியலையுமனநிலைநிற்கத்தயைபுரிவாய்
பத்தியமைந்தோர்க்கருள்பார்ததன்பாகபரஞ்சுடரே. ()

சரதநினைப்பெறவெண்ணியமூனைக்கடங்கரைக்கண்
விரதமியற்றியகாளிந்திதேவியைவேட்டவனே
வரதநினைமனம்வைத்துவழுத்தியுய்வண்ணஞ்செய்வாய்
பரதகுலோத்துங்கப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ()

சித்திரமாருமவந்திக்கிறையவன்செல்வியெனும்
மித்திரவிந்தையைத்தேரிற்கொணர்ந்துவேட்டவனே
குத்திரமாரென்கொடுவினைதீரக்குறித்தருள்வாய்
பத்திரவில்வண்மைப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௩௪)

குண்டைகளோரேழ்கழுவியயோத்தியர்கோன்மகளாங்
கெண்டைவிழிச்சத்தியைமணஞ்செய்தருள்கேசவனே
தண்டையணிபுநின்றுடொழுதுய்யத்தயைபுரிவாய்
பண்டைமறைபுகழ்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௩௫)

கீர்த்திபெறுகேகயர்கோன்பயந்தகிளிமொழிசீர்ப்
பூர்த்திபெறும்பத்திரைமாதைமன்றல்புரிந்தவனே
ஆர்த்தியடியனையார்த்தவசிந்தினடியறுத்தாள்
பார்த்திவர்போற்றிடும்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ()

நீர்கெழுமாவளமத்திரதேயநிருபனருள்
வார்கெழுகொங்கையிலக்குமணையைமணந்தவநின்
சீர்கெழுசேவடிசிந்தைவைத்தேத்துந்திறனளித்தாள்
பார்கெழுகீர்த்தியபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௩௭)

அரணுறழித்தடலார்நரகன்பதியண்மிவிட்ட
முரணுலதண்டைமுறித்துமுரனைமுனிந்தவனே
சரணாகதனென்றனைசன்மவிடாயைத்தணிதகருணைற்
பரணுபதவுரப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௩௮)

மத்தத்துயர்நரகற்செற்றவன்றன்மதலைபக
தத்தற்குத்தாமமுடிதரித்தாய்சரண்சார்தமியன்
சித்தத்திருந்துதினந்தினநின்றிருச்சேவைதந்தாள்
பத்தர்க்கெளியவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௩௯)

மணப்பாரிசாதங்கொணர்ந்துமகிகட்டுமாவருணன்
வணப்பாற்குடையுமகிதிகுழையும்வழங்கியவா
கணப்பாதகத்தைக்கழித்தாளணின்கடன்காளியன்றன்
பணப்பானடித்தவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௪0)

சொன்னயமார்பதினாறாயிரந்தொகைத்தோகையரை
அன்னவெண்பெற்றவுருக்கொடுவேட்டருள்ச்சுதனே

இன்னலிரித்தென்மனநினையெண்ணவிசைத்தருள்வாய்
பன்னருமக்கொடிப்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௧)

மருமணிக்கூந்தலம்மாணிழையார்தம்மனைதொறும்புக்
கிருமணிக்கண்கண்டொருமுனிநாரதனேன்றுதொழுங்
கருமணிவண்ணகடையனைக்காத்திகவுத்துவப்போர்ப்
பருமணிமார்பத்தபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௨)

வயங்செழுவாகுறுவாணனைவென்றவன்மாமகளை
முயங்கவநிருத்தமூர்த்திக்கருளியமுன்னவனே
மயங்கமதிதருமாயையைமாற்றுதிமாற்றலர்க்குப்
பயங்கரனாகியபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௩)

நதிபதிநாதனரலைக்கண்வவ்வியநல்லிடத்தை
விதிபதிவிண்ணோர்வியன்புனைவற்கொண்டுவேய்சிகர
மதிபதிமாடத்துவாைப்பதிசெய்துமன்னியதிற்
பதிபதியேயெனையாள்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (௬௪)

தீயசராசந்தனைச்செகுவித்தவன்சேட்சிறையின்
மேயசராசனவேந்தர்களேகவிடைகொடுத்தோய்
ஆயசராமரணாகிகணீக்கியடியனையாள்
பாயசராசரத்தாய்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (௬௫)

வைவளர்வேலவர்செய்ராயசூயமகமுகத்துக்
கைவளரக்கிரபூசனைகொண்டருள்கார்வணனே
மைவளவொன்மனமாயையைமாய்த்தருள்வாரிதியிற்
பைவளர்பாம்பணையாய்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (௬௬)

மாசுபதிசாலுவனைவிமானத்தைமாவரக்கைத்
தேசுபதிதிண்ணகரைச்செயிர்த்துச்சிதைத்தவனே
ஆசுபதியென்னகவகநீக்கியருளரன்பாற்
பாசுபதம்பெற்றபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௭)

அண்டர்களேத்துநின்னம்புயத்தாள்களிலன்புடனின்
றொண்டர்கடொண்டன்சொலுமுறைகேட்டென்றுயர்துடைத்தாள்
தண்டகரத்தந்தவக்ரனுந்தமபியுஞ்சாய்ந்தொழியப்
பண்டமர்செய்தவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௮)

இச்சைச்சுடுநெஞ்சிலஞ்சியினைவர்க்கிறாகியின்றி
மிச்சைசசுயோதனன்விட்டவெங்கூளியைவெல்வி,
கொச்சைசசிறியற்குறிகொண்டுகாத்திதுலவடியர்
பச்சைசசுரதருவேபார்த்தன்பாகபரஞ்சுடரே. (௬௪)

பரித்தாமன்விட்டபகழியினுத்தரைபண்டிதன்னுட்
கரித்தாமமானகருவுருகுயிர்தந்தகாற்கமலா
எரித்தாமமென்னவெரிந்துமென்னின்னவிரித்தருள்வாய்
பரித்தாமக்குக்கியபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௫)

தொண்டுசெயாவகைதொல்லைவினைப்பயன்றாண்டவந்து
மண்டுமனத்துயர்மாற்றிடுவாயமறைவேதியற்கு
விண்டுமுன்மீளாப்பதம்புககமைந்தரைமீட்டுவந்து
பண்டுகொடுத்தவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௬)

அத்தகத்தெடுத்தவ்வறிஞர்குசேலரவலமின்று
சித்தமகிழ்ந்துதிருவெட்டுநலநிபசிற்பானே
நித்தநினைநினைவித்துன்மலர்ப்பதநீழலவைப்பாய்
பத்தனெனப்படும்பார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௭)

பார்ப்பார்கஞ்சாவத்திற்பச்சோத்திபாகியோர்பாழ்ங்கிணற்றின்
நீர்ப்பானிலவுதிருத்தகாருள்செய்தநின்மலனே
போர்ப்பாலதுன்பினைப்போக்கியருளுகிபொற்புகழைப்
பார்ப்பாற்படைத்தவனும்பார்த்தன்பாகபரஞ்சுடரே. ()

வராதினமென்னடியார்க்கென்றவசித்தர்வாழ்வைதந்த
புராதினர்ச்சாககும்புதகேட்டருவேமணப்பூங்கமலக்
கராதினனெண்ணங்கைகூட்டியுள்ளங்கசியும்பத்த
பராதினனவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௬௯)

விதிநிலைபெற்றநின்வேதநெறியைவிழைந்தொழுகா
மதிநிலைபெற்றவிம்மண்ணைபடியனின்மாமலர்த்தாள்
கதிநிலையென்றடைந்தேனகாத்தருளெக்கடவுளர்க்கும்
பதிநிலையானவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (௭0)

உன்னியுமேத்தியுமுன்றுள்வணங்கியுமோவவின்றித்
துன்னியதுக்கமுந்தோலாத்துனுக்குந்தொடர்ந்தெனுழி

மன்னியகாரணமாக்கீதைசொன்மலர்வாய்திறந்து
பன்னியருளுதிபார்த்தன்றன்பாகபராஞ்சுடரே. (எக)

ஒருகாணின்னுமமுறைக்கிற்பவங்களொழியுமென
அருகாமறைகளனந்தமுங்கூறுமல்லும்பகலும்
உருகாமினுமமுறைத்துமவையொழியாவிதமென்
பருகாரமுதனையாய்பார்த்தன்பாகபராஞ்சுடரே. (எஉ)

எண்ணேபுசெய்யெனவெப்பொருட்கண்ணுமிருப்பவனே
கண்ணேகருணைக்கடலேநீயென்னுளக்கண்ணிலையோ
உண்ணேர்ந்தொறுக்குமுறுவெற்குழாந்தனையோர்ந்திலையோ
பண்ணேபண்ணின்சுவையேபார்த்தன்பாகபராஞ்சுடரே.()

ஆற்றுந்துயரளித்தாணிற்கறமாமடைமழைபோல்
ஊற்றுந்துயரமொறுக்கின்றதென்னையுறமெலிந்தேன்
போற்றுந்தமியனைபோற்றியருடிபொருந்தலைப்
பாற்றுந்திறலுடைப்பார்த்தன்றன்பாகபராஞ்சுடரே. (எச)

எற்றுந்துயர்செய்தொறுத்தலெவர்க்குமினிமையதே
மற்றுந்தவறன்றவரவர்க்கேற்பனவாய்ந்துசெயல்
முற்றுந்தகுவதுமூவாமுதல்வமுற்றுந்துறந்தோர்
பற்றும்பதயுகபார்த்தன்றன்பாகபராஞ்சுடரே. (எரு)

எல்லாமுணர்பவயாவுமுறைபவயாவுஞ்செய்ய
வல்லாய்நினக்கென்வருத்தம்வளாந்திடல்வண்மையன்றே
அல்லாவிடினின்றிருவருட்கஃதிலக்கானதன்றே
பல்லாரமார்பொளிர்பார்த்தன்றன்பாகபராஞ்சுடரே. (எசு)

பிரமமெனப்படும்பேரின்பசாகரப்பேரநல்ல
சரமநெறிசார்பவர்க்கருளும்பரந்தாமவென்றன்
சிரமமறும்பசல்சேய்த்தன்மைத்தென்றுதெரியகிலேன்
பரமதயாநிதியேபார்த்தன்பாகபராஞ்சுடரே. (எஎ)

வெய்யதின்வெய்தென்வினையதுதன்னால்விளைபயனை
நொய்யரினொய்யவனேநுகர்கிலேனின்றனேன்கழல்சேர்
செய்யவடியடைந்தேன்றிருவுளச்செயலெனையோ
பையரவப்பள்ளியாய்பார்த்தன்பாகபராஞ்சுடரே. (எஅ)

ஏகனெனவுமநேகனெனவுமிலங்சமலா
மூகனெனத்துயர்மூழ்குமென்னெண்ணமுடித்தருள்வாய்
ஊகனெனவாநிலாமீட்டற்கூக்கியவுத்தரன்றேர்ப்
பாகனெனவந்தபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (எகூ)

எத்தனைகாலுமிடைவீடிலாமலிடமொனும்பேர்க்
கொத்தனைத்துங்குடிகொண்டுகுமைக்கக்குழைந்துநிற்குஞ்
சித்தனைவேறோர்களைகணிலாதசிறுவனையிப்
பத்தனையாளுதிபார்த்தன்றன்பாகபாஞ்சுடரே. (அ0)

திக்கியலாகியதேவாதிதேவவென்றீயமனப்
பொக்கியல்போக்கிப்புகல்புகுவித்துப்புலைப்பிறவி
சிக்கியவென்னைத்திதித்தருள்வேதத்திருவுருவப்
பக்கியம்பாகநற்பார்த்தன்றன்பாகபாஞ்சுடரே. (அக)

முழுவந்தனைத்துணைபற்றியமூடரின்மூடனென்மிஞ்
புழுவந்திற்புல்லியன்பொல்லவொழுகசன்பொருக்கவொணு
வழுவந்தமில்லவனேனும்பொறுத்தென்றன்வல்வினையாம்
பழுவந்தனைப்பறித்தாள்பார்த்தன்பாகபாஞ்சுடரே. (அஉ)

இயங்குதிணையியங்காத்திணையென்னுமிருவகையா
யுயங்குமுயிர்களினுயேயொருவனுணர்வவிந்து
மயங்குபுசெய்தமறநீக்கியென்றுமலிபிறவிப்
பயங்குடிபோகப்பணிபார்த்தன்பாகபாஞ்சுடரே. (அங)

நடைப்படுமிவ்விளையாட்டுவிபூதிநடிப்பவருட்
கடைப்படுவேனிற்கடைப்பிடித்துய்க்கடைக்கணித்தாள்
துடைப்பவதொன்றுதொடர்ந்தவினையின்றொடர்புசொண்டு
படைப்பவகாப்பவபார்த்தன்றன்பாகபாஞ்சுடரே. (அச)

உடையவனியிவ்விபூதியிரண்டையுமோர்ந்துநினை
அடையடிபேற்குநினக்குமுறவினமைதியுண்டு
தடையறத்தாங்குங்கடனினதாகுந்தயங்கிடுமைம்
படையமர்நாற்புயபார்த்தன்றன்பாகபாஞ்சுடரே. (அரு)

விரிபவநோய்க்குமருந்தேயந்நோயைவிளைவிதையை
அரிபவனேயம்புயாதனவந்தணறுயிரங்கண்

அரிபவனுதியர்க்கும்மரியாயென்னகத்துயரும்
பரிபவமுந்துடைத்தாள்பார்த்தன்பாகபரஞ்சுடரே.(அசு)

அரிதேர்மறையுமறியவென்றுய்ந்தோரறையமலா
அரிதேர்மலர்ப்பொழிலல்லிக்குளத்தவராக்கவர்ந்து
நெரிதேரைதன்னிலைநேர்ந்தேனைக்காத்திநெருப்பிறைபாற்
பரிதேர்முதற்பெற்றபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (அஎ)

ஈண்டியவெவ்வினையால்வந்திகல்செயிடரிரிப்பான்
வேண்டியநல்குநின்றுளடைந்தேனிடர்வேலைதனைத்
தாண்டியடியனந்தாமமடையத்தயைபுரிவாய்
பாண்டியன்பெண்கொண்டபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே.

வட்டப்பரவையின்வற்றுதுநாளும்வளருமென்றன்
துட்டப்பவப்பிணிதொட்டுக்கவற்றறுலைத்தருள்வாய்
சட்டப்படித்துட்டரைச்செற்றுமும்மைச்சகத்தும்வெற்றிப்
பட்டப்பெயர்கொண்டபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. ()

சத்தியஞ்சத்தியஞ்சத்தியநின்றுட்சரணடைந்தேன்
தத்தியலையிற்றடுமாறுளத்தைநின்றுண்மலரின்
மெத்தியவன்புடன்மேவவருள்செய்வியன்மனையின்
பத்தியவல்லிக்குளப்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (கூ0)

வெம்பிவெருட்டும்பவவினை,தாண்டிடவேண்டிநின்றுள்
அம்பியையன்னையுருப்பிணிநங்கைமுன்னுய்ந்துபற்றி
நம்பியுளவென்னடலையைநீக்குதிநாண்மலர்க்காப்
பம்பியவல்லிக்குளப்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (கூக)

கருப்பதநீக்கிக்கனிவோனைக்காத்தருள்கண்ணகரி
மருப்பதஞ்செய்தவவென்றுயுருப்பிணிமங்கைமுன்னின்
திருப்பதஞ்சேர்ந்துபுகல்புகுந்தேனென்றிருக்கறுத்தாள்
பருப்பதநற்குடையாய்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (கூ௨)

சரணாகதியின்றருமமறிந்ததலைவநின்றுள்
அரணாகநம்பியுருப்பிணிநங்கையென்னன்னைமுன்முக்
கரணாகவமற்றடைந்தேன்ருள்செய்கவுத்துவவா
பரணாகதாரபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கூ௩)

உவரோதனாலத்தொருதுணையில்லாவுனதடியேன்
இவரோதிமநடையன்னையுருப்பிணியிந்திரைமுன்
தவரோகைகொண்டுதொழுந்தாளடைந்தேன்றயைபுரிதி
பவரோகபண்டிதபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கூ௪)

முன்னவநீமுன்னின்முற்றுவினையில்லைமொய்த்துவரை
மன்னவநின்றுணைருப்பிணித்தாய்முன்மறைபுகுந்தேன்
என்னவமானமுமேக்கமுநீக்கியென்னெண்ணமொன்றும்
பன்னவமாகாதருள்பார்த்தன்பாகபரஞ்சுடரே. (கூரு)

கராமுகஞ்செற்றுக்களிறென்றுகாத்தருள்கண்ணநின்றுள்
குராமுகப்பூங்குழலென்றுயுருப்பிணிக்கோதைமுன்னித்
தராமுகத்தேசரண்சார்ந்தேனெனதுதனிமனுவைப்
பராமுகஞ்செய்யாதருள்பார்த்தன்பாகபரஞ்சுடரே. ()

செங்கயல்வாவியல்லிக்குளச்செல்வநின்சேவடியிற்
றிங்கள்வதனவுருப்பிணித்தாய்முன்னர்ச்சிந்தையன்பு
பொங்கவடைக்கலம்புக்கனனென்னைப்புரந்தருள்வாய்
பங்கயனேத்தும்பதபார்த்தன்பாகபரஞ்சுடரே. (கூஎ)

நீதாவல்லிக்குளநாதாநின்றுணிகிலசகங்
மாதாவுருப்பிணிநங்கைகரியாமறைபுகுந்தேன்
தாதாவென்சன்மந்தவிர்த்தருள்வாய்தண்ணந்தாமரைப்பூப்
பாதாபஞ்சாயுதபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கூஅ)

நலதேவகிநந்தனதாயுருப்பிணிநங்கைமுன்னர்ப்
பலதேவர்போற்றுன்பதஞ்சரண்புக்கனன்பத்தர்தங்கள்
குலதேவவென்னைநினதடியார்குழுக்கூட்டுவிப்பாய்
பலதேவன்பின்னவபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (கூகூ)

தேவவிபூடணதேவகிதேவிசிறுவபவத்
தாவவிபாவரிச்சார்பைத்தணக்கச்சமைந்தகதிர்த்
தீவவிபாகரநின்னடியார்பணிச்செல்வந்தந்தாள்
பாவவிமோசனபார்த்தன்றன்பாகபரஞ்சுடரே. (க00)

வாழியல்லிக்குளம்வாழியருச்சுனன்மாவலவன்
வாழியனந்தவலாயுதன்வாழியுருப்பிணித்தாய்
வாழிநஞ்சாத்தகியாழ்வான்பிரத்யும்நவண்பெயரோன்
வாழியநிருத்தவள்ளலென்ஞான்றுமிவ்வையகத்தே.



கயற்பெயர்செய்புடைசூழல்லிக்கேணிக்கடிநகர்வாழ்
மயற்பெயர்கீதையுரைத்தாற்குநூறுசொன்மாலையென்றும்
அயற்பெயர்த்தேவறியாப்பள்ளிகொண்டானெனவறையும்
இயற்பெயரானம்மெதிராசதாசனியற்றினனே.

பார்த்தசாரதிப் பரஞ்சுடர் மாலை
முற்றிற்று

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதிமாயவன் மாலை.

## காப்பு.

அருச்சுனன்றன்சாரதிநம் மல்லிக்குளம்வாழ்
அருச்சுனமன்றிடந்தவப்பன்—றிருச்சரணிற்
சொற்றொடையல்சூட்டநெஞ்சே தொல்குருகைத்தண்வகுள
நற்றொடையன்மாறன்று ணம்பு.

## நூல்.

அகரமுதலவனைத்தெழுத்தும்மதுபோன்முதலா
நிகரவுலகுநினையுடைத்தாதலினின்கடனாந்
திகரமறவவ்வுலகத்துயிர்களைச்சேர்ந்தளித்தல்
மகரவுயிர்க்குயிரோபார்த்தசாரதிமாயவனே. (க)

திருக்கிளர்மார்பதிருவல்லிக்கேணியசீதமுகில்
உருக்கிளர்மேனியவோவாக்கருணைக்கண்ணுத்தமனே
செருக்கிளரொன்மனச்செல்லலொழித்திதிகந்தமெலாம்
மருக்கிளர்மாலைப்புயப்பார்த்தசாரதிமாயவனே. (உ)

ஆழிமுரசினனைம்புலவேடராறுபகைஞர்
பாழிமுருக்குமுராமுநின்பாதப்பணியுந்தந்தாள்
ஊழிமுதல்வவுயிர்க்குயிராகியொளிர்தலைவ
வாழிமுகுந்தவரபார்த்தசாரதிமாயவனே. (ங)

மாவல்லவமுற்றும்வாய்ந்திட்டவாஞ்சையமாமறையின்
மாவல்லிசையொலிவைகுந்தவாணமனக்கவலை
மாவல்லிநீங்கிடவல்விரகொன்றுமதித்தருள்வாய்
மாவல்லிக்கேணிமகிழ்பார்த்தசாரதிமாயவனே. (ச)

ஒண்மையுணர்வினருன்பாதசேவையுடபமரீஇத்
தண்மைச்சனனமரணசுகதுக்கசாகரத்தை
எண்மையினீந்துவரேழையென்செய்கேனிரங்கியருள்
வண்மையல்லிக்குளம்வாழ்பார்த்தசாரதிமாயவனே. (ரு)

காட்சியிலென்போல்பவர்கள்பிறவிக்கடல்கடப்பான்
பூட்சிமெய்ஞ்ஞானம்புகட்டிநின்பாதப்புணைகொடுத்து
மீட்சியின்மோக்கக்கரையேற்றுதனின்விழுக்கடனும்
மாட்சியல்லிக்குளம்வாழ்பார்த்தசாரதிமாயவனே. (சு)

பரந்தருபாவச்செயனீக்கிநின்பதபங்கயமே
நிரந்தரமேத்திநின்னைமகிழ்த்திநினதுருவே
உரந்தரவுள்ளத்திலுன்னியுய்வானல்லுணர்வுபெற
வரந்தரவேண்டுமகிழ்பார்த்தசாரதிமாயவனே. (எ)

கஞ்சங்கதைகற்பகஞ்சங்கநேமிகலப்பைகொடி
விஞ்சங்குசங்குலிசாதிநற்சின்னம்விளங்குநின்றாள்
வஞ்சங்குடிகொண்மனத்தேன்வழுத்தியுய்வானருள்வாய்
மஞ்சங்கசற்றந்தவபார்த்தசாரதிமாயவனே. (அ)

ஓராமறைபயின்றம்மறைசொற்றனவுற்றியற்றி
நேராவருணநெறிதவம்யோகத்தினின்றுநிற்கே
ஆராதனஞ்செய்யுமாற்றலிலேற்குமனுர்ப்பிறவி
வாராவணங்காத்தருள்பார்த்தசாரதிமாயவனே. (கூ)

சன்மங்களுமந்தவிருநின்றேற்றங்கள்சாகைமறைத்
தன்மங்களுட்டவுஞ்சாதுசனங்களைத்தாங்கவுமாங்
கன்மங்கடலிற்பெரிதாப்படைத்தவெற்காப்பவரார்
மன்மங்கலாகரனேபார்த்தசாரதிமாயவனே. (க0)

கோப்பியமாகின்னவதாரக்குய்யங்குறிக்கும்வலி
பூப்பெறுவேதபுருடற்குமில்லெனிற்போந்தவிஞ்சைக்
காப்புறுவேனெங்ஙன்காண்பலிரங்கியெற்காத்தருள்வாய்
மாப்பயிலல்லிக்குளப்பார்த்தசாரதிமாயவனே. (கக)

வந்தார்த்தர்செய்யஞ்சலிமுறைமாப்புகன்மன்னிடமாய்ச்
செந்தாமரைபுரைநின்னடியிற்சரண்சேர்ந்தனனென்
சிந்தாகுலமறச்செய்திதிருவருடீனசன
மந்தாரவல்லிக்குளப்பார்த்தசாரதிமாயவனே. (கஉ)

முரணுர்பொறிவழிமோவாதுசன்மமுடித்திடுநின்
சரணாரவிந்தத்திற்றங்கியென்னுள்ளந்தனித்திருப்பான்

அரணுமருள்செய்துகாத்திடுவெவருமடைசரண
வரணுவல்லிக்குளம்வாழ்பார்த்தசாரதிமாயவனே. (௧௩)

ஒண்மணிமாலையுரமணிநாதவுருப்பிணிப்பேர்ப்
பெண்மணிநாயகபேராவஞ்ஞானப்பிறங்கிருட்கோர்
விண்மணியேநல்லவேதச்சிரோமணியேவிழியின்
வண்மணியேயென்னையாள்பார்த்தசாரதிமாயவனே. (௧௪)

நித்தர்நெஞ்சக்கஞ்சநீங்காதொளிர்நீனிறமணியே
முத்தருளமுதமுந்நீர்முளைக்குமுத்தேநினது
பத்தர்கள்பாதப்பணிக்கடியேனைப்பணித்தருள்வாய்
மைத்தமழைமுகிலேபார்த்தசாரதிமாயவனே. (௧௫)

காணிக்கனிகடல்காணுதனவாய்ககரில்கடிந்தோர்
பேணிக்கருத்தெனும்பெட்டகம்வைத்துப்பெரிதுவக்கும்
மாணிக்கமேநன்மரகதமேயென்மயக்கறுத்தாள்
மாணிக்குறளானவபார்த்தசாரதிமாயவனே. (௧௬)

ஒருமத்தடியுண்டுலூகலத்தோடுகட்டுண்டகண்ணு
தருமத்தனித்துணைத்தற்பரநின்னைச்சரணடைந்தேன்
கருமத்தளையறுத்தாளுதிவச்சங்கமலைமணி
மருமத்தவிர்பவனேபார்த்தசாரதிமாயவனே. (௧௭)

அந்தாமவாணரநுபாவியவப்பிராகிருத
சிந்தாமணியேசிறந்தனநல்குதெய்வத்தருவே
நந்தாவிருநிதியேயெனைக்காக்கஙயந்தருள்வாய்
மந்தாகினிபதத்தாய்பார்த்தசாரதிமாயவனே. (௧௮)

எண்ணவெண்ணத்தித்தித்தின்பந்தருமிரதக்கரும்பே
உண்ணவுண்ணத்தெவிட்டாதவுறுசுவையோங்கமுதே
கண்ணகண்ணித்தொழுவேற்கருளன்பர்கருத்தலரான்
மண்ணமண்ணப்பொலிவாய்பார்த்தசாரதிமாயவனே. ()

பூமணக்கின்றபொழிலல்லிக்கேணிப்புராதனனே
தூமணக்கின்றசுடராழியேந்தியதோளண்ணலே
கோமணக்கின்றவென்னேலாப்பவப்பிணிநோய்தொழித்தாள்
மாமணக்கின்றவுரப்பார்த்தசாரதிமாயவனே. (உ0)

சதுராननன்முனந்தோன்றியவுந்தியந்தாமரையாய்
விதுராணகன்மனேவேண்டிவிருந்துமிசைந்தவனே
விதுராகுவிட்டதெனவென்மனக்கோள்விடவருள்வாய்
மதுராபுரிவந்தவாபார்த்தசாரதிமாயவனே. (உக)

இறையுமிரக்கமிலாக்கொடுங்கஞ்சனிழைத்துவைத்த
சிறையுறுதேவகிசிந்தாகுலத்தீர்செகுத்ததெனக்
கறையுறுமென்மனக்கண்ணூர்கவலைக்கனறணித்தாள்
மறையுறையும்பொருளேபார்த்தசாரதிமாயவனே. (உஉ)

நெருப்பினில்வந்தவணோர்ந்தபராபவநீணெருப்பை
விருப்பவிவிதவிதத்தூசுதகத்தின்வீத்தவவென்
உருப்பவுறுவலுதாசனற்செற்றருளோங்கவிரு
மருப்பரண்மாய்த்தவனேபார்த்தசாரதிமாயவனே. (உந)

பாணுங்கினியாற்பனித்துத்தளைகொள்பயாக்கினியை
ஊணுக்கியவொளிவட்டத்தவென்றனுறுவலெனுங்
கோணுங்கெரியுங்குளிரச்செய்சாந்தீபினிக்குரவன்
மாணுக்கனானவனேபார்த்தசாரதிமாயவனே. (உச)

சினத்தின்மிகுமுனிசீடர்கடம்பசித்தீக்குளிக்கும்
வனத்தின்வனைந்தைவர்வாட்டத்தைவாட்டியவானவவென்
இனத்தின்னற்றீயுமிரித்தாளெஞ்ஞான்றினுமெண்ணுநல்லோர்
மனத்தின்கண்மன்னிமகிழ்பார்த்தசாரதிமாயவனே. (உரு)

கோடியநேகவெண்கோடிப்பொருளுங்குசலமில்லோர்
தேடியலையெண்வகைச்செல்வச்சிருஞ்சிந்தித்திலனால்
நாடியடியனயப்பதுன்பத்திமைநற்றிருவே
வாடியவெற்கருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (உசா)

கிட்டவரியவளைக்கிழவன்கிளர்ந்தசெல்வம்
நட்டனனில்லைநயந்தடியேன்மற்றுநட்டதுதான்
எட்டவரியநின்றுட்கன்புடைமையெனுந்திருவே
வட்டவளையாயருள்பார்த்தசாரதிமாயவனே. (உஎ)

அணிமாமகிமாபிராகர்மியங்கரிமாலகிமா
துணிமாப்பிராப்திவசித்துவமீசத்துவப்பயனை

யெணிமால்கொளேன்கொளனின்திருத்தாட்டொண்டிழைப்பதற்கே
மணிமாலைமார்பவருள்பார்த்தசாரதிமாயவனே. (உஅ)

திரைக்கடல்சூழ்புவியாதியவேழ்பெருந்தீவினமொன்
உரைக்கடங்கச்சக்கரவர்த்தியாயுலகாளுஞ்செல்வம்
அரைக்கணக்காலத்தழிவதழியாததுநின்பொற்று
மரைக்கழற்கன்பஃதருள்பார்த்தசாரதிமாயவனே. (உகூ)

பூவலர்கற்பகப்பொன்னாட்டிலென்றும்புலவர்கணம்
ஏவலடங்கியியற்றச்சுதன்மையினிதிருக்குங்
காவலனுக்கங்கடிந்துன்கழற்கன்புகாதலித்தேன்
மாவலமார்பவருள்பார்த்தசாரதிமாயவனே. (௩0)

உரமேவியவுடலோடிவ்வுலகினிலூழிமட்டும்
பரமேவிநிற்கும்பரிவிலன்பின்னர்ப்பரிவதுதான்
வரமேவுநின்கழல்வாழ்த்தன்பஃதருள்வானமைந்த
மரமேதினிநட்டவாபார்த்தசாரதிமாயவனே. (௩க)

பொருதிரையாழிபுவிவிண்சுரர்நரர்புள்விலங்கு
தருதிருநாபிச்சரோருகன்பட்டந்தருதியென்று
கருதினனில்லைக்கருதுதனின்றன்கழற்கணன்பே
மருதிடைச்சென்றோயருள்பார்த்தசாரதிமாயவனே. ( )

மூளாவினைத்துயர்மோகரித்தென்னைமுருக்கிநிதம்
வாளாவதைக்கின்றதென்செய்குவேனருள்வாரிதியே
கேளாவதுதனைக்கண்டருள்கஞ்சக்கிழத்திமண
வாளாவல்லிக்குளம்வாழ்பார்த்தசாரதிமாயவனே. (௩௩)

தன்னுடலந்தனைத்தாங்காதவனுஞ்சகத்துளனே
உன்னுடலாமுயிரோவாத்துயருழக்கின்றததது
துன்னுடறுன்புறுகின்றதுயிரின்றுகைகட்கெல்லாம்
மன்னுயிரோயருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (௩ச)

ஒருகாலொருவன்சரணமடைதலுனக்குமிகை
ஒருகாற்சரணவரணம்புரிதலுரித்தெனக்காம்
அருகாதநேகமுறைபுகலார்த்தியவத்தைய்தாம்
வருகாரணையவனேபார்த்தசாரதிமாயவனே. (௩௫)

நாயேனினைநண்ணநாடிலென்னன்மைநவைக்கிடனும்
நீயேயெனைநண்ணநேடிலென்குற்றநிலையறமாம்
நீயேயெற்காத்தருணீத்தத்துலகநிகிலமுநின்
வாயேபுகச்செய்பவபார்த்தசாரதிமாயவனே. (ருசு)

பிழையெவைக்குங்கழுவாயாம்பிரபத்திபேசிடுங்காற்
பிழையினத்துற்றுப்பொறைகொளவேண்டிடும்பெற்றிமைத்தாம்
பிழைபொறுத்தேழையைக்காத்தனினக்கேபெருங்கடனும்
மழைமுகிலன்னவனேபார்த்தசாரதிமாயவனே. (ருஎ)

அருட்பாரதந்திரியத்தினறையச்சுதந்தரமாந்
தெருட்பாரதந்திரியம்மேசிறப்புடைத்தென்பவிந்தப்
பொருட்பாரதந்திரியத்தெனைக்காத்தருள்பொன்னுலகும்
மருட்பாருமேத்தும்புகழ்ப்பார்த்தசாரதிமாயவனே. (ருஅ)

தூராவிடயத்துரிசுஞ்சொரூபத்தின்றொல்பகையும்
ஓராதகேவலநாத்திகனுயினுமுன்றிருத்தாள்
நேராச்சரணடைந்தேனென்பவப்பிணிநீத்தருள்வாய்
மாராயமாக்கடலேபார்த்தசாரதிமாயவனே. (ருசு)

தோய்ந்தவிடயத்தின்றோடஞ்சொருபவிரோதமிவை
ஆய்ந்துமொழுக்கிலனுதலினுத்திகநாத்திகனாய்
ஏய்ந்தவெளியவனின்சரணெய்தினனேனென்றெடுத்தாள்
வாய்ந்தகுணக்குன்றமேபார்த்தசாரதிமாயவனே. (சு0)

பெரியாரிடத்திற்பிழைசெயலுக்கிரப்பிழையென்று
தெரியாமலுந்தெரிந்துஞ்செய்தவேழைதிருமகளே
சரியாகநின்கழலிற்சரண்புக்கனன்காத்தருள்வாய்
வரியாரரவணையாய்பார்த்தசாரதிமாயவனே. (சுக)

அறையகங்காரமுமஃதின்மையுமிவ்வகிலமெலாம்
நிறையமலாநினைநீங்கவுங்கூடவுநேர்தலினாற்
கறையடையவ்வகங்காரங்கடிந்தெனைக்காத்தருள்வாய்
மறையவர்சேர்தாண்மலப்பார்த்தசாரதிமாயவனே. (சுஉ)

விரியுஞ்செருக்கும்விடயவாவும்விளைநிலமாத்
திரியுமெனையுமவைக்கநுகூலனாயுஞ்செறுக்கும்

அரியுமரவுமெனவெண்ணியுய்யவருள்புரிவாய்
வரியுரகப்பள்ளியாய்பார்த்தசாரதிமாயவனே. (சங)

ஒழிப்பாரைநின்னைக்குரவரைக்காணிலுவந்தமுத
மொழிப்பாலுறவினர்தந்தைபசியருண்மூரலெனச்
செழிப்பாகவெண்ணியுய்வானருள்சிந்தைசெய்வோர்களைநல்
வழிப்பாற்படுத்திமகிழ்பார்த்தசாரதிமாயவனே. (சச)

முற்சனனத்தின்முடிந்தவினையறியேன்மொழியிப்
பிற்சனனத்திளமைதொட்டுன்பதம்பேணியுளேன்
துற்சனரீட்டந்தொலைத்தெனையாளுதிதொண்டருக்கோர்
வற்சலனானவனேபார்த்தசாரதிமாயவனே. (சரு)

தொண்டுசெயாவகையென்மனவாசியைத்தோய்விடயச்
செண்டுவிலென்றுந்திரிக்குநின்மாயையென்செய்குவல்யான்
விண்டுவெனுநீகரியெனைக்காக்கவிழைந்தருள்வாய்
வண்டுவராபதியாய்பார்த்தசாரதிமாயவனே. (சசு)

உரக்குணம்பூதம்பொறிநவவாயிலுறுவலின்பம்
வரத்தாதுவாயுபயன்வேர்கிளைவெளிவான்பலந்தோல்
பரத்தவிலையிரதம்பெற்றமூலப்பகுதியெனும்
மரத்தெனக்குக்கரிநீபார்த்தசாரதிமாயவனே. (சஎ)

முற்றுமுகிழ்முலையார்மோகவாரிதிமூழ்கியென்றுஞ்
சற்றுகிலுங்கரைகாணுதிற்றடுமாறுகின்றேன்
கற்றுவெனவிரங்கிக்கடுங்காமங்கடிந்தெனையாள்
வற்றுவருட்கடலேபார்த்தசாரதிமாயவனே. (சஅ)

கண்ணீர்விட்டுள்ளங்கசிந்துகரைந்துன்கழற்கமலம்
எண்ணீர்மையேழைக்கியைந்திடுங்காலமியல்வதென்றோ
ஒண்ணீர்மைமானகங்காரந்தன்மாத்திரையோசைவிண்கால்
மண்ணீர்முதலானவபார்த்தசாரதிமாயவனே. (சகூ)

பப்பத்துப்பங்குயராவரணத்திருபானமைந்த
முப்பத்துக்கோடிவித்தாரவண்டக்குவைமொய்யணுப்போற்
செப்பத்தமைதிருமேனிக்கண்ணுநின்றன்சேவடியாம்
வைப்பத்தந்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (ரு0)

காட்டுதியிவ்வுலகத்தையயன்மனக்கஞ்சரின்று
நாட்டுதிநின்னுருவாய்நக்கனுள்ளநளின்நண்ணி
வீட்டுதியிவ்விளையாட்டுக்கிலக்கென்வேண்டியெனை
வாட்டுதிவாழ்வென்றருள்பார்த்தசாரதிமாயவனே. (ருக)

என்றனிலக்கணமென்வயினின்றிலங்காதவணம்
மன்றமறைக்குநின்மாமாயைசெய்யுமயக்கவிருள்
பொன்றநின்சீருண்மார்த்தாண்டன்றோன்றிப்பொலிவதென்றோ
மன்றன்மலர்த்தொடையாய்பார்த்தசாரதிமாயவனே. (ருஉ)

திங்கடிகழ்முகத்தேவகிதேவிதிருவயிற்றிற்
றிங்கடுவாதசஞ்சேர்ந்துபின்பூவிற்செனித்தவநின்
அங்கணருள்வரினுயேற்கவ்வீட்டின்பமங்கையதே
மங்கலமேனியனேபார்த்தசாரதிமாயவனே. (ருங)

கடியருணும்புயக்கண்ணீரிருதோள்கவுத்துவப்பூண்
முடியணிமோதிரமுத்துமணிச்சரமொய்க்கவசந்
தொடியைம்படையொடுந்தோன்றியவாவென்றன்றுன்பமின்றே
மடியமகிழ்ந்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (ருச)

கோணன்னிலையுறக்கோவானவர்வாச்சியங்கொளுத்தி
மாணன்மலர்மழைபெய்திடமாதவர்வாழ்த்தெடுப்பப்
பாணன்கிசையினர்பாடவந்தாயென்படரொழிய
மாணன்றருள்புரிவாய்பார்த்தசாரதிமாயவனே. (ருரு)

பசுவேதியர்கட்குமானததானம்பகுத்துநின்று
சிசுவானநீபெருந்தேவன்றெளிந்தனனென்றுசெப்பும்
வசுதேவற்காத்தவவல்வினையேனையுமாத்துயராம்
வசுதீர்த்துக்காத்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. ( )

சாத்தசரத்துயிர்க்கந்தரியாமிசரீரியெனுந்
திரத்தெய்வநாயகவித்திருச்சேவையைத்தீயர்கட்குக்
காத்தியென்றன்னைசொலக்கரந்தாயென்கவலைதனை
வரத்திறெழித்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (ருஎ)

மணக்கமலாதனன்றந்தாய்நினையென்மதலையெனல்
பிணக்கறுபிள்ளைமுன்பெற்றிழந்தின்னவிற்பேதுறுமென்

உணக்கொழியென்றவட்காத்தாய்வருத்துமுழுவலெர்ரீஇ
வணக்குறுமெற்கருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (௫அ)

தூயசுவாயம்புக்காலத்திற்பிரச்நிசுதசெனும்பேர்
நீயுமிவருநெடுங்காலநோற்றவினின்புதல்வன்
ஆயினனன்னையறிதியென்றுயென்னகத்துயரம்
மாயமகிழ்ந்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (௫௯)

பின்னைரதிநிநற்காசிபப்பேர்தமைப்பெற்றநும்பால்
அன்னையுபேந்திரனையிப்புவியிலவதரித்தேன்
என்னவுரைத்தவவின்னவவித்தையெனதிதய
மன்னமனித்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (௬0)

மேதைவரநுங்கட்கிவ்வுருக்காட்டினன்வீடளிக்குந்
தாதைதநயனெனும்பாவகத்தென்னைச்சார்விரென்று
பேதைமைபோர்ந்திடப்பேசியவாவென்பெரும்பிறவி
வாதையொழித்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (௬௧)

பெற்றவன்கைம்மிசைநள்ளிருட்போழ்திற்பெருகுநதி
வற்றிவழிவிடவாய்ப்பாடிமேவியவானவநீ
சற்றருள்செய்யினென்சன்மத்துயரந்தணந்திடுமால்
மற்றொருதுன்பமிலைப்பார்த்தசாரதிமாயவனே. (௬௨)

மஞ்சனமாட்டிநின்னைவழித்தாளுக்குவாய்திறந்து
விஞ்சுஞ்சராசரங்காட்டியவாநின்விரைமலர்த்தாள்
தஞ்சமெனவந்துசார்ந்தேன்சரமதசையினின்றாள்
வஞ்சஞ்செய்யாதருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. ()

சிறுத்தவிடையணிமின்னவெண்பட்டுடைசீர்த்ததிங்கள்
இறுத்தகிரணத்திலங்கவிணைமுலையேன்றலங்க
உறுத்தித்தயிர்கடைந்தாட்கருணல்குமொருவவெற்கும்
மறுத்துரையாதருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (௬௪)

மாணிக்கமாலைகள்சிக்குற்றுலாவமறுவின்மணி
ஆணிப்பொற்கங்கணமார்க்கக்குழைசெவியார்ந்திலங்கப்
பாணித்தயிர்கடையாய்ச்சியினென்னைப்பரிந்தருள்வாய்
வாணித்தலைவற்றந்தாய்பார்த்தசாரதிமாயவனே. (௬௫)

முழுமதியொத்தமுகாரவிந்தத்தினன்முத்தமென
எழுகுறுவேர்வைபனிப்பக்குழற்றொடையேய்மலர்கள்
நழுவத்தயிர்கடையாய்ச்சிக்கருளியநாயகவென்
வழுவறுத்தாளமகிழ்பார்த்தசாரதிமாயவனே. (௬௬)

அன்பாரறிஞரினாய்ச்சிகளிப்பினவசமுறீஇ
நின்பாலலீலைக்குணகீர்த்தனஞ்செயுநீர்மையெனப்
புன்பாவியுமுனைப்போற்றியுய்வண்ணம்புரிந்தருள்வாய்
மன்பாவலர்புகழ்வாய்பார்த்தசாரதிமாயவனே. (௬௭)

பசித்தவன்போலப்பறந்துதவழ்ந்துபணைமுலைப்பால்
புசித்துச்சிரித்துச்சில்வேடிக்கைமாயம்புரிந்தெழிற்றாய்
சசித்தண்முகத்தினைநோக்குங்கண்ணாவித்தமியனுள்ளம்
வசித்ததுயரொழித்தாள்பார்த்தசாரதிமாயவனே. (௬௮)

பட்டாடைச்சிற்றிடைநோவக்கைசேப்பப்பனிப்பமுகங்
கட்டாரளகநெகிழக்கண்டாய்ச்சிதயிர்கடைய
ஒட்டாமற்செய்கண்ணவென்பவவொட்டறவுன்னுதியால்
மட்டார்துளவத்தொடைப்பார்த்தசாரதிமாயவனே. (௬௯)

காய்ச்சினபாறயிர்நெய்மனைதோறுங்கவர்ந்தயின்றே
ஆய்ச்சியர்வெண்ணெய்க்குக்கூத்தாடுங்கண்ணவழிபிறவி
நோய்ச்சிறைநீங்கநுவலருட்கண்கொடுநோக்ககர
வாச்சியனானவனேபார்த்தசாரதிமாயவனே. (௭0)

வந்துபிறந்துமறைந்துவிடமுண்டுமாற்றலரால்
நொந்துமலைசுமந்தோர்விடந்தீயினுடங்கியந்தேர்
உந்தியுரைபொய்த்தலாதியசெய்தவவுய்யவெற்குன்
மந்திரமேயமையும்பார்த்தசாரதிமாயவனே. (௭௧)

கறையுறக்கட்டியிடைச்சியடிக்கவிக்காசினிமேல்
உறைவனயாவுமொருங்குற்றலையச்செய்யுத்தமனே
இறையருள்செய்யினிவ்வேழையடியனெளிதினுய்வன்
மறைபுகுவோர்க்கருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. ( )

வீட்டுமன்கைக்கணையாற்றெய்வமங்கலமேனிமுற்றுங்
காட்டுறுசல்லடைக்கண்போற்றுளைபட்டகாவலநீ

வேட்டருள்செய்தென்றன்வீயாப்பிறவிவினைதொலைத்தென்
வாட்டந்தவிர்க்கமகிழ்பார்த்தசாரதிமாயவனே. (எங)

வணங்காமுடியினன்பாற்றூதுசென்றவன்வைத்தகுழிப்
பிணங்காவருமல்லரோடமர்செய்திடும்பெற்றியனே
இணங்காவருளினிவ்வேழையிடரற்றெளிதினுய்வல்
வணங்காரனையவனேபார்த்தசாரதிமாயவனே. (எச)

உருத்துக்கட்டீயுமிழ்ந்தோங்கலுருவம்பெற்றோடிவந்த
எருத்துப்படிவத்தசுரனைச்செற்றவிறைவநின்றாள்
கருத்துட்பதித்துத்தொழுங்கடையேனையெக்காலுநின்று
வருத்துற்றவல்வினைதீர்பார்த்தசாரதிமாயவனே. (எரு)

கோவத்தரிமழைபெய்விக்கக்கோவலர்கோக்களுய்வான்
கோவத்தனக்குடையேந்தியவப்பகுலவடியர்
ஆவத்தனமேயடியேனைநின்னடிக்காட்கொள்பொன்செய்
மாவத்திரதரனேபார்த்தசாரதிமாயவனே. (எசு)

வடமார்பிலங்கவருபூதனைமுலைவாய்கொடிய
விடபானம்பண்ணிவிடத்தீயுமிழும்வியாளபண
நடமாடியகண்ணநாயேற்குன்பாதநளினந்தந்தாள்
வடவாலிலைதுயின்றோய்பார்த்தசாரதிமாயவனே. (எஎ)

தடித்தவுடலத்துச்சாணூரமுட்டிகர்தங்களொடும்
இடித்தகுரலிபத்தோடுமிகல்செய்யிறையவனே
நொடித்தபொழுதினடியனையாட்கொளுவல்பதின்மர்
வடித்ததமிழ்மறையாய்பார்த்தசாரதிமாயவனே. (எஅ)

குரகதவேகத்திற்கூக்கோக்குலைந்துகுழையவந்த
துரகதவாயிற்கையிட்டுக்குமைத்துத்துமித்தவனே
பரகதமாவெனைப்பாலித்தனிற்குப்பரும்புகழாம்
மரகதமேனியனேபார்த்தசாரதிமாயவனே. (எகூ)

இரசதவோங்கலிருநீள்சிறைபெற்றெதிர்ந்ததென
விரசியவெய்யபகாசுரன்வீந்திடவென்றவனே
பரசியவெற்குன்பதப்பணிசெய்துய்யும்பத்திதந்தாள்
வரசுரபூசிதனேபார்த்தசாரதிமாயவனே. (அ0)

காலாக்கினிக்கூவொறகண்டயாவையுங்காந்துபொடி
போலாக்கவல்லபுயங்கத்தைப்போழ்ந்தவபுன்மையினை
மேலாக்கவெண்ணிணினின்மேன்மைக்குநீர்மைக்குமேசகவாம்
வாலாக்குவித்தவனேபார்த்தசாரதிமாயவனே. (அக)

தளம்பெறுகாலதண்டத்தொடுவச்சிரதண்டநிகர்
குளம்படிவாற்கொல்லுந்தேநுகனைக்கொன்றகொண்டல்வண்ண
உளம்படிந்தங்குளவுட்கையொரீஇநல்லுணர்வுதந்தாள்
வளம்பெறுமல்லிக்குளப்பார்த்தசாரதிமாயவனே. (அஉ)

ஆயிரநோக்கன்முப்பத்துமுக்கோடியமரரொடும்
ஆயிரவாகனமுலாடியோடுமமர்பொருதோய்
பாயிரநான்மறைபன்னும்பரமபரிந்தெனையாள்
மாயிருஞாலம்புகழ்பார்த்தசாரதிமாயவனே. (அங)

துரியோதனனதியர்துணைமன்னர்தொகுபடையாம்
விரியோதம்வென்றவிமலாவெற்காக்கவிழைந்தருள்வாய்
பரியோதிமமாம்பரனேபுவனப்பரப்பையெலாம்
வரியோதனமெனக்கொள்பார்த்தசாரதிமாயவனே. (அச)

பரநிலைநித்தமுத்தர்க்குவியூகமப்பண்பினர்க்கே
உரநிலைசேர்விபவம்புண்ணியர்க்கெங்குமுற்றுறைதல்
திரநிலையோகியர்க்கர்ச்சையென்போலியதீனர்கட்கிவ்
வரநிலைதந்தெனையாள்பார்த்தசாரதிமாயவனே. (அரு)

ஒன்றுடன்சேரொட்டுறவுமொழியாதுனக்குமெற்குந்
தொன்றுதொட்டுண்டெனச்சோதித்திருமந்திரமுரைக்கும்
இன்றுனதாளடைந்தேனெனைக்காத்தருளெண்சமத்த
மன்றலிருஞ்சுவையேபார்த்தசாரதிமாயவனே. (அசு)

எவ்வான்பிழையுமிழைத்துநின்னாணையிகந்ததுட்டத்
தெவ்வானவனின்றிருவடியிற்சரண்சேர்ந்தனனால்
அவ்வானநீயுறவுன்னியருளினரில்பொறுத்திம்
மவ்வானவெற்கருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (அஎ)

தந்தைதநயவுறவுபுதிதன்றுதன்சுதனைத்
தந்தைபுரத்தலியல்புதநயனெனுந்தமியேன்

சிந்தையனூரறநின்றிருத்தாட்புகல்சேர்ந்திடுவான்
வந்தனன்காத்தருள்வாய்பார்த்தசாரதிமாயவனே. (அஅ)

புரப்பான்புரக்கப்படுபொருட்சம்பந்தப்பூர்த்தியுண்டு
புரப்புனக்கேகடனீக்கவிதியில்லைப்புன்மையனென்
நிரப்பறநின்கழலேசரண்புக்கனனோர்ந்தருள்வாய்
வரப்பிலருட்கடலேபார்த்தசாரதிமாயவனே. (அகூ)

மொழிசேடசேடிபுறவுமுண்டென்னைமுழுமகனுக்
கழியாமற்காக்குங்கடனினக்குண்டுன்கழலிணையே
வழியாஞ்சரணெனவந்தேன்மகிழ்ந்தருள்வாயுகந்து
வழிபாடுசெய்வார்க்கருள்பார்த்தசாரதிமாயவனே. (கூ0)

பகுத்தவுகரத்திற்பார்த்துருபாரியைப்பந்தமுண்டால்
உகுத்தலியல்பன்றுன்னுள்ளடியேசரணுற்றனனென்
மிகுத்தல்பொறுத்தெனைமேம்படக்காத்திவியனுலகம்
வகுத்தருள்வானவனேபார்த்தசாரதிமாயவனே. (கூக)

நயங்கெழுமவ்வினின்ஞாதுருஞேயநவிலுறவுண்
டியங்குமெற்காத்தலுனக்கேகடனின்னுயர்திருத்தாள்
சயங்கெழுநற்சரணவடைந்தேனென்றளர்வொழித்தாள்
வயங்கெழுமைம்படையாய்பார்த்தசாரதிமாயவனே. ()

உரைசேர்நமச்சொல்லுடைமையுடையானுறவுரைக்குந்
தரைசேருடைமையைத்தாங்கலுடையான்றனிக்கடனாங்
குறைசேர்கழலடைந்தேனெனைக்காத்திகுளிர்ந்தசெந்தா
மரைசேர்மகண்மகிணாபார்த்தசாரதிமாயவனே. (கூஙூ)

நாரக்கிளவிசரீரசரீரியினட்புரைக்கும்
ஈரச்சரீரிசரீரத்தைப்பேணவியல்புநின்றுள்
சாரச்சரணடைந்தேனெனைக்காத்தருள்சார்ந்தவர்க்கோர்
வாரப்பெருங்கடலேபார்த்தசாரதிமாயவனே. (கூச)

அறையுமயனச்சொலாதாரவாதேயமாமுறவைப்
பறையுமிவ்வாற்றினுமெற்றுங்கனின்பரம்பங்கயனும்
மறையுமறியாமலர்ப்பதந்தந்தெனைவாழ்விமும்மை
மறையுமுணர்ந்தோர்க்கருள்பார்த்தசாரதிமாயவனே. ()

ஆயக்கிளவியறைபோக்ருபோக்கியமாமுறவை
ஏயக்கிளக்குமிதுவுமெற்காத்தற்கிசைந்ததுவே
தோயக்கிடக்கையிருந்திவ்வுலகினைத்தோற்றுவித்த
மாயக்கிழவமகிழ்பார்த்தசாரதிமாயவனே. (கூசு)
சேதனத்தோடுமசேதனத்தோடுஞ்செறிந்திருந்தும்
வேதனத்தோமடையாதுவிளங்குதிமெய்யிதய
ஆதனத்தோங்குமடியேனதன்கண்ணருறுவேன்
மாதனத்தோர்புகழும்பார்த்தசாரதிமாயவனே. (கூஎ)
மெய்யடைபாவியமாதியயான்மிடையாவிதம்போன்
மெய்யடைமுக்குணத்துன்பமும்யான்மிசையாதுசெய்து
கய்யடைபுக்ககடையேனைக்காத்திகரத்தினொளிர்
வய்யடையைம்படையாய்பார்த்தசாரதிமாயவனே. (கூஅ)
உருவாக்கறங்களொழித்தெனையேசரணுற்றடையிற்
கருவாக்குநானுன்கலுடமனைத்துங்கடிவலஞ்சேல்
குருவாக்கியகுலத்தாயென்றநின்னுரைகூர்ந்தெனுள
மருவாக்கினைக்கவருள்பார்த்தசாரதிமாயவனே. (கூகூ)
சொல்லாயவிக்கவித்தோந்தூக்கின்வாலுகச்சொன்றிதனிற்
கல்லாய்தலொச்குமிக்கல்லாதவன்சொலுங்காதலித்து
நல்லாய்திருவருணல்குதியன்பர்க்குநன்மைசெய
வல்லாயல்லிக்குளம்வாழ்பார்த்தசாரதிமாயவனே. (க00)
வாழிகனமான்மியவல்லிக்கேணிவளநகரம்
வாழிபிரதைமகன்வையமுன்னின்றமாவலவன்
வாழியுருப்பிணித்தாயெனுமாமலர்மாளிகையாள்
வாழியடியவர்வாழியுபயமறைகளுமே.

---

கதியாகநிற்குந்திருவல்லிக்கேணிநங்கண்ணனுக்கோர்
துதிமாலைநூறுசொன்மாலைகள்சோலைசூழென்னுகச்சிப்
பதிவாழிராமாநுசதேசிகன்றன்பதம்பணிவோன்
எதிராசதாசனெனும்பள்ளிகொண்டானியற்றினனே.

## பார்த்தசாரதி மாயவன் மாலை
## முற்றிற்று

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவல்லிக்கேணிப்

# பார்த்தசாரதிப்பெருமான் மாலை.

## காப்பு.

பூவினமார்ந்த பொழிலல்லிக்கேணியன்மேற்
பாவினமாலை பகரவே—பூவின்கண்
உண்ணுதுறங்கா துறங்காப்புளிநீழற்
கண்ணுருமாறன்ருள் காப்பு.

## நூல்.

அகாரமுதற்பெயரம்புயநாபவனைத்துணின்றும்
விகாரமிலாதவவேதத்தலைவவென்வெய்யபவ
நிகாரமொழியநின்னீடருட்சூரியனோர்ந்துதிக்க
முகாரவிந்தக்கண்ணநின்றிருமுன்னத்தின்முன்னுதியே. ()

ஆதாரமாருயிருக்கும்பகுதிக்குமாயவநின்
பாதாரவிந்தம்பணிந்தடியேன்பணிக்கும்பகர்வைக்
காதாரக்கேட்டென்கருத்தல்லனீங்கக்கருணைசெய்வாய்
சேதாரக்காப்புடைசேரல்லிக்கேணிச்சிரீதரனே. (உ)

சூர்கொண்டுதுய்ப்பிக்குஞ்சூழற்பொறித்துட்டர்தோதகநின்
பேர்கொண்டுமன்பர்கள்பேசுபெரும்புகழ்பேணியுநின்
ஞார்கொண்டுநீககயக்தேன்றிருவுளநானறியேன்
பார்கொண்டகீர்த்தித்திருவல்லிக்கேணிப்பரஞ்சுடரே. ()

என்பவநோய்க்குமருத்துவசித்தசித்தாயியல்வோன்
என்பவயான்சொன்முறைகேட்டிரங்கியெனதிதயத்
துன்பவடவைசுருங்கநின்பேரருட்சோனைதந்தாள்
அன்பவசத்தொண்டர்வாழ்த்தல்லிக்கேணியரிந்தமனே.()

மாவகியேந்துமகிதனிற்பாற்கடல்வாசமொரீஇ
மாவகிர்க்கண்ணியறவுருவாமங்கையர்க்கரசி
தேவகிக்கீட்டிசைதோன்றச்சுதப்பேர்த்திவாகரநற்
காவகியல்லிக்குளக்கண்ணவென்றனைக்காத்தருளே. (ரு)

அநந்தன்கவித்திடவப்பன்கையூர்தியமைந்தமரா
அநந்தவியமுமுழக்கவரம்பையராடிவரச்
சுநந்தன்மனைபுக்குநீராடியாய்ச்சிசுவணவள்ளத்
தநந்தனிற்பாலமுதுணடாய்நின்றுணற்சரணெனக்கே. ()

மேவியபொன்னுடைமெய்ப்பூண்மிளிரவிரைகமழக்
கோவியர்கோலத்தைக்கண்டுகொண்டாடக்குழுகிநினைக்
கூவியணைத்துமடிமீதிருத்திக்குயங்கொடுத்தாள்
ஆவியசற்றியகண்ணுவருளன்படியனுக்கே. (எ)

பூதனைபோதுமுலையுண்டதுநீபொறுக்கவொணு
வேதனைதந்தாய்விடுதியெனவும்விடாதுறிந்து
சாதனையோடவடன்னுயிருண்டசருவசக
நாதனைநண்ணுதிநெஞ்சேநல்வீட்டின்பநல்குவனே. (அ)

கோடையுருமிடித்தென்னப்பெருங்குரற்கூச்சலிட்டுக்
கோடையுறழ்கைவிதிர்த்தவ்வுருவங்குலைந்துபண்டைப்
பிடையுருக்கொண்டவளுயிர்போர்ந்திடும்பெற்றிசெய்த
மாடையுடையனைநெஞ்சேவழுத்துன்மயலறவே. (கூ)

மங்கலரோகைக்கரங்கான்மணிமறுமார்பெழுவாய்
அங்கமுறலாலவடேயையாய்ச்சந்தகில்புழுகு
துங்கநன்றுவிமணமேவிமீளாச்சுகத்தபதந்
தங்கவருள்கண்ணனைநினைநெஞ்சேதவறறுமே. (க0)

நீராட்டுபுபொற்புறுத்திப்பொற்றொட்டிலினின்னையிட்டுச்
சீராட்டுச்சன்மத்திருநாள்விழாவுக்குச்சேர்ந்தவரைப்
பாராட்டுமெல்லையிற்பண்டியுட்புக்குப்பதுங்கிவந்த
போராட்டுத்தானவற்போழ்ந்தாயடியற்புரந்தருளே. (கக)

செந்தாமரைச்சிற்றடியிற்கைத்தண்டைசிறுசதங்கை
நந்தாதொளிக்கவரைமணிநாலநளிர்வதன
இந்தாரிலங்குத்தவழ்ந்தோடியாய்ச்சியெடுத்தருமை
மைந்தாவெனமகிழ்கண்ணாவென்மையலைமாற்றுதியே. ()

சிறுவாயெயிறுதிகழ்துப்பிதழ்செவிசேர்திருக்கண்
நறுவாசனைக்குழல்வின்னுதனன்மதிநாணியஞ்சுங்

குறுவால்வியர்ப்பானனங்கண்டிடைச்சிகொண்டாடருமைச்
சிறுவாவல்லிக்குளத்தேவாவென்றீவினைதீர்த்தருளே. ()

வீட்டினுழைந்திளங்கன்றுகடம்மைவிடுத்துவிளை
யாட்டிற்றுரத்தியவையம்மவோவென்றரற்றவங்ஙன்
சாட்டியஞ்செய்யற்கவென்றோர்ப்பழித்த தலைவவென்றன்
மாட்டியன்மாவினைமாய்ந்தோடும்வண்ணமதித்தருளே. ()

அறையுறைந்தங்குளபாறயிர்வெண்ணெயயின்றதனுள்
உறையுழைக்கண்ணாளொருகோவிகையைக்கண்டுண்ணவெற்கு
நறையுறைபாலிறைநல்குதியோவென்றநம்பவென்னுட்
குறையறத்தீரும்விரகொன்றுசெய்யக்குறித்தருளே. (௧௫)

உறுவதையெண்ணியொர்கோவிநெய்பாறயிருள்ளவெல்லாஞ்
சிறுவரொடுண்டிட்டதின்கலங்கண்டவட்டிட்டியிது
தொறுவர்மனைகளிற்சூனியப்பாழ்மனையென்றுசொல்லிக்
கறுவலைக்காட்டியகண்ணாவென்கவ்வைகடிந்தருளே. (௧௬)

ஏடார்தயிர்வெண்ணெய்பாலுண்ணக்கண்டவொரோந்திழையாள்
ஏடாதிருடவெனவேடிகள்ளியென்றேன்றவள்வாய்
ஈடாகமிச்சிலைப்பூசியவென்னப்பவென்மனத்தைக்
கூடாவிருந்ததன்குற்றங்களையக்குணித்தருளே. (௧௭)

யாருமறியாதிடைச்சியர்சேமித்தயாவுமுண்டு
நேருமரிகட்குநேர்ந்துநம்பாறயிர்நெய்யினையித்
தாருமடமந்திதாமுண்டவென்றதலைவவென்றன்
சோருமனத்துத்துணுக்கமுந்துன்புந்துடைத்தருளே. ()

நடுமேட்டுறிவைத்தபாறயிர்வெண்ணெய்நெய்நாடியுரந்
கொடுபோந்துநின்றெட்டிக்கொம்பாற்குடங்களைக்குத்தியவை
தொடுவாகவுண்டருள்சோரசிகாமணியேதொறுவர்
நடுநாயகநின்னைநாளுநினைமனநல்குதியே. (௧௯)

புங்கவிருளறைபுக்கங்கிருக்கும்பொருளனைத்தும்
அங்கவொளியினணிகலத்தேசினலங்கிடச்செய்
மங்கலதீபமெனவந்துமின்னின்மறைந்தவவென்
பங்கமுறுவினைபங்கமுற்றோடக்கண்பார்த்தருளே. (௨0)

மண்ணுண்டனையெனவில்லையென்றேமலர்வாய்திறந்து
எண்ணுஞ்சராசரம்யாவையுங்காட்டவிடைச்சியிரு
கண்ணுங்கவித்துவியப்புறக்கண்டகண்ணாகடையேன்
கண்ணுங்கருமமின்னேகடைகூடக்கணித்தருளே. (உக)

ஒருவாவுலகுமூவரியுமோங்கலுமொண்சுடரும்
பெருவானவர்களுந்தாவரசங்கமப்பேர்படைத்த
உருவாமனைத்துநின்னுள்ளேகண்டாய்ச்சியுணர்வுபெறத்
திருவாய்திறந்தமுதல்வாவென்றீமையைத்தீர்த்தருளே. ()

கோகுலத்தார்கண்விழியாதிருக்கக்குறும்புமூதி
ஆகுலக்காற்றடித்துன்னையணைத்துக்கொண்டம்பரத்தில்
ஏகுலத்தோட்டிருணாவர்த்தற்பற்றியெளிதினட்ட
மாகுலக்கற்புயனேயருண்மாயைமயக்கறவே. (உங)

அளகாபுரிவாழரன்றோழன்பெற்றவருமைமைந்தர்
நளகூபரமணிக்ரீவர்களாரதர்நல்குநன்மை
புளசாவந்திரமருதிடைவல்லுரலோடுசென்ற
களவாநினதடியேனுய்யவோர்வழிகாட்டுதியே. (உச)

கன்றுருவாய்ந்தவசுரனையண்ணற்குக்காட்டிமணந்
துன்றுமலர்மழைபெய்துவிண்ணோர்துந்துபிமுழக்கச்
சென்றுபின்கால்பற்றிவெள்ளிளின்மோதியசேவகயான்
என்றுநின்பாதமிறைஞ்சியுய்வண்ணமியம்புதியே. (உரு)

வெள்ளிமலையுருவெங்குலிசத்துண்டமேவுபகன்
அள்ளிநினைநுங்கநீயவனெஞ்சங்கியினழற்ற
எள்ளியுமிழவன்வாயையிருபிளவாவிடந்த
தெள்ளியயானுன்றிருப்பணிசெய்துய்யச்சிந்தைசெய்யே.

மலைபோற்பருத்துக்குகைக்கோணங்கொண்டுமகியதரந்
தலைவானிலோட்டமெனவாய்திறந்துதழலின்விழித்
துலைபோலுயிர்த்துவருபாம்பினுட்புக்குயிரையுண்ட
தலைவாநின்பாதத்துலையாதவன்பெறற்குத்தந்தருளே. (உஎ)

சொன்னவகாசுரனின்றுணைத்தாளிற்சுடருருவாய்த்
துன்னமணமலர்தூய்ச்சுரரோத்திடத்தொக்கவிஞ்சை

மன்னவர்பாடவரம்பையராடமகிழ்ந்தகண்ணு
என்னவலத்தையெளிதினிரித்திடவெண்ணுதியே. (உ௯)

செப்பாரிளமுலைக்கோவியரோவலுஞ்செய்தவர்கள்
அப்பாகண்ணவிசைபாடெனப்பாடியலர்புனைதாள்
துப்பாகிகொப்புளரும்பநடித்தருள்சுந்தரநீ
தப்பாதருள்செய்நின்றுளிணையேத்துந்தகையெனக்கே. ()

மரப்பாவைமாமணித்கட்டொடுமுட்டுமிணைமரக்கால்
வரப்பாதுகைமுதற்கொண்டாடியுமனேதோறுமையம்
இரப்பார்க்கண்டஞ்சுமவன்போனடித்துமிலீலைசெய்த
புரப்பாளவிபுரம்போங்காலருளெற்குன் பொன்னடியே.

அப்புறுதாழியிற்றன்னிழல்கண்டன்னையாதியர்க்கஃ
தொப்புறக்காட்டியொருகோல்கொடெற்றவுருநிழலும்
அப்படிச்செய்யவடிக்கவருகின்றதம்மவென்று
செப்பியவப்பவருணின்னடியென்றுஞ்சிந்திக்கவே. (௩௧)

நாவனறுங்கனிவிற்பாட்குத்தண்டுலகல்கியடைந்
தாவவினுண்ணவரிசிநவமணியாகவம்மை
போவனாகிற்கப்பொருணினதேகொடுபோதியென்ற
தேவகிமைந்தனெஞ்சேவழுத்துதிதீங்கறவே. (௩௨)

கூடியபாலரையோடிப்பிடித்துங்குழல்பயின்றும்
பாடியும்வெள்ளிற்பழமெறிந்துங்கிள்ளைபாண்டின்மயில்
கூடியல்பூவையெனக்கூவியுமக்குளிர்நகிக்கண்
ஆடியகண்ணனடியெனக்கென்றுமருந்துணையே. (௩௩)

மணிமாலையோடுகளிர்மாலைபூந்தொடைவாய்ந்தகுன்றி
மணிமாலைபூண்டுமயிற்பீலிசூடிவளர்யமுனை
மணிமாமணற்கண்மருந்தமுதுண்டுமகிழுமென்கண்
மணிமாமணிவண்ணவென்மனமாயையைமாய்த்தருளே.

சிரத்தமணியணிபீலிநுதலதிலகஞ்சுட்டி
வரத்தமிடற்றனவாரங்கள்காதனவான்குழைகள்
அரத்தவிதழ்த்திளமூரல்பொற்கங்கணமங்குலிகள்
கரத்தனவோங்குநங்கண்ணன்கழலிணைகண்ணுநெஞ்சே.

வளைசேர்விபுலமணிமறுமார்பினில்வைசயந்தி
விளைசேரலங்கலொடுமணிமாலைமிளிரமலா
குளைசேர்சதங்கையணைநாண்பொன்னுடைகள்கோமளமாம்
அளைசேர்கண்ணுவறுத்தாளுதியென்றனவித்தையையே.

ஐந்தாம்புலனையவித்தோர்களுள்ளவம்போருகத்தில்
நந்தாதொளிர்வனவாய்நூபுராதிகணண்ணினவாய்க்
கொந்தாருங்கற்பகமாதியிரேகைகுலவுகின்றாட்
செந்தாமரைகள்கண்ணவடியேற்கென்றுஞ்சேமவைப்பே.

விருந்தாவனநின்றிருத்தாட்பரிசத்தின்வெம்மைமும்மை
அருந்தாவநீங்கியஃதின்னன்பருள்ளத்தமலமதாய்
இருந்தானிளைகட்கிளம்புற்றரச்செய்யிறைவவெற்கு
மருந்தானவநின்மலரடியென்முடிமாமுடியே. (௩௯)

ஒளிப்பதுமோடுவதுங்குழல்கொம்புகளூதுவதும்
விளிப்பதும்வீங்கிழவூர்வதுமன்னத்தின்மீளலுநீர்
குளிப்பதுமஞ்ஞையினாடலுமாற்றிக்குடவர்தமை
அளிப்பதுஞ்செய்கண்ணவாற்றறுப்பாயென்னவாவினையே.

கோவலர்குட்டனைக்கூய்நீவிர்கன்றின்குவாற்குறுநீர்
ஆவலறுத்தறலாட்டியரிதத்தமைத்துவிட்டென்
ஏவலின்வம்மினுணவுண்டிவிலையிழைத்துமென்ற
காவலவென்பொறிமேவலர்தம்மைக்கடிந்தருளே. (ச0)

மருக்கிளர்தாமரைக்காயையிதழ்கள்வளைவதெனத்
திருக்கிளர்நின்னைச்சிறுவர்கள்சூழச்சிக்கத்துணவை
மருக்கிளர்பன்னத்திலுண்டுமணவின்மகிழ்ந்துலவும்
உருக்கிளர்கண்ணகருக்குழிநீத்தெனையோம்புதியே. (சக)

எத்தனைகன்றுசிறுவரயன்கவர்ந்தேகினனோ
அத்தனைகன்றுஞ்சிறுவருமாகியவப்பனைநங்
கத்தனைக்கண்ணனைக்காதலடியர்கருத்தகலா
நித்தனையேத்துதிநெஞ்சேயாந்தாமநெறிபெறவே. (சஉ)

கன்றுஞ்சிறுவருங்கார்மேனிபொன்னுடைகம்புவளை
ஒன்றியநாற்றோண்முடியாதியபெற்றொளிர்ந்திடக்கண்

டன்றயனுநந்தித்தேத்தவவனுக்கருளமலா
என்றனிதயத்திருந்தருளாயென்றுமின்புறவே. (௪௩)

அனகாநீகன்றுஞ்சிறுவருமானனைத்யானறிந்தேன்
சனகாதியருமறியார்நின்மாயையின்றன்மையென்று
கனகாமபாலன்கழறவக்காரணங்கட்டுரைத்த
கனகாம்பரதராநாயேனைக்காக்குங்கடனினக்கே. (௪௪)

தாலவனத்துச்சமன்றண்டவாலகியுஞ்சவளம்
போலவிர்காதும்விதிர்த்துநெறித்துப்புகைக்கணொடு
ஞாலநடுங்கவருந்தேனுகனைநலிந்திடுகோ
பாலசிகாமணியேயடியேன்வினைபாற்றுதியே. (௪௫)

மடுவலையோசைமுழவமரப்புள்வகுளியிசை
படுமணியுச்சியரங்குவிண்ணூட்டவர்பார்ப்பவராக்
கடுவுடைக்காளியன்மீதுநடித்தருள்கண்ணவென்றன்
அடுமனநோய்க்குன்னருளாமதகமளித்தருளே. (௪௬)

வானத்தரம்பையர்யாழ்குழல்வண்முழவங்கொளுத்தக்
கானக்கதிசதிதப்பாதரவின்கதிர்முடிமேற்
றூனத்தமரர்தொழத்தாண்டவஞ்செய்ததாளவெற்கு
ஞானச்சுடர்நல்கிவினைத்திமிரநலிவகற்றே. (௪௭)

படியவர்விண்ணவர்பாதவம்பக்கிபசுவினமென்
கொடியவிடம்படநீருகுமிக்குட்டன்கோவனலன்
கெடியவனுமென்றுகாளியனெஞ்சுகநின்றவன்மேல்
நடியமலாசுவற்றுயென்பிறவிநரலையையே. (௪௮)

மதிமுகநாகன்மனைவியர்மக்களொடுமருவிக்
கதியிலையென்றுகரங்குவித்துள்ளங்கரைந்துருகிப்
பதிகிதிப்பிச்சையருளென்றுநின்றுபழிச்சவவர்
துதியருள்செய்தவவெண்மதிநிற்கவொர்சூழ்ச்சிசொல்லே.

நன்மையுயிர்கட்குநாடாதென்கோரநகைவிடத்தாற்
றென்மைதொடங்கித்துனிசெய்ததுட்டனையுங்கருணைத்
தன்மையினுண்டதயாநிதியேயென்றுசாற்றரவின்
புன்மைபொறுத்தவநன்மையளித்தெற்புரந்தருளே. (௫0)

புடையிறைப்புள்ளரசன்பகைகாளியபோயதுச்சி
இடையிலென்பாதவிலச்சினையென்றுமிலங்குதலாற்
றடையறநீயுறைதண்மணித்தீவிடைச்சார்தியென்று
விடையருள்வித்தகன்றனைநெஞ்சேநீவிரும்புதியே. (௫௧)

காளியன்கையுறையாத்தந்தபொன்னுடைகாமர்மணி
வாளியல்கங்கணம்பூண்வாசச்சந்தமலரடைக்காய்
நீளியன்மாமணிநீலோற்பலத்தொடைநேர்ந்துகொண்ட
சாளிகைப்பொன்னனையான்சரணென்றுஞ்சரணெனக்கே.

தோற்றிப்பெருமாமாதியசுட்டுத்துகள்படுத்தி
நாற்றிக்கினும்புகைநண்ணவிட்டாயர்நடுநடுங்கிப்
போற்றிப்புகல்புகச்செய்யழலுண்டபுலவனின்பேர்
சாற்றித்தழுதழுக்கநாவெனக்கெவன்றந்தனையே. (௫௩)

கருவிலசேதனமாய்ப்பஃறுளைகொள்கழைத்துணியாய்ப்
பொருவிலவித்தையைநீத்தோரினின்பாற்பொருந்திநின்கேழ்
இருவிதழ்சேர்ந்திசைசெய்குழல்செய்தவவீட்டினையித்
திருவிலியிப்பெற்றிமைத்தென்றுசெப்பத்தெரிகிலனே. ()

பொருவினுதலொளித்துக்கன்னம்பூரித்துப்பொன்மரும
மருவிநெறித்துப்புழைதோறுமொக்கவலமிடமாத்
திருவிரலூன்றியிசையமுதூற்றத்திருக்குழல்வாய்
இருவிதழ்வைத்தவவென்றீவினையறவெண்ணுதியே. (௫௫)

கங்காநதியெனக்காட்டின்கணுள்ளவோர்காமர்நதி
பொங்காவலையெறிந்துன்றிருத்தாள்களிற்புக்கடைய
மங்காவிசைப்பண்கள்வாய்ந்தகுழலினைவாய்மடுத்துப்
புங்கானுபுங்கமெனப்பாடுவோயெற்புரந்தருளே. (௫௬)

மாவனவேடுவர்மாதவர்வானவர்மற்றுமுள்ளோர்
பாவவிலங்குபசிதாகநீங்கிப்பரமபதத்
தேவரொனக்களிகூரக்குழலிசைத்தேனளித்த
கோவலவென்னென்றுகூறுவலைவர்கொடுமையையே. ()

கன்றுகடாய்முலையுண்ணுதுகானக்களியமுத
மென்றுளிமாந்திப்பசிநீங்கியோவியமெய்யினவாய்

ஒன்றுநின்னெண் முகம்பார்த்துளத்தாங்கதமுற்றுநிற்க
அன்றுகுழல்குறித்தாயடியேனின்னடைக்கலமே. (ருஅ)

காலிகள்கானவமுதுண்டுணவினைக்கைத்துயர
வாலினையோக்கிவதனத்தையேந்திமயிர்சிலிர்த்து
வாலியநின்கண்மனமுற்றுநிற்கவடித்தகுழற்
பாலிகையாயெற்கருளுதிநின்பதபங்கயமே. (ருகூ)

வனமேவுபுட்குலமோசையமுதுண்டுன்வானுருவை
மனமீதிருத்திச்செயல்யாவுநீங்கிமவுனியரின்
நினதாணிழலினிலைநிற்கவூதுநிறக்குழல்வாய்
வனமாலையாயென்மனமாலைமாய்க்கமனத்திலுன்னே. ()

இசைநாலுருக்கொண்டெனநின்றுநீகுழலேந்திவிடும்
நசைசேர்சுரப்பண்ணயந்தரிவல்லியநாகநவ்வி
திசைதோறுஞ்சென்றுலவாதிகனீங்கிச்செறிந்தநட்பின்
அசையாமற்செய்தவசெய்யென்மனத்தையுமவ்வண்ணமே.

மேகவினமின்னிசைகேட்டுத்திக்குவிதிக்கின்மணம்
ஆகமலர்மழைபெய்துநின்னாகத்தலரிவெப்பம்
போகநிழற்றிமுகமன்புகலப்புரிகுழல்வாய்ப்
போகசயனநின்பொன்னடியெற்குப்புகலிடமே. (சுஉ)

நெருக்கமலைக்கற்கணெய்போலுருகநெடிதுபட்ட
விருக்கந்தளிர்த்துத்தழைத்துமலர்மணம்வீசமுனந்
திருக்குழலூதியதேவாவடியனைத்தீயகொடுங்
கருக்குழிவீழத்திக்கவற்றும்வினையைக்கடிந்தருளே. (சுங)

குன்றமெனநின்றுகோவலர்வெண்பொற்குவட்டினிட்ட
சொன்றியபூபஞ்சுவைக்கறிபாறயிர்தொட்டயின்று
மன்றன்மலர்த்தொடையாதியபெற்றுமகிழ்ந்தகண்ணா
என்றனிதயத்திருந்துநின்னைவற்கிசைவிப்பையே. (சுச)

கோவத்தெழுந்தெழுமேகமுங்கோவிற்குமுறிமின்னி
மாவத்திக்கைபின்வழங்கநிரைமுல்லைமாககளுற்ற
ஆவத்தைநீக்கியருள்வான்கைக்காம்பினமைத்தெடுத்த
கோவத்தனகுடையாவெண்ணுதியென்னுட்கோளறவே.

காமக்கறவைகடவுளர்கோன்செய்கரில்பொறுப்பான்
ஏமக்கமலாசனனினேவேண்டவெனைவிடுத்தான்
சேமக்கண்ணுவெனவன்னதைநோன்றிட்டசேவகவென்
தாமக்கனலிற்சுடுதீத்துயரைத்தொலைத்தருளே. (சுசு)

புரந்தரன்சுற்றத்தவர்சூழவேண்டும்பொருள்கொணர்ந்து
வரந்தருமாதவர்வாழ்த்திடவெண்ணிறவாரணத்தின்
கரந்தனிற்கோவிந்தபட்டாபிடேகங்களித்தமைக்கப்
புரந்தருள்கண்ணசுரந்தருளன்பெறப்புரக்கவென்றே. (சுஎ)

பொடியலைபோர்ப்பப்புடைகால்புகைபொறி பூத்தகண்கள்
இடியனவோதைகொடுமுடிக்கொம்பரிறும்புதியில்
மடியமதண்டங்கர்வாலெருத்துவடிவமைந்த
கொடியவற்செற்றநெடியவவென்னைக்கைக்கொண்டருளே.

கதிவேகத்தாணிலத்தூளியெழுந்துககனமூட்டத்
திதிவேலைஞாலந்திடுக்கிடச்சேடன்சிரந்துளங்கக்
குதிவேசகக்கொய்யுளைவென்றகோவிந்தகூரமிஞர்
துதிவேதவேத்தியயானுய்வழியொன்றுசொல்லுதியே. ()

மாயவியோமாசுரன்வல்லமையின்மலைமுழைஞ்சில்
ஆயவிளைஞரநேகரையுய்த்ததறைடைத்து
நேயவிநயமுடன்வரக்கண்டநெருக்கியவன்
மாயவினைமுடித்தாய்முடியென்மனமாயையையே. (எ0)

முன்னைவினையினின்மூண்டதுயரிதுமூதுலகுக்
கன்னைபிதாகுருதெய்வமுமாகியருள்பவனே
நின்னைவணங்கிச்சரண்புகுந்தேனிங்கெடுந்துயர்நின்
றென்னையெடுத்துப்புரக்கத்திருவுளத்தெண்ணுதியே. ()

நெடியாய்திருவல்லிக்கேணியில்வாழுநிமலவென்றும்
விடியாவவித்தையிரவும்விடிவித்துவேட்கைவரும்
வடியாவிரும்பவவாரிவடிவித்துன்மாமலாத்தாட்
கடியாரடியாரடியடைந்துய்யவருளெனக்கே. (எஉ)

பெருவாய்மைநாவினுணர்வுமியோகப்பிரபகத்தால்
வருவாலுணர்வுநினதருளால்வருமாணுணர்வும்

திருவாழூரவிறையேனுமிலேனின்றிருவடிசேர்
பெருவாழ்வெனும்பதமெங்ஙனம்பெற்றுய்வல்பேசுதியே.

பழிப்பாவலன்குறளைப்பண்டிதன்பசும்பச்சைப்பொய்யாம்
மொழிப்பாணிபுணன்வெம்மூர்க்கர்சிகாமணிமூதறத்தை
அழிப்பாரிலக்கிரகண்ணியனின்னையடைந்தனனெற்
கழிப்பானெண்ணுதுகண்ணுவெனைக்காத்தல்கழியறமே. ()

பாவக்களஞ்சியம்பச்சைப்பசும்பொய்பதிந்தவுறை
கோவக்கணக்குதிர்குற்றங்கள்கொள்கலன்கூறுநல்லோர்
சாவக்கடுஞ்சுமைத்தண்ணியனின்சரண்சார்ந்தனனென்
தாவக்கனறணித்தெற்றுங்கல்கண்ணதருமநிற்கே. (எரு)

நிகழ்ந்தவினைப்பயனுண்பித்தலையேநினைந்தெனைநீ
இகழ்ந்துகைசோரவிடுதலிழுக்குன்னிரும்புகழ்க்குத்
திகழ்ந்தொளிர்நின்சேவடிசரண்புக்கவென்றீவினைவேர்
அகழ்ந்தெனைக்காத்தலறமல்லிக்கேணியரிந்தமனே. (எசு)

அனைத்துலகத்துக்குமாதாரபூதவருள்செயநீ
நினைத்திடிலெக்கருமந்தான்முற்றுதுநெறித்துநிற்கும்
தினைத்துணையன்புநின்பாலிலனேனுநின்சீரருளாற்
பனைத்துணையுள்ளவன்போலெனைக்காககும்பரநினதே. ()

ஒன்பதுகோளுநின்னுள்ளக்கருத்தினுக்கொத்தொழுகும்
என்பதுபொய்யோவிறைவாவிவ்வேழையின்மீதிரங்கி
அன்பதுசெய்யினவையனர்செய்வனவோவறைதி
தென்பதுமாதனைசேர்மணிமார்பசிரீதரனே. (எஅ)

உள்ளமிருந்துள்ளுவாருன்னமெல்லாமுணரிறைவா
கள்ளவினையொன்றுநின்றிருமுன்னர்க்கழறகிலேன்
உள்ளமொருகோடிவாளாவிராமலுடற்றுகின்ற
வெள்ளவிடர்செய்வினையைக்கண்ணுவெட்டிவீழ்த்துதியே.

உள்ளன்பிலாதவனூனுறக்கத்திலுவப்புடையேன்
கள்ளன்கயவன்கரவடனின்பொற்கழலடைந்தேன்
அள்ளன்மலர்த்தடமாரல்லிக்கேணியமலநின்சீர்
வள்ளன்மையானின்மலர்ப்பதந்தந்தெனைவாழ்விப்பையே.

திருமகரக்குழைசெம்மணிமோலிசெவிசிரமார்
பெருமகரத்தைம்படைக்கண்ணவெம்பெருமாட்டியுறை
மருமகரக்கண்மடந்தையர்மால்வலைமாழ்கச்செய்வான்
ஒருமகரக்கொடியோன்செய்வினையையொழித்தருளே. ()

கருமவரைகழன்றிக்காயநாயேன்கழன்றெழுங்காற்
றருமவரையன்விடுந்தருசட்டமர்சார்பொழித்துப்
பருமவரைப்பெருங்கொங்கைவிநதைபயந்தசெல்வன்
பருமவரைப்புயம்வந்துன்பதந்தந்தெற்பாலிப்பையே. ()

எண்பஞ்சபூதவுடல்விட்டடியேனெழும்பொழுதென்
எண்பஞ்சனமுற்றிடையூறெய்தாமலெழிற்கடலாம்
ஒண்பஞ்சடியன்னைமாரொடுவணையூர்ந்துவந்தென்
கண்பஞ்சந்தீரநின்காட்சித்திருத்தந்தெற்காத்தருளே. ()

அரணியலானவடைக்கலமெங்கணுமற்றவர்க்கோர்
சரணியசன்மந்தவிர்த்தியன்றேற்சனனங்கடொறும்
புரணியவென்றலையோட்டினின்னன்பரைப்போற்றிடுமா
றிரணியகர்ப்பனெழுதவொர்கட்டளையிட்டருளே. (அச)

உறவிக்கணக்கினடியேன்வினையினுடுத்தவுடற்
பிறவிக்கணக்கும்பெருந்தகையோர்கட்கும்பேசரிதால்
துறவிக்கணந்தொழுங்கண்ணுதுணைப்பாற்சுடுஞெகிழி
உறவிக்கணத்தினுலையுமெற்காக்கவுவந்தருளே. (அரு)

சிறைக்குநிகரிந்தத்தேவாதிநாற்கதித்தேகமெனும்
உறைக்குவித்தாகியுறையென்பிழைகளொருங்குநின்றன்
பொறைக்குவிடயமெனப்புகுங்காலமும்பூப்பதுண்டோ
மறைக்குமெட்டாவல்லிக்கேணியில்வாழ்கின்றமாயவனே.

செஞ்சககரங்கொண்டுதேவாதிபன்சுதற்றேற்றும்வண்ணம்
புஞ்சக்கரத்தபனற்புதைத்தாய்புலிங்கம்பொதிகண்
வஞ்சக்கரமதவாரணஞ்செற்றருண்மாயவவென்
னெஞ்சக்கரவடநீங்கியுய்காலநிகழ்த்துதியே. (அஎ)

புரந்தரனாதியர்போற்றுநின்பாதத்தென்புன்மைநெஞ்சம்
உரந்தரநின்றென்றுமோவாவுவகையுவட்டெடுக்க

நிரந்தரநின்னடியார்பணியேசெய்துநிற்கவெற்கோர்
வரந்தரவேண்டுமல்லிக்கேணிவாழ்கின்றவாமனனே. ()

வெண்ணந்துசக்கரம்விற்றண்டுவாள்கொள்விறற்புயத்தாய்
தண்ணந்துழாய்முடியாய்நின்பொற்றாமரைத்தாள்களிலென்
எண்ணந்துளக்கமற்றெப்போதுநிற்கவிருத்திவைத்துத்
திண்ணந்துடைத்தருள்சென்மவித்தாமென்செருக்கினையே.

உரப்பாசமென்பனயாவையுநீக்கியென்னுள்ளக்கஞ்சப்
பரப்பாசனத்திற்பரிதியினென்பவப்பாவவிருள்
நிரப்பாசறவீற்றிருந்துநிமலநெறிமறலி
கரப்பாசம்வீசிவருங்கான்முன்வந்தென்னைக்காத்தருளே.

மொத்தத்துவக்குண்டமுதண்டகோடியுமுவுயிரும்
சத்தத்துவரியெழுவாய்ச்சராசரமாய்த்தயங்கும்
முத்தத்துவநிலைமூவாதவானந்தமுத்திநிலை
சித்தத்துவந்துதெரித்தியல்லிக்குளச்சிற்பரனே. (௬௧)

அரட்டுநராகியவைவர்வலியுமறத்தையெலாம்
புரட்டுநராகுமறுவர்புணர்ப்பும்புகர்வினைகள்
திரட்டுநர்மூவர்திறலுஞ்சிதைத்திசிறப்பியங்கள்
இரட்டொலியென்றுமருவல்லிக்கேணியிறையவனே. ()

படைப்பிடிப்புப்புரப்பாந்தொழிலைச்சங்கற்பத்திற்செய்வாய்
விடைப்பிடிப்பேரொலிவேழமட்டாய்நின்விரைமலர்த்தாள்
கடைப்பிடித்துய்ந்தநின்காதலடியவர்காற்பணியின்
கிடைப்பிடித்துச்சொல்லியாடியடியனைக்கேசவனே. ()

போர்ச்சக்கரக்கைப்புனிதபுரந்தரன்பொற்புதல்வன்
கார்ச்சக்கரத்தேர்கடவியகண்ணகவிழ்த்தெடுத்த
ஏர்ச்சக்கரக்குடையெந்தாயஞ்ஞானத்திகலின்வரும்
நார்ச்சக்கரம்வற்றிநானுய்யுநாடனைநாட்டுதியே. (௬௪)

காலமெலாமொர்கணமுமொழிவின்றிக்கண்ணுமும்மை
ஞாலமெலாங்கண்ணனல்லருடன்னினவநவமாங்
கோலமெலாந்தந்தெற்கூத்தாட்டுமொயைக்குறியுடையாய்
ஓலமெலாமிடுமெற்கென்றுறுஞ்சொல்லுபரதியே. (௬௫)

அண்டமுமண்டத்துயிர்கட்குடலுமவையயிலும்
பண்டமுங்கண்ணன்றன்பாவகத்தாக்கிப்பகட்டியெனை
விண்டமுத்தானத்துமாட்டிடுமோமாயையென்வெய்யவநாங்
கொண்டமுயக்கத்தொடர்பென்றொழிந்திடுங்கூறுதியே.()
ஞானவுருவினனாகியயானுளவின்றசடம்
ஆனவுன்றன்னையடுந்திறனீத்தவவித்தையென்போய்
ஊனவுடற்சிறைபுற்றுழல்வேனுக்குளமிரங்கி
ஆனவுறவையொரீஇக்கண்ணற்காணவருளுதியே. (௯௭)
அசித்தாகியவினைச்சித்தாகியயானமைத்தடக்கி
வசித்தாள்வலியின்றிக்கண்ணற்றொழாதுநின்வஞ்சனையால்
நசித்தாயின்குக்கிரகத்தழுந்துமென்ஞானமின்மை
நிசித்தான்விடிவதென்றோமாயையேநீநிகழ்த்துதியே. ()
நினையாட்டியேவல்கொணீர்முகில்வண்ணனியாமகத்தான்
மனையாட்டிமண்பொன்மயலான்மருட்டிமதிமயக்கி
வினையாட்டிடந்தொறும்வேண்டும்விசித்திரவேடநல்கி
எனையாட்டிநிற்குமவித்தையென்போய்நீயிரிவதென்றே.()
வேதியர்போற்றுந்திருவல்லிக்கேணிவிமலவயன்
ஆதியர்சொல்லற்கரியநின்சீர்த்தியையானறைதல்
சோதியர்நீக்காவிருளைக்கச்சோதந்துடைக்குமெனும்
வாதியர்சொல்லொக்குமங்கீகரித்தெனைவாழ்வித்தியே. ()
வாழிதிருவல்லிக்கேணியருச்சுனன்வையமுய்த்தோன்
வாழியுருப்பிணித்தாய்வாழிசக்கரவர்த்திமகன்
வாழிமந்நாதனுடனத்தியிந்திரனும்வரதன்
வாழிநந்தெள்ளியசிங்கப்பிரானிந்தமண்மிசையே.

---

மெச்சிச்சகந்தொழுமல்லிக்குளக்கண்ணன்மெய்யடிமேல்
இச்சித்தொருசதச்சொன்மாலைசன்மவிடும்பையறக்
கச்சிக்கடாம்பியிராமாநுசகுருக்காற்கமலம்
நச்சித்தொழுதுய்யெதிராசதாசனவின்றனனே.

**பார்த்தசாரதிப் பெருமான் மாலை**

**முற்றிற்று**

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவெவ்வுளூர்

# வீரராகவப்பெருமான் மாலை.

## காப்பு.

என்மாலைநீக்கியரு ளெவ்வுளிராகவன்மேற்
சொன்மாலையன்பினொன்று சொல்லவே—மன்மாலை
உண்ணுமன்னநீர்முதலா வுன்னியுய்ந்தமாறன்றாள்
எண்ணுதிநீநெஞ்சே யிசைந்து.

## நூல்.

அவ்வுட்பொருளாமமுதேயடாச்சுவையானகண்டே
எவ்வுட்கிடக்குமிருங்கனியேயெண்ணெழுநறவே
உவ்வுட்பொருளாங்கனகவல்லித்தல்லியுண்கரும்பே
மவ்வுட்பொருளேயெனையாள்வீரராகவமாயவனே. (க)

திருமாமணிமண்டபத்தரிப்பீடத்திருமலர்க்கண்
பெருமாமணியரியங்கத்தெம்மன்னையர்பெட்பினுறக்
கருமாமணியெனவீற்றிருக்குங்கண்ணகாத்தியெனை
மருமாமணியுரனேவீரராகவமாயவனே. (உ)

நித்தியர்முத்தர்கணீடுகிரதிசயாநந்தராய்ப்
பத்தியவசத்தினராய்த்தொழும்பதபங்கயனே
புத்தியிலாதபுலையேனிதயமென்புண்டரிக
மத்தியினின்றருள்வாய்வீரராகவமாயவனே. (ங)

பகுதியின்மேவியபந்தத்துயிர்களைப்பார்த்திரங்கித்
தகுதியவாகுங்கரணகளேபரந்தந்தவைகள்
புகுதிசெய்தோங்கப்பதினான்குலகங்கள்பூத்தவண்ட
வகுதிசெய்வாயெனையாள்வீரராகவமாயவனே. (ச)

ஓடங்கொண்டிந்தியுகளாதுததியொழுகுநர்போற்
றேடங்கொண்டேதொண்டனேனிந்தத்தோற்பையிற்றேம்புரிந்து
கூடங்கொண்டுற்பவவாரிகுளிப்பலக்கோதறுத்தாள்
மாடங்கொண்டோங்கெவ்வுள்வாழ்வீரராகவமாயவனே.

இராவணனைமுற்றளர்ந்தெண்கணனைதியபோமமலை
விராவிவழுத்தவிகங்கத்திறைமிசைமேவியவர்
பராவும்பழிச்சினைக்கொண்டவவின்னுமொர்பாவைபண்டி
வராவணங்காத்தெனையாள்வீரராகவமாயவனே. (சு)

பூசித்தநேமியனோடுனைப்புத்திரனைப்பொருந்த
யாசித்தகோசலையெண்ணிறைவேறவவளகட்டில்
நேசித்துவந்தருணின்மலநின்கதைநித்தியமும்
வாசித்துவக்கவருள்வீரராகவமாயவனே. (எ)

இராமனெனுந்திருப்பேரேய்ந்திராவணனைக்கடிந்து
பராவன்னைதந்தைபணிப்பாலனஞ்செய்துபார்ப்பொதுவா
விராவுந்தருமமநுட்டித்தவித்தகவீழ்நளின
வரானனவெற்காத்தருள்வீரராகவமாயவனே. (அ)

அனந்தன்கலையாமிளவலைக்கொண்டவ்வரிக்கரியைச்
சினந்தன்று கொல்வித்துச்சேடத்துவச்சிறப்பாமறத்தை
முனந்தன்கிறைட்டியமூவாமுதல்வமுரணறுத்தென்
மனந்தன்னிலவீற்றிருந்தாள்வீரராகவமாயவனே. (கூ)

அன்பார்ந்தவாழிக்கலைப்பரதற்கொண்டவனிபொருக்
கொன்பாரஞ்செய்கந்திருவனைக்கொல்வித்துக்கோதறுக்கு
நின்பாரதங்க்ரியநிட்டைநிறுவியநின்மலவென்
வன்பாரமாவினைதீர்வீரராகவமாயவனே. (க0)

சங்கக்கலைச்சத்துருக்கனைக்கொண்டுதரணியுயிர்
பங்கப்படுத்துமிலவணற்செற்றுநற்பாகவத
துங்கத்தருமநிலைப்பித்தவாவெனைத்தொட்டுநின்று
மங்கப்புரிவினைதீர்வீரராகவமாயவனே. (கக)

நோக்கல்குடைதமெருடுதவின்மன்பதைநோன்மனநோய்
நீக்கல்செய்தீர்த்தமுடையாயபழித்தனிலைபெறுத்தல்
ஆக்கன்முதலவிளையாட்டயர்வாயடியனையாள்
மாக்கல்வனிதைசெய்தாள்வீரராகவமாயவனே. (கஉ)

பாலுந்திக்குத்தரபாகக்கமலப்பழுவமணங்
காலுந்திக்காதங்கமழ்தேவகாதமெனக்கழறெண்

கோலுந்திக்கார்சீர்க்குளக்கரையாலயகூர்ந்தெனையாள்
மாலுந்திக்கஞ்சமலர்வீரராகவமாயவனே. (கங)

மனத்தாபநாசனதீர்த்தக்கரையின்மருவியென்றும்
இனத்தாவரசங்கமமுய்யநாகேந்திரன்மடியில்
வனத்தாமரைக்கண்வளர்கின்றமாதவவல்வினையேன்
வனத்தாவந்தீர்த்தருள்வாய்வீரராகவமாயவனே. (கச)

மாதங்கமாதைமணந்தகவுசிகமாமறையோன்
ஏதங்கடந்தியமன்றமர்பாசமிரித்தொழித்துப்
போதங்கடந்தபெரும்பதமெய்தியபுண்ணியமென்
மாதங்கவத்திரனேவீரராகவமாயவனே. (க௫)

சிறுவிதிதன்னையிகழ்ந்தனனென்றரன்சீறிச்சென்னி
அறுவிதியாலண்முமத்தியைநீக்கியருள்செய்புஞ்சீர்
உறுவிதித்தீர்த்தமுடையாயென்றுன்புமொழித்தருள்வாய்
மறுவிதிமாமணியாய்வீரராகவமாயவனே. (கசு)

எங்கைமுதலநதியினுந்தூய்மைசமூமியதென்
றங்கைமகதியெனும்யாழ்முனிவற்கயன்முனநாள்
சங்கையறச்சொறடக்கரையாயென்சமக்கறுத்தாள்
மங்கைமணியுரமார்வீரராகவமாயவனே. (கள)

பசுமதிபூண்டநரவடிவேனிலம்பாவைநல்லார்
வசுமதியாதுன்மலரடிவாழ்த்தும்வரமருளவாய்
வசுமதிமானுந்திருமுகம்வாட்கண்வளைக்கரங்கொள்
வசுமதிதேவிவரவீரராகவமாயவனே. (கஅ)

சிந்தனைசெய்துதவஞ்செய்பிரத்யும்நச்செம்மன்முன்னர்
வந்தனைவேண்டும்வரம்யாவுநலகிவழிவிளங்கும்
மைந்தனையுந்தந்தளித்ததுபோனின்மலரடியை
வந்தனைசெய்யெனையாள்வீரராகவமாயவனே. (கக)

மிருகண்டுமைந்தன்சதாநீகன்மைந்தற்குமேவிமுன்னாள்
திருகண்டுநெஞ்சந்தெளியவுரைத்தநின்சீர்ச்சரிதை
இருகண்டுளிததிதயங்கசிந்தேத்தவெனக்கருள்வாய்
வருகண்டுநேர்பவனேவீரராகவமாயவனே. (உ0)

படியிற்புகுந்தோரரக்கன்றலையும்படிவரையும்
இடியிற்றெழித்துண்ணுவான்வரக்கொன்றியமன்படர்கைப்
பிடியிற்றவிர்த்துநற்பேறுதந்தான்மனனேயநந்தன்
மடியிற்றிருக்கண்வளர்வீரராகவமாயவனே. (உக)

மாரன்கணைவென்றமாதவருள்ளமகிழ்சநற்கு
மாரன்செய்பூசனைகொண்டோனயோத்தியர் மன்னருள்கு
மாரன்மலர்மகள்கையாற்றொடமனம்வட்குசுகு
மாரன்மனனேயுணர்வீரராகவமாயவனே. (உஉ)

கருமகதியிலுழனமைக்காப்பவன்காணென்னெஞ்சே
பெருமகனுமயன்பெற்றதயரதப்பேரரசன்
தருமகனற்றருமச்சேனப்பேர்கொடராபதியின்
மருமகனெவ்வுள்வளர்வீரராகவமாயவனே. (உங)

நான்முகனாரதமாமுனிகேட்கநயந்துரைத்த
தேன்முகமாமலருட்டாபகாசனதீர்த்தவளம்
நான்முகமாவுணர்ந்தெண்ணுநெஞ்சேநம்மைநோற்றளிப்பன்
மான்முகவம்போருகன்வீரராகவமாயவனே. (உச)

முதுகைவளைக்குமுதிர்மூப்புத்துன்பின்முழுகிநிற்குங்
கொதுகைநிகரொன்றன்குற்றங்களைக்குணமாகக்கொண்டு
மதுகைமறவிவருங்காற்ககமிசைவந்தெனையாள்
மதுகைடபமர்த்தனுவீரராகவமாயவனே. (உரு)

இருந்தேவபாகவிருடிக்கருளிறைவாநினது
திருந்தேவனின்றுசிறியேன்கதிபெறச்செய்தருள்வாய்
பெருந்தேவதேவவடியார்பிறவிப்பெரும்பிணிக்கோர்
மருந்தேவனேடதியேவீரராகவமாயவனே. (உசு)

மூப்பொருமூர்த்தமெடுத்தெனநண்ணிமுகந்திருமட்
காப்பொடும்வேதியனுயுற்றென்காயத்திற்கண்வளர்வான்
பாப்பொடுசாய்ந்தெனச்சாயத்திருவுளம்பற்றியதென்
மாப்பொறிவாமூரனேவீரராகவமாயவனே. (உஎ)

சாலியவிமுனிதண்ணிலைச்சாலையின்சங்கநல்கு
நாலியரித்துகொழிபானரலையினுறியபைம்

பாலியடையினற்பாகவதோத்தமர்பன்னுளத்தின்
வாலியதோவென்னுடல்வீரராகவமாயவனே. (உஅ)

உண்ணுதுறங்காதவைசெய்தொழுகுமுயிர்க்கிரங்கிப்
பண்ணார்மறையைத்தமிழ்செய்தமாறன்பணிபதிபோற்
றண்ணார்தமியனின்முணிலையாதற்குத்தக்கவரே
மண்ணாரமார்பமவிர்வீரராகவமாயவனே. (உகூ)

ஊனாதியூனிலுயிராதியவ்வவ்வுயிர்க்குயிராங்
கோனாதிமேலொருகோனிலனாதிகுணப்பகுதி
மானாதியாதியகங்காரமோடுதன்மாத்திரையும்
வானாதிவாழ்த்தறியேன்வீரராகவமாயவனே. (௩0)

வேதாதியாதிவிளக்காதிவேதவியன்முடியில்
ஓதாதிமூலப்பொருளாதியுந்தியுதித்தவனும்
பூதாதிபனுமிந்தாதியுமாதிபொழுதொடுநாண்
மாதாதியாதியருள்வீரராகவமாயவனே. (௩க)

பெண்ணாதியாணலிதூஉவாதியாயும்பெயர்ந்துநிற்றி
கண்ணாதியவைம்பொறிபுலனாதிகடந்துநிற்றி
விண்ணாதிதீநீர்வளியாதியாகியும்வேறுநிற்றி
மண்ணாதிபெற்கருள்வாய்வீரராகவமாயவனே. (௩உ)

மண்ணாய்மறிகடலாய்வன்னியாயெறிமாருதமாய்
விண்ணாய்விரிந்தவவீயாவிவிதவிழுமந்தந்தென்
கண்ணார்வினையுங்கடுகிக்கழிந்திடுங்காலமென்றே
மண்ணாரமாமணியாய்வீரராகவமாயவனே. (௩௩)

மநுவந்தரங்கண்மலரயன்கற்பங்கண்மாண்டிடினுந்
தநுவந்தரந்தருமென்வினைசற்றுந்தணந்தொழியா
தநுவந்தரஞ்செயுமந்தோவென்செய்கேனயனெறியும்
மநுவந்தரமுமிலேன்வீரராகவமாயவனே. (௩ச)

நல்லோரைக்கூடிநலமுணராதவிந்நாயடியேன்
நல்லோரையிலடிகோலினன்போன்மிந்நடலைவினைக்
கெல்லோரையுமிரந்தேனிதன்வேரையிரித்தொழிக்க
வல்லோரைக்காணேனருள்வீரராகவமாயவனே. (௩ரு)

மிச்சைமுளைத்திட்டுமேன்மேலும்வீங்கிவிருத்தியடை
பொச்சைவினையைப்புறங்கண்டுமீண்டுபுகாதொழிக்கும்
விச்சையருளாயெனினுண்மைஞானவிழிபடையா
வச்சையனென்செய்குவல்வீரராகவமாயவனே. (௩௬)

சித்துமசித்துந்திகழ்நீயுநாளுஞ்சிறந்துநிற்றல்
கொத்துமறைகளனந்தமுங்கூறுங்கொடுவினையும்
ஒத்துநடப்பதெவனோபிரணவத்துட்பொருளாம்
வத்துவெனும்பெரியோய்வீரராகவமாயவனே. (௩எ)

நினக்குப்பாரதந்திரமாயிராதுநிகழும்வினை
தனக்குப்பாரதந்திரமாவொழுகுந்தலைப்பொறியென்
எனக்குப்பகர்தியிருங்கழலேத்தியிறைஞ்சுமவர்
மனக்குப்பிரியகரவீரராகவமாயவனே. (௩அ)

கல்லெழுத்தென்னவென்காழுளத்தெட்டக்கரங்களெனும்
நல்லெழுத்துக்களைநாட்டல்செய்யாதுநலிவினையார்
சொல்லெழுத்தின்படித்தூங்கென்றயன்றலைதொட்டெழுதும்
வல்லெழுத்தைத்துடைத்தாள்வீரராகவமாயவனே. (௩௯)

குட்டத்திகிரிக்குவலயந்தன்னிற்கொடியவினைச்
சட்டத்திகிரித்தனிக்கோறழைத்திடச்சற்றுநின்றன்
இட்டத்திகிரியியங்காவியலென்னிசைத்தருள்வாய்
வட்டத்திகிரிப்படைவீரராகவமாயவனே. (௪0)

இறையேயெனவிறையேனுமிரக்கமிலாவினையார்
மிறையேபுரிந்துகணந்தொறுமாநந்தமேதையெனுந்
திறையேயிறக்கச்செய்கின்றனரொன்செய்வதோர்ந்தருள்வாய்
மறையேபுகழெவ்வுள்வாழ்வீரராகவமாயவனே. (௪௧)

தாவரசங்கமச்சார்வாமுயிர்க்குச்சமநிலையாய்
மீவரவன்புசெய்வானேகமலவிலோசனனே
மாவரனேயென்மனநோயொழியமகிழ்ந்துவந்தோர்
மாவரமீந்தருள்வாய்வீரராகவமாயவனே. (௪௨)

மறைபுகுமென்னெஞ்சைவாட்டுமறுக்கங்கண்மாயும்வணம்
இறையருள்செய்யினிகழ்ச்சியென்யார்க்குமிறையவனே

பொறைமலையேபுண்ணியநிதியேபுகழ்ப்பூடணமே
மறைமணியேயெவ்வுள்வாழ்வீரராகவமாயவனே. (சஙு)

அண்டரொழிற்கந்திருவரியக்கரருந்தவர்கள்
தொண்டர்துறவிகடோகையர்பாலகர்சூழ்வினைநோய்ப்
பிண்டர்கள்பெட்டனபேறருள்வாயென்றன்பேதறுத்தாள்
வண்டர்கள்வாழ்த்தும்புகழ்வீரராகவமாயவனே. (சச)

உடனிகழ்ந்துள்ளநிகழ்ந்துயிர்க்குண்ணிகழ்ந்தோங்குபொறி
இடனிகழ்ந்தெல்லாமியங்கிடும்வண்ணமியக்கவல்லாய்
உடனிகழ்ந்துன்னையுணராவகைசெயுறுபகையாம்
மடனிகழாதருள்வாய்வீரராகவமாயவனே. (சரு)

அணங்கவருத்துமநாதிவினைவேரனைத்துமறுந்
துணங்கநின்பாதத்துழுவலன்பென்றுமுடையவர்பால்
இணங்கவிதயத்தினெண்ணியவர்புகழேத்தெடுத்து
வணங்கவருள்புரிவாய்வீரராகவமாயவனே. (சசு)

கற்றிற்றென்றென்னிலையுட்கண்களித்திடக்காணகிலேன்
தெற்றிற்றென்றுன்னிலைதெள்ளியர்செப்பினுந்தேரகிலேன்
உற்றிற்றென்றோரவுணர்த்துதியேலுற்பவவுததி
வற்றிற்றெனமகிழ்வேன்வீரராகவமாயவனே. (சஎ)

ஆராவமுதமனையாய்நினையுநின்னன்பரையும்
ஆராதகாதலுடன்வேண்டுவகொண்டநுதினமும்
ஆராதனஞ்செயும்வண்ணமருளியரும்பவநோய்
வாராவணங்காத்தருள்வீரராகவமாயவனே. (சஅ)

பொய்யாக்குஞ்செய்வினைபுக்கியங்காநிற்கும்புன்மைநெஞ்சம்
மெய்யாக்குஞ்செய்வினைமேவியியங்காவிதியெனையோ
மெய்யாக்கும்பாசகரர்க்கண்டென்னுள்ளமிகநடுங்கி
மையாக்குங்கால்வந்தருள்வீரராகவமாயவனே. (சகூ)

பாழ்வினைபாவவினைபட்டிமைவினைபாழ்நரகில்
வீழ்வினைமாதரைவெஃகும்வினையிவ்வினைத்தழிக்கும்
ஊழ்வினைநீக்கியென்னுள்ளநின்பாதத்திலூன்றிநிற்கும்
வாழ்வினையீந்தருள்வாய்வீரராகவமாயவனே. (ருo)

உறவியையிவ்வுலகப்பொருண்மூற்றுமுவர்த்தொழிக்குந்
துறவியையுள்ளந்தராயேனுந்தொல்வினைதொட்டுவரும்
பிறவியைப்போர்க்காயெனினுநின்னல்லடிபேணலின்கண்
மறவியையேனுமொழிவீரராகவமாயவனே. (௫௧)

நெஞ்சமுரம்பநெருப்பின்மெழுகெனவேநெகிழ்த்துப்
புஞ்சவஞ்ஞானப்பொருப்பைப்பொருக்கெனப்போழ்ந்தொழித்துக்
கஞ்சநிகர்நின்கழற்றுணையேயென்றுங்காதலிக்க
வஞ்சமிலாவன்பருள்வீரராகவமாயவனே. (௫௨)

பாருதிதந்திப்படிறன்படர்கள்படாமலருள்
கூருதிகுற்றமெண்ணாதுகல்யாணகுணக்கடலே
வாருதிகுப்புற்றென்னன்னையைக்கண்டுநல்வார்த்தைசொன்ன
மாருதிதன்னைமகிழ்வீரராகவமாயவனே. (௫௩)

புழுக்குடரீருள்புண்ணீர்மலநீர்சீப்புரளியுறை
கொழுக்குடநாடிதசைவளிபித்தைக்குரம்பையெனும்
இழுக்குடலத்தினியற்கையிற்றிற்றென்றெணியுவர்க்க
வழுக்குழுத்தேற்றியருள்வீரராகவமாயவனே. (௫௪)

கடியாக்கடியவினைவேர்கழன்றுகழியவென்றும்
விடியாக்கனவிருண்முற்றும்விடிந்துவிமலநின்றன்
அடியார்கடியவனாகியுய்வண்ணமருள்புரிவாய்
வடியாக்கருணைக்கடல்வீரராகவமாயவனே. (௫௫)

அங்கற்பந்தோறுமயனெடுமண்டமனைத்தினையுஞ்
சங்கற்பத்தாற்சமைத்தாருயிர்க்கூட்டந்தழைக்கும்வணம்
பைங்கற்பமாதிப்பழமறைநல்கும்பரம்பரனே
மங்கற்பனைக்காத்தருள்வீரராகவமாயவனே. (௫௬)

அகக்கோட்டமவ்வியமாதியநீங்கியவிரடியார்
அகக்கோட்டந்தன்னிலமுதக்கடலினமரமலா
முகக்கோட்டமின்றியென்னெண்ணக்கருத்தைமுடித்தருள்வாய்
மகக்கோட்டமோங்கெவ்வுள்வாழ்வீரராகவமாயவனே. ()

பற்றொன்றுநெஞ்சப்பதகன்பளகன்பரம்பொருளால்
கற்றொன்றுந்தேருக்கயவனின்கஞ்சக்கழலையன்றி

எற்றென்றுமெண்ணுதிருந்துசுகிக்கவிரங்கியருள்
மற்றொன்றும்வேண்டேன்மகிழ்வீரராகவமாயவனே. ()

வெங்கணராகுமரக்கர்குலமுதல்வேரறுப்பான்
கங்கணங்கட்டியகாகுத்தநங்கணக்காரிகையார்
அங்கணமானுமசுத்தக்குழியிலழுதொழுகும்
வங்கணநீத்தருள்வாய்வீரராகவமாயவனே. (௫௯)

சினக்குற்றஞ்சிற்றின்பக்குற்றஞ்சிறுவரைச்சேர்ந்தொழுகுங்
கனக்குற்றங்கள்ளங்கழகங்கரவடங்காதகமாம்
இனக்குற்றநின்னையுநின்னடியாரையுமெண்ணகிலா
மனக்குற்றமாய்த்தருள்வாய்வீரராகவமாயவனே. (௬0)

வேற்றோர்வித்தத்தைவிழைந்தபிழையங்கவேதநன்னூல்
ஆற்றோர்க்கலக்கணயர்பிழைநின்றனருட்கிலக்காம்
பேற்றோர்ப்பிழைத்தபிழைபொறுத்தாளுதிபேரிலங்கை
மாற்றோர்க்குமாற்றலனேவீரராகவமாயவனே. (௬௧)

உந்திக்கமலத்துலகுதந்தாயுன்னொளியடியைப்
புந்திக்கமலத்திருத்திநிதம்பூசனைபுரிந்து
சிந்திக்கச்சிந்துவையாற்றுதித்தேத்தச்சிரங்கரத்தால்
வந்திக்கச்செய்தெனையாள்வீரராகவமாயவனே. (௬௨)

கரத்தாற்படைத்தகழற்றுணையாலிருகண்மணியாற்
சிரத்தாற்செவிநாசிகைத்துளையானல்லசிந்தையினால்
உரத்தாலுறுபயன்யாவுநின்னுள்ளமுகந்தருளும்
வரத்தாலடைந்துய்குவல்வீரராகவமாயவனே. (௬௩)

துடித்துச்சுகாநந்தவெள்ளத்திற்றோய்ந்துளஞ்சோர்ந்துசொக்கி
நடித்துநின்னாமநவின்றுநயனங்கணீரமல்கிப்
பொடித்துப்புளகம்பொருமியெஞ்ஞான்றுநின்பூங்கழலே
வடித்துப்புகழவருள்வீரராகவமாயவனே. (௬௪)

வரனும்பரானுமறிவரியானுமணிமகுடச்
சிரனுந்திருச்சக்கரமாதியைம்படைசேர்ந்திலங்குங்
கரனுங்கனகாம்பரனுநந்தாயாங்கனகவல்லி
வரனுந்தெரிதிநெஞ்சேவீரராகவமாயவனே. (௬௫)

ஒண்மைநின்னாணையையுல்லங்கனஞ்செய்தொழுகுமனத்
திண்மையன்றீயரிற்றீயவன்செப்பமிலாச்சிறியன்
உண்மையொழுத்தற்குரியோனெனினுமுகந்தெனைநின்
வண்மையினாண்டருள்வாய்வீரராகவமாயவனே. (௬௬)

அறவாதிருக்கமறவாதுபேசிநின்னாணைதனை
இறவாதிருக்கநின்பாதத்தொழும்புசெய்வோரினத்தைத்
துறவாதிருக்கவென்றொல்லைவினையைத்தொலைக்குநின்பேர்
மறவாதிருக்கவருள்வீரராகவமாயவனே. (௬௭)

கருவந்தநாண்முதலாவிதுகாறுமென்காலமெலாம்
வெருவந்தனசெய்துவீணாக்கழித்தனன்மேவுநின்சீர்
ஒருவந்தமெண்ணியினியேனுமுய்யவுணர்வருள்வாய்
மருவந்தவுந்திமலர்வீரராகவமாயவனே. (௬௮)

கன்னெஞ்சங்கீண்டோர்நரகேசரியாய்க்கதக்கனகன்
றன்னெஞ்சங்கீண்டுதநயற்கருள்செய்தயாநிதியே
நின்னெஞ்சுவக்கநினைந்துநினைந்துநெகிழ்ந்துருகா
வன்னெஞ்சநீக்கியருள்வீரராகவமாயவனே. (௬௯)

முடிகவிபிச்சணொரீஇநீயிருவர்க்குமுந்தையநாண்
முடிகவித்தாய்நின்னடியிற்கரங்கண்முகிழ்த்துநின்று
முடிகவிழ்த்துத்தொழுமெற்குசசுவைமுதிர முத்தமிழால்
வடிகவிபாடவருள்வீரராகவமாயவனே. (௭0)

காகங்கதறிமுறையிடவுள்ளங்கனிந்ததன்வெஞ்
சோகங்கதழ்ந்துதவிர்த்ததுபோலென்றுயரொழித்தாள்
நாகங்கதநாயகப்பள்ளிமேவியநாரணனே
வாகங்கதப்புயனேவீரராகவமாயவனே. (௭௧)

தனுவாகியற்றுச்சடப்பொருள்போன்றதசையிரங்கித்
தனுவாதிதந்துய்யக்கொள்வானமக்குநெஞ்சேதகவா
மனுவாதிநான்குமறையும்வளத்திருமந்திரமாம்
மனுவாதியுந்தந்தவன்வீரராகவமாயவனே. (௭௨)

மகராலயனைவழிபட்டுவன்னியின்வாளிதொட்டு
மகராலயஞ்சுட்டுவந்தவன்வேண்டிவரங்கொடுக்க

மகராலயத்தணைகட்டியமாதவவான்கருணை
மகராலயவென்னையாள்வீரராகவமாயவனே. (எ௩)

காமித்திரவிகுலம்வந்திருவினைநைத்தவிசு
வாமித்திரமுனிமாமகங்காத்தவமாதவருட்
கோமித்திரநற்குகன்மித்திரகுளிர்கோகநக
மாமித்திரவென்னையாள்வீரராகவமாயவனே. (எ௪)

கரதானவகண்டககற்பகாடவிக்கான்கமழும்
வரதானவாசவதேவகணவந்திதசரணா
பரதானகசோதரபரமானந்தபத்தசன
வரதானவென்றனையாள்வீரராகவமாயவனே. (எ௫)

சித்தாந்தராயனின்சேவடியென்றுந்திகழ்ந்தொளிருஞ்
சுத்தாந்தரங்கர்தொழும்பனல்லேன்கருதித்துணிவாஞ்
சித்தாந்தமொன்றுந்தெளியேன்சிற்றின்பச்சிறுமியருன்
மத்தாந்தனுமென்னையாள்வீரராகவமாயவனே. (எ௬)

கல்வினைநீக்குங்கழற்றுகளான்கனற்கண்ணுதலோன்
வில்வினைவீட்டிமிதிலைநன்னுடியைவேட்டவள்ளல்
நல்வினையோர்க்குநல்கும்பதத்தான்மனனேநமது
வல்வினைதீர்த்தருள்வான்வீரராகவமாயவனே. (எஎ)

ஓரீசனெல்லாவுலகுக்குமெவ்வெவ்வுயிர்க்குமருள்
கூரீசன்றாடகைதன்னுயிர்கொண்டகொடுங்கணையன்
மாரீசற்செற்றவனெஞ்சேநமக்குநல்வாழ்வளிப்பன்
வாரீசநாபனெனும்வீரராகவமாயவனே. (எஅ)

நீரகநின்றைநிலாத்திங்கட்டுண்டநிகழரங்கம்
ஊரகமெவ்வுடிருவேங்கடங்கச்சியூருடையாய்
தாரகநாமசமன்றமவொன்னொடுசண்டைசெயு
மாரகநாள்வந்தருள்வீரராகவமாயவனே. (எ௯)

கரவற்றநெஞ்சத்தவர்க்கருள்காகுத்தகண்ணுபகல்
இரவற்றவீதிவிருஞ்சுகவீட்டினிருக்கும்வணம்
புரவற்றவென்னைப்புரந்திடனின்கடன்போக்குடனே
வரவற்றபூரணனேவீரராகவமாயவனே. (அ0)

ஆக்குந்தொழிலுமளிக்குந்தொழிலுமறக்கடையிற்
போக்குந்தொழிலுமபுரிபவனம்மைப்புரப்பனெஞ்சே
நோக்குந்திசைதொறுமுளளவனுண்ணியர்நுண்ணுணர்வும்
வாக்குங்கடந்தவன்காண்வீரராகவமாயவனே. (அக)

பதினான்குலகப்பகுப்பாமண்டங்கள்பரிப்பவனுங்
கதிநான்குளவவையில்லாவுயிரிற்கலப்பவனும்
விதிநான்குவேதவிளக்காளவனும்விழுப்பயனாய்
மதிநான்களிப்பவனும்வீரராகவமாயவனே. (அஉ)

இனவேட்டைநீத்தோரிடுக்கண்டொலைத்துப்பொன்னேணமொன்றைப்
புனவேட்டையாடியபுண்ணியகாலபுரக்கணக்கன்
கனவேட்டைமுற்றக்கருக்கிநின்பாதகமலந்தந்தென்
மனவேட்டைதீர்த்தருள்வாய்வீரராகவமாயவனே. (அங)

சிலைபோன்றதிண்ணியநெஞ்சநின்பாலுலைத்திமெழுகின்
நிலைபோனெகிழ்ந்துநினையெண்ணச்செய்தாணிசாபதியின்
கலைபோலுடற்பணிவெண்மலைமீதோர்கருமணிமா
மலைபோல்விழிதுயில்வாய்வீரராகவமாயவனே. (அச)

பாமகணாயகன்பன்னிமமால்வரைப்பார்த்திவனுங்
கோமகணாயகன்வாழ்திருமேனியின்கூறுடையான்
பூமகணாயகன்பொல்லாநமைநெஞ்சமேபுரப்பான்
மாமகணாயகன்காண்வீரராகவமாயவனே. (அரு)

என்னையகலுநிலைநினக்கில்லையெனக்குமஃதே
என்னையறிதியெளியேனெஞ்ஞான்றினுமெவ்விதத்தும்
நின்னையறியாநிலையென்கிட்கிந்தைநிகழ்கவிகண்
மன்னையளித்தவனேவீரராகவமாயவனே. (அசு)

உண்மையின்ஞானவுருவினனாய்நிற்குடம்பினனாய்
அண்மையெஞ்ஞான்றுமமர்ந்துநினையறியாவணஞ்செய்
திண்மைநின்மாயைத்திறலினைவெல்லுந்திறமிலெனை
வண்மையினாண்டருள்வாய்வீரராகவமாயவனே. (அஎ)

கலைக்கோலச்சாலியவிமுனிக்கங்கைகமலனுய்யு
நிலைக்கோலஞானக்குறிக்கைநெடுமாமணிமகுடத்

தலைக்கோலந்தாய்மார்வருடடிக்கோலந்தநுவெனுநீண்
மலைக்கோலம்யான்மறவேன்வீரராகவமாயவனே. (அஅ)

போர்ச்சாலகடங்கடர்போன்றபூரியன்பூங்குழலார்
நார்ச்சாலகத்திலெந்நாளுநலிபவனன்மைசெய்நின்
சீர்ச்சாலமெண்ணுத்திருவிலியாஞ்சிறியேன்றிறத்து
மார்ச்சாலநீதிசெய்தாள்வீரராகவமாயவனே. (அகூ)

நரகதமாலயநீத்தன்பரைத்திருநாட்டினுய்க்கும்
விரகதயாளவடியேன்கொடுவினைவேரறுத்துப்
பரகதமாகப்பணிகொண்டுகாத்தனின்பாரமதாம்
மரகதமேனியனேவீரராகவமாயவனே. (கூ0)

இராமரமாரமணசுரர்போற்றுமிணையடியாய்
குராமரவப்பொழில்சூழெவ்வுண்மேவியகொண்டல்வண்ண
சராமரணத்தொழுந்தமியேற்குத்தவிர்த்தருள்வாய்
மராமரமேழெய்தவாவீரராகவமாயவனே. (கூக)

நாட்டஞ்சுழலநமன்றமர்கூடிநலிவுசெய்யக்
காட்டங்கற்போன்றுயிர்க்கக்கிடுங்காலைக்கலுழன்மிசை
ஓட்டந்துவந்துநின்னொள்ளடிச்சேவையுதவியென்றன்
வாட்டந்தவிர்த்தருள்வாய்வீரராகவமாயவனே. (கூஉ)

கானவர்கோனற்சவிக்குலககோன்கண்களிக்குநண்ப
மானவர்கோனெனமாருதிதோண்மிசை வாய்ந்திலங்கைத்
தானவர்கோனைத்தடிந்தவநின்னைச்சரணடைந்தேன்
வானவர்நாட்டைத்தந்தாள்வீரராகவமாயவனே. (கூங)

திருமகள்கொண்கநற்றேவாதிதேவநின்சிந்தைவந்த
ஒருமகன்றன்வினையெற்கொழிந்தானினதுந்திவந்த
திருமகனெல்லிமகன்வினைதீருந்தெருட்சனகன்
மருமகனேயெவ்வுள்வாழ்வீரராகவமாயவனே. (கூச)

மார்த்தாண்டன்செய்யமரபில்வந்தாயென்மலஞ்சழித்து
மார்த்தாண்டமண்டலத்தூடேநடாத்திவயங்குபல
மார்த்தாண்டரினொளிர்மாப்பதநல்குதிமல்கிருடீர்
மார்த்தாண்டமண்டலம்வாழ்வீரராகவமாயவனே. (கூரு)

கடத்திற்கடவளிபித்தந்துரக்கஙின்கட்கருணைத்
திடத்தினடியனதைவிடுங்காலர்ச்சிராதிவழி
நடத்திகல்லாநந்தவாருதியாந்திருநாட்டினுய்ப்பாய்
வடத்தினிலைதுயின்றாய்வீரராகவமாயவனே. (கூகூ)

கரணகளேபரங்காழண்டமண்டக்கருப்பொருள்கள்
காணவிலீலைக்குக்காரணமாயைகடத்துவித்துச்
சரணமடையுந்தமியேற்குத்துன்பந்தருசனன
மரணமொழித்தருள்வாய்வீரராகவமாயவனே. (கூஎ)

ஒன்பான்றுளைகொளுடலைநின்றெண்டனுக்குத்தெழுங்காற்
றென்பான்மறலியைச்சீறிக்கலுழன்றிருப்பிடர்மேல்
அன்பான்மலர்மகளோடுமென்முன்வந்தருள்புரிவாய்
மன்பான்முதிர்சுவையேவீரராகவமாயவனே. (கூஅ)

தீக்கதிசேருந்திறத்தினனேனுந்திருத்திநின்றாள்
வீக்கதிகாரியவனைக்கருணைவிழித்துணையால்
நோக்கதிகாரிபரம்பரைநோக்கிநுவலருஞ்சீர்
மாக்கதிதந்தெனையாள்வீரராகவமாயவனே. (கூகூ)

மந்தனைநோக்கியருளாயெனினுமிம்மாநிலத்தோர்
பந்தனைபாற்றப்படிவந்தபாரமிலாக்கருணைச்
சிந்தனையானெம்மிராமாநுசமுனிசெய்மலர்க்கை
வந்தனைக்கேனுமருள்வீரராகவமாயவனே. (க00)

வாழிதிருவெவ்வுள்வாழியவானவகாதமடு
வாழிவரியவிமாமுனிவாழிவயிணவர்கள்
வாழிகருணைக்கடலாங்கனகவல்லிச்சநதி
வாழியெப்போதினுநம்வீரராகவமாயவனே.

---

விதிவானவர்தொழுமெவ்வுட்கிடக்கும்விமலனுக்கோர்
துதிமாலையாகியசொன்மாலைநூறுசுபப்புரசைப்
பதிவாழ்பவன்வைணவர்நாட்டுகளெனும்பள்ளிகொண்டான்
எதிராசதாசனிரும்பவநீங்கவிசைத்தனனே.

## வீரராகவப் பெருமான் மாலை
### முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# அத்திகிரியந்தாதி

## காப்பு.

அத்திகிரிவா ழருளாளன்றாளிணையிற்
பத்தியுடனந்தாதிப் பாமாலை—நத்தியிடச்
செங்கமலவாவிசூழ் தென்குருகைவந்தமுனி
புங்கவன்றாணெஞ்சமே போற்று.

## நூல்.

மணிபூத்தமாசுணச்சூட்டொளிர்நேமிவலயமுள்ளோர்
பணிபூத்தபாதலத்தோர்பவனத்துறைபண்ணவர்கள்
திணிபூத்ததத்தமசிந்தைவைத்தேத்துஞ்சிறப்பினவாம்
அணிபூத்தவத்திகிரியருளாளனடியிணையே. (க)

இணைக்கயனேர்விழியிந்துவைநேருமெழில்வதநம்
பிணைக்கயநேர்நடைப்பெண்ணாசைநீத்துப்பிறங்குநின்றாட்
டுணைக்கயத்தோயசந்துன்னித்துதிக்குஞ்சுகமருள்வாய்
பணைக்கயப்பட்டடப்பகட்டுப்பருப்பதப்பண்ணவனே. (உ)

பண்ணவப்பாடல்கள்பாடிப்பரவநின்பாதமலர்
எண்ணவப்பாதிகொண்டேத்திநின்பூசையியற்றவென்றும்
ஒண்ணவப்பாலமணியணியாடையுகந்தணிந்து
மண்ணவப்பாவருள்செய்வாரணமலைவானவனே. (ங)

வானவர்வாழ்வுறவாரிகடைந்துமருந்தளித்தாய்
தானவர்சாய்வுறசக்கரமேந்தினைசாதுசனம்
ஆனவராரணம்வாழவருளினையம்பொறியாங்
கானவர்கௌவைகடிந்தெனையாள்கரிக்கலகனே. (ச)

கல்லகந்தன்னைக்கரைத்துநின்காற்றுணைக்காதறந்தென்
வல்லகந்தன்னைவரைந்துமெய்ஞ்ஞானவழிநடத்தி
எல்லகந்தன்னிலியக்கியெஞ்ஞான்றுநல்லின்பமய
நல்லகந்தன்னில்வைத்தாளுகமாமலைநாயகனே. (ரு)

நாயகனன்றுநன்றுநளனிரவினயந்துதுயில்
பேயகம்பீடுடைத்தாம்பேதையர்களிற்பேதையென்றன்
றீயகநோக்கினதனைத்திருத்திநின்சேவடியாந்
தாயகநின்றுதரிக்கச்செய்தந்தித்தரணியனே. (௬)

தரணியலைக்குஞ்சலநிதிநின்றுந்தணந்தெடுப்பான்
அரணியகேழலவதாரஞ்செய்தவமலவென்றன்
முரணியவல்வினைமோசனித்தாளுதிமுப்பொழிற்குஞ்
சரணியனானதலைவாதந்தாவளத்தாவரனே. (௭)

தாவரசங்கமச்சட்டகதாமரைத்தாமமுறை
மாவரசங்கரன்வாழ்வலப்பாகவரதவெஃக
மாவரசங்கவண்கச்சிநம்பிக்கருள்வார்த்தைகளைப்
பூவரசங்கதமென்பவென்னையவர்புள்ளுவமே. (௮)

புள்ளுவர்நின்னைப்புறங்கூறிப்புந்திபுழுங்கியென்றும்
எள்ளுவவொன்னேயிபமலைவாழிமையோர்க்கிறைவா
உள்ளுவரானந்தக்கண்ணீருகுப்பருகந்தெழுந்து
துள்ளுவர்பாடுவராடுவருண்மைச்சுபாவத்தரே. (௯)

சுபாவத்ததும்பிச்சுரும்பநற்றொண்டர்க்கருள்சுரக்குஞ்
சுபாவத்தவென்றுதுதிப்போர்க்கருளுஞ்சுகப்பரம
நபாவத்தநின்னிலநச்சுக்கண்ணாரியர்நச்சுமயல்
அபாவத்தனாகவடியேற்கருளோரருமறையே. (௧0)

அருமறையாய்ந்தாய்ந்தளக்கவொண்ணாதவருநிலைய
குருமறைகொண்டறவோர்தொழுந் தஞ்சரக்குன்றவென்றன்
உருமறைமாயையுருகம்வினைகளொழிக்கநின்றாள்
திருமறைபுக்கனன்றோர்கிலனின்றன்றிருவுளமே. (௧௧)

திருமாமலருந்திச்செல்வன்செய்யாகஞ்சிறக்கவந்த
பெருமாமலர்மகள்பேரொளிமாமணிப்பெட்டகமாம்
மருமாமலர்தலைமத்தகமாதங்கமாதிரவென்
கருமாமலங்கழித்தென்றுமெற்காக்குங்கடனினக்கே. ()

நினக்கேதமியனிரந்தரத்தொண்டுநியதிசெய்தென்
மனக்கேதமாறிநின்மாணடிசேர்ந்துய்யும்வாழ்வருள்வாய்

உனக்கேதமொன்றுமுன்னுருளமேயுகப்பாயுவண
வனக்கேதனுவரதாவையமாளிகைமாணிக்கமே. (௧௩)

மாணிக்கநன்மணிமாமோலிமத்தகமன்வரதா
ஆணிக்கநகாம்பரவாடிற்றுப்புரவாக்கனந்தக்
கேணிக்கநவிரதாவடியேன்வினைக்கேதமெல்லாம்
நாணிக்கநருசிபோன்மறைந்தோடநயந்தருளே. (௧௪)

நயந்தருந்திற்செகுப்பான்கோவிகையினடித்துவந்து
குயந்தருபேய்மகள்குன்றவவளுயிர்கொண்டமைந்தா
வியந்தருமாமறைவித்தகர்போற்றிடும்வேழவெற்பா
பயந்தருளெற்குன்பதபங்கயப்பெரும்பாக்கியமே. (௧௫)

பெரும்பாக்கியமொன்றும்பேணலன்பேணனின்பேரடிக்கே
அரும்பாகளிளத்தியணிந்தத்தியத்திரியத்தவென்னைத்
துரும்பாக்கிருளைத்தொலைத்துத்தொலையாச்சுகத்தமுத்தி
வரும்பாக்கினேனின்னைவாழ்த்திவணங்கும்வரம்பெறவே.

வரம்பற்றபேரின்பவாரிதியேவரமாமறையின்
சிரம்பற்றியநின்றிருமாமலர்நிகர்சேவடியே
அரம்பற்றராவவென்றேயடைந்தேனென்னையாட்படுப்பான்
நிரம்பற்றமென்றுணாநீண்மத்தமாமலைநின்மலனே. (௧௭)

நின்மலநித்தநிராமயநீர்சந்தநீடுநில
வின்மலயத்தென்றலிற்பிறர்க்கேயென்றுமின்பாநல்கும்
மின்மலர்புண்ணியகோடிவிமானத்தவேழவெற்ப
பன்மலர்கொண்டுநின்பாதம்பரவப்பணித்தருளே. (௧௮)

பணிபதிநாமங்கொள்பல்வலபாவனப்பல்பெயர
மணிபதிமாணிழைப்பெண்மைந்தனுவும்வார்த்தைசொல்லாக்
குணிபதிகோகிலப்பேர்கூறவுமுன்குறித்தவவென்
பிணிபதிவிட்டுப்பெயரச்செய்வேழப்பிறங்கலனே. (௧௯)

பிறங்கன்மயநின்பெருமாயையாணிதம்பெட்டியற்றும்
மறங்கன்மமாதியமாற்றிநின்மாண்புகழ்மாமருந்தின்
றிறங்கனனமூலம்புகுவித்தென்சனமசிறுமைகட்டாள்
கறங்கன்னவநிறத்தாயகளபாசலககாகுத்தனே. (உ0)

காகுத்தமன்னவகாசினியாசினிகாலளந்த
வாகுத்தமவர்மனவாரணசலவஞ்சன்விட்ட
சோகுத்தமனியப்பூண்முலையுண்டவசோறியென்றுஞ்
சேகுத்தமமயமாயாவிலாசத்தின்றெட்பறுமே. (உக)

தெட்புறச்செய்திமுத்தத்துவஞானமென்சிந்தைதனில்
நட்புறச்செய்தியென்னெஞ்சைநின்னன்பர்கணன்னடையிற்
கொட்புறச்செய்தியெனைவிட்டென்பாவக்குவால்கலெலாம்
விட்புறச்செய்தியஞ்ஞானத்தைவேதண்டவேதண்டனே.

வேதண்டமேந்தியைவெஃகெஃகமேந்தியைவிண்ணவர்க்காக்
கோதண்டமேந்தியைக்கும்பக்கராசலக்குன்றினனை
மூதண்டமேந்தியைமுன்மனனேயர்ச்சிரமுதல
மாதண்டமேந்திநமைவைப்பன்வைகுந்தவானகத்தே. ()

வானகத்தேவரும்வையகத்தேவரும்வாழ்த்துலக
போனகத்தேவனைப்போதகப்பூகரப்புண்ணியனைக்
கானகத்தேவருமொவ்வாதநாமுளமேகணக்கில்
ஊனகத்தேவருமூழ்ழிப்பானென்றுமுன்னுதியே. ()

உன்னுதியென்னுளமேயும்பலோங்கலொளிர்முதலைப்
பன்னுதியப்பரன்பாவனப்பல்பெயர்பன்னுதியேற்
கொன்னுதிவேல்விழிக்கோதையர்குக்கியென்கும்பிவந்து
பின்னுதியாமலருள்வனந்தாமப்பெரும்பதமே. (உரு)

பெரும்பதகத்துப்பிறவிப்பிணிபெயர்ப்பான்பெரியர்
விரும்பதகத்தின்மிளிர்வேழவேதண்டவிண்ணுதியைத்
தரும்பதகத்தசரமதசையிற்றமியன்முன்னர்
அரும்பதகத்தின்மிசைவந்தருளுகியஞ்சலென்றே. (உகா)

என்றாழ்த்திகிரியிருப்பவனில்லமிருநிலம்பொன்
துன்றாழ்த்துணைநசைத்தாரைத்தடைப்பவன்றொண்டர்கட்குக்
கன்றாழ்த்திரங்குங்கறவைகடுப்பவன்காதனெஞ்சே
ஒன்றாழ்த்தொகையொழிந்தோருன்னுவாமலையுச்சியனே.

உசசிட்டமூறிதழ்செந்நீருவர்நீரொழுதருழிக்
கச்சிட்டகொங்கையங்காந்தையர்காதல்கழிவதென்றே

மச்சிட்டமாளிகைவண்கச்சியூர்வையமாளிகைவாழ்
மெய்ச்சிட்டர்போற்றிடும்வேதாந்தமேவிவிளங்கொளியே.

ஒளியுருவானையுணர்வுருவானையுலகளந்த
களியுருவானைநன்ஞானியருள்ளநளினமகிழ்
களியுருவானைக்கறையடிக்கல்லகக்கண்ணுறையும்
அளியுருவானையலரெட்டினென்றுமருச்சிநெஞ்சே. (உகூ)

அருச்சித்தயனத்தியாசானனந்தனகவகத்தை
வருச்சித்தருள்பெறும்வண்ணஞ்செய்கச்சிவரதவரன்
கருச்சித்திரகுத்தன்காணுங்கணக்கைக்கடந்துநின்றன்
உருச்சித்தம்வைத்துத்தொழச்செய்தடியனையுய்யச்செய்யே.

உய்விரதங்களிலூன்றுதவரையுமுய்யும்வண்ணங்
கய்விரதங்கொண்டுகாத்தியென்போரையுங்காக்கவெண்ணி
மெய்விரதப்புவிமேவியவேழவெற்பாவடியேன்
செய்விரதந்தனைச்செப்புநின்முத்திசித்திக்கவே. (௩க)

சித்திக்குஞ்செல்வங்கள்யாவைக்குமெண்வகைச்சித்திகட்கும்
பத்திக்குமண்டப்படைப்பாதிகட்கும்பழிப்பிலதா
முத்திக்குமூலமெனவேமுதனூன்மொழிந்திடுமால்
எத்திக்குமேத்தியிறைஞ்சுமிபமலையேந்தலையே. (௩உ)

ஏந்தலைநந்தலையெண்ணிபவெற்பணிணையடியை
மாந்தலைமற்றவன்மாணிசைத்தேன்செவிவாய்மடுத்துப்
போந்தலைபுண்ணியபாவப்பிறவிப்புணரிதனை
நீந்தலையாயினெஞ்சேயெங்ஙன்முத்திகிலைவருமே. (௩௩)

முத்திநகரத்துண்முக்கியமாயதுமொய்யறங்கள்
சித்திநகரத்துட்சீரியதாயதுஞ்செய்யமனச்
சுத்திநகரத்துட்சுத்தியதாயதுந்தொண்டர்தொழும்
அத்திநகவருளாளன்றிருக்கச்சியாநகரே. (௩ச)

ஆனகந்தோறுமமர்ந்தானுமண்டர்களந்தணர்க்காக்
கானகந்தோறுங்கலந்தானுங்கண்பயிர்க்காரறல்போல்
ஊனகந்தோறுமுலவுமுயிர்க்குயிராயவனும்
வானகந்தோயுமதிட்டிருக்கச்சிநம்மாதவனே. (௩ரு)

மாதவன்வாமனன்வைகுந்தன் வண்மகரகுழைசேர்
காதவன்கண்ணன் கருமணிவண்ணன்களிக்கமலப்
போதவன்வேள்வியிற்போந்தவனம்மயற்புல்லிருட்கோர்
ஆதவன்கச்சியருளாளன்பாதமடைநெஞ்சே. (௩௬)

நெஞ்சகமேநிரந்தரமோர்நிலைநின்றுருகி
வஞ்சகமேவியமன்னவன்பாலைவர்வாழவெண்ணி
அஞ்சகம்வேண்டியவப்பனையத்திபசலனைநம்
அஞ்சகம்போக்கியருள்வானடைநியடைக்கலமே. (௩௭)

அடைக்கலமாகவடைவோர்தமையளிப்பான்கரத்தைம்
படைக்கலமேந்திப்பகட்டுப்பரம்புறைபண்ணவனே
கடைக்கலமார்பத்தகாலன்றமர்கள்கடுத்தொறுக்குங்
கடைக்கலமென்னைக்களிப்புடன்காக்குங்கடனினதே. (௩௮)

காக்குங்கடன்மைகரத்துங்கடன்மைகரந்ததுபோல்
ஆக்குங்கடன்மையபயம்புகுந்தவரல்லலெல்லாம்
நீக்குங்கடன்மைநெகிழ்நெஞ்சத்தன்பர்தநீளபிறவி
போக்குங்கடன்மைகள்பூண்டோன்கரிகிரிப்புண்ணியனே.

புண்ணியபாவங்கள்பொன்னயவல்விகள்போல்வனவாம்
நண்ணியவன்னவைநீக்கின்பாதநளினமுளம்
எண்ணியவண்ணமெனுநான்றுமிருப்பானிரங்கிநனித்
தண்ணியவென்றனைத்தாங்குகிதந்தித்தரணியனே. (௪0)

தந்தித்தரணியதாமரைமாதுகயங்குரத்த
கந்தித்தரணிக்கனல்போலவெங்குங்கரந்தவப்ப
வந்தித்தரணிவருந்தாதடியனைவைகுந்தத்தே
உந்தித்தரணிவழியுய்த்துவைககவுகந்தருளே. (௪௧)

உகந்தருவானவுயிர்க்குயிராகியுறைபவனும்
இகந்தருவானுமபாந்தருவானுமியைந்தெணநல்
அகந்தருவானுமழியாதபேரின்பமானமுத்திச்
சுகந்தருவானுமெழிற்றும்பிமாமலைத்தூயவனே. (௪௨)

தூயவன்றுச்சவணற்காப்புவிவிண்டுணையடியாற்
றுயவன்றுமோதரன்றனைசசாராதருக்கினர்கருச்

சேயவன்சீரியர்சிந்தையன்செய்யவள்சேருநாதன்
மாயவன்மாதிரமாதிரன்றாளசேரமடமனனே. (சா௩)

மடங்கலைமண்டொழுமாதிரமாதிரமாலைநர
மடங்கலைமாயனைவண்டுவராபதிமன்னவனை
மடங்கலைமானுமும்மம்மைமாறிவருபிறப்பாம்
மடங்கலைமாய்க்கவென்னெஞ்சேவழுத்திவணங்குதியே. ()

வணங்குதிவஞ்சரையைவர்தம்மைவணங்கவென்றூற்
பிணங்குகிமுன்செய்வினைப்பயனும்பெருமபிழைக்கஞ்சி
உணங்குகியுற்றின்றுவாமலையாண்டியுன்னிநிற்க
இணங்குதியாயினெஞ்சேயில்லையில்லையினிப்பிறப்பே.(சரு)

பிறவிக்குமூலம்பிரகிருதிக்குணப்பேரிணைப்பு
பிறவிக்குமோசனமக்குணமோசனம்பேசிவற்றை
மறவிக்குக்காரணமாக்காதென்மாமனனேமதிழ்ந்து
துறவிக்குழாந்தொழுந்தம்பிச்சயிலறத்தொண்டியற்றே.

தொண்டுவழிக்கொக்குத்தோன்றிமறைவதச்சூகறிந்து
தொண்டுவழிநின்றகொல்லாசிரியர்களுசொம்படியே
விண்டுவழிமதவேதண்டவேதண்டவேதியனைக்
கண்டுவழிபடினெஞ்சேகடுவினைக்கட்டறுமே. (சஎ)

கட்டிடலாங்கடுங்கால்போற்றிரிந்துகறங்குநெஞ்சைச்
சுட்டிடலாஞ்சித்தர்குத்தன்கணக்குச்சுருளையெல்லாம்
அட்டிடலாமைம்பொறியடையாரையகப்பிறவி
தட்டிடலாந்தந்திரத்தாவரன்றன்னருள்சார்ந்திடினே.(சஅ)

அருள்வாய்ந்தநெஞ்சத்தறவோருமாரணத்தந்தமுறை
பொருள்வாய்ந்தபுந்திப்புனிதரும்போற்றிப்புகழ்ந்துநிற்குந்
தெருள்வாய்ந்தசிந்தூரச்செஞ்சிலம்பார்ந்தநிவாசவென்
இருள்வாய்ந்தநெஞ்சையியக்கின்றுட்டொண்டிருத்துதியே.

இருத்துதிபொற்றைக்குமென்னைநின்றெண்டரிருங்குழுவிற்
பொருத்துதியொன்புந்தியையயவரோவல்புரிந்துநிற்கத்
திருத்துதிசெய்தவர்சீராமமூதென்செவியின்மடுத்
தருத்துதியத்திகிரியருளாளவகமகிழ்ந்தே. (ருo)

மகிழ்மாலைமார்பன்றிருவாய்மலர்ந்தமறைத்தமிழ்க்கே
மகிழ்மாலைவாரணமாமலைமாலைமடவியர்க்கே
நெகிழ்மாலைகொண்டநினைத்தன்னிகரற்றநீர்மையெண்ணி
நெகிழ்மாலையையாநிகழ்த்துவித்தானைநினைநெஞ்சே. ()

நினைதற்குநீயுண்டுநெஞ்சகமேநிலநீர்மலர்கள்
வனைதற்குக்கையுண்டுவாழ்த்தற்குநாவுண்டுவண்பொருள்கள்
புனைதற்குமுண்டுபுரத்தற்கிபமலைப்புண்ணியனுண்
டினைதற்குககாரணமென்னீயிருவென்றுமேமமுற்றே.(ருஉ)

எமக்கலிங்கனையென்றாழ்த்திகிரியிருப்பவனை
வாமக்கலிசன்றிவாழ்த்துடைவண்கச்சிவாழ்பவனை
வீமக்கலிவயமாகாதுநெஞ்சேவிரும்புதியேற்
பாமக்கலிகடற்பார்வருநம்பவப்பற்றறுமே. (ருங)

பவப்பற்றுப்பாற்றுவன்பார்ப்பொருட்கூட்டத்தின்பாங்கருவர்ப்
புவப்பற்றுநிற்குமுறுதியுநல்குவனூன்றியென்றுந்
தவப்பற்றுத்தாபதர்சார்ந்திடுந்தந்தித்தரணியன்றுள்
தவப்பற்றுக்கோடெனச்சாரநெஞ்சேநீதலைப்படினே.(ருச)

தலைப்பட்டமூத்தத்துவஞானமுஞ்செந்தமிழ்மறையாங்
கலைப்பட்டவைம்பொருட்காட்சியுங்கைப்படுங்காதனெஞ்சே
நிலைப்பட்டதானநிகமாந்தமேத்துங்கைநீண்டதும்பி
மலைப்பட்டமாதவன்மாணடிசோதிமறப்பறவே. (ருரு)

மறப்பறுமாதங்கமாமலையான்கழன்மன்னுதியேற்
பிறப்பறும்பேசவொண்ணாப்பீழைத்தாகுமபெருநரகின்
விறப்பறும்வேதனைசெய்வானடுவன்விடும்படர்தஞ்
சிறப்பறுஞ்சீரியசித்தியுஞ்சித்திகருந்திண்ணநெஞ்சே. ()

திண்ணங்கடைப்பிடிநெஞ்சேதிருக்கச்சிசசீர்நகரில்
வண்ணங்கருமுகில்போல்வையமாளிகைவாழ்பவனை
மண்ணங்கனைமலர்மாதுமணாளனைவாய்ந்துசுட்ட
சுண்ணங்கடையனலபோறசுடுந்துன்பந்துடைத்தியென்றே.

துடைக்குதிதொலலுயிர்தொக்குறையண்டத்தொகுதிகளைப்
படைக்குதிபாலனஞ்செய்தியிலீலையிற்பல்வகைமீன்

மடைக்குதிகொள்ளும்வயற்கசசிமாநகர்வாழ்வரதா
நடைக்குதிர்நேருடல்போனுண்ணுடல்விடுநாணுவலே.()

நாணுவல்சான்றெனநீநிற்கநான்செய்நவைகட்கெல்லாம்
பேணுவல்யான்செய்பிழைபொறுப்பாயென்றிப்பிண்டம்விடு
நாணுவல்வாயென்றுநாடோறுநாடுவனுகளிகள்
பாணுவல்சோலைப்பகட்டோங்கற்பஞ்சவர்பக்கத்தனே. ()

பக்கப்பதங்கப்பதியூர்பவனைப்பரிதிகொண்டு
பொக்கப்பதங்கற்புதைத்தானைப்பூட்கைப்பொருப்பினனை
அககப்பதங்காதியிலைவர்போலழியாதமுதச்
சொக்கப்பதம்பெறுவான்று டிதோறுந்தொழுதிநெஞ்சே.

தொழுதிநெஞ்சே தும்பித்தூமலையானைநந்தொக்கவனிப்
புழுதிநெடுநப்புணரப்புரண்டுபுரண்டலறி
அழுதிநெடித்தக்கமம்புதம்வாரவவ்சமுற்றே
எழுதிநெகிழ்தியிருத்தியிவ்வாறென்றுமீடுபட்டே. (சுக)

ஈடுபட்டுத்தும்பியைந்தலெம்மானடியேத்துதியேற்
காடுபட்டுகிடக குந்நினைத்தன்னருட்காறலத்தாற்
பாடுபட்டுப்பண்படுத்திப்பத்திப்பயிரபல்கச்செய்வன்
பீடுபட்டென்றும்பெருப்பேறும்பெற்றுய்தும்பேதைநெஞ்சே.

பேதைகட்கெல்லாம்பெரும்பேதையாகியபெற்றியனை
மேதைகட்கெல்லாமிகுமேதைமேவவிழைந்தருளிப்
பாதைகட்கெல்லாம்பரமானவர்ச்சிரப்பாதையுய்ப்பன்
தாதைகட்கெல்லாந்தனித்தாதைதந்தித்தராதரனே.(சுங)

தராதரமார்பத்தமனியற்சாய்த்தவசாரலகை
உராதரமுண்டவவும்பனல்லோங்கலொளிர்முதல்வ
நிராதரநின்மலநீசனையிங்நிலநீள்பொருட்கண்
நிராதரனுகநின்னித்யவிபூதிநிலையருளே. (சுச)

நிலையாதகாயநிலைத்ததென்றெண்ணிநெடும்பொழுதுந்
தொலையாதபாவத்தொகுதிதொகுத்துத்துயருறுவேன்
உலையாதகீர்த்திபுவணப்புள்ளூர்தியவோங்குமும்பன்
மலையாதவநின்றன்மாயாமயக்கைமறுத்தருளே. (சுரு)

மறுத்தருளேம்புலமாற்றலர்மாட்டுறும்வன்மையெலாம்
அறுத்தருளென்றனருவினைதன்னையதற்கடியைச்
செறுத்தருள்யான்றெரிந்துந்தெரியாமலுஞ்செய்பிழையைப்
பொறுத்தருள்பூட்கைப்பொருப்பிற்பொலியும்புராதனனே.

புராதனமாமறைபோற்றும்புராணபுருடபற்ப
வராதனமாமகள்வாழ்மணிமார்பவனசமலர்க்
கராதனதன்றொழுங்கச்சியவெற்குக்கடைக்கணருள்
தராதனலூர்திதனறந்தாய்தவிர்தறருமமன்றே. (௬௭)

தருமக்களஞ்சியமானாய்தந்தாவளத்தாமதிதி
தருமக்களஞ்சச்சரமாரிபெய்திடுஞ்சார்ங்கவில்லோய்
பெருமக்களஞ்சலிவந்தனைபெற்றவபோக்கவொண்ணாக்
கருமக்களஞ்சியன்காண்கனைகண்ணின்கழற்றுணையே. ()

துணையாவதுமென்றுநெஞ்சேநம்முச்சியிற்சூடுமலர்ப்
பிணையாவதும்பிறவிக்கடற்றொண்டுவிகசூம்பெருமைப்
புணையாவதும்புலவோர்பொருளாவதும்போற்றெடுப்பு
மிணையாவதுமில்லிபவிறும்பூதனிருங்கழலே. (௬௬)

இருங்கழலெம்பரதாழ்வான்பெற்றுய்யவிசைந்தகழல்
மருங்கழன்மின்னேரகலிகையுத்தரைமைந்தனுருத்
தருங்கழற்றாணிதாவியதண்கழற்றனவரை
ஒருங்கழலாழிப்படையோங்கலோங்கலனெண்கழலே. ()

ஒண்மணிவண்ணனுபயவிபூதியுயிர்கட்கெல்லாங்
கண்மணிபோன்றநங்கண்ணன்கலசக்கடற்பிறந்த
பெண்மணிநாயகன்பேசுமொராயிரம்பேருடையான்
திண்மணிகோடுடைத்தும்பிச்சிலம்பன்றெரிநெஞ்சே.

தெரிமாவெனவந்துதேசிகற்செற்றநந்தேசிகன்வெள்
ளரிமாவெனவங்ககவிடந்தாங்கியவப்பனினிப்
பரிமாவெனவந்துபாரளிப்பானற்படிவர்தொழுங்
கரிமாமலையனெஞ்சேயெவ்வுலகுக்குங்காரணனே. (௭௨)

காரணனண்டகணங்கட்கவற்றையெல்லாங்கடைநாள்
பாரணன்பாலனெனப்பாலிப்பத்திரம்பள்ளிகொள்வோன்

பூரணன்புண்ணியன்பூட்கைப்பொருப்பன்பொருவியெயாம்
காரணன்ருணம்புளமேபவமொழிநன்மருந்தே. (எங)

மருந்தானவன்பவநோய்க்குவிதுரான்றன்மாமனைக்கு
விருந்தானவன்விறன்மாயாநிசிக்கோவிரோசனன்போர்
பொருந்தானவவைரிபொல்லாப்புலகசடுவைப்பொடிக்கும்
மருந்தானவன்மத்தமாமலைவானவர்மன்னவனே. (எச)

வானவர்மன்னவன்வானரமன்னவன்வாளரக்கர்
கானவர்மன்னவர்காக்கவென்றேவிறசுரமெடுத்து
மானவர்மன்னவனுகியவீரன்மரபடியார
ஆனவர்மனனவருளதியத்திரியாண்டவனே. (எரு)

ஆண்டவமேயறுபானேழிச்சன்மத்தசன்றனவான்
மாண்டவநேகவரன்கற்பமும்மையின்மற்றுனக்காள்
பூண்டவனும்மையிலுய்வன்காளியன்பொன்முடிமேற்
ருண்டவஞ்செய்சவதந்திமலைச்சக்கரதரனே. (எசு)

சக்கரன்சங்கன்றறிவாளன்றண்டனற்சார்ங்கனெற்றிச்
சக்கரன்வாழ்வலப்பாகன்சயந்தனசார்ங்கதனிச்
சக்கரன்றுமமறைத்தவனெஞ்சேதவத்ததந்திச
சக்கரன்றொடொழின்வற்றிடுநம்பவசாகரமே. (எஎ)

பவசாகரத்திற்படிவோர்க்குப்பவிரியன்னுய்த்தருமக்
கவசாகரதாடணமுத்தலைபரைக்காய்ந்தவநற்
றவசாகராதொழுந்தந்தித்தராதரதார்க்கியப்போர்த்
துவசாகரவடநீகரியடியனைத்தொண்டுகொள்ளே. (எஅ)

தொண்டுகொண்டேன்றும்பித்தொன்மலையான்பொற்றுணையடிக்கே
விண்டுகொண்டேனென்வினைவிலங்கன்னவன்வீறருளாங்
தண்டுகொண்டேன்சமன்சாராமனற்பரந்தாமவழி
கண்டுகொண்டேனென்பிறவிக்கடலைக்கடந்தனனே ()

கடலைக்கடப்பானணைகட்டுங்காகுத்தகட்டுளவப்
படலைக்கடவுட்பருஉமணிமார்பபகட்டுவெற்ப
நடலைக்கடம்விடுநாளடியோர்க்குநின்னலருளாம்
முடலைக்கடவையினேற்றுதிமுத்திக்கொர்முட்டறவே. ()

முட்டின்றிநாடொறுநின்கழற்கொண்டின்முயன்றிடவும்
பெட்டின்றிநின்பெயர்பேசவுமுககுணப்பீழைதனில்
ஒட்டின்றிநிற்கவுமிவ்வுடல்வீழ்பொழுதுன்பதத்தைத்
தட்டின்றியெய்தவுந்தண்ணருள்செய்தந்தித்தாமத்தனே.

தாமத்தனஞ்சயன்சாரதியானதலைவமணித்
தாமத்தசோதைதளைந்திட்டதாமோதரதமியேன்
தாமத்தளையறத்தண்ணருள்செய்திதந்தாவளப்பேர்த்
தாமத்தனிமுதலேநற்றராதரச்சத்திரனே. (அஉ)

சத்திரவத்திரத்தாற்றுனவரைத்தடிந்தவபொற்
பத்திரவத்திரபாண்டவதூதபதக்குமுத
மித்திரவத்திரமேதக்கவேதண்டவெற்பவென்றன்
குத்திரவத்திரநெஞ்சைநின்றுணிற்கக்கூட்டுதியே. (அங)

கூட்டுதிகூடாப்பொருளைசராசரக்கூட்டமெலாங்
காட்டுதிகட்கமலாசனன்கண்ணின்றுகாட்டவற்றை
நாட்டுதிநின்னுருவாய்நின்றுநக்கபிரான்கணின்று
வீட்டுதிவேழவெற்பாநின்விழுச்சீர்விளம்பரிதே. (அச)

விளங்கனிவீழ்த்திடவெய்யவற்சக்குணிலவீசியவா
களங்கனிவண்ணகளிற்றசலாகண்டுகட்கரும்பு
குளங்கனிபோலபவகுற்றமெலாங் குடிகொண்டவென்றன்
உளங்கனிந்துன்னடியுன்னியுய்நாளென்றுரைத்தருளே. ()

அருள்குடிகொண்டவம்போருகவம்பகவாரணத்தின்
பொருள்குடிகொண்டநற்புந்தியர்போற்றிடும்பூட்கைவெற்ப
இருள்குடிகொண்டவெளியேனுளத்துன்னிறைமைநிலைத்
தெருள்குடிகொண்டுதிகழ்ந்திடசெய்திதிருவருளே. ()

திருக்கச்சியிற்றிரியாமானமானத்திரிபுமன்பா
உருக்கசினகரவுள்ளத்துவந்துறையொள்ளொளியே
மருக்கச்சிளமுலைமானார்மயலடிமாறநலர்தம்
வருக்கசிறுமைவளாந்தாள்கரிகிரிவானவனே. (அஎ)

வானவரம்பையர்வார்முலைப்போகமும்வையகத்துப்
பீனவரம்பைக்கவான்பெண்கள்போகமும்பெட்டொழுகும்

ஈனவரம்பையிகந்துநின்றொழுதேத்திநிற்கும்
ஞானவரம்பைநயந்தருணாகநகத்திறையே. (௮௮)

நகத்திறையானநன்னாகாசலத்துறைநாயகமுச்
சகத்திறையானவசார்சடசீவசரீரவவி
மகத்திறையானவமார்த்தாண்டன்மைந்தன்வரும்பொழுது
ககத்திறைமீதுகமலையுடன்வந்தெற்காத்தருளே. (௮௯)

காத்திரந்தந்தனைநின்பணிசெய்யநிற்கண்டுணர
நேத்திரந்தந்தனைநின்னைநினைத்திடநெஞ்சுதந்தாய்
சோத்திரந்தந்தனைநின்புகழ்கேட்கத்துதிக்கநன்னாத்
தோத்திரந்தந்தனைதும்பிச்சயிலச்சுராதிபனே. (௯0)

சுராசுரர்வேட்டசுதைநிகராநற்சுதையனையாய்
முராசுரற்செற்றமுகுந்தகரிகிரிவாழ்முதல்வ
நராசுரயோனிகள்போனடத்தாதென்னைநாளுநின்றாள்
பராசுரனல்கிப்பணிகொண்டெக்காலுமெற்பாலிப்பையே.

பாலனத்தான்கடைக்கண்ணுண்டுவந்திடும்பல்லுலகப்
பாலனத்தானற்பகட்டுப்பருப்பதத்தான்பறக்கும்
பாலனத்தாற்பயந்தான்றவத்தேவகிப்பாவைபெற்ற
பாலனததானெஞ்சமேநமைக்காக்கும்பரத்தினனே. (௯௨)

பரத்தினன்பன்னுமிகத்தினன்பங்கயப்பாவைதிகழ்
உரத்தினன்குஞ்சரவோங்கலனைம்படையுற்றொளிருங்
கரத்தினன்காஞ்சனககாழகன்காமரக்காமர்மறைச்
சிரத்தினனிச்சகச்சன்மாதிகாரணன்றேர்திநெஞ்சே. ()

நெஞ்சகமேநீநிதநங்கரிகிரிநின்மலன்றாள்
வஞ்சகமேயின்றிவாழ்த்திவணங்குதியேனமது
விஞ்சகமேட்டைவிமோசனித்துத்தன்பொன்வீடுநல்கி
மஞ்சகமேவியவானோர்குழாத்தொடும்வாழ்விப்பனே. ()

வாழ்த்தல்வணங்கிவழிபடறன்பதவாரிசமே
ஊழ்த்தல்புரிவித்தொருவாமலூறுசெய்யூழ்வினையைத்
தாழ்த்தலசெய்யாதுதவிர்த்தினிமேற்சன்மசாகரத்தில்
வீழ்ததல்செய்யானெஞ்சமேநம்புதிகரிவெற்பனையே. ()

வெற்புக்கடங்கொண்டவித்தகக்கட்டானவன்வெஞ்செருக்கின்
வற்புகடந்தவராகன்கரிகிரிவாழ்வரதன்
கற்புக்கடல்கமலாநாயகனம்மக்காததளிகரும்
அற்புதகடன்மைகொண்டோனெஞ்சமேயீந்துகொள்ளே.

அறிந்துகொண்டேன்சகச்சன்மாதிகாரணனனவனை
அறிந்துகொண்டேனுயிர்க்காதாரபூதனையவ்வணமே
அறிந்துகொண்டேனன்றனுகாரமூன்றையுமையமின்றி
அறிந்துகொண்டேனத்திவெற்பனருளினைக்காதியென்றே.

ஆதியென்றுதியுமைம்பூதமுமைம்பொறிபுலனும்
ஆதியென்றுமமுயிர்க்கந்தரியாமியுமாருயிரும
ஆதியென்றாழமுதாழியந்தாமத்தமாபவனும
ஆதியென்றும்மத்திபத்திரியாய்சொலும்யாவுமன்றே. ()

அன்றென்பர்சில்லோர்நினைக்காரணப்பொருளாகுமது
நன்றென்றுமுள்ளபரமாணுநற்பிரதானமெனப
தொன்றென்றுசொற்றிருச்சேதனரென்பதுதிக்கைமலைக்
குன்றென்றும்வாழ்ந்திடுங்கோவிந்தவிதென்னகூத்தனையே.

உரைக்கடங்காதுயர்சாம்பூநதப்பொன்னுடையுடையாய்
வரைகடங்காதுயர்வண்புகழாய்மருண்மாமலையாய்
உரைக்கடங்காதுருற்பவவாரியொழித்தெனையாள்
கரைக்கடங்காக்கருணைகட்லேயென்றன்கண்மணியே. ()

வாழிதிருக்கச்சிவாழிநம்வாரணவெள்ளன்மலை
வாழிவரதனருளாளனென்னுநம்வானவர்கோன்
வாழிநந்தாய்பெருந்தேவிவனசநன்மாளிகையாள்
வாழிமறையவர்வாழியுபயம்மறைகளுமே.

---

அருளாளன்கச்சியமராதிபன்றன்னடியிணைமேற்
பொருளார்ந்தநூறுசொல்லந்தாதிமாலைபுனைந்தனனால்
அருளார்ந்தசிகரத்திராமானுசாரியனங்கழல்சோ
தெருளார்ந்தசீலமெனகிராசதாசன்சிறப்புறவே.

அத்திகிரி யந்தாதி

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# சேடகிரியந்தாதி.

## காப்பு.

செந்தாமரைமலராள் சேர்மார்பன்சேடகிரி
யந்தாமவண்ண லடியிணைமேல்—அந்தாதிப்
பாவினமாலையொன்று பாடநெஞ்சேதென்குருகூர்
மேவினமாறன்றாள் விரும்பு.

## நூல்.

திருமலையாய்திகழ்மாமணிசெய்யவள்சேருரத்தாய்
பொருமலையாழிப்புராணபுருடபுகல்புகுவோர்
கருமலைகன்மருந்தேகன்மம்வாட்டக்கலவுமென்றன்
பொருமலைப்போகவிடப்பூப்பதெப்போதுநின்பொங்கருளே.

அருளேதிருவுருவானவவேங்கடத்தப்பமறைப்
பொருளேபுருடோத்தமநாமதேயப்புராதனனே
இருளேயுமீரிரண்டாங்கதிதோறுமெடுக்குஞ்சன்ம
மருளேய்மடங்கன்மடங்கவருளாருண்மாமருந்தே. (௨)

மருந்தேயடியார்பிறவிப்பிணிக்குவடமலைவாழ்
பெருந்தேவதேவபிரமாண்டத்தோடுபிதாமகனைத்
தருந்தேமலருந்தித்தாமோதரதமியேனையென்றும்
இருந்தேவருத்துமிருவினையுங்கெடவெண்ணுதியே. (௩)

எண்கண்டமொன்பதெனப்பாகுபாடுற்றிலங்கிடுமிம்
மண்கண்டதெய்வநல்வான்கண்டதெய்வம்வடமலையாய்
கண்கண்டதெய்வநினையன்றியிலையென்காயமதைப்
புண்கண்டடர்த்திடும்புன்கணிரித்தெற்புரந்தருளே. (௪)

புரந்தரனாதியர்போற்றிப்புகழுமபுயங்கமலைத்
துரந்தரமுறநத்துறந்தோர்களுள்ளச்சுகாதனனே
நிரந்தரமென்னைநெருக்கும்பிணிகளைநீக்கிடவோர்
வரந்தரவேண்டுமெந்தாயலர்மேன்மங்கைமன்னவனே. ()

மன்னவனற்றொண்டைமானுக்கருள்செய்வடமலையாய்
பொன்னவன்மார்பினைப்போழ்ந்தாயெவர்க்குமபுகலிடமா
முன்னவமாமறைதன்னைநின்னுந்திமுளைத்தவற்குச்
சொன்னவவென்பவத்துன்பைத்துடைக்கவொர்சூழ்ச்சிசொல்லே.

சொற்பொருளாதிதெரிவித்துநின்னைத்துதித்திடச்செய்
தெற்பொருளாக்குமிரும்பையிறும்பவிருககினந்த
நற்பொருளேநவின்றன்மறைதேர்ந்தநல்லோருளம்வாழ்
சிற்பொருளேயென்சிறுமையையிக்கணந்தீர்த்தருளே. (எ)

தீர்த்தங்கள்கோடிதினந்தினமாடினுஞ்செப்புமிட்டா
பூர்த்தங்கள்கோடிபுரியினும்வீணம்புயங்கமலைத்
தீர்த்தன்றிருவடிதிண்ணநெஞ்சேநம்பிச்சேர்ந்திடினோர்
மூர்த்தந்தனின்மைமொய்த்தபிணிகள்முடிந்திடுமே. (அ)

முடிந்திடுந்தேவர்முடியாததேவர்மொழிமனங்கள்
படிந்திடும்பாதனற்பாந்தட்பருப்பதன்பற்றலைத்
தடிந்திடுஞ்சக்கரன்சாக்காடுசன்மத்தவறறவே
கடிந்திடுவான்மனனேநீயவன்பெயர்கட்டுரையே. (௯)

கட்டுரையாடைக்கதாரகண்மலர்க்காப்புடைசூழ்
நெட்டுரைவேங்கடவாணவுடலையுநெஞ்சினையுந்
தொட்டுரைதொல்லைத்துயர்வினையின்னேதுரப்பலென்றோர்
கட்டுரையெற்குக்கழறிககடைக்கட்கருணைசெய்யே. (௧0)

செய்யாளுறைதிருமார்பமணிகடிகழனந்தம்
பையாளுரகப்பருப்பதத்தாய்நின்பதம்பணியுங்
கையாளெனுமெற்கவற்றுங்கையாறுகழலவருள்
செய்யாத்திறனென்றிருவாய்மலர்ந்ததைச்செப்புதியே. ()

செப்பும்பவமும்வினையுமறிற்றுயர்தீருமெனின்
ஒப்பும்முயர்வுமிலாவுரகாசலவுண்மைகண்டோர்
ஒப்பும்முனதுகருணையுதிககினஃதோடலின்றித்
தபபுமவிரகுந்தலைப்படுமோவதைச்சாற்றுதியே. (௧உ)

சாற்றுதியூதுமுலைமெழுகெனனத்தளர்ந்திடுமென்
ஓற்றுதியேற்றென்னுறுகணையுன்னியுளமிரங்கிக்

காற்றுதிதீயிற்கவற்றும்வினையைக்கழற்றியெற்காப்
பாற்றுதிவேங்கடவாணவென்சன்மமறும்பரிசே. (௧௩)

பரியுங்குறளுங்கமடமுமீனமும்பன்றியுமாள்
அரியுந்திரிவிதராமனுங்கண்ணனுமாயவனே
விரியும்பெரும்புகழ்வேங்கடவெற்பவென்வெவ்வினையை
யெரியுங்கனலிட்டதூசாக்கியாட்கொளவெண்ணுதியே. ()

எண்ணிலவானபவமெடுத்தெய்த்தவிவ்வேழைதனை
வெண்ணிலவென்னவிரியும்புகழ்த்திருவேங்கடவா
கண்ணிலவும்மணியேகழலாக்கன்மக்கட்டறுத்து
மண்ணிலவுந்தன்மைமாற்றியந்தாமத்தில்வைத்தருளே. ()

வைத்தனையென்வல்வினைப்பயன்றுய்த்துவருந்திடுவான்
நத்தனைபோலநயந்துகுறும்பையறுத்தநம்பிப்
பத்தனையாண்டபணிவெற்பநின்னையென்பாவவலி
எத்தனையேனுமிரங்காதிருக்கவிசைவித்ததே. (௧௬)

வித்தகவேங்கடவெற்பமிளிர்மணிவித்தமுடி
மத்தகவென்றன்பவமாமடிக்குமருந்துன்மனப்
புத்தகம்விட்டெங்குப்போயிற்றுநின்னிரும்பொங்கருளாஞ்
சத்தகத்தென்பாற்றவிர்ந்ததுபோலித்தராதலத்தே. (௧௭)

தலத்தேவருந்துந்தமியனைக்காக்கத்தயையிலைகொல்
நிலத்தேவரும்பொன்னிலத்தேவருநித்தியவுலகக்
குலத்தேவருந்தொழுங்குண்டலிக்குன்றத்தகூர்ந்தபவ
மலத்தேவருத்திமயக்கிடுமாயைவலிதுமித்தே. (௧௮)

துமித்தனைதுட்டரைச்சிட்டரைக்காத்தனைதொண்டர்பிழை
சமித்தனையென்றுமென்றேசர்ப்பவெற்பநின்றுளடைந்தேன
துமித்தனையன்புநின்றென்மாயைசெய்வித்ததோமையெல்லாங்
கமித்தனைசெய்யினென்கன்மப்பிறவிகழன்றிடுமே. (௧௯)

கழன்றொழியும்பண்டைக்காலவினையின்கணங்களெலாஞ்
சுழன்றொழியும்மவற்றாற்றொட்டர்துன்பத்தொழுதியெல்லாம்
உழன்றொழியாப்பவத்தென்மீதகூாருயிரையெல்லாம்
அழன்றொழியாழியனந்தாசலநின்னருள்வரினே. (௨0)

வரிவளையங்கைமடவார்கலவிமயக்குடனே
எரிவளைந்தென்னவிடர்செய்வினையையிரியரியுஞ்
சுரிவளையுந்தொண்டைமானுக்கருள்பணித்தொன்மலையாய்
அரிவளைக்கையலர்மேன்மங்கைவாழூரத்தச்சுதனே. (உக)

அச்சுதவம்புயநங்கைமணாளவடியனைவை
வச்சுதனென்னவருத்தும்வினையைநின்வான்கருணை
வைச்சுதனங்கொடுவாட்டிடுவாய்வரன்வானவர்கள்
அச்சுதன்மத்துறைவோன்போற்றும்வேங்கடத்தற்புதனே.

அற்புதவேங்கடவாணதனுவெனயானெடுத்த
புற்புதர்போயினமானுடமாமிப்புரத்திலெனை
வற்புதணத்தின்வருத்திடும்வல்வினைவான்பகையைப்
புற்புதம்போலப்பொருக்கெனப்போகப்புரிந்தருளே. ()

புரிந்தவிவ்வண்டம்பொருந்தியவீரேழ்புவனமெலாம்
விரிந்தபுகழெனவெண்ணிறமார்ந்தவியாளவெற்பா
தெரிந்துந்தெரியாமலுஞ்சிறியேன்செய்ததீவினைத்தாள்
அரிந்தெனைக்காத்தியருட்கடலாகுமரிந்தமனே. (உச)

அரிந்தமயாவுமமைத்திடவல்லவவாய்ந்தனைத்துந்
தெரிந்தவசேடச்சிலம்புறைதேவர்கடேவநனி
பரிந்தமனத்துடனின்பாதம்பற்றிடும்பத்திதந்தென்
விரிந்தவினையின்விளைநோய்கள்வீயவிதித்தருளே. (உரு)

விதித்தவிதியின்படியடியேன்கொள்விடக்குடலால்
உதித்தவுறுவல்களுண்டதமையுமுளமிரங்கிச்
சதித்தவப்பெற்றியசன்மந்தவிர்த்திசதுமறைதேர்
மதித்தவர்வாழ்த்திடுமாசுணவேந்தன்மலைக்கரசே. (உசு)

மலைமருந்தப்பிணிமாற்றுமருத்துவவாழ்வடமா
மலைமருந்தானவமாமணிமுத்தம்வரன்றிடும்பால்
அலைமருந்தாக்கியவப்பவென்னுமயமாம்பிறவி
குலைமருந்தொன்றுகொடுக்கத்திருவுளங்கொண்டருளே.

கொண்டவியாதியின்கூட்டமெலாங்குடிகொண்டொறுக்கும்
பிண்டவிகற்பங்கள்பெற்றடியேன்படும்பீழைதரும்

சண்டவிதலைதவிர்த்தாள்சராசரஞ்சார்ந்தவண்டம்
உண்டவிடங்கவுரகாசலத்துறையுத்தமனே. (௨௯)

உத்தமனாகியுலகளந்தாயுரகோதிமம்வாழ்
சத்தமசாதுசனபாரிசாததகையடியார்
சுத்தமனத்துச்சுடரொளியேபவத்துன்பறநின்
அத்தமருந்தருள்வாயென்வினையையறத்துணித்தே. (௨௯)

அறந்தலைநின்றவரோத்துமரவவடுக்கனின்றோய்
மறந்தலைநின்றுநின்மாற்றமறந்துமதிமயங்கிப்
பிறந்தலைகின்றவடியேன்பிறவிப்பிணியைக்கட்டிப்
பறந்தலையுய்த்தனைப்பற்பப்படுத்திப்பறக்கடியே. (௯0)

பறக்கும்பக்கீந்திரவூர்திபதாகைப்பணிமலையாய்
நிறக்குங்குமமுலைநித்தியைமார்பிணைந்தருட்பால்
கறக்குங்கடவுட்கபிலையன்றோவென்கடும்பவநோய்
வறக்கும்வலியுடைவான்மருந்தொன்றுவழங்குதியே. (௯௧)

வழங்குதிரைக்கடல்சூழ்வையத்தேவர்மறையொலியும்
முழங்குமருவிமுழக்கும்விலங்கின்முழக்குமெங்குந்
தழங்குந்திருச்சக்கிரிச்சக்கரவென்றடித்தவினைக்
கிழங்குகெடும்படிவீசுநின்றன்கிருபையெஃகே. (௯௨)

எஃகெனுநின்னருளாலென்னவித்தையிடும்பையெல்லாம்
அஃகும்படிக்கோர்விளம்பமுமின்றியருள்புரிவாய்
அஃறிணையும்மதுவல்லாத்திணையுமமுதமுய்ப்பான்
பஃறலைப்பாப்புப்பருப்பதம்வாழ்கின்றபண்ணவனே. (௯௯)

பண்ணின்றவேதப்பழம்பொருளேபணிப்பாதவத்தின்
கண்ணின்றகற்பகக்காவேவினையைக்கடிந்தநல்லோர்
உண்ணின்றொளிருமொளியேயென்னூழ்வினையுந்தவந்தென்
புண்ணின்றுடற்றிடும்புன்கண்வினைகளைப்போக்குதியே. ()

போக்குதியென்னைப்புதைத்தநின்மாயைபுரிமயக்கை
வீக்குதிவீட்டுதிவீயாவினையைவிழைந்தருட்கண்
நோக்குதிஞானநன்னோக்கத்தினின்றனுகர்ச்சிபெறக்
காக்குதியென்னைவெண்காகோதரமலைகாப்பவனே. (௯௫)

நாக்குந்தொழிலினைக்கைக்கொண்டுலகைக்கடைக்கணழித்
தாக்குந்தொழில்களரற்குமயற்குமளித்தவதேன்
றேக்கும்பொழிற்கட்செவிப்பூதரத்துறைசெல்வவெனைத்
தாக்குந்தவாவினையின்னேதணக்கத்தயைபுரியே. (௩௬)

புரிமுகச்சேதிமங்கொண்டுபுயங்கநற்பூதரம்வாழ்
கிரிமுகத்தேவகிடுகிடென்றண்டங்கிழியவந்த
அரிமுகத்தேவபரிமுகத்தேவவருள்பெருகிச்
சொரிமுகத்தேவவென்றொல்வினைநோயைத்தொலைத்தருளே.

தொலையாதபாவத்தொகுதிகட்காகரன்சொற்றுடியும்
நிலையாதநெஞ்சினனாகியநீசனெடும்பகலாய்
உலையாதநின்றனொருமாயையாலுலைந்தேனுரகச்
சிலையாதவாவென்றன்சென்மத்திமிரஞ்செகுத்தருளே. ()

செகுத்திடுவான்செருச்செய்யிடபாசுரத்தீயனுயிர்
உகுத்திடுவானொளிவட்டமுய்த்துக்கதியுய்த்தவனே
மிகுத்திடுவாதைதரும்வினைவீயும்விரகுதனை
வகுத்திடுவாய்வரன்போற்றும்வடமலைமாதவனே. (௩௯)

மாதவத்தோர்தொழுதேத்தும்வடமலையாய்மதங்க
மாதவசத்தினனாய்தொழுநோய்கொண்மறையவனும்
மாதவனுக்கருள்செய்தாய்நின்மாயைசெய்மம்மரிலம்
மாதவநொந்தனன்மாற்றதையோர்நொடிமாத்திரத்தே. ()

மாத்திரைப்போதிலென்மாப்பவநோயினைமாற்றவருண்
மாத்திரையில்லைகொன்மன்னுமவித்தையைமற்றறுக்கக்
காத்திரையில்லைகொல்காலவிளம்பத்தின்காரணமென்
ஓத்திரைத்துத்தொழும்வேங்கடவாணவுரைத்தருளே. (௪௧)

உரைத்தருளெற்கோருறுதிநின்மாயையினொண்டிறலைக்
கரைத்தருள்காலமெலாஞ்செய்தபாவக்கணமலையை
யரைத்தருணின்னையறிவிஞ்சைவித்தென்னகவயலில்
விரைத்தருள்செய்விரையார்பொழில்வேங்கடவேதியனே

வேதித்தனுவெனமேருவைச்செய்வைவெம்மேருவெனச்
சாதித்தணுவினைச்செய்வவயென்சன்மத்தவாத்தளையைச்

சேதித்தடகலருமைகொலங்ஙனஞ்செய்யினின்ற
னீதித்தருமக்குநிந்தைகொல்வேங்கடநித்தியனே. (௪௩)

நித்தியமுத்தர்நின்னீர்மைக்குணங்கணெடிதுதுய்ப்பான்
நித்தியம்வந்துதொழூம்பாதபங்கயநின்மலனே
துத்தியனந்தாசலகண்ணுமென்னுளத்தோயசத்தின்
மத்தியகத்துமுறைவாயென்றேயைமடித்தருளே. (௪௪)

மடியாத்திறல்கொணின்மாயையைமாற்றிவருத்திநிற்கும்
வடியாப்பவக்கடல்வற்றச்செய்தென்மனவாரிசத்திற்
குடியாப்புகுந்தகிக்குன்றத்தவென்னைக்கைக்கொள்ளுதியான்
முடியாப்பொருணினக்கில்லைவிடுத்தன்முறைமையன்றே.

முறைமைக்குணமிவிம்மூடனையாட்கொளமுன்னினின்றன்
பொறைமைக்குமீரேழ்புவனங்கள்பூத்துப்புரந்தழிக்கும்
இறைமைக்குநின்றனிருங்கருணைக்குமெழிலுடைத்தாம்
உறைமைக்கனநிறத்தாயுரகோத்தமவோதிமனே. (௪௬)

ஓதிமவூர்தியையுந்திதந்தாய்நல்லுரகமலைச்
சேதிமமோங்கெழிலானந்தமானந்திகழ்ந்துநிற்குஞ்
சோதிமணிமலையேதுறந்தோருண்சுகவமுதே
நீதிமகோததியேயென்னையாளநினைத்தருளே. (௪௭)

நினைத்துணையாகநினையாமனின்னடிநீரசத்திற்
றினைத்துணையன்புஞ்செய்யாமற்சிறுமியர்சிற்றின்பத்தே
பனைத்துணைப்பற்றுடைப்பாவியுமுய்யப்பணிப்பறம்பா
பினைத்துணைவாவருள்பேரின்பசாகரப்பேற்றினையே. (௪௮)

பேறெவற்றிற்கும்பெருந்துணைநாளும்பிறந்திறவா
ஆறெவற்றிற்குமருந்துணைநெஞ்சேயவித்தைசெய்யும்
ஊறெவற்றிற்குமுற்றாறுஞற்றுந்துணையுன்னவொண்ணு
வீறெவற்றுள்ளினும்வீறுரகேந்திரவெற்பரசே. (௪௯)

வெற்பிற்சிறந்ததுநங்கோயொழித்திடும்வேங்கடமே
கற்பிற்சிறந்ததுகாயமெடுத்திறவாதகற்பே
அற்பிற்சிறந்ததலர்மேன்மங்கைப்பதிக்காற்றுமன்பே
வற்பிற்சிறந்தவனருணம்பிவதியும்வற்பே. (௫0)

வதியேநல்வைகுந்தவான்பதிக்கென்றும்வளர்கருணை
நிதியேநிகமச்சிரத்துநின்ருளேநினைத்திருப்போர்
கதியேகணபணக்காகோதரேந்திரக்கல்லகம்வாழ்
பதியேபதிதன்செய்பாவப்படலத்தைப்பாற்றுதியே. (ருக)

பாற்றுதியாவையர்பாசத்தைப்பாழிற்படருளத்தை
மாற்றுதிநின்மலர்மாணடிப்பத்தியின்மன்னிநிற்கத்
தேற்றுதிசெம்மணிசேராயிரம்பணச்சேடவெற்பா
எற்றுதிநின்னருளேணியில்வீட்டின்பமெய்துதற்கே. (ருஉ)

எய்யாமையாலெளியேனிழையேதங்கட்கெண்ணிலையாற்
பொய்யாமைபோற்றிப்புகல்புகுந்தேனப்புகரையின்னுஞ்
செய்யாமையென்னைத்திருத்துதிசேடச்சிலம்பிறைவா
மெய்யாமையானவவென்பவவன்மையைவீட்டுதியே. (ருங)

வீட்டுதிமுன்னரென்வீயாவினைப்பகைவேரதனை
வாட்டுதிபின்னரென்வன்பவநோய்தனைவாய்ந்திலங்கிக்
காட்டுதிநின்கட்கருணையையென்றுங்களிக்குமுத்தி
நாட்டுதியென்னைநளிர்வேங்கடாசலநாயகனே. (ருச)

நாயகநாராயணநளிநாதனைநாதமலர்ச்
சாயகற்றந்தசனகசராசரஞ்சாருயிர்க்குத்
தாயகசக்கிரிச்சக்கரவெற்றணவாதசன்ம
நோயகநீங்குநொடியினின்ஞேனருஞேக்குறினே. (ருரு)

நோக்கம்பெறும்படிநோற்பவர்நோன்பினுணுக்கமறிந்
தாக்கந்தருமலர்மேன்மங்கைநாயகவண்டமுட்ட
ஓக்கம்பெறுமுரகேந்திரவோதிமவூன்றவித்தை
வீக்கம்விரைவில்விமோசனமாகும்விரகுசெய்யே. (ருசா)

விரகுருவார்நின்பதம்பயனீயெற்குவீழுமிருள்
நரகுருக்கர்ப்பநரகொழிநாகநகத்தலைவா
நரகுருநச்சுடைநாகநகர்க்குருநற்றுறக்கச்
சுரகுருவானவவென்பவநோயைத்துடைத்தருளே. (ருஎ)

துடைப்பவவண்டத்தொகுதிகள்யாவுந்துடைத்தவணம்
படைப்பவகாப்பவபாப்பத்திரிப்பண்ணவபரவை

யடைப்பவவென்னையடர்க்கும்வினையினடலையெல்லாம்
உடைப்பவனென்றுனையுற்றேனுணர்கிலனுன்குறிப்பே. ()

உன்றன்குறிப்பையுனையன்றியோர்வோரொருவரிலர்
என்றன்பிணியையிரிப்போர்கினையன்றியாருமிலர்
மன்றன்மலர்ப்பொழில்சூழ்வடவேங்கடமாயவனே
என்றன்கடன்செய்தெதிர்நோக்குவனின்னிருங்கடனே. ()

கடங்கலுழ்கைம்மலைகாரணகாத்தியெனக்கதற
இடங்கரிகுத்ததனின்றுவொழித்தவிறையவனே
மடங்கவிமாயையிருவினைதம்மால்வருபிறவி
அடங்கலுநீங்கவருள்ஞானவேங்கடவாதித்தனே. (௯0)

ஆதித்தனுக்கொளுமாமயத்தாழ்ந்தியடியனைநீ
சோதித்தனிற்சுச்சொரூபமுமன்றுதொழிலுமன்று
பாதித்தல்பாவத்தைப்பாற்றவெனினதுபல்குமதைச்
சேதித்தருளுநிசீரார்ந்தசேடச்சிலம்பினனே. (௯க)

சிலம்புசிலம்புந்திருவடியாய்திறற்சிந்துரங்கள்
உலம்புமுலம்பலருவுரகேந்திரவோங்கனின்றாய்
புலம்பும்படியெனைப்போர்த்தவஞ்ஞானப்புழுதியெல்லாம்
அலம்பும்படிநின்னருணீர்பெய்தென்னையளித்தருளே. ()

அளிக்கும்வினைதனக்கேயமைந்தோயெனையாண்மைகொண்டு
சுளிக்குந்தொன்மாயைத்தொடர்பும்வினையின்றொடர்புமிரீஇ
ஒளிக்கும்படிக்கருள்செய்புரகோதிமமுற்றுறைந்து
களிக்கும்பெருமகருணைமழைபொழிகார்முகிலே. (௯௩)

கார்வண்ணவோதிக்கலாநிதிநேர்முகக்காரிகையார்
வார்வண்ணக்கொங்கைமுயக்கின்மயங்கிவருந்துமனப்
போர்வண்ணம்போகப்புரிவாய்புயங்கநற்பூதரனே
சீர்வண்ணத்தைம்படைக்கையாவெந்தெய்வ சிகாமணியே.

சிகாமணிதீனசனமணிதெட்டசெருக்கினர்க்கு
நகாமணிநம்புடையார்க்குநகுமணிநம்பிலர்கை
புகாமணிபுங்கவர்புந்திபுகுமணிபொய்யர்க்கன்பு
பகாமணிபாப்புப்பருப்பதத்தோங்கும்பசுஉமணியே. (௯௫)

பருமணிச்சூட்டணிப்பஃறலைப்பன்னகப்பாதவம்வாழ்
கருமணிவண்ணகமலாமணிநற்கவுத்துவமாம்
பெருமணிமார்பவென்பேதைமைதீரத்திநின்பீடுடைப்பேர்
திருமணிமந்திரமாக்கொண்டெற்காக்கின்றதேசிகனே. ()

தேசிகர்கோனெம்மெதிபதியாற்றிருவாழிசங்கம்
ஆசிகவற்றையணிந்தவனேயரவாசலனே
வாசிகமாகவுமானசமாகவும்வாழ்த்துமென்றன்
காசிகளுெய்கள்கலகலத்தோடிடக்கண்டருளே. (கூஎ

கண்டேதியம்பெறக்கற்பகத்தார்தொழுங்காற்கமல
கண்டேதியவிசைநேர்நாமவென்னைக்கவல்பிணியின்
கண்டேதிதீரக்கழிப்பாய்கண்ணில்லவன்கான்முளையின்
கண்டேதியங்கியகண்ணுவடமலைக்காவலனே. (கூஅ)

காவலர்கைத்தலர்கொண்டுங்கடவுளர்கற்பகப்பூங்
காவலர்கைக்கொண்டுங்கற்றோர்கள்சொன்மலர்க்கண்ணிகொண்டும்
பூவலர்கொண்டும்புகழ்ந்தேத்தும்வேங்கடப்பொற்றையநோய்
மேவலர்மேன்மைமெலிந்தோடநின்னருள்வேண்டுவனே.

வேண்டுவகொண்டுவிண்ணோர்விரவித்தொழும்வேங்கடவா
ஈண்டுவன்றோய்களிரிந்தோடும்வண்ணமெண்ணிப்பரிப்ப
தோண்டுவதுண்டிப்பதுய்ப்பித்துநாளுஞ்சுகப்படுத்தி
மாண்டுவராதமருந்துந்தந்தாள்கருமாணிக்கமே. (எo)

மாணிக்கமேநன்மரகதமேமுத்தமாமணியே
ஆணிக்கனகமுடியனந்தாசலவப்பநின்றன்
றேணிக்கழறொழுதேத்திடுந்தொண்டன்றன்றொல்வினைகள்
நாணிக்கவிழ்தலையிட்டோடும்வண்ணநயந்தருளே. (எக)

பயந்தரவேறுகடித்தாயிடைச்சிநடையின்வந்த
வியந்தரவெம்முலையுண்டாய்கன்றேச்சிவிளவெறிந்தாய்
பயந்தரவேகடைக்கால்வருங்கூற்றன்படைவென்று
சயந்தரவேண்டும்வெண்சக்கிரிச்சக்கரத்தற்பரனே. (எ௨)

தற்பரசக்கரசங்கத்தசார்ங்கச்சராசனத்த
நற்பரமானந்தநாகாசலநளிநாக்கநல்லோர்

சொற்பரமாத்துமதூண்டாதசோதிச்சுடருருவ
சிற்பரசின்மயதீயேன்பவமறச்சிந்தைசெய்யே. (௭௩)

சிந்தையிற்சேர்ந்துதிகழ்திருவேங்கடச்செல்வனெனும்
எந்தையிருக்கவினியோரின்றுமையுமெற்கிலையான்
முந்தைவினையினின்மூண்டமுத்தாபமுமூணெருப்பார்
கந்தையிற்றீர்ந்தறுங்கண்கூடெனவிதைக்காண்டிநெஞ்சே.

நெஞ்சகமேநீநெகிழ்ந்துவடமலைநின்மலன்றாள்
வஞ்சகமின்றிவழுத்துதியேலவன்வான்கருணை
விஞ்சகக்குப்பையும்வேதனைசெய்நம்வினைப்பகைஞர்
துஞ்சகங்காரமுந்தோற்றோடத்தூரத்துரத்திடுமே. (௭௫)

தூரத்துங்கைக்கோலிற்சுணாக்கணமேய்த்தவதொன்மறையின்
சிரத்தும்பணிச்சிகரத்துந்திகழ்திருப்பாதவென்றன்
புரத்துமுளத்தும்புலர்த்திடும்புன்கணைப்போக்கித்தும்
பரத்தும்பரிந்துநற்பத்தரைக்காக்கும்பரம்பரனே. (௭௬)

பரம்பரைபங்கயைபார்க்கவிபைம்பொற்படாந்திகழ்ந்து
நிரம்பரைமேகலைநின்மலைநேசவென்னெஞ்சநிலக்
கரம்பரைத்துக்கம்பலைசெய்துகாட்சிக்கவின்குரவர்
பரம்பரைவித்தினைவித்திவிளைத்திபத்திப்பயிரே. (௭௭)

பத்திப்பெருஞ்செல்வருண்பரமாநந்தப்பாற்கடலே
புத்திப்பெருஞ்செல்வர்போற்றும்புயங்கநற்பூதரனே
அத்திப்பெருங்கடலாழடியேற்குன்னடிப்புணையான்
முத்திப்பெருங்கரையுய்த்தாண்முதிர்பவமோசனனே. ()

பவமோகம்பாரித்துப்பல்லூழிகாலமும்பற்பலவாம்
நவமோகநாடகஞ்செய்யுநின்மாயைநசிப்பதென்றோ
சிவமோகமோகினிவேடநற்சேடச்சிலம்பவென்றன்
அவமோகநீக்கியருளழியாமுத்தியாநந்தமே. (௭௯)

ஆனந்தவாரிதியேயரவாசலத்தானந்தமா
மானந்தனினின்றெளிருமரகதமாமலையே
ஈனந்தவாதவெளியேற்குன்கீர்த்தியிருஞ்சுதையின்
பானந்தந்தென்வினைபாற்றியருணற்பரகதியே. (௮0)

பரகதிப்பண்ணவர்பாடிப்பரவும்பணிப்பறம்ப
நரகதிநானிலநாநாகதிநன்னவநவமாஞ்
சுரகதிதோன்றித்துனியடைந்தேனின்சுகச்சரணே
திரகதியென்றடைந்தேன்றெரியேனின்றிருவுளமே. (அக

திருவிலியாயினுநின்சேவடிசரண்சேர்ந்தவெனை
உருவிலிசெய்யுமொழியாமயலறுத்துன்னருளாற்
கருவிலியாக்கிநின்காற்றொண்டுகொள்ளுங்கடனினதே
பொருவிலியாகும்புயங்கநற்பூதரப்புண்ணியனே. (அஉ)

புண்ணியன்மேதைப்புலைப்பொருளாற்செய்புரச்சிறையை
நண்ணியவென்னைவிடுவிக்குநாளெந்தநாணவிலாய்
மண்ணியமாமணியேமணிமாசுணமாமலைவாழ்
அண்ணியவாத்தவகத்தபுறத்தநல்லாரியனே. (அ௩)

ஆரியவர்க்கத்தவர்க்கடியானவருணிதியே
காரியவர்க்கமெலாங்கண்டுகாத்திடுங்காரணனே
சீரியவர்கத்தவர்தொழுஞ்சேடச்சிலம்பிறைவா
பூரியவர்க்கப்புலையனையாளும்பொறுப்புனதே. (அச)

பொறுக்கத்தகாதபுலையொழுக்கேனிற்புகல்புகுந்தேன்
அறுக்கத்தகாதநம்மாறுவுறவினடலையெண்ணின்
மறுக்கத்தகாதுனக்கென்னையிதுவுமென்மாண்விதியே
குறுக்கத்தகாதபுகழாய்வடமலைக்கோவிந்தனே. (அரு)

கோவிந்தனமுகக்கோபாலபற்குனன்கூவிரத்தேர்
மாவிந்தமுய்த்தவமாசுணமாமலைமாதவனே
பூவிந்தளத்தினிற்புண்டரிகச்சுமம்பூத்ததென்ன
[illegible]விந்தவாகத்தடைவேன்கொன்முத்தனவத்தையையே.

அவத்துவெனுமெனையோர்வத்துவாக்கியந்தாமமெனுந்
திவத்துவைப்பான்சிந்தனைசெய்யுஞ்சேடச்சிலம்பநின்றன்
சிவத்துயர்நன்றிதனக்கெத்தகைநன்றிசெய்யவல்லேன்
பவத்துயர்துய்த்திப்படிமீதுழல்கின்றபாதகனே. (அஎ)

பாதகப்பையலெனவெனைநீக்கல்பராபவமாம்
வேதகப்பொன்னகியைப்பொன்செய்வீதம்வியாளவெற்பா

ஓதகப்பற்றறவுன்னருடெட்டுவெளித்தருள்வாய்
சாத்கப்பக்கியினேக்குவனின்விழித்தண்ணருளே. (அஅ)

அருட்படியேற்றியருமறைமூன்றினறிவரிய
பொருட்படியாவுமென்புந்திபுகுவித்துப்போதநல்கி
இருட்படியேட்டையிரித்தென்றுமீறிலிருஞ்சுகமாந்
தெருட்படிசேர்த்தருள்சேடச்சிமயச்சிந்தாமணியே. ()

சிந்தாமணிகளிரவைப்பகல்செய்திருமலையாய்
சிந்தாமணிவண்ணசேடச்சிலோச்சயஞ்சேர்ந்தொளிரும்
நந்தாமணிவிளக்கேயெனக்கூயொருநன்மருந்து
தந்தாமணித்துப்பொழுதிலென்னேயைத்தணந்தருளே.

தணவாததானநிரங்குசமானசுதந்தரநீ
கணவாததாயியெனுமெனைக்கைக்கொளிற்கண்டுநின்னைப்
பணவாதவாவிப்படிச்செய்ததென்னென்றுபன்னுவர்யார்
மணவாதவூணுமாசுணமாமலைவாழ்பவனே. (௯௧)

வாழ்பவனுதியர்வந்துவந்தித்துவரம்பெறுவான்
றாழ்பவனுசனத்தாபரமீதுறைதற்பரனே
வீழ்பவனுதிவிளிவிண்பதவிவிருப்பிலனென்
ஏழ்பவநாசனஞ்செய்தமுதத்திலிருத்துதியே. (௯௨)

இருத்துதியென்றனிதயத்துன்னிண்டையிணையடியைப்
பெருத்துதிபீழைப்பிணிதனைப்போர்த்திநின்போரகத்திற்
கருத்துதிக்கச்செய்துகாத்திகசிந்துகடவுளர்கள்
திருத்துதிசெய்துதொழுஞ்சேடவெற்புறைசீதரனே. ()

சீதரன்செங்கமலக்கணன்செவ்விதிருமுகன்று
மோதரன்மும்மையுலகமுதல்வன்மூவாவுயிர்கட்
காதரன்பொன்முடியாயிரமாமணியங்கதப்பூம்
பூதரன்போக்குவனெஞ்சேநம்பையுள்பொருக்கெனவே.

பொருப்பன்னபாவத்தைப்போக்கலிற்பஞ்சுப்பொதிக்கொர்பொறி
நெருப்பன்னநீர்மையனீராளமாகநினைந்துருகும்
விருப்பன்னவத்தர்க்குவேண்டுவசெய்வன்விழைந்தநெஞ்சே
திருப்பன்னகச்சிலம்பன்பதநீநிதந்திண்ணநம்பே. (௯௫)

நம்பிக்கெட்டோர்களிந்நானிலத்திலில்லைநம்பாதுநின்று
வெம்பிக்கெட்டோர்கள்விதிதருண்டென்னுளமேவிளித்த
தும்பிக்கெட்டாதவனுசுசிநங்கைசுவணனற்சேய்
நம்பிக்கெட்டாதவனுநவினுகநகாதிபனே. (௯௬)

நகாதிபன்பச்சைநவிராதிபன்றனவிவொழித்தோன்
மகாதிபன்மாசுணமாமாதிராதிபன்மாகமுத்திச்
சுகாதிபன்றாயசுராதிபன்வேதச்சுடருருவாங்
ககாதிபன்காப்பனஞ்சேனெஞ்சமேயவன்காரணனே. ()

காரணன்காரணக்கண்ணுநற்காரியக்கண்ணுநிற்கும்
பூரணன்பூமகள்போந்துறைமார்பன்பொழில்களெலாம்
பாரணன்பன்மணிப்பஃறலைப்பாந்தட்பருப்பதத்தன்
நாரணன்றன்பொருளாநமைக்காக்கநயப்பவனே. (௯௮)

நயப்பவன்றன்னடியாரையவர்கணயந்தவெலாம்
பயப்பவன்பாகீரதிதந்தபாதன்பணிமலரோன்
வியப்பவன்விண்ணவர்வெண்பகடூர்திவிரும்பியென்றும்
வியப்பவன்றீவினைவீப்பவன்வேங்கடவேதியனே. (௯௯)

வேதிப்பவனம்மியற்கைக்குணங்கள்விளங்கநெஞ்சே
சோதிப்பவன்றுயர்நல்கித்துணையடித்தொண்டுகொண்டு
சாதிப்பவன்றன்னதந்தாமவாழ்வினைச்சாற்றியநோய்
சேதிப்பவன்றிகழ்ந்தோங்கிடுந்தேயந்திருமலையே. (௧00)

வாழ்கவடவேங்கடமெனுஞ்சேடமலைவளங்கள்
வாழ்கவதிலென்றும்வாழ்சீநிவாசன்மலரடிகள்
வாழ்கவவன்மார்புறையலர்மேன்மங்கைவண்மலர்த்தாள்
வாழ்கநம்மாரியராழ்வார்கள்வைபவம்வையகத்தே.

---

ஏரார்ந்தசேடகிரிச்சீநிவாசன்றிருவடிக்கோர்
ஏரார்ந்தசொற்சதவந்தாதிமாலையிசைத்தனனல்
நாராயணக்கவிஞன்சேய்பதின்மர்தநற்கலையே
பாராயணன்பள்ளிகொண்டானெனும்பெயர்ப்பாவலனே.

சேடகிரி யந்தாதி
முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# அரங்கநகரப்பனடிப்புகழ்ச்சிமாலை.



## காப்பு.

அரங்கநகரப்ப னடிப்புகழ்ச்சிமாலை
திரங்குலவுமன்பினொடு செப்ப—வரங்குலவும்
பூமானைமார்பணைந்தோன் பொன்னடிசேர்தென்குருகைக்
கோமானைநெஞ்சே குறி.

## நூல்.

மணியார்கடற்புவிமாந்தருமன்னிமனனஞ்செய்யும்
பணியார்படிவரும்பல்லூழிக்காலம்பயின்றபெருந்
திணியார்தவந்திரண்டுருவாகித்திகழ்தலொக்கும்
அணியாரரங்கநகரப்பனங்கிரியம்புயமே. (௧)

நீராரரவிந்தநின்மலச்சேகைநிகழ்விரிஞ்சன்
ஏரார்துறக்கத்திமையோர்முனிவர்களேனையர்கள்
கூரார்மனக்குமொழிக்குமெட்டாவொளிகுப்பையவாஞ்
சீராரரங்கநகரப்பன்வாசத்திருப்பதமே. (௨)

பந்தமிரிந்துயிர்க்கூட்டமுய்வானற்பரிவுடைய
தந்தையர்தாயர்கடம்மினுநாளுந்தழைக்குமன்பால்
அந்தமிலாவிதிவாக்கியஞ்சொற்றிடுமாரணத்தின்
அந்தமுறைவதரங்கநகரப்பனங்கழலே. (௩)

தொன்மையுயிர்க்கணந்நூல்வழிச்சென்றுசுகம்பெறுவான்
நன்மையளவுநவிற்றவிறைஞ்சுநலம்பெருகிப்
புன்மையில்வேதபுருடன்மனமொழிபோற்றகிலாத்
தன்மையுடையவரங்கநகரப்பன்றாட்டுணையே. (௪)

கள்ளியல்பூங்கற்பகநேமிசங்கங்கலப்பைகொடி
முள்ளியமுண்முண்டகங்கதைதோட்டிமுரண்குலிசம்
ஒள்ளியவில்வாதியசுபரேகைகளுற்றொளிருந்
தெள்ளியநங்களரங்கநகரப்பன்சீரடியே. (௫)

பெரியனவாயுஞ்சிறியனவாயும்பிறங்கமுதக்
குரியனவானவுடுக்கணவேந்தருநித்ததெனும்
அரியனவானவுகிர்களமைந்தன்வாமெவர்க்கும்
அரியனவானவரங்கநகரப்பனங்கிரியே. (௬)

பொன்மைபெறுபுண்டரீகப்பொற்பாவையும்பூமகளும்
நன்மைபெறுதங்கரமலர்கொண்டுநனிவருடின்
வன்மைபொரூவென்றுளம்வட்கிவாடுறுமார்த்தவத்தின்
றன்மையுடையவரங்கநகரப்பன்றாண்மலரே. (௭)

சாலச்சுகந்தந்தனைநாளுங்கொண்டுதழைத்தசராற்
காலக்கலாநிதியைக்கடுத்தோங்கிக்கவின்பெறுமெய்ச்
சீலத்திருவனந்தப்பாதுகையிற்றிகழ்ந்துநிற்குங்
கோலத்தரங்கநகரப்பன்வாசக்குரைகழலே. (௮)

வடிநிலைஞானியர்வண்மனம்வாழ்வனமாமறையோர்
முடிநிலைகொள்வனமுன்னுமவருளமுக்குறும்புங்
கடிநிலையுள்ளனவாங்கழன்மாறனெங்கற்பகத்தை
அடிநிலைகொண்டவரங்கநகரப்பனங்கழலே. (௯)

வீங்குபெரும்புகழ்வேதமயன்பொன்விளங்குசிறை
யோங்குமுவணனுரகாபரணமொளிருமுரன்
பாங்குபெறும்பதுமப்பாணியென்னும்படியிரண்டுந்
தாங்குவனநம்மரங்கநகரப்பன்றாளிணையே. (௧0)

மாமாலைநல்கிடுமாயப்புணர்ப்பற்றுமானுடர்கண்
மாமாலைநண்ணும்வழிகாட்டவந்தமாலருளாந்
தேமாலைபூண்டபதின்மர்பசுந்தமிழ்சசெய்யுட்களாம்
பூமாலைபூண்டவரங்கநகரப்பன்பொன்னடியே. (௧௧)

தொடர்ந்துதொடர்ந்தென்றுந்தொன்மைச்சுருதிகடோத்திரிக்கச்
சுடர்ந்தமெய்ஞ்ஞானமழிசையடிகடுனைந்துதற்பின்
படர்ந்துவருகவெனப்பணித்திட்டபசுந்தமிழ்ப்பின்
படர்ந்தவரங்கநகரப்பன்கஞ்சப்பதத்துணையே. (௧௨)

வீக்கியமாயைவிறலையுமூழ்வினைவீற்றினையும்
ஊக்கியவைம்பொறியொன்னாயுந்தம்முரப்படையால்

நீக்கியநின்மலர்நெஞ்சிற்குநாளுநிரதிசய
போக்கியமாமெம்மரங்கநகரப்பன்பொற்கழலே. (௧௩)

ஓவிலாதெங்கணுமெவற்றுள்ளுமொளிர்பிரம
பாவனைவீறுஞ்சநகாதியோகிபரம்பரையின்
தூவனவம்புயச்சோபனவுள்ளச்சுகாதனத்தின்
மேவியுறைவரங்கநகரப்பன்மெல்லடியே. (௧௪)

பாவத்துதிக்குமெமக்கார்ப்படலையன்பைதிரத்திற்
றாவற்றினைப்பொன்னிநாப்பண்பெரியர்தொகுத்துவைத்த
ஆவத்தனத்தினவிர்ந்தோங்குமன்பருவினையின்
சாவத்தைத்தீர்க்குமரங்கநகரப்பன்றாளிணையே. (௧௫)

ஈண்டியவன்புடனெந்நாளுமேத்தியிறைஞ்சுபவர்
வேண்டியவேண்டியவண்ணம்பெற்றுய்யும்விரகுகளைப்
பூண்டிலங்காநிற்கும்புன்மைநெஞ்சேயிப்புதுமைதனைக்
காண்டியரங்கநகரப்பன்கஞ்சக்கழலிணையே. (௧௬)

அடியார்களன்பினபசயித்துத்தங்கணியும்பற்பல்
படியார்மலர்பல்வலமலர்கோட்டுப்பருமலர்நற்
கொடியார்மலரிவையென்றுங்கமழ்ந்துகுலவிநிற்குங்
கடியாரரங்கநகரப்பன்பாதகமலங்களே. (௧௭)

ஒளியாருளைமாற்றுயர்பொலன்றண்டையொலிசதங்கை
நளியார்பரிபுரநூபுரமாதியநன்கணிந்து
களியாரடியர்கள்கண்மனந்தம்மைக்கவர்ந்தொளிரும்
அளியாரரங்கநகரப்பனங்கிரியம்புயமே. (௧௮)

பாரகமெங்கணும்பற்பலசன்மம்பரித்துநின்று
மாரகமுற்றுவெம்மாயைமயக்கமறந்துதமை
ஓரகமென்றுமுருவுயிருய்யுமுபாயநல்குந்
தாரகமானுமரங்கநகரப்பன்றாளிணையே. (௧௯)

கருந்தாதுகாஞ்சனவல்லிகளாமென்றுகட்டுரைக்குந்
திருந்தாவிருவினையாற்சுராதியதேகநல்கிப்
பெருந்தாபந்துய்ப்பிக்கும்பீழைப்பிறவிப்பெரும்பிணிக்கோர்
மருந்தாயினநம்மரங்கநகரப்பன்மாணடியே. (௨௦)

பக்குவிகட்குநற்பாறேனெய்கண்டுபெருகமுதங்
கொகருக்கதலிபலாக்கனிச்சாறுகுளம்விசயம்
இக்குவின்சாறெனவென்றுந்தெவிட்டாதினிதிருக்குந்
திக்குவிண்போற்றுமரங்கநகரப்பன்சேவடியே. (௨௧)

மூலமுளரிமுளைத்திட்டமுன்னவனால்விதித்த
கோலமலர்குளிர்நீர்விளக்காதியகொண்டுநித்தம்
சீலமுடன்றிருப்பூசைசெயப்பட்டசீர்த்தியனை
ஞாலம்வணங்குமரங்கநகரப்பனல்லடியே. (௨௨)

சுற்றசுவாயம்புவென்னுமனுக்கமலத்திறைவன்
சொற்றவணீரசுமந்திபதூபஞ்சுவையடிசின்
மற்றையவுங்கொண்டருச்சனைசெய்தமகிமையுள
நற்றவர்போற்றுமரங்கநகரப்பனற்பதமே. (௨௩)

உலகிருளோட்டுமொளியோன்சிலபகலுட்குழைந்து
நலகுலையாதிநறுமலாதியநறும்புகைகொண்
டலகறுமன்பினருச்சனைசெய்தவழ தடைய
இலகுமரங்கநகரப்பன்கஞ்சவிணைக்கழலே (௨௪)

சூரியன்புத்திரனூரியனையச்சுகமனுவாற்
சீரியபூசைத்திரவியங்கொண்டுசிறிதுபகல்
ஆரியனசொற்றவடைவினருச்சிக்கப்பட்டனவாந்
தூரியவோதையரங்கநகரப்பன்றூவடியே. (௨௫)

அண்டரதிபதியாகண்டலனோடிருந்தவர்கள்
தொண்டர்களாகித்தொழுதுசிலபகறேக்கிரித்து
வண்டாருமலர்கொண்டுவழிபட்டமாண்பினவாம்
வண்டர்புகழுமரங்கநகரப்பன்வண்கழலே. (௨௬)

விழிபடுநீரினன்மெய்யிடம்யாவும்விரிபுள்ளகன்
மொழிபடுதோத்திரன்முந்துறுபத்திமுதிர்பெருக்கிற்
சுழிபடுநெஞ்சினனுமிக்குவாகெனுந்தோன்றறன்னால்
வழிபடப்பட்டவரங்கநகரப்பன்வண்பதமே. (௨௭)

புந்திக்குளென்றும்பொலிகின்றபத்திமைப்பூடணத்தன்
கந்திக்குமாமலராதியகொண்டுகளிதுளங்கிச்

சிந்திந்துஞ்சிக்கையன்வீடணப்பேர்கொண்டசெம்மறனால்
வந்திக்கப்பட்டவரங்கநகரப்பன்மாணடியே. (௨௮)

கூரியகற்றைநககிராவி நீளக்குமைக்கொழிக்குஞ்
சூரியன்மாமரபும்புகித்தோங்கியதோன்றலகளாற்
சீரியபூசைசெயப்பெற்றனவெச்செகத்தினுக்கும்
ஆரியனானவரங்கநகரப்பனங்கழலே. (௨௯)

வண்மைகொண்மாவலிதந்தமண்டன்னிலிரண்டடிக்கா
நுண்மையின்மண்ணவர்விண்ணவர்தந்தலைமேனான்றுதொட்டுக்
கண்மையொன்றின்றிபம்மூன்றுமடிக்கவன்காழ்த்ததலை
திண்மையிற்றொட்டவரங்கநகரப்பன்சேவடியே. (௩0)

விதிவாய்ந்தவேதத்தைச்சோமுகன்கொள்ளவிதிநடுங்கி
மகிமாழ்கிவாழ்த்தப்படர்ந்தவ்வசுரனைமாய்த்தவன்கொள்
துதிவாய்மறையைக்கொணர்ந்தளித்தனதொண்டர்பெரு
நிதியாமரங்கநகரப்பன்பொன்னடிநீரசமே .(௩௧)

முச்சகந்தன்னினுமுப்பிரிவாகிமுடுகிச்சென்று
நச்சகமாகவவற்றிலுறைபவர்நாடொறுஞ்செய்
நச்சகந்தன்னைநவிந்தோட்டுங்கங்கைநதியினைத்தன்
மெச்சகந்தந்தவரங்கநகரப்பன்மெல்லடியே. (௩௨)

நீடியகூடத்திரிகூடக்குன்றினெகிழ்முளரி
மூடியபொய்கைமுகத்தினிழியமுதலைபற்ற
வாடியவாரணங்காப்பானரியுய்த்துவல்லைவிளாங்
தோடினவாநம்மரங்கநகரப்பனொள்ளடியே .(௩௩)

உத்தானபாதன்மகனுலையாப்பதமுற்றமைவான்
வித்தானநற்றவம்வேண்டிப்புரியும்விரைப்பொழிற்கட்
சத்தாந்தயைசெயச்சார்ந்தனசேந்தற்றாமரைபோல்
அத்தானநங்களரங்கநகரப்பனங்கிரியே. (௩௪)

பொய்கைமுனிபூதத்தாழ்வார்பேயாழ்வார்பொலிந்துநிற்குஞ்
செய்கைகொள்கோவலிடைகழிசேர்ந்தனதீயர்தலை
கொய்கையறநிலைநாட்டிடல்கூடுங்குலவடியார்
உய்கைகுறிக்குமரங்கநகரப்பனொண்கழலே. (௩௫)

இசைகொண்ட நூல்வழியென்றுந்தமையெண்ணியேத்திநிற்கும்
நசைகொண்ட நந்திருப்பாண்பெருமாளைநன்மேனியொடும்
பசைகொண்டுதம்முழியந்தர்ப்பவிக்கப்பணித்தனவெண்
டிசைகொண்டகீர்த்தியரங்கநகரப்பன்சேவடியே. (௩௬)

திருமணங்கொல்லையரசுச்சியேறித்திசையனைத்துங்
கருமணிக்கண்கொடுகொண்குறுங்காற்கலிகன்றிமுன்னர்த்
திருமணக்கோலத்துடன்வந்தருளுஞ்சிறப்பினவாம்
மருமணச்சோலையரங்கநகரப்பன்மாணடியே. (௩௭)

பணிசெய்துகச்சிப்பதியினின்றூர்க்குப்படர்தருங்காற்
றிணியிருடீரவொர்தீவிகையாளிற்றெறும்பிறவிப்
பிணியறநோற்றதிருக்கச்சிநம்பிமுன்பேர்ந்தனவால்
அணிகொளரங்கநகரப்பனங்கிரியம்புயமே. (௩௮)

மந்திரநம்பிளையாழ்வாரடிகளைமாய்க்கவெண்ணுந்
தந்திரயாதவனுட்கச்சவரனிற்சார்ந்தவரை
விந்தியக்கானின்றுமெய்விரதப்புவிமீட்டுமுய்ப்பான்
முந்திநடந்தவரங்கநகரப்பன்மொய்கழலே. (௩௯)

வண்மையரன்றலைதன்கரம்வைத்தவன்வாய்வரத்தின்
உண்மையுணர்வான்முயல்விருகாசுரனோங்குளத்தின்
றிண்மைதுமித்துச்செகுப்பானவனுழிச்சென்றனவாற்
கண்மையுடையவரங்கநகரப்பன்கான்மலரே. (௪0)

மருவாசமாலைப்புயவம்பரீடன்மனத்திருந்து
துருவாசமாமுனிசொற்றவெஞ்சாபமத்தோன்றற்னை
மருவாதவண்ணமகிழ்ந்தனநல்லமரபடியர்
கருவாசநீக்குமரங்கநகரப்பன்காற்சுமமே. (௪௧)

யோகம்புரியும்விருக்கியரசனுளத்திருந்து
மாகம்புவிதொழுமாமுனியாந்துருவாசனிட்ட
சோகம்பயக்குஞ்சுடுசாவந்தன்னைத்தொலைத்தனவால்
நாகம்பரவுமரங்கநகரப்பனல்லடியே. (௪௨)

ஆடகன்மைந்தனகங்காரநீங்கியவிருளமாந்
தோடகந்தன்னிற்சுடர்ந்தோங்கிநின்றுசுடுதொழிலார்

கூடகர்செய்தகொடுவினையாவுங்குழைத்தனபொற்
காடகனங்களரங்கநகரப்பன்காற்றுணையே. (௪௩)

நேயமுடனன்னைமஞ்சனமாட்டிநிழன்மணிப்பூண்
தூயனவேய்ந்துதொழின்மணித்தொட்டிறுயிற்றிநிற்க
மாயமுடன்வதைப்பானோர்சகட்டின்மறைந்துவந்த
தீயனைச்செற்றதரங்கநகரப்பன்சீரடியே. (௪௪)

சீர்த்திக்குபேரன்சிறுவர்கள்சேயிழையார்களொடு
தீர்த்தத்திலீலைதிகம்பரராய்ப்பகல்செய்துநிற்றல்
பார்த்தன்றுநாரதரிட்டநற்சாவம்பரிவுடனே
தீர்த்திடச்சென்றவரங்கநகரப்பன்செஞ்சரணே. (௪௫)

கோட்டமிலாமனக்கோவலர்கோனந்தகோபனில்லி
னோட்டமுறழ்நம்மசோதைதன்னோட்டநனிகளிக்க
வாட்டமிலாதுதவழ்ந்துதளர்நடைவந்துவிரைந்
தோட்டந்தனநம்மரங்கநகரப்பனொண்கழலே. (௪௬)

கரும்பியலுஞ்சுவைக்கட்டுரையார்தண்கலாநிதிபோல்
விரும்பியலானனத்தார்வெண்ணகைகள்விளங்குமுல்லை
அரும்பியலாய்ச்சியராடனைக்கூத்துகளாடிக்கொப்புள்
அரும்பியனநம்மரங்கநகரப்பனம்பதமே. (௪௭)

பூக்கொண்டகூந்தற்பொதுவியர்தத்தமபுக்கிலுறை
ஆக்கொண்டபாலளையைத்தம்மகமேட்டமைத்துவைக்க
நேக்கொண்டவைகரநேர்வாணியிர்ந்திடநெட்டிரவின்
மீக்கொண்டனநம்மரங்கநகரப்பன்மெல்லடியே. (௪௮)

மதிபாண்டரத்தயிர்த்தாழிக்குமற்றதில்வாஞ்சைகொண்ட
ததிபாண்டற்குங்கதிநல்கவவனுழிச்சார்ந்தனவால்
விதிபாண்டரங்கமைவெள்ளத்தின்மேனிவிளங்கவைத்தோன்
கதிபாண்டவர்க்காமரங்கநகரப்பன்கான்மலரே. (௪௯)

பகவுருவானவசுரம்கிளவல்பருத்தமலை
யகவுருவாகியழிதருங்காலவனுவியொளித்
தகவுருவாகித்தமைச்சாரவேயிடந்தந்தனநஞ்
சுகவுருவானவரங்கநகரப்பன்றூவடியே. (௫0)

வடித்தநன்னீருடைக்காளிந்தியுந்திமடுவிவினீர்
குடித்தவர்யாரையுங்கொல்வான்விடத்தைக்கொடுத்துநின்ற
தடித்தசடக்காளியன்றலைநாடகச்சாலைநின்று
நடித்தவரங்கநகரப்பன்வாரிசநற்பதமே. (௫௧)

கறையுடைக்காளியன்காதலிமார்கள்கவன்றுமனக்
குறைகளைக்கூறிக்கொழுநன்பிழைதுறியாதெமக்கு
நிறைதிருப்பிச்சையளியென்றுவீழ்ந்துநிலத்திறைஞ்சி
மறைபுகநின்றவரங்கநகரப்பன்மாணடியே. (௫௨)

மொழிதந்தமுல்லைநிலக்கோவலர்கான்முளைகளொடும்
வழிதந்தவான்கணம்வற்சக்கணத்தொடும்வானவர்கள்
விழிதந்தவானந்தவேலையின்வெவ்விருந்தாவனத்தே
உழிதந்தனநம்மரங்கநகரப்பனொண்கழலே. (௫௩)

கால்வைக்கவொண்ணுநெருஞ்சிற்பழங்கொண்டகாடதனைப்
பால்வைத்தமாமடித்தேநுவுங்கன்றும்பரிந்துதத்தந்
தால்வைக்கநற்பசும்புற்றரைசெய்தனசாகைமறை
ஓல்வைக்குநங்களரங்கநகரப்பனொண்பதமே. (௫௪)

தூயதுவாதசிக்காகபமுனையிற்றேய்பொழுதோர்
மாயவசுரன்மரீஇநந்தகோபனைவவ்விச்சென்று
தோயவிறைநகருக்கவற்கொணர்வான்றொடர்ந்து
போயவரங்கநகரப்பன்வாரிசப்பூங்கழலே. (௫௫)

சுந்தரவிஞ்சையர்தோன்றல்சுதரிசனப்பெயரோன்
அந்தணர்வைவினகியாகியம்பிகையாள்வனத்தில்
நந்தனைநுங்கவவ்விஞ்சையன்வைவற்றுநன்மைபெற
வந்தன்றுதைத்தவரங்கநகரப்பன்வண்சரணே. (௫௬)

துவர்ந்தவிதழ்க்கோவியர்களைந்திட்டதுகிலையெலாங்
கவர்ந்துமறைந்தலைக்காளிந்தியாற்றங்கரைப்புறத்தே
நிவர்ந்துறைநீபவிருமலமாகிநிர்வாணமுற
இவர்ந்தவரங்கநகரப்பனிண்டையிணையடியே. (௫௭)

வார்ந்துபடர்நீர்ப்பிரபாசதீர்த்தத்தின்மாழ்கியுயிர்
போந்தசுதனைகொணர்ந்துசாந்தீபனிக்கருள்வான்

ஆர்ந்துறுமன்பினரியுறைசைம்மினியர்பதிக்குச்
சார்ந்தவரங்கநகரப்பன்றாமரைத்தாளிணையே. (௫௮)

கொன்னுடைவேதியன்கோளுற்றபிள்ளைகளைக்கொணர்வான்
தென்னுடைத்தெய்விகத்தேர்மிசையேறிநற்றேசொளிய
தன்னுடைச்சோதிக்குச்சாரந்தீண்டுச்சார்ந்தனதாவில்வெற்றி
மின்னுடைநேமியரங்கநகரப்பன்மெல்லடியே. (௫௯)

பூதலத்திற்கருநேசன்விட்டியவாறுபுதல்வரையுங்
காதலிக்கின்றனன்காண்பானெனவன்னைகட்டுரைக்கக்
காதலத்தோனுடனன்னவரைக்கடிதிற்கொணர்வான்
பாதலஞ்சென்றவரங்கநகரப்பன்பாதங்களே. (௬0)

திண்படைத்தீயவன்காலயவனற்செகுத்திடுவான்
நண்படைநாகாகணல்கும்வரத்தினனிப்பலநாள்
கண்படைகொண்முசுகுந்தனுழிச்சென்றுகாட்சிதந்த
பண்புடைத்தூயவரங்கநகரப்பன்பாதங்களே. (௬௧)

காசினியோர்புகழைவர்செய்வேள்வியிற்கற்றவர்கள்
யோசனையுந்துமுயர்ந்தோருரைத்தடுமுத்திகொண்டும்
வாசனைவாய்ந்தமலராதிகொண்டுவகுத்தமுதற்
பூசனைபெற்றவரங்கநகரப்பன்பொன்னடியே. (௬௨)

குடைந்துவண்டோலிடுங்கொங்கார்குசுமஞ்செய்கோதையென்றும்
மிடைந்தவிறற்றேருட்சிசுபாலன்மேவியவெஞ்சமரில்
உடைந்துயிர்நீங்குழியவ்வுயிரொள்ளொளிபோந்துருவில்
அடைந்தவரங்கநகரப்பன்பொன்னடியம்புயமே. (௬௩)

கடித்தபகைத்தந்தவக்ரனமனைக்கருதிவர
விடுத்தகதையிற்றகர்ப்புண்டவனுடல்வீழ்தருங்கால்
அடுத்தவுயிரவிர்ந்தோங்கியனுகியடையமுகங்
கொடுத்தவரங்கநகரப்பனம்பொற்றுணைகழலே. (௬௪)

சாந்தனிதமுங்கணக்கில்கறவைகடானஞ்செய்யும்
வேந்தனிருகுக்குவேதியரிட்டவெஞ்சாவந்தன்னைப்
போந்துபொருக்கெனப்போக்கிப்புரந்தனபுண்டரிகை
காந்தனெனுநம்மரங்கநகரப்பன்கான்மலரே. (௬௫)

குண்டைக்கபாலிதன்கூற்றின்படித்தமைக்கூடியன்பிற்
றொண்டைப்புரிந்துதுவரத்தொழுதுதுதித்திரந்த
கண்டைச்செவியற்குமுத்திகொடுத்துக்களித்தனவாற்
றண்டைச்சதங்கையரங்கநகரப்பன்றாளிணையே. (௬௬)

கண்ணியகானத்துப்பஞ்சவர்வாழ்தருங்காலைவிருந்
துண்ணியவந்ததுருவாசமாமுனிக்குள்ளமுடைந்
தெண்ணியவெல்லைவயினன்னவர்பாலின்பளிக்கவெண்ணி
நண்ணினவாநம்மரங்கநகரப்பனற்கழலே. (௬௭)

அருந்தவனுண்டிடுநெல்லிக்கனியையறுக்கவப்பா
டிருந்தவரம்முனிசாபமியம்புவவொன்றியம்ப
வருந்தியவைவர்நினைக்கவவர்முன்னர்வல்விரைந்து
பொருந்தியனநம்மரங்கநகரப்பன்பூங்கழலே. (௬௮)

மன்றன்மலர்த்தொடையைவர்கட்காகமனமுவந்து
கன்றுசினத்தினன்கண்ணில்லவன்றருங்கான்முளைபாற்
றொன்றுவருந்திநற்றும்பிபுரத்திற்குத்தூதுசொல்வான்
சென்றவரங்கநகரப்பனிண்டைத்திருவடியே. (௬௯)

இமைத்தொளிர்மாமணிமோலிச்சுயோதனனீறுசெய்வான்
சமைத்தபொய்யாசனத்தின்கீழ்நிலவறைசார்பயம்பில்
அமைத்ததறுகணராமல்லர்தம்மோடரக்கர்களைக்
குமைத்தவரங்கநகரப்பனம்பொற்குரைகழலே. (௭0)

கன்னன்பிறப்பைக்கழறியவன்கட்செவிக்கணையைப்
பின்னுமருச்சுனன்மீதுவிடாவரம்பெற்றடைதி
என்னுமுறைசொலக்குந்தியில்லத்தினுக்கேகினவால்
அன்னைநிகருமரங்கநகரப்பனங்கிரியே. (௭௧)

பாரதநாட்பினின்மூன்றும்பகலிற்பரிதிகொண்டு
பூரதம்விட்டுப்புவிசேர்ந்துபோந்தைப்பொலன்கொடிகொண்
மாரதரோத்தும்வராநிமைந்தன்முன்வந்தனவாற்
சீரதர்காட்டுமரங்கநகரப்பன்சேவடியே. (௭௨)

வீழியிதழ்க்குந்திமுன்பெற்றகன்னன்விரைந்துவிட்ட
பாழியரவக்கணைபார்த்தன்மீதுபடாதவன்றோர்

ஆழியடியொன்றவனிபுதையவழுத்தியவால்
ஊழிமுதல்வனரங்கநகரப்பனெண்கழலே. (௭௩)

உத்தந்தொடங்கியபன்னிரண்டாம்பகலோங்குபக
தத்தன்கிரீடிமிசைவிட்டசத்தியைத்தட்டிடவே
யெத்தனமாகியெழீஇநின்றனவவ்விரதமிசை
அத்தனரங்கநகரப்பனம்புயவங்கிரியே. (௭௪)

மேற்றிசைப்பாலகன்மெய்யன்சதாயுவெகுண்டுவிட்ட
காற்றிசைவேகக்கதைபற்குனற்கதுவாதவணம்
போற்றிசைத்தேரிற்பொருக்கென்றெழுந்துபொலிந்துநின்ற
நாற்றிசையேத்துமரங்கநகரப்பனல்லடியே. (௭௫)

அங்கரதிபதிகன்னனறத்தையபகரிப்பான்
வெங்களந்தன்னினைமூதிர்வேதியவேடமுடன்
பொங்கியவனுழிப்பொள்ளெனப்போயினபூத்தபுன்னை
திங்களிலஞ்சியரங்கநகரப்பன்சேவடியே. (௭௬)

மைவந்தகண்ணுத்தரைகருமாப்பரித்தாமன்விட்ட
வைவந்தவாளியின்வெந்துகரியாய்மகியில்விழப்
பைவந்தவக்கருப்பாங்கினுயிர்த்தெழப்பண்டையநாள்
தைவந்ததுநம்மரங்கநகரப்பன்றாண்மலரே. (௭௭)

பாரார்சொன்மாலைப்பரித்தாமன்போரிற்பகைத்துவிட்ட
நாராயணாத்திரமைவருயிர்நலியாதவணம்
நாராரவருழிநண்ணினநண்பர்க்குநன்மைதருஞ்
சீராரரங்கநகரப்பன்செம்மலர்ச்சேவடியே. (௭௮)

பாவனனானபகுளாச்சுவற்கும்பகர்சுருத
தேவன்றனக்குமெய்ஞ்ஞானம்விளங்கிடச்செப்புதற்குக்
காவன்மிதிலைக்கடிநகர்சென்றனகண்மனங்கொள்
பூவனநங்களரங்கநகரப்பன்பொன்னடியே. (௭௯)

காவத்தனானகடவுளர்கோன்கடுங்காமமுற்று
மேவத்தகாதெனவோராவகலிகைவேட்கைகண்டு
கோவத்தவட்குக்கவுதமமாமுனிகூறுகொடுஞ்
சாவத்தைத்தீர்த்தவரங்கநகரப்பன்றண்கழலே. (௮௦)

மாணடைமன்னுஞ்சனகனைவக்கணவருமெவருந்
தாணடையோய்ந்துதளரச்செய்சம்புத்தவொடுப்பான்
ஏணடைபொன்மலையெண்டிக்கிபமலையேறரிமா
நாணடைகொண்டவரங்கநகரப்பனல்லடியே. (௮௧)

பாந்தட்படிபெறுஞ்சித்திரகூடப்பறம்பினுக்குப்
போந்துசரணடைந்தேத்திடும்புண்ணியனும்பரத
ஏந்தன்மகிழவெழிற்பாதுகைகளிரண்டினையும்
ஈந்தவரங்கநகரப்பனிணையிருங்கழலே. (௮௨)

அரணமெனவின்றுயிர்களைக்காக்கவமையுமந்தக்
கரணங்கொளெம்பெருமாட்டிதன்கொங்கையைக்கண்டுகுத்தி
விரணஞ்செய்காகவுருவாஞ்சயந்தன்விழைசரண
வரணமுகந்தவரங்கநகரப்பன்வண்கழலே. (௮௩)

அண்டர்கள்யாகமும்யோகமுமாற்றிடுமந்தணராந்
தொண்டர்கள்வாழவுந்துட்டர்கள்கூட்டந்தொலைந்திடவுந்
தண்டகக்கானத்துலவைதளிர்த்துத்தருநிழலிற்
பண்டுபடர்ந்தவரங்கநகரப்பன்பாதங்களே. (௮௪)

மந்தமகமாவினையவிராதனைமாய்த்தவன்றன்
பந்தமுறுபெரும்பாவந்துடைத்துப்பருத்துயர்ந்த
விந்தவுடலையிளையான்வகிர்ந்துவிடுங்குழிவாய்
உந்திபதுநம்மரங்கநகரப்பனொண்கழலே. (௮௫)

நடைதந்தகற்றவராஞ்சரபங்கர்நணுகுமடம்
அடைதந்தவர்க்கந்தவாசிகொண்டோமவனலிலுடல்
உடைதந்துயிர்விடுங்காற்சேவைதந்தொளிர்வீடடைவான்
விடைதந்தநம்மரங்கநகரப்பன்மெல்லடியே. (௮௬)

திக்கணைசீர்த்திச்சுதீக்கணமாமுனிசேருறையுட்
புக்கணைக்கன்றேன்புன்முகமன்னுரைபுகன்றொண்டு
சொக்கணைநல்விருந்தாகித்தவத்தினையுதவியெல்லாந்
தக்கணைகொண்டவரங்கநகரப்பன்றாளிணையே. (௮௭)

என்றுமுளதமிழீந்தமுனிவனெதிர்ந்துவந்து
நன்றுவரவென்றேற்றவர்தம்மொடுமேற்காரகம்

ஒன்றியநீர்மலர்கொண்டுவந்திக்கவுவனுழியிற்
சென்றவரங்கநகரப்பன்சேமத்திருவடியே. (௮௮)

தூய்வைதேகியின்சொக்கைத்தன்சோதரிதோத்திரிக்கத்
தீயவரக்கர்பதிமோகங்கொண்டுதெருட்டிவிட
மாயஞ்செயவந்தமாரீசப்பேர்வசுமானின்பின்னே
போயின்நங்களரங்கநகரப்பன்பூங்கழலே. (௮௯)

இரவுணூர்தரச்சென்றசுமித்திரையின்புதல்வன்
வரவ்வ்வயோமுகிவவ்வலிற்றுழ்க்கமனமுடைந்து
கரவறிவான்கடுங்காற்றினுமும்மைகடுகியவன்
விரவுழிச்சென்றவரங்கநகரப்பன்மெல்லடியே. (௯0)

விண்டதென்மாயைவிழுத்தவச்செல்வம்விளங்கியதாற்
கொண்டபிறவிகுலேந்தமுதங்கொடுத்தியென்று
தண்டவில்பத்திச்சபரிசெய்பூசனைதன்னைநன்னர்க்
கொண்டவரங்கநகரப்பனம்பொற்குரைகழலே. (௯௧)

சூரியன்கான்முளைசுக்ரீவன்றன்னுளந்தோன்றிநிற்குஞ்
சீரியசங்கையைத்தீர்ப்பான்றிகழ்சஞ்செறிபணையாற்
பாரியவானமராமரப்பாங்கர்படர்ந்தனவால்
ஆரியனனவரங்கநகரப்பனம்பதமே. (௯௨)

புனற்சிறைவேண்டும்பொழுதுபுகாமையிற் பொள்ளெனவே
அனற்கிறையத்திரமுய்க்கவவன்வந்தடைக்கலம்புக்
கினற்கிடமாயின்னகாத்தியென்றேத்துமெழிலுடைய
உனற்கினியானம்மரங்கநகரப்பனொண்கழலே. (௯௩)

குடைப்பெருஞ்செல்வமிலங்கையிராவணன்கூறுமற்றைப்
படைக்கலப்பாதகர்பாசத்தைப்பாற்றிப்பரிவொடுநன்
னடைக்கலம்பூண்டவிபீடணனல்வெழிசண்ணநண்ணி
யடைக்கலம்புக்கவரங்கநகரப்பனங்கிரியே. (௯௪)

மருவாய்மலர்க்குழலஞ்சனைமைந்தன்மதிலிலங்கைச்
செருவாய்ந்தசாலைத்தெருட்சிகொண்டோனைச் சென்றுநின்று
பெருவாழ்வுபெற்றெனத்தன்சுரந்தாங்கியபெட்பினவாம்
திருவாழரங்கநகரப்பன்சேவடிச்செம்மலரே. (௯௫)

திண்மைக்கயாசுரன்மீவைதருமசிலையினுழிக்
கண்மைச்சிவன்விதியிந்திரனாதிக்கணநடுவண்
ஒண்மைக்கதையினையூன்றினின்றென்றுமுவப்பனவாம்
வண்மைக்கருணையரங்கநகரப்பன்மாண்கழலே. (௯௬)

தன்மமுனிவன்றனயைதருமவிரதைகொண்கன்
வன்மமுடன்றந்தைவினைமாற்றமனத்தினெண்ணி
நன்மைதருந்தவஞ்செய்புழிநன்னர்நடந்தனவாற்
புன்மையகற்றுமரங்கநகரப்பன்பொற்பதமே. (௯௭)

மண்ணுதல்யாவும்பயந்தவன்மைந்தன்மரீசிமுனி
கண்ணுதல்சாவங்கடிவான்கயையைக்கலந்துதமை
எண்ணுதல்செய்துதவம்புரிசாலைக்கினிதிரங்கி
நண்ணுதல்செய்தவரங்கநகரப்பனற்கழலே. (௯௮)

தரணிபுகழ்விப்ரநாராயணமுனிவன்றனக்காப்
பரணியிடுமிழைசேர்தேவதேவிப்பரத்தைதன்பால்
இரணியவட்டிலையீந்திடச்சென்றனவெவ்வெவர்க்குஞ்
சரணியனானவரங்கநகரப்பன்றாண்மலரே. (௯௯)

நம்பியனேகந்திருப்பணிமுன்னர்நயந்துசெய்த
வம்பியலார்ங்கண்ணிவண்புயனாந்தன்மவன்மனுஞ்
செம்பியனுக்கருள்செய்தனவன்பர்சென்மக்கடற்கோர்
அம்பியனையவரங்கநகரப்பனம்பதமே. (௧00)

வாழியரங்கநகரமதிற்கண்வளருமெம்மான்
வாழியரங்கநகரன்னைவாழிவடமறைகள்
வாழிபதின்மர்கள்வாழியவர்தமிழ்மாமறைகள்
வாழியெதிபதிதிப்பியவாணையிவ்வையகத்தே.

---

திகழ்ச்சிபெறுஞ்சீரரங்கநகரப்பன்செய்யவடிப்
புகழ்ச்சித்தமிழ்ப்பாவினமாலைநூறும்பொருவிலன்பி
னிகழ்ச்சிக்குரவனபிமானநிட்டையனீடொழுக்க
இகழ்ச்சியிலானம்மெதிராசதாசனியம்பினனே.

அரங்கநகரப்பனடிப்புகழ்ச்சிமாலை.

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# தொண்டைநாட்டுத்திருப்பதிப் பஞ்சரத்தினங்கள்.

## காப்பு.

சீர்பூத்ததொண்டைநன்னாட்டிலுலகுய்யச்
சிறககுமிருபானிரண்டு
திருப்பதிகடோறுநற்றொண்டர்குழுவாழ்ந்திடத்
திருவுருக்கொண்டுவிவிதப்
பேர்பூத்துவாழுமெம்பெருமான்கள்கழல்களிற்
பேதைமையினீடுபிறவிப்
பிணிப்பொரீஇயுய்யவொளிராம்மணிப்பாவினப்
பிணையல்கள்புனைந்தணியவே
நீர்பூத்தகுணகணநிறைந்தபூமாதுறை
நிறத்தெந்தைசீரருளினால்
நித்தியர்கள்கலையினுந்திகழுமைம்படையாதி
நிகழ்பவைகள்கலையினானும்
பார்பூத்தசேதநர்களுய்யவருமாழ்வார்கள்
பரவுமாசாரியர்கடம்
பாததாமரையைப்பழிச்சுதூஉநெஞ்சே
பரிந்துதுணைநிற்கவென்றே.

## க-வது திருக்கச்சி—அத்திகிரி.

பொன்னிறப்புண்டரீக செல்வநித்தியர்தமைப் போல
நினையநுபவிக்குப - புகல்சயிங்கரியின் புடையனாய்
வாழப் பொருந்தசம்படைதந்திருந்தும்
அன்னையையிழந்திற சொடிந்துதுயாபறவைபோன வல்ல
லுறுகின்றவெவலை - யையுடன்சாணாகி சனையளித்த
வைகள்கொண் டலவழிசெலாதுநின்னை
மன்னியுய்யும்வண்ண மாமறைவிரித்ததன் மருமமாம்பொ
ருள்விளக்க - மகிமைபெறுபெரியரைத தந்தபேருத
வியை மறந்தேறகுமுய்தலுண்டோ
அன்னையொத்தென்பிழை பொறுத்கனின்கடருகு மரு
ளாள வத்திகிரிவாழ் - அதிநேசவிசுவாச மிகுதாச
ரகவாச வகிலேசவமரேசனே. (க)

தீதாரவேசன்ம சன்மங்கடோறுமென் றெரியாமைபாற்
புரிந்து - தேடினேன்பாதக மவற்றின்வருதுன்பெலா
ந் திசைமுகாமேகாகற்பப்
போதாரவேறுகாந் தாலுமவையொழியா பொருந்தலர்க
ளென்னவுள்ளும் - புறமுமோாசணமுமொழி யாதுந
லிகின்றவென் புகலுவேன்புகலாகநின்
பாதாரவிந்தமே பற்றினேன்மற்றிலேன் பரமபாவனமூர்த்
தியே - பழவினைகள்பாறவே நின்கடைக்கண்களாற்
பார்த்தருளியாவினுக்கும்
ஆதாரபூதவெற் கருளனின்கடருகு மருளாள வத்திகிரி
வாழ் - அதிநேசவிசுவாச மிகுதாசரகவாச வகிலேச
வமரேசனே. (உ)

வேற்றளவைவேண்டா விழுச்சீருடைச்சகல வேதச்சுருக்
கமான - வீடுதருதிருமந்தி ரத்தின்முப்பதமும் விளக்
குமாகாரமூன்றுஞ்
சாற்றிடினுயிர்க்கெலாம் பொதுமையாதலினித்யர் சங்கத்
தையேகடுப்பத் - தகுசுத்தசத்துவத்திருநாட்டிலென்
றுமொரு தன்மைபெறுமுணர்வுடையனாய்த்

தேற்றமுடனிவனை நுகர்ந் தீறிலின்பத்தினிற் றேக்கிடுந்தகை
யிருந்தும் - திறல்கொணின்மாயையா னஃதொழிந்
திப்பிறவி சிக்கினேனதனைநீக்கும்
ஆற்றலையளித்தெனை யளித்தனின்கடனாகு மருளாளவத்தி
கிரிவாழ் - அகிநேசவிசுவாச மிகுதாசரகவாச வகி
லேசவமரேசனே. (௩)

சுரநரவிலங்குதா வரயோகிபேதங்க டோறும்யான்மாறி
மாறித் - தொகைக்கடங்காப்பிறவி மேவியவ்வுடலை
யே தூயவுயிரென்றெண்ணலுந்
திரமுற்றியானென் றகங்கரித்தலுமபற் றேவர்கட்கடிமை
செயலுஞ் - சேர்ந்தபடுகுழிகளி னழுந்தியம்மூன்றன்
றிறத்தினுக்கேற்பவான
தரமுறுஞ்சாத்யசா தநநேடிநலிவதோர் தாழ்பொருளை
நண்ணிநின்னைத் - தணந்துவிடும்விரதமேற் கொண்
டொழுகும்விமுகன்யான் சார்ந்தநல்விதியினின்னை
யரணெனவடைந்தன னளித்தனின்கடனாகு மருளாளவத்
திகிரிவாழ் - அகிநேசவிசுவாச மிகுதாசரகவாச வகி
லேசவமரேசனே. (௪)

மாதவமுகுந்தகே சவநந்தகோவிந்த வனஜாக்ஷவனஜநா
ப - வனசஜேந்திரவரத வாரகாஞ்சீபூர்ண வாற்சல்ய
சம்பாஷண
வேதவேதாந்தவேத் தியசத்யவதிக்ஷேத்ர விமலசுபபுண்
யகோடி - விமாநசுந்தரமஹா தேவீமநோஹர விரி
ஞ்சிமஹேஷ்டிஜாத
பூதமுனிபரகால த்ரமிடதோத்திரபாத்ர புங்கவாபச்சிம
திசாம் - புஜவதநமண்டல முநீந்த்ரயோகித்யேய பு
ஞ்சவக்ஞாநஹரண
ஆதவாநந்தபல் லவவெனைக்காத்தருள்செ யருளாளவத்
திகிரிவாழ் - அகிநேசவிசுவாச மிகுதாசரகவாச வ
கிலேசவமரேசனே. (௫)

---

## ௨-வது திருவட்டபுயகரம்.



நிலத்தியல்புதிதாயி னந்நிலத்துறுநல்ல நீரியல்புதிரியுமா
போல் - நிரயபதனந்தருந் தித்தன்மை மாந்தரொடு
நெடுநாளிணக்கமுற்றென்

புலத்தியல்புமாறியைம் பொறிகளானீர்ப்புண்டு புன்புல
னுகர்ச்சிபெறலே - புருடார்த்தமென்றெண்ணி மலை
முடிவிளக்கெனப் புகல்கீதையருள்குரவனும்

நலத்தியல்பினிருடிகளு மாழ்வார்களுங்கருணை நரலையா
மாரியர்களும் - நயந்தருள்செய்நன்னூல்க டேறாத
பாவியே னன்மைபெற்றுய்யவருளாய்

புலத்தியல்பின்வளநிலா மெஞ்ஞான்றுமாறாது பொங்கி
ப்பயக்குமட்ட - புயகரத்துயர்சீல நிசிசரர்க்கொரு
கால புலவர்கட்கநுகூலனே. (௧)

வேதவேதாந்தத் தனிப்பொருளுணர்ச்சியான் வேறுபொ
ருளிச்சியாது - விமலநின்னநுபவத் தேநின்றுவீடுற்
ற மெய்ஞ்ஞானவாரியர்கடம்

பாதமேதுணையெனப் பற்றிமற்றொன்றையும் பற்றாதவை
ராக்யனாய்ப் - பரமசத்துவநிட்ட னாய்ச்சமந்தமமெ
னும் பண்புடைச்சம்பன்னனாய்

நீதமுறுமோக்காதி காரியாயுய்யும்வண நின்றிருவுளத்தி
னெண்ணின் - நிலைகொளாதலையுமன நீசனேனுய்வ
வே னின்சித்தமென்பாக்கியம்

போதமுடையோருளக் கமலத்திலுறைதிவ்ய புருடனேதி
கழுமட்ட - புயகரத்துயர்சீல நிசிசரர்க் கொருகால
புலவர்கட்கநுகூலனே. (௨)

மேகநற்பொருள்பிரா ணன்வீடுமனைமனைவி சிறுவர்முத
லோனெனக்குச் - சேடமென்றெண்ணும லென்னையா
ட்கொண்டநற் றேசிகன்சேடமாக்கி

வேகமுறவேறொன்று மெண்ணுமலவனினைவின் வேட்கை
யின்றுதுங்கியவனல் - விற்கவுங்கடவனாய் நற்கரும
முடையனாய் மெய்ஞ்ஞானவிமலர்சேவைப்

பாகமுற்றவனுகி நன்னடைகளுடையனுய்ப் பகருமெய்யு
ணர்வுகொள்ளும் - பரிவனுயபிமாந சூந்யனுய்நூனம்
பு பக்குவியுமாகவருள்வாய்
பூகமெனவேகன்ன லோங்கிநிதம்வளரும் புனற்பழனமே
வுமட்ட - புயகரத்துயர்சில நிசிசரர்க்கொருகால புல
வர்கட்கநுகூலனே. (௩)

இருசெருக்கடைதலும் பிறரைநிந்தித்தவர்த மில்லாதிபி
ச்சித்தலும் - இகழ்ந்தவைகளுண்டுபெரு கிடலுமயலா
ந்தெய்வ மிகல்விடயசாதநங்கண்
மருவலொடுநினையுநின் னன்பரையுமிகழ்தலு மறுத்திடத்
தக்கவாகும் - மறுக்காவிடிற்பெற்ற சற்குருவினருளு
மபி மானமுங்காப்பல்லகாண்
ஒருசெய்நிறைநீர்புடைச் செய்ப்பயிர்வளர்ப்புண்மை யு
ளைபயிர்மிகுத்தகளையுற் - றுச்சிவேர்ணையப் புழுப்ப
ட்டு ருவுமே லோம்பிடாதன்னயானும்
பொருளாகவெண்ணியத் திக்குணகணங்களைப் போக்கியு
ய்யக்கொளட்ட - புயகரத்துயர்சில நிசிசரர்க்கொரு
கால புலவர்கட்கநுகூலனே (௪)

அவித்தையும்பிறவிதரு வித்தகங்காரமு மநர்த்தகாரண
மென்பரால் - அவையுள்ளதுணையுமெத் தகைஞானி
கட்குமிவ் வரும்பவத்தொடர்புநீங்கித்
தவித்தலற்றுனையடைத லில்லையதனலவை தவிர்த்தென்
னையாட்கொள்ளுவாய் - தயங்குககநாகிருதி மானவ
லர்மேன்மங்கை தலைவதிகழ்சக்ரராய
செவிக்கினியவாதிசேஷ சவநாமநிற்குந் திருக்கோலகரிவரற்
குச் - சேவைதருநிலையவெம் ப்ராந்திமுனிகளிகன்றி
செந்தமிழ்ச்சொன்மாலைய
புவித்துன்பறுக்குங் கஜேந்த்ரபுட்கரணியொடு புலவர்து
திமருவுமட்ட - புயகரத்துயர்சில நிசிசரர்க்கொருகா
ல புலவர்கட்கநுகூலனே. (௫)

## ௩-வது திருத்தண்கா.

நீர்நிலைக்கடல்சிறிது நிலைகடந்தேறுது நிற்கவோர்வடவை
யமையும் - நீடுபிறவிக்கட லறபெரிததற்கதிக நேரி
னதுதக்குவதாமென்
றோர்நிலையுறுதுபற் பலநிலைகளுற்றடைந் தோர்கணமு
மொழியாதுநின் - றுடற்றுமுத்தாபமாம் வடவைக்க
ளமைத்தவற் றுறுகணுறுமுயிர்களெல்லாம்
பேர்நிலைகொண்மண்கா வடைந்துதமுருப்பங்கள் போராத
தன்மைநோக்கிப் - பெருந்தகாயநண்ணுமவர் தாபங்
கணீக்கிப் பெயர்த்துமருவாகவற்றின்
வேர்நிலையுமாற்றவோர் தண்காப்படைத்துவாழ் விமலவி
ழிவிடயங்களை - விளக்கொளிகடம்மையும் விளக்கம
றுமெம்மையும் விளக்கொளிகொள்செம்மையானே.

நின்றவாநில்லாத நெஞ்சுடையனென்செய்கே னிமிர்மா
னுடப்பிறப்பின் - நேர்தாவரப்பிறப் பேவிழுமிதென்
பனது நேரினுபயசெருக்கும்
ஒன்றுமெவர்க்குநின் றுதவலாமொப்பிலா துயர்கருணையு
ததியென்ன - உலகுபுகழ்நம்பிள்ளை போலுமாரியர்க
ளினி யுண்டாயினவர்களாலே
நன்றாகவேயுய்யு நாளுமுண்டாகுமிந் ஞாபகங்கொண்டு
தானோ - ஞானநிதியான *பெரு மாளுமிப்பிறவியை
நயந்தனர்முனம்பொழிகளை
வென்றமுனிவரரோத்த நின்றதண்காவுறையும் விமலவிழி
விடயங்களை - விளக்கொளிகடம்மையும் விளக்கமறு
மெம்மையும் விளக்கொளிகொள்செம்மையானே. ()

எப்பிறவியானாலு மெனையாவர்யாவைக்கு மிறைவபோற்
றலுடையாய் - என்றுமேலதிகாரி யில்லாப்பெரும்ப
கவ விமிலாககருணைநிலய
தபபாதவ்வுயிரைநீ வாழ்விக்கவெண்ணினாற் சருவமுத்தி
ப்ரசங்கந் - தலைப்படாவண்ணநற் கருமஞானாதியைத்
தருமேதுவாப்பணித்தாய்

---

* குலசேகரப்பெருமாள்.

ஒப்புரவினுறவெணிற் செயவேண்டுவனவெலா முண்டா
க்கிநின்னுசாச்சிக் - குரியனுக் தலைபண் டயோத்தி
ச்சராசரத் துயிர்கள்வீடுற்றதிலேயோ
விப்பிரர்கள்வேதமோ திக்கொழுந்தண்காவின் விமலவிழி
விடயங்களை - விளக்கொளிகடம்மையும் விளக்கமறு
மெம்மையும்விளக்கொளிகொள்செம்மையானே.(௩)

கூறுமேற்கருமமுங் கூடுங்கொலென்னினி கூடாதகருமங்
களைக் - கூட்டுவித்திடுமாண்மை யுடையையன்றோநீ
குறித்தவிளையாட்டினுய்க்கத்
தேறிவினைவழியெமை நடத்தினெமுயற்சியாற் செய்தக்க
வில்லைநின்றன் - செழுங்கருணைபெருகத் தலைப்படினி
யாமுனைச சேராதுசெய்வோரில்லை
வீறுநீயெமையடைய வேண்டின்யாமுன்செய்த வினையுந்
தடைாதுநல்ல - வினைகளுஞ்செய்வித்து நின்னையடை
வித்திடுவை வேதவேதாந்தவேத்ய
வேறுபாடெண்ணு தளித்தருள்செய்தண்காவின் விமலவி
ழிவிடயங்களை - விளக்கொளிகடம்மையும் விளக்க
மறுமெம்மையும விளக்கொளிகொள்செம்மையானே

விதிவிலக்கினையுணாந் தொழுகும்வகையுண்மேவி விமல
முறநியமித்தெனை - விளம்பமில்லாதுநீ கைக்கொள்
ளவேண்டின் விழைந்துபரமார்த்தனுக்கி
நதிவாரிவரவணித் தாங்காலதற்குரிய நறகுறிகள்காணு
மாபோல் - நாயினேனுழிமுத்த புருடலக்ஷணமெலா
நல்கியருணின்றதில்லைய
திதிசெய்மரகதவல்லிநாயகசரச்சுவதி தீர்த்தசீகரவிமான-
திவ்யப்ரகாசதீ பப்ரகாசப்பெயர திகழ்வருணதிசை
யானன
விதிசெய்கவிகன்றியருள் பாடலபெறுதண்காவின் விமல
விழிவிடயங்களை - விளக்கொளிகடம்மையும் விளக்க
மறுமெம்மையும் விளக்கொளிகொள்செம்மையானே.

## ௪-வது திருவேளுக்கை.

மலையினிற்றிண்ணிதாந் தேகாபிமானியாய் மாமருந்துகனு
கர்ந்து - மன்றுவுடம்பைப் பெருக்கியைம்புலவாசை
மருவிமனைமனைவியிச்சை
விலையினிற்கொண்டுநூல் வழியினொழுகாதுமனம் வீழ்ந்த
வழியொழுகிலீலா - விடயனையிதுகாறு நின்றநானி
னியேனு மேதக்கமெய்யுணர்வினாற்
றலைமையாமான்மநிலை தேர்ந்துமூன்றுகார சம்பந்நனுய
வைக்குத் - தக்கபடியுடல்வீழ நாளளவிருந்துன்ற
யாவி டயனுகியென்றும்
உலைவிலாப்பேரின்ப வீடுபெற்றுய்யவரு ளோங்குபுகழ்
வேளுக்கைவாழ் - உயர்குணத் தவிர்சோம வொழி
வில்சத்தியகாம வொளிர்சகத்திரநாமனே. (௧)

சற்குருவினுன்முத்தி சார்குவோர்ப்ரதமநற் சரமப்ரபந்ந
ரென்னச் - சாற்றுமிருவகையர்முத லதிகாரிநின்வழி
ச் சார்ந்தொழுகுபரதந்த்ரனுய்
அற்குநின்னுழியே யமைந்தபேரன்பனு யாழ்வாரினமர்வ
ன்மற்றை - யதிகாரிநின்னையருளாரியற்குச்செய்யு ம
யலுதவியின்மைதேறி
நிற்குமவனேதெய்வ மென்றெண்ணிவழிபட்டு நிகழ்மதுர
கவிகள்போல - நிலவுமவனென்றுமறி யாவென்னை
யிந்நெறி நிறுத்தியென்னறியாமையாம்
ஒற்கமொழிவித்திறுதி யுவணமீதூர்ந்துவந் தோம்புவாய்
வேளுக்கைவாழ் - உயர்குணத் தவிர்சோம வொழி
வில்சத்தியகாம வொளிர்சகத்திரநாமனே. (௨)

கலையினுணரப்படுந் தகையனியாரியன்- கண்கண்டிடத்தக்
கவன் - காதல்வழியொழுகநீ விடுவையவனதனைக் க
டிந்துநல்வழியினுய்ப்பன்
நிலேயோகலீலைக ளிரண்டையுஞ்சமமா நினைத்திடுவைநீய
வன்றுன் - நிருபனிச்சித்தவிலை மாதினைமருத்துவ னி
னைத்துயர்மருந்துதவியே

அலைபிணியொழித்தவன்போகத்தினுக்குரிய ளாக்கும்வித
மென்னவுயிர்கள் - அஞ்ஞானநோய்நீங்க மெய்ஞ்ஞா
னவுறைதந்து னநுபவக்குரிமைசெய்வன்
உலைவின்றியவனையே குலதெய்வமென்றெண்ணி யுய்யவ
ருள்வேளுக்கைவாழ் - உயர்குணத்தவிர்சோம வொ
ழிவில்சத்தியகாம வொளிர்சகத்திரநாமனே. (௩)

ஆரியன்பரதந்த்ர ஞைகயாற்பொன்வணிக னரசனுக்கணி
செயுங்கால் - ஆடகந்தனையோட வைத்தலங்காரத்தி
னப்பணிசெய்துதவுமாபோற்
பாரினிற்சிட்டனை நினக்குரியனுச்செயப் பகுதிப்பதார்த்தவி
ன்பப் - பற்றறுத்துறவேண்டி பிரபந்தவொப்பனைகள்
பலவுமுண்டாக்கிநிற்குச்
சீரினோர்குவனின் சுதந்தரத்தாற்பெற்ற சேடனிலுநற்றே
சிகன் - திருத்தியருளதிகாரி யானனியுகப்பினைச்செய்
திருப்பாயென்பரால்
ஓரினவனேதெய்வம் வேறில்லையென்றெண்ணி யுய்யவரு
ள்வேளுக்கைவாழ் - உயர்குணத்தவிர்சோம வொழி
வில்சத்தியகாம வொளிர்சகத்திரநாமனே. (௪)

சரமப்ரபந்நாதி காரிதன்னன்னடைச் சம்பத்தையருளி
யென்னைச் - சரமதசையிற்பரம புருடார்த்தலக்ஷணத்
தனிவீட்டிலுய்த்தருளுவாய்
பிருகுமுனிகண்காண வந்தமாதவபெரியர் பேசிடுமுகுந்த
நாம - பெருமாட்டிவேளுக்கை வல்லிமகிழ்மணவாள
பீடுபெறுகனகமான
மரபுபெறுகலிகன்றி யொடுப்ராமிமுனிசெய்யு மங்கலா
சாசநத்த - மகிழ்ந்துகீழ்த்திசைநோக்கி நிற்குந்திருக்
கோல மகிமைக்கதம்பசரச
உரவுநீருலகிஞேருன்னிவருவரமெலா முதவிமகிழ்வேளு
க்கைவாழ் - உயர்குணத்தவிர் சோமவொழிவில்சத்தி
யகாம வொளிர்சகத்திரநாமனே. (ரு)

---

# ரு-வது திருப்பாடகம்.

---

பகுதிநாற்சுவைமனைப் பற்றுண்டியுடைமாதர் பக்கலிலரு
தவேட்கை - பரிந்துதீவினைசெயப் புகுமவாவுடை
யோர்கள் பரகதிக்குரியரலராற்
றிகிரியெனவிவைகொண்டு திரியாமலினரொடுசேராமலே
காந்தநற் - சீலனாய்த்தோர்ச்சிபெறு சிட்டர்நன்னடை
யினிற் றிடசித்தனாகிவிடய
விகுதியற்றவனாகி வேதாந்தசாத்திர விசாரணையினுண்மை
தேர்ந்து - விழைந்துயிர்வருத்தாத பேரருளனாகினவ
ன் வீடுறுதறிண்ணமென்ப
திகழ்முத்திவழிபெறச் சிறியேனையாட்கொள்வாய் தென்
றிருப்பாடகத்தாய் - சீர்த்தகுணகணபூர்த்தி வாய்த்த
வடியவரார்த்தி தீர்த்தருள்க்ருபாமூர்த்தியே. (க)

வீறுச்மதமமுதல வான்மகுணநிதியனாய் வெகுபூததயையு
டையனாய் - விடயசுகநயவா விரக்தனாய்முத்தத்வ வி
ஞ்ஞானபரிபூர்ணனாய்
சீறிக்குடும்பிக ளடித்திகழ்ந்தாலுஞ் சினங்கொளாப்பரம
சாந்த - சித்தனாயறுசுவைகொ ளுண்டியேதேடாது
தெறுபசியுநீர்வேட்கையும்
மாறயாதானுமேத் தியவத்தருந்துசீ வனநிபதியுடையனா
கி - மகிழ்பொருட்பேறிழவி லின்பதுன்பங்கொளாம
னமுடையனாகினினைத்
தேறும்படிக்கருள்செய் தாட்கொள்வாய்நிலவளஞ் செறி
திருப்பாடகத்தாய் - சீர்த்தகுணகணபூர்த்தி வாய்த்த
வடியவரார்த்தி தீர்த்தருள்க்ருபாமூர்த்தியே. (உ)

பகைவர்மித்திரர்மான மவமானம்வெம்மைபனி பயனட்ட
மின்பதுன்பம் - பகர்நிந்தைதுதிகளிற் சமநெஞ்சமு
டையராய்ப் பகர்பெருஞ்சாந்தகுணராய்ப்
புகைவெகுளிநீத்தபுண் ணியராய்ச்சமத்தமாம் பூதவஞ்ச
கமில்லராய்ப் - புகழ்பரமசாதுக்க ளாய்மனைவிபுதல்
வர்பொன் பூமிதானியமிவற்றிற்

றகையாவுவர்ப்பாராய் நினையாதுவருவதிற் சந்துட்டரா
யுயர்ந்த - சாரதமசாத்ரவித் துக்களொடுகூட்டியித்
தமியேனையாட்கொள்ளுவாய்
சிகையினேடுபவீத திரிதண்டதரமுனிவர் சேர்திருப்பாட்
கத்தாய் - சீர்த்தகுணகணபூர்த்தி வாய்த்தவடியவரா
ர்த்தி தீர்த்தருள்க்ருபாமூர்த்தியே. (௩)

முன்புள்ளவாரியர்கள் மொழிமுறைமைபிறழாது மூலமு
ரைகேள்வியுற்று-மொழிந்தவப்பொருளுக்கு முன்
பின்முரண்வாராது முற்றுமாராய்ச்சிசெய்து
துன்பமறுமப்பொருளை யுரையாதுதம்மனந் தோன்று
மோர்பொருளுரைத்துச்-சுத்தசம்பிரதாய வார்த்தை
யீதென்னவே சொல்லுமாத்திகநாத்திகர்
புன்மையுறும்விபரீத நடையிற்புகுத்திடும் போதகர்களவர்
கள்வழியிற்-போகாதுநீக்கிநின் றிருவுளப்படியொழு
கு புனிதரொடுகூட்டியாட்கொள்
தென்றிசைக்கோணை செல்லாதஞானியர்கள் சேர்திருப்
பாடக்த்தாய்-சீர்த்தகுணகணபூர்த்தி வாய்த்தவடிய
வரார்த்தி தீர்த்தருள்க்ருபாமூர்த்தியே. (௪)

சங்குசக்கரமுறு தடக்கையம்பரமநற் றருமநிலைபெறுவிப்
பவ-தண்ணந்துழாய்த்தார சாம்பூநதத்துடைய தாம
ரைக்கண்ணவுண்மை
தங்குபாண்டவதூத தங்கயுருப்பிணிதேவி சத்யபாமா
விலாச-தயங்கிடும்பத்திரவி மானமச்சியதீர்த்த சந்த
தமுநின்கணன்பு
பொங்கரிதமாமுனிக் கருடந்தமுதல்வவெம் பூதமுனிப்ரா
ந்தியோகி - புகல்பத்திசாரர்கலி கன்றியிவர்வேதப்
பொருட்டமிழ்ப்பாடல்விடய
செங்குணக்கினைநோக்கி வீற்றிருக்குங்கோல தென்திருப்
பாடகத்தாய் - சீரத்தகுணகணபூர்த்தி வாய்த்தவடிய
வரார்த்தி தீர்த்தருள்க்ருபாமூர்த்தியே. (௫)

---

## ௬-வது திருநீரகம்.

அவிகாரிசுத்தனித் தியனுருமோர்கிலெகொ ளமுதமங்கல
விக்ரகன்-அகில்முந்தன்வயத் துறுமாடலான்படைப்
பமையத்தினயனுருவனாய்த்
தவியாதளித்திடுங் காலைத்தனுருவனாய்ச் சங்கரிக்கின்ற
வேலை - சதிருருத்திரவுருவ னுயகின்றியாவுஞ்செய்
தகைகொள்பரவாசுதேவன்
அவிர்திறவவத்தைக்க ணேகமாயருவமா யவ்யக்தவுருவ
மருவி-யமைகாரியக்கணேகமாய்த்தூலமா யறி
வ்யக்தவுருவமமையுந்
திவியபுருடன்சேத நர்க்கெலாம்வீடுதரு தேவாதிதேவ
னெஞ்சே - திறலார்புயச்சைய திருவார்மூரத்துய்ய
திருநீரகத் தையனே. (௧)

சிட்டிதிதிசங்கார மூலமாய்த்தினகரன் செலவாதிபொரு
ளினுருவாய்த்-திசழ்காலதேகியக காலத்தைவென்ற
நற் சிற்சொருபனதிவ்யாபகன்
மட்டிலாவுலகவா தாரமாயதிசூக்கு மங்களாம்பகுதியாதி-
மலர்பொருட்குஞ்சூக்ம வுருவாயெவற்றினு மறைந்
துறைந்தவைகொடோடம்
ஒட்டாதவன்மழுங் காஞானசம்பந் னுயருநற்குணகணத்
தால்-ஓங்குபுருடோத்தமன் சுத்தஞானத்துருவி னெ
ளிருமவனறவுநிமலன்
தெட்புடையவறிவினோர் தெளியுமவனேனையோர் தெளி
யாதமுதல்வனெஞ்சே-திறலார்புயசசையதிருவா மூ
ரத்துய்ய-திருநீரகத்தையனே. (௨)

பேசுமிச்சையினன்றி வினைவயத்தானடை பிறப்பிறப்பில்
லாதவன் - பிரமாதிகட்குமதி பதிதன்னின்மேலான
பேரிலாப்பரமாத்துமன்
ஆசறச்சேதநா சேதநங்கட்கெலா மாதாரபூதன்றனக் - கா
தாரம்வேறிலான் றன்னுழித்தானே யமைந்திருப்பவ
னித்தமும்

